உ

சிவமயம்

ஸ்ரீ முருகனாரருளிய

**பரமார்த்த தீபம்**

என்னும்

# குருவாசகக் கோவை

(மூலமும் -உரைப் பகுதிகளும்)

மூன்றாம் பதிப்பு

பதிப்பாளர் :

V.S. ரமணன்

தலைவர்

ஸ்ரீ ரமணாச்ரமம்

திருவண்ணாமலை

இந்தியா

# உள்ளுறை

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ ரமணாய

# பதிப்புரை

ரமணோபதேச மணிகளின் கருவூலமாகத் திகழும் **பரமார்த்த தீபம்** என்னும் **குருவாசகக் கோவை** முதல் பதிப்பாக 1939ஆம் ஆண்டும், விரிவுபடுத்திய இரண்டாம் பதிப்பாக 1971ஆம் ஆண்டும், வெளிவந்தது. இந்நூலின் தோற்றம், வளர்ச்சி, நூலாசிரியரின் தனிப்பெரும் மாண்பு ஆகியவை பற்றி முற்பதிப்பு நூன்முகங்களில் விரிவாகக் காணலாம். மூலநூல் ஆசிரியரான ஸ்ரீமுருகனார் சுமார் மூன்றில் ஒரு பகுதி பாடல்களுக்குத் தாமே விளக்கங்களையும் அருளியிருந்தார். இவற்றின் மேன்மையை நன்கு உணர்ந்திருந்த ஸ்ரீ சாது ஓம் இவற்றிலிருந்து சிற்சில பகுதிகளைத் தாம் அருளிய சீரிய உரை நூலில் ஆங்காங்கே ‘முருகனார் கூறிய’தாகத் தந்திருக்கிறார். ஸ்ரீமுருகனாரது உரைக் குறிப்புக்கள் நிலைத்து நிலவும் பொருட்டு இதுகாறும் கையெழுத்துப் பிரதியாகவே இருந்த அவற்றை இப்போது மூலநூலின் மூன்றாம் பதிப்பில் முழுமையாகச் சேர்த்து வெளியிடுகிறோம்.

இம் மூன்றாம் பதிப்பில் ஒவ்வொரு பாடலுக்கும் **மூலத்தைத் தொடர்ந்து** அவ்வப்பாடலின் **பதச்சேதமும்** தேவையான பாடல்களுக்கு அதனை **அடுத்து அரும்பதவுரையும்,** உரை அமைந்துள்ள பாடல்களுக்கு **ஸ்ரீ முருகனாரது உரையும்** அவற்றுள் சிலவற்றிற்கு **விசேடவுரையும்** மேற்கூறிய வரிசையில் அமைத்துள்ளோம். பதச்சேதமும் அரும்பத வுரையும் ஸ்ரீ சாது ஓம் தொகுத்தவை. முற்பதிப்பில் இடம்பெறாத ஸ்ரீ பகவான் பாடல்கள் பதினான்கும், குருவாசகக் கோவையில் சேர்க்கவேண்டியதாக ஸ்ரீ முருகனார் கூறிய பாடல் ஒன்றும் இப்பதிப்பில் சேர்க்கப்பெற்றுள்ளன.

மூலநூல் ஆசிரியரே உரையும் அருளியிருப்பது இந்நூலுக் கமைந்ததோர் சிறப்பாகும். இவ்வுரை எழுந்தமைக்கான காரணத்தையும், இதனைப் பேணும் முறையினையும் **‘நமக்குள்’** என்ற தலைப்பில் ஸ்ரீ முருகனார் எழுதிய முன்னுரையால் நன்கு அறியலாம். ஸ்ரீ பகவான் அன்பர்கள் பலரும் ஸ்ரீ முருகனாரிடம் பெருமதிப்புக் கொண்டிருந்தாலும், அவர்களுள் பெரும்பாலோர் ஸ்ரீ முருகனார் அருளிய நூல்களைக் கற்பதற்கு மிகவும் தயங்கிப் பின்வாங்குகின்றனர். ஸ்ரீ முருகனார் தமிழ் நடை தமது மொழி ஆற்றலுக்கு அப்பாற்பட்டது என்ற **எண்ணமே** இதற்குக் காரணம். அன்னாரது தமிழ் நடை பண்டைத் தமிழ் நடையை ஒத்திருப்பது உண்மையே எனினும் சிறிதளவு விடாமுயற்சியுடன்

பயின்றால் அவர் அருளிய நூல்களைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் தம்மிடம் தானாகவே மலர்வதை அன்பர்கள் உணர்வார்கள். இந்நிலையில் ஸ்ரீ முருகனாரது நூல்கள் படிக்கும் போதே பேருவகை அளிப்பதையும் தமது ஆன்மீக வாழ்விற்கு ஊக்கமளிக்கும் உறுதுணையாக அமைவதையும் தெளிவாக உணர்வார்கள். பலரும் இம் மூல நூலைக் கற்றுப் பயன் பெறவேண்டும் என்ற நோக்கத்துடனேயே பதச்சேதமும், அவ்வப்பாடலை அடுத்து அரும்பதவுரையும் அளித்துள்ளோம். இந்நூலை நன்கு கற்போர் ஸ்ரீ முருகனாரது மாபெரும் அனுபூதி நூலான 'ஸ்ரீ ரமண ஞான போத'த்தையும் எளிதில் கற்றுப் பெரும்பயன் பெறுவார்கள்.

இப்பதிப்பை வெளியிடும் அருட்பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்ட அன்பர்களுக்கும், ஸ்ரீ முருகனாரது உரையைப் பேணிப் பாதுகாத்துத் தந்த ஸ்ரீ அருணாசலரமண நிலையத்தினருக்கும், செம்மையான முறையில் அச்சிட்டுத் தந்த ஆரித்ரா பிரிண்டர்ஸ் ஸ்ரீ பாண்டுரங்கன் அவர்களுக்கும் எமது நன்றி.

**'எண்ணம் கடந்த இயல்சேர் அனுபூதி**
**வண்ணமணம் சேர்ந்ததிரு வாய்மொழியால்-அண்ணலருள்**
**உண்ணார் அமுதம் உறத்திளைத்த வண்செவியர்க்கு**
**ஒண்ணாது மற்றோர் உரை.'**

என்று தம்மை ஆண்ட குருநாதன் உபதேச மாட்சியை ஸ்ரீ முருகனார் இசைப்பதை நாம் மறவாது கொள்வோமாக.

21-8-98
வெகுதான்ய ஆவணி அமாவாசை
ஸ்ரீ முருகனார் ஆராதனை நாள்.

வே.சு. ரமணன்
தலைவர்
ஸ்ரீ ரமணாச்ரமம்.

ஓம்
நமோ ரமணாய

# நூன்முகம்
## (இரண்டாம் பதிப்பு)

இந்த இருபதாவது நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ் நாட்டில் தோன்றிப் பிரசித்த மடைந்த **''குருவாசகக் கோவை ''** என்னும் நவீன நன்மறையின் தோற்ற வரலாறு, இது அறிவுலகுக்கு அறிமுகமான விதம், இதனைப் படைத்தோரின் அசாதாரண அறிவுத் தேற்றம்,பதியன்றி யறியாத பக்திச் சிறப்பு,சுவானுபூதியின் துல்லிய மாதிய பெறலரும் பண்புகள், இந் நூலைப் பயன்படுத்துவோர் மேற்கொள்ள வேண்டிய தனி முறையின் காரணம் ஆகியவற்றின் மேன்மைகளெல்லாம் (அடுத்து வரும்) இதன் முதற் பதிப்பு நூன்முகத்திலேயே சுருக்கமாய்க் கூறப்பட்டுள்ளன.

இச் சீரிய நூல் மீண்டும் இரண்டாம் பதிப்புருவில் வெளிவருகிறது. இதன்கண் 406 புதுப்பாக்கள் இடம் பெற்றுள்ளன. வெவ்வேறு கருத்துக்களமைந்த அவற்றைப் பொருண் முறையிற் றிறனறிந்து பல பகுதிகளாகப் பிரித்தல், பகுப்புப் பகுதிகளில் முதற்பதிப்புப் பகுதிகளோடு கருத்தாற் றொடர்புறும் பகுதிகளை அவ்வவற்றோடு திறனும் திறன்களுள்ளே இடமு மறிந்து சேர்த்தல், புதுப் பாசுரங்களின் இணைப்பால் அவசிய முற்ற விடத்துப் புதுத் திறன்களையும் தலைப்புக்களையும் அமைத்தல், அச்சுப் பிழைகளைச் செப்பஞ்செய்தல், திறன் முதற் குறிப்பகராதி, செய்யுண் முதற் குறிப்பகராதி தயாரித்தல் முதலிய அரும் பெருங் காரியங்களில் ஆசிரியருக்கு உறுதுணையாய் ஆரம்ப முதல் இறுதி வரை அவரது உள்ளத்தோடுள்ளமாய் ஒன்றியிருந்து, இது சர்வ லக்ஷணங்களும் பொருந்திய தோர் அற்புத நூலாக உருப்பெறுமாறு சகல உதவிகளும் புரிந்த ஸ்ரீ ரமணபக்த ஸ்ரேஷ்டர்களி லொருவரான சற்குண 'சாது ஓம்' அவர்கள் இயல்பாகவே,

> **''மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும்**
> **வந்துநின் னன்பர்தம் பணியாம்**
> **அறமது கிடைக்கின்......''**
>
> -தாயுமானவர்

என்னும் பெருங்கோட்பாடுடைய செம்மையராதலால், வள்ளல் கிருபையால் வலியக் கிடைத்த வாய்க்கரும் வாய்ப்பைச் சிரத்தையுடன் இவ்வாறு நன்கு பயன்படுத்திக் கொண்டமையால்,அசன தாதாவின்

அறப்பேற்றில் துணைவரும் பங்குறல்போல், வசனதாதாவின் அருட்பேற்றில் தாமும் பங்குறும் பாக்கியவா னானார்*.

ஏட்டுப் பிரதியா யிருந்த விந்நூலின் பொருண் மகிமையை யுணர்ந்து, இது அச்சாகில் மெய்ப் பொருளாகிய அப்பிரத்தியட்ச சத்தியத்தைக் கைப்பொருளாகப் பிரத்தியட்சப் படுத்தி அனைவரையும் உய்விக்கும் என்னும் பரோபகார சிந்தனையால், இதனை முதன் முதலாக 1939-ஆம் ஆண்டில் அச்சேற்றியவர் ஸ்ரீ ரமண பாதானந்தர் என்னும் பக்தராவர்.

அன்னாரின் நன்முயற்சி வீணாகாமையின் அறிகுறியாக இந்நூலின் முதற்பதிப்புப் பிரதிகளின் கையிருப்பு குறையக் குறைய இதன் தேவை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருவதைக் கண்டு நூலில்லாக் குறை எற்படாதவாறு, இதனை இரண்டாம் பதிப்பாகப் பிரசுரிக்க முன்வந்த ஸ்ரீ ரமணாசிரம நிர்வாகிகளின் தீர்க்க தரிசனம் பாராட்டற் குரியதாம்.

திருவருணை, **நடனானந்தா.**

1-9-1971

---

* குறிப்பு: அசனம்-சோறு; தாதா-வள்ளல்; வசனம்-குரு மொழி; அறப்பேறு-புண்ணியப்பலன்.

ஓம்
நமோ ரமணாய

# நூன் முகம்
# (முதற் பதிப்பு)

**ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்**
**பேர்த்துள்ள வேண்டா பிறப்பு**
**-தேவர்**

உண்மைப் பொருளே பொருள். 'உள்ளது' என்னும் பெயரால் அது குறிப்பாக உணர்த்தப் படுகிறது. உண்மையே, அதாவது கேவல இருப்பு மாத்திரமே அதற்குச் சொரூபம். அப் பரம் பொருளைச் சாட்சாத்கரிக்குமிடம் உள்ளக் கோயி லென்பது ஆன்றோர் மரபு.

உள்ளத்தின்கண் உள்ளதாக ஒளிவிடும் அம் மெய்ப் பொருளின் சேர்க்கையா லன்றி உயிர்களுக்கு விடுதலை யின்றென்பது ஒருதலை. உய்ய வேண்டுவோர்க்கு நேர்சாதனம் ஸ்வரூப லக்ஷியமே.

சர்வ அநர்த்தங்களுக்கும் சகல துக்கங்களுக்கும் மனமே காரணம். மனம் எந்த விடத்தில் எந்தச் சொரூபத்தில் யாருடைய அதீனத்தில் விளங்கினும் சரியே, அதன் உருவம் நாசமாகாத வரை உண்மைப் பேறும் உபசாந்தப் பிராப்தியும் பூரணமாகச் சித்திப்பதில்லை. உபநிடத காலமுதல் உலகில் ஏற்பட்டுள்ள கோடிக்கணக்கான சுருதிகளில் சன்மார்க்கத்தின் பெயராற் கோஷிக்கப்படும் எண்ணிறந்த சாதனங்களுட் பெரும்பான்மையும் மனக் கற்பனையிலேயே தொடங்குகின்றன. ஏற்கனவே பன்னெடுங் காலமாக அகத்தும் புறத்தும் வியாபித்துள்ள இந்த மனத்தின் மாயா விலாசமான கற்பனா வுலகங்களிற் கிடந்துழன்று, வறட்சியாற் சோர்ந்து, மனத்தின் சேர்க்கையில் விரக்தியுற்ற பக்குவ ஜீவர்களுக்கு அம் மார்க்கத்தின் பெயரால் அளிக்கப்படும் அத்தகைய கற்பனா லக்ஷியங்களிற் போதிய ஊக்கமும் நம்பிக்கையும் உண்டாவதில்லை. சாதகருடைய மனோபீஷ்டத்தை எளிதிலும் விரைவிலும் அனுபவத்திலும் நிறைவேற்றும் ஆற்றல் கற்பனா சக்திக்கு இன்மையே அதற்குக் காரணம்.

ஸ்ரீ பகவானது உபதேசமோ ஆரம்பத்திலேயே மனத்தை அதன் மூலத்தில் இயல்பாகவே ஒடுங்கி உருவழியச் செய்து விடுகின்றது. இதனால் சாதகர்க்குக் கணந்தோறும் பிரத்தியக்ஷமான பரிபாக நலனும்

முயற்சியில் அநாயாசமும் ஏற்படுகின்றன.மேலும் இந்த உண்மைச் செந்நெறியில் ஆராய்ச்சி, அநுசந்தானம், அநுபவமாகிய சாதனக் கிரமங்கள் யாவும் சம்பந்தத்தால் ஒன்றுபட்டு ஒரே காலத்தில் சித்திக்கின்றன. சந்தேக விபரீதப் பேய்களுக்கு இங்கே இடமேற்படுவதில்லை. பொருள், இடம், காலமாதிய தடைகளும் எதிர்ப்படுவதில்லை. இத்துறையிற் புகுந்தவொருவன் ஆரம்பத்திலேயே சகல விதிக் கட்டுக்களினின்று கூட விடுதலை பெற்று விடுகிறான். புனிதமான இச் சொரூபாநு சந்தானத்தில் கற்பனை யென்பது சொல்லளவிலும் இல்லை. அதிகார பேதமும் இதற்கு வேண்டப்படுவதில்லை. வேண்டுவதெல்லாம் சித்தோப சாந்தம் அடைவதி லுள்ள ஆர்வமொன்றே. இதுவே அருணாசல பகவான் **ஸ்ரீ ரமண மஹர்ஷிகளது** தரிசனமாகும்.

ஸ்ரீ பகவானை, **பகவான்** என்ற சொல்லோடு நிறுத்திக் கொள்வதே பொருத்தமாம். ஏனெனின் வாலறிவையே சொரூபமாக வுடைய பகவானது மகிமையை வர்ணிக்க முயல்வது,பாநுவின் பிரகாசப் பிரபாவத்தை மதிப்பிட முயலும் மதியின் மடமையாகவே முடியுமாதலால்.

''இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்''டுவதே ஸ்ரீ பகவான் பக்தர்களுக்குச் செய்யும் அநுக்ரக சம்பிரதாயம். எனினும்,

**''பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று**
**பேசாது; துறவாகியே**
**பேசாத பெரியோர்க ணிருவிகற் பத்தினாற்**
**பேசார்கள்; பரமகுருவாய்ப்**
**போதிக்கு முக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு**
**போதிப்ப தாச்சறிவிலே;**
**போக்குவர வறவின்ப நீக்கமற வசனமாப்**
**போதிப்ப தெவரையனே''**

என்னும் ஸ்ரீ தாயுமானவர் பிரார்த்தனைக் கிணங்க, ஸ்ரீ பகவான் திருவுள்ளத்தினின்றும் இயல்பாகவே, பிரவாகம்போல் இடைவிடாது நிகழும் அனந்நியமான அநுக்கிரக ரகசியத்தை அறியும் ஆற்றலற்ற சிலர் உண்மைப் பொருளின் சொரூபத்தையும் அதனைத் தரிசிக்கும் உபாயங்களையும் சப்தரூபத்தில் உபதேசித் தருளுமாறு பிரார்த்திப்பதுண்டு.

''கருமம், பக்தி, யோகம், ஞானமாகிய சன்மார்க்க சாதனங்களனைத்தும் சத்தா மாத்திர சொரூபத்தையே குறிக்கோளாகவுடையன. மார்க்கம் பலவாயினும் முடிவொன்றே. சாதனங்களில் ஏற்றத்தாழ்வுகளுக்கு இடமில்லை. ஏனெனில், கருமம், உபாசனை, யோகம், ஞானம் முதலிய சாதனோபாயங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கர்த்தாவை ஆச்ரயித்தே யுள்ளது. கர்த்தா உபாயத்தை மேற்கொள்ளுமுன் தன்னை இன்னானென்று தெரிந்து கொள்ளவேண்டுவது அவசியமாம். ஆகவே, கருமத்தில் கர்த்தாவையும், உபாசனையில் உபாசகனையும், யோகத்தில் யோகியையும், விசாரத்தில் விசாரிப்போனையும் தனித்தனி 'யார்', 'யார்' என்று வினவின் கிடைக்கும் பதில் 'நான்' என்னும் ஒன்றே.அந்த 'நான் யார்?' என்னும் ஆன்ம விசாரந்தான் எல்லா மார்க்கங்களிலும் உயிர்நாடியாய் ஊடுருவிக் கிடக்கின்றது. ஆதலால்,யார் எந்த மார்க்கத்தைப் பற்றினாலும் பலன் ஸ்வரூபப் பிராப்தியே. இவ் வழியில் தன்னை விசாரிக்க முயன்ற புருஷன் விசார ஆரம்பத்திலேயே,பரிபூரணமான பரமார்த்த சொரூபத்தை அபரோக்ஷமாகப் பெற்று விடுகின்றான். பின்னர் அவன் செய்யும் தவமனைத்துக்கும் ஸ்வரூபத்தினின்று நழுவா திருத்தலே பயனாம்.''

ஸ்ரீ பகவான் பல சமயங்களில் பல அடியார்களுடைய சந்தேகங்களை மேலே கூறியன போன்ற பல உபதேச வாக்கியங்களால் விளக்குவது வழக்கம். கேள்விகள் எந்த நிலையில், எந்த விடயத்தில், எந்த மனப்பான்மையில் எழுந்தன வாயினும் கிடைக்கும் பதில் மாத்திரம் அவ் வெல்லாவற்றுக்கும் மூலமான தன் உண்மை நிலையிற் கொண்டு சேர்ப்பதாகவே முடியும். இது நேரிற் கண்டறிந்தோர்க்குப் புதிதன்று.

இந் நூலில் வரும் ஒவ்வொரு பொருளும் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு பக்தர்களின் உள்ளத்தினின் றெழுந்த ஐயப்பாடுகளை நிவிருத்திக்கத் தோன்றிய **ஸ்ரீ பகவானது கருத்தே**யாகும். இதனை யாத்த பெரியார், தாம், சரீரத்தைச் சாயையெனப் பெரும்பாலும் ஸ்ரீ பகவானது சந்நிதியை நீங்காது உடனுறையும் பாக்கியம் வாய்க்கப் பெற்றவர்; மணிகளிற் சரடுபோன்று எல்லோருடைய ஹிருதயங்களிலும் ''நான், நான்'' என்று அநவரதம் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் நித்யாபரோக்ஷமான திருவருட் சக்தியே பக்தர்களது மனத்தைப் பற்றி யெரிக்கும் பரமார்த்த தாபத்தைத் தணிக்குங் கருணையுடன் அவ்வவர் பக்குவத்திற்கேற்ப ஸ்ரீ பகவானது திருவாக்கையே சொரூபமாகக் கொண்டு தனது அநுக்ரகச் செயலை நிகழ்த்துகிற தென்னும்

திருவருளநுக்ரக ரகஸ்ய முணர்ந்த புருடோத்தமர்; வியட்டி முதலிய உபாதிகளையும், தன்மையாதிய இடங்களையும், கர்த்ருத்வ முதலான ஜீவ போதங்களையுங் கடந்த பாரமார்த்திக நிலையினின்று, நிமித்தகாரண மாத்திரமாகவே கிளம்பும் பரிசுத்தமான அசரீரிவாக்குகளே ஸ்ரீ பகவானுடைய திருவருட் குறிப்புக்களென்னும் உண்மை யுபதேசவியல்பை ஸ்வாநுபவ ரூபமாக உணர்ந்த மெய்யறிஞர். ஆகவே, ஒப்பற்ற அவ்வருள் வாக்குக்கள் நித்யத்வம்பெற்று, எல்லாக் காலத்தும் எல்லா விடத்தும் எல்லா ஹிருதயங்களையும் பிரகாசிப்பித்துக்கொண் டிருக்கும் மெய்ஞ்ஞான ரவி கிரணங்களாக விளங்க வேண்டு மென்னும் சீரிய அவாவினர்; ஸ்ரீ பகவானுடைய உபதேசப் பொருள்களின் அருமை, உயர்வு, பிரயோசனங்களை நன்கறிந்தவர். ஆகவே ஸ்ரீ பகவானது ஹிருதயத்தினின்று உபதேச வாக்கிய வடிவிற் றோன்றிச் சுடர்விட்டொளிரும் செம்பொருட் கதிர்மணிகளைக் கூடுமான வரையிற் கைப்பற்றி அவ்வப்போதே பைந்தமிழ்ச் செய்யுட் பெட்டகத்திற் சேமித்து வந்தனர். அக்காரணத்தால் இந் நூல் ஓர் ஆசிரியரால் ஒரு காலத்தில் ஒரு நோக்கம் பற்றி அதற்குரிய சாதனங்களோடும் கர்த்ருத்வ பாவத்தோடும் நெறிமுறையில் எழுந்ததன் றென்பது போதரும். தவிர, இந்நூலின் பகுப்புக்கள் நூன்முறை பற்றி ஒருவாறு பாகுபாடு செய்து அமைக்கப் பெற்றுள்ளனவே யன்றி பொருண்முறை பற்றி யல்ல. பல செய்யுட்கள் ஒரே கருத்தின வாயும் ஒரு பகுப்பின் பொருளே பிற பகுப்புக்களின் பொருளாயும் சிற்சில விடங்களிற் றோன்றுதற்குக் காரணமும் அதுவே. ஆதலால், இந் நூலில் வரும் ஒவ்வொரு செய்யுளின் முழுக் கருத்தையும் நன்கு தெரிந்துகொள்ள விரும்புவோர் ஆரம்பத்திலேயே அதனதன் அதிகார சம்பந்தத்தினின்று அதனை நீக்கித் தனிச்செய்யுட் **பா**வத்தோடு பொருள் நாடலே ஏற்புடைத் தாகும்.

ஆசிரியரான **ஸ்ரீ பாரத்வாஜி முகவைக் கண்ண முருகனார்** தாம், கல்வி, கேள்வி, அறிவு, ஆன்மானுபூதியாதிய தெய்வ சம்பத்துக்கள் யாவும் பரிபூரணமாக வாய்க்கப் பெற்றவ ரென்பதை இந் நூலே புலப்படுத்தும்.

சுருங்கக் கூறின், ஸ்ரீ ரமண சித்தாந்தத்தை அதன் இயல்வடிவிலேயே விரிவாக விளக்கப் போந்த நூல் இதுவே எனலாம். எங்ஙனமெனின், எம்மொழியிற் கேள்விக ளெழினும் தாய் மொழியாகிய தமிழிலேயே ஸ்ரீ பகவானிடமிருந்து விடைவருவது பெரும்பாலும் வழக்கமாதலின்

அவ்விடைகளைப் பிறமொழியிற் குறிப்பெடுத்து வெளியிடுவதால் பகவானது உண்மைக் கருத்தை அது பிரதிபலிக்குமா என்னும் சங்கையெழல் சஹஜமாதலால் அச் சங்கைக்கு அறவே இடமில்லாமல் அமைகிறது இக் குருவாசகக் கோவை.

தம் மளவில் நிரங்குச திருப்தியுற்று அறிதுயில் கொள்ள விரும்பாது கருணைப் பெருக்கால் உலகையும் உய்விக்கும் பெருநோக்குடன், ஸ்ரீ பகவானது பொன்னே போன்ற அருண்மொழிகளை நூல்வடிவிற் றொகுத்துதவிய **ஸ்ரீ முருகனாரது** உதவிக்கும், அதனை வெளிப்படுத்தற்கான சகல பிரயத்தனங்களையும் தாமே மேற்கொண்டு செய்து முடித்த தியாக சீலரான **ஸ்ரீ ரமண பாதானந்த ஸ்வாமி**களது செம்பணிக்கும் கண்ணுடையோர் பெரிதும் கடமைப்பட்டுள்ளனர்.

**நடனானந்தா**
1-6-1939

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# முன்னுரை

'பரமார்த்த தீபம்' என்னும் இக் **'குருவாசகக் கோவை'** யின் உண்மையான நூலாசிரியர் பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகளே. பக்குவிகள் பிறவிப் பேறாகிய வீடடைய பகவானது திருவுள்ளத்தில் மலர்ந்த அருளுபதேசங்களை வரைந்த அன்னாரது வலக்கரமே ஸ்ரீ முருகனார் என்னும் தமிழ்க் கரம்! மதுவி னினியது தமிழ் ஆகலின் இத் தமிழ்க் கரமாகிய ஸ்ரீ முருகனார் ரமணோபதேச மலரின் ஞானமகரந்தத்திற் சொக்கித் திளைக்கும் மதுகரமே!

> **''நானோர் மதுகரமாய் நல்லசிவ ஞானவருள்**
> **வானோங்கு மோன மலர்ப்பதத்தே வாழ்தலால்**
> **ஊனே யுயிரே யுணர்வே புலன்களே**
> **தேனோங்கு சாந்த சிவமயமாச் சேர்ந்தனவே''**

என்று இவ்வுண்மையை ஸ்ரீ முருகனாரது வாக்கே மெய்ப்பிப்பது காண்க. மனம் நினைப்பதைக் கரம் வரைகிறது. அவ்வாறே, பகவானது உள்ளத்திற் பழுத்துக் கிடப்பவை நமக்கு எழுத்திற் கிடைக்கின்றன ஸ்ரீ முருகனாரிட மிருந்து!

''மூவாசைகளை விட மிகப் பெரிய படுகுழி புகழாசையே; தானெழுந்தால் சகலமு மெழும்; தானடங்கினாற் சகலமு மடங்கும்; அணிமாதி அஷ்டசித்திகளின் அடைவும் மெய்யான புருஷார்த்த மன்று. உலகில் எழுந்து ஆடக் கிளம்பாமல், உள்ளத்தில் ஆழ்ந்து அடங்கப் பெற வேண்டும்; அனைத்தினும் நல்லதை ஆண்டவனே அறிவானாதலின் சங்கற்பங்கள் அனைத்தையும் விட்டொழித்து சகல பாரங்களையும் அவனிடம் விடுத்து அமைதியாயிருப்பதே அறிவுடைமை; அனர்த்தம் அனைத்திற்கும் அகந்தையே ஆணிவேர்; அகந்தையறலே அனைத்தறன் ஆகுல நீரபிற'' என்னும் தமது சற்குரு பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகளின் உபதேச நெறிக்கு மனமொழி மெய்யால் முற்றும் ஒவ்வியவராய் அமைந்த ஸ்ரீ ரமண சற்சீடர் முருகனார்.

ஒருமுறை ஸ்ரீ பகவான், ''என்னை நான் எவ்வா றறிந்திருக்கின்றேனோ அவ்வாறே என்னைக் காண்போரே என்னைச் சரியாக அறிந்தோராவர்!'' என்றருளினர். அதாவது, நாமரூப ஜட வுடலாதி தாமல்ல; சச்சிதானந்த பராகாச வடிவே தம் மெய்யுரு வென்பது பகவானது அனுபூதி யன்றோ? அவ்வாறே அவரை யறிந்திருந்தவர் ஸ்ரீ முருகனார். இவ்வுண்மையை

**''எங்கிருந் தேரமண னென்னை யணைந்தானோ**
**வங்கிருந்தே நானுமவ் வாண்டானோ-டெங்க**
**ளொருமித்த வாழ்வி லுணர்ந்தபர மார்த்த**
**தருமத்தை யோதுவேன் சற்று''**

எனவரும் இந் நூலின் பாயிரச் செய்யுளிலிருந்து அறியலாம். இக் காரணத்தாற்றான் விலைமதிப்பில்லா மகிமை வாய்ந்த ஸ்ரீ ரமணோபதேச இரத்தினங்களை அப்படியே வரிவடிவாக்கும் அருட்டிறன் ஸ்ரீ முருகனாருக்கு இயல்பாயிற்று.

தனது தாய்மொழியாகிய தமிழ்மொழியே தனது குருதேவரின் தாய்மொழியுமாக வமைந்தது ஸ்ரீ முருகனாருக்கு மட்டுமன்றி தமிழ் நாட்டிற்கே ஓர் பெரும் பாக்கியமாகிவிட்டது. இது காறும் இவ்வுலகம் கேட்டிராத அளவற்ற ஆன்மஞான இரகசியப் பேருண்மைகளை யெல்லாம் பகவான் ஸ்ரீ ரமணர் சற்றும் பரிபாஷைகளால் மறைத்தலின்றித் தமது அனுபவத்தினின்றும் எடுத்தோதி வந்தது பெரும்பாலும் தமிழிலேதான். ஒவ்வொரு நாளும் ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந்தருளும் அரிய ஆன்மீகக் கருத்துக்கள் ஒவ்வொன்றையும் இனிய அழகிய தமிழ்ப் பாக்களாக்கி ஸ்ரீ பகவானிடமே கொடுத்து அவ் வுபதேசக் கருத்துக்கள் சரியாக வமைந்தனவா என்பதை பகவான் பார்த்து ஆமோதித்தபின் ஸ்ரீ முருகனார் கோவையாகத் தொகுத்து வந்தார். அவை மொத்தம் 1254 செய்யுட்களாயின. ஸ்ரீ பகவான் அப் பாடல்களைக் கவனித்து வரும்போது மேலும் சுருங்கக் கூறி விளங்க வைக்கவோ அல்லது இன்னும் சில புதுக் கருத்துக்களைச் சேர்க்கவோ விரும்பிய விடங்களிலெல்லாம் தாமே புத்தம் புதுச் செய்யுட்களை யாத்து இடையிடையே அமைத்தருளினர். அவ்வாறு ஸ்ரீ பகவானாலேயே பாடப்பட்ட 28 பாக்களையும் ஆங்காங்கே தடித்த எழுத்துக்களால் அச்சிட்டு அவைகளுக்குத் தனி வரிசை எண்களும் கொடுக்கப்பெற்று மொத்தம் 1254+28=1282 பாக்களும் **''குருவாசகக் கோவை''** என்னும் இந் நூலாயிற்று.

உலகம் அறிய வேண்டிய சகலவித ஆன்ம போதனா விரகசியங்களின் விளக்கங்களும் ஒருங்கே தொகுக்கப்பெற்று விளங்கும் ரமணோபதேச நூலொன்று வேண்டுமாயின் அது குருவாசகக் கோவையே! ஒரு விஷயத்தைப் பற்றிய சரியான ரமணோபதேசம் யாதா யிருக்குமென ஊர்ஜிதப் படுத்த விரும்புவோமாயின் அதற்குப் புகல் ஸ்ரீ முருகனாரை முன்னிட்டுத் தோன்றிய **''உள்ளது நாற்பது, உபதேச வுந்தியார், குருவாசகக் கோவை''** என்னும் இம் முன்றுமே. இம்மூன்றுமே **'ஸ்ரீ ரமண பிரஸ்தானத் திரய'** மாகும்!

இக் குருவாசகக் கோவையின் முதற்பதிப்பு வெளிவந்து ஆண்டு பல கழிந்த பின் ஸ்ரீ முருகனாரிடம் ஏட்டுப் பிரதிகளாயிருந்த பல்லாயிரக்கணக்கான சீரிய செய்யுட் களஞ்சியத்தைக் கொஞ்சங் கொஞ்சமாக ஆராய்ந்து படித்தனுபவிக்கும் அரிய பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அப்போது அவைகளிற் பல பெரும்பாலும் சுத்தப் பிரதி எடுக்கப்பட வேண்டிய நிலையிலிருந்ததால் அத்தொண்டில் ஸ்ரீ பகவானருள் என்னைக் கூட்டுவித்தது.

பூமண்டலம் முழுவதும் ஒரு குடைக் கீழ் ஆண்டு, எண்ணரிய திரவியக் குவியல்களை ஈட்டி வைத்த ஒப்பற்றதோர் சக்கரவர்த்தியாகிய தன் தந்தையைத் தனது மிக இளமைப் பிராயத்திலேயே இழந்து வருந்தும் தனையனை யொத்து ஸ்ரீ பகவானை இழந்த துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருந்த நான், ஸ்ரீ முருகனாரது பா நிதியத்தைப் படிக்கத் தொடங்கிய பின் தன் தந்தையாகிய பேரரசனின் பெருநிதி முழுவதையும் போற்றித் திரட்டிச் சேமித்து வைத்திருந்து தந்தைக்குப்பின் கருணையோடு தன் இளஞ்சகோதரர்களை யெல்லாம் புரப்பவரான ஓர் மூத்த சகோதரராற் காட்டிக்கொடுக்கப்பட்ட **இராஜபொக்கிஷ**மாகவே அப்பாடல்களை யுணர்ந்து வியந்து மகிழ்ந்தேன். ஆவல் மீக்கூர ஸ்ரீ முருகனாரிடம் இவ்வருணிதித் திரளைப்பற்றி வினவியவெனக்கு அவரது விடையாகக் கீழ்க்கண்ட பாடல் கிடைத்தது:

**''பாடித் தொகுத்தபல பாநிதியம் போக்கியந்தோ**
**நாடி யுலோபஞ்சேர் ஞாபகத்தின் - பீடில்**
**கடைக்கே குறுகிக் கவியொருவன் பிச்சை**
**யெடுக்கின்றான் மான மிழந்து''**

இதைக் கண்டு வியந்த நான், ''தாங்கள் சேமித்து வைத்த நம் தந்தையின் அருணிதிக்குவையில் இழக்கப் பட்டனவுஞ் சில வுளவோ?'' என வினவலும், ''ஆம்; சுமார் ஓராயிரம் பாடல்கள் எங்கோ போயின; திரும்பக் கிடைக்கவில்லை'' என்று புன்முறுவல் பூத்தார் புலவர் பெருமான்! சென்றவை போக நின்றவைகளைத் தேடித்துருவித் தினமும் சுத்தப்பிரதி யெடுத்துத் தொகுத்து வரும்போது குருவாசகக் கோவையிற் சேர வேண்டியவையான 406 பாடல்கள் கிடைத்தன. அவற்றையும் முதற் பதிப்பின் திறன்களில் சேர்க்கத் தக்க விடத்துச் சேர்த்தும் தேவைப்பட்ட பாக்களுக்குத் திறன்களைப் புதியனவாகப் பெயரிட்டும் 1282 பாடல்களாக இக் குருவாசகக் கோவையைப் பூர்த்தி செய்தேன்.

இந் நூலின் மூலம் ஆன்ம சாதகர்களின் உலகிற் புகுந்து முழங்கும் புரட்சிக் கருத்துக்கள் நிறைந்த போதனைச் சங்கொலியும் அவற்றிற்கு மூல பலமான பகவானது மோன முரசொலியும் பற்பல திறன்களிற்

செவிமடுக்கப் பெற்று, கற்போருள்ளத்திற் பாய்ந்து, தோய்ந்து, அறிவுக் கண்ணை அகலத் திறப்பித்து, ஆச்சரிய வெள்ளத்தி லாழ்த்துவிப்பனவா யுள்ளன. உதாரணங்களாக:

''தான் என்று எதிலும் முனையாதே; ஈசன் கருவி-ஆள்-அடிமையே நான் என்று உன்னைக் கருதிக் கரும மியற்று'' என்று இத்தனை காலமாக நமக்குச் சொல்லப்பட்டு வந்ததன்றோ? ஆனால் இந்நூலின் 471-வது வெண்பா:

**''சிவன்கருவி யாகநான் சேர்கென்று செம்மைத்**
**தவங்கருது யோகநிட்டை தானும் - நிவந்தநிலை**
**யான விறைபணியா மான்ம சமர்ப்பணத்துக்**
**கூன மெனவே யுணர்''**

என்று எச்சரிக்கின்றது.

''ஆண்டவன் அருளைப் பெற்றால் ஆக்கையில் அநேகாயிரம் ஆண்டுகள் அனாயாசமாய் வாழலாம்''என்று காய சித்திக்காகக் கணக்கற்ற யோகாப்பியாச முறைகளைக் கற்பதுங் கற்பிப்பதுமாக நம்மிடையே எத்தனையோ முயற்சிகள் காணப்படுகின்றன வன்றோ? ஆனால் குருவாசகக் கோவையின் 232,233-வது உபதேசங்கள்:

**''பிணியா மனைத்தும் பிறப்பிக்கு மூலப்**
**பிணியா முடற்பெற்றி தேறார் - பிணியை**
**வெருவாது வேண்டி விழற்கிறைப்பார் போல**
**உருவசித்தி வேண்டியுழல் வார்''**

**''அடும்பிணிகட் கெல்லா மடிப்படையாய் நின்ற**
**விடம்படுமாங் காரப்பாழ் வீணர் - உடம்பு**
**வலுப்படற்கா நோய்வலுக்க மாமருந்துண் பார்போற்**
**சலிப்பறத்தாஞ் செய்வார் தவம்''**

என்று இடித்துரைத்து, தம் முண்மை நிலையான அழிவற்ற 'பூன்றமா மோனம் பொருந்துக' என்று ஆன்ம சாட்சாற்காரத்தையே குறிக்கோளாகக் கொள்ளுமாறு அறிவு புகட்டுகின்றன.

''நாம் நாடு துறந்தோம், நன்மை துறந்தோம்; வீடு துறந்தோம், விருது துறந்தோம்; பேடு துறந்தோம், பேச்சுந் துறந்தோம்; காடு புகுந்தோம், கந்தை புனைந்தோம்; ஓடு சுமந்தோம், பாடு துணிந்தோம்; ஈசனுக்காக எல்லாந் துறந்தோம்''என்று தம் தியாகத்தின் தன்மையைச் சிற்சில சமயம் தாமே வியந்து செருக்கும் ஆரம்பர்களைக் குருவாசகக் கோவையின் 850-வது பாடல்,''தனதென்ப தெல்லாம் விட்டுத் தவக்கோல முற்ற தீரனே!''என்று அன்புடன் விளித்துத் தேற்றி,''மமதையை (உடைமையை) விட்ட இது

மட்டும் ஓர் தியாக மாகாது; 'என்னவையாவையும் விட்டவன் நான்' என்னும் அகந்தையையும் அற விடுதலே அரிய,பெரிய, உயரிய தியாகம்; அதுவே தர்மம்'' என்ற கருத்தை,

**''வயாவடிவாந் துன்ப வழியா மமதைத்**
**தியாகமொருங் குற்றவதி தீரன் - உசாவால்**
**அசேட வகந்தைத் தியாக வடைவே**
**விசேடமாந் தன்ம விளைவு''**

என்று புகட்டி அத் தவசியை ஆன்ம சமர்ப்பணத்திற்கு ஊக்குவிக்கின்றது!

அத்தகைய சாதகர்கள் தம்மைப் பெரிதாகத் தாமே மதித்து, மக்களிடம் வலிந்து சென்று போதித்து, தம்மை குருவாய்க் கும்பிட்டுக் கூத்தாடக் கூட்டம் தயாரிப்பதைக் கண்டு, அவர்கள்பால் பேரிரக்கங் கொண்டு, குருவாசகக் கோவையின் 236-வது செய்யுள்:

**''கோரிக்கை வேண்டிக் குவலயத்தோர் நின்னுள்ளம்**
**பூரிக்க நல்கும் புகழ்பூசை - வீரியத்தோ**
**டாண்டதவத் தோயை யகப்படுக்க மாயையிடு**
**தூண்டிற்பொன் னாகத் துணி''**

என்று உபதேசித்துத் தடுத்தாட் கொள்கின்றது.

''மூல முடிச் சவிழ்ந்து, ஆன்ம முழு மணி யெய்தப் பெறாவிடின் ஞாலமட மாந்தர் நயக்கும் அணிமாதி யஷ்ட சித்திகளையும் ஏல ஒருங்கே எய்தப் பெற்றாலுங்கூட, அன்னோர் படிச்ச படிப்பெல்லாம் பாழ்!'' என்று 1065-வது குருவாசகம் கோஷிக்கின்றது.

உபாசனை பலத்தால் நம் கண்ணெதிரே காணுந் தெய்வ நாம ரூபங்களும் பிறகு மறைந்து விடுவதால் 'எது நிஜமான தெய்வம்?'என்பார்க்கு ''என்றுமுளதாம் தம் மியற்கையே மாறாது நின்ற பரதெய்வ நிஜம்''என்று நிஜதெய்வ தரிசனத்தைக் காட்டித் தருகின்றது 1073-வது பாடல்.

மதங்களின் உட்கிடக்கையான ஆன்மநேய ஒருமை யுணராது மத வாதிகள் மறித்துப் பூசலிட்டு மக்களைக் கெடுத்துத் தம் மனத்தையும் கெடுத்துக் கொள்கிறார்களே என்ற பரிவால்,

**''அமையுமதீ தத்தை யகவெள் ளிடையில்**
**இமயமெனக் காட்டுமொர்சொல் லின்றேற் - சமய**
**வருக்கமெலாஞ் சேர்ந்துபர வத்துவையாய் வாத**
**தருக்கமெலாஞ் சந்தையிரைச் சல்!''**

என்று தமது 341-வது பாட்டாற் காட்டி, ஆன்மவிசாரமே சகலமத ஸாரம் என்பதை,

**''இன்றி யமையா தியலுந்தன் னுண்மைதனைத்**
**துன்றுநா னாரெனவுட் சோதித்தல் - ஒன்றே**
**உயலுணர்த்தும் பன்மதத்து மூடுருவிச் செல்லு**
**முயிர்நாடி யாக வுணர்''**

என்ற 338-வது பாட்டாற் குறித்து குருவாசகக் கோவை மதசமரசங் கூறுகின்றது!

'எல்லா முணர்தல், முற்றறிவு, சர்வஜ்ஞத்வம்' முதலிய சொற்றொடர்கள் மக்களாற் பலகாலம் வியந்து பேசப் படுகின்றன வன்றோ? அதன் பொருளென்ன? முக்கால முணர்தலோ ஆயகலைகள் அறுபத்து நான்கினையு மறிந்தோனாதலோ உண்மையில் முற்றறிவல்லவென்றும், ''சிற்றுணர்வு போலே சிதைவுண் டொழிந்திடுமம் முற்றுணர்வு மொக்க முடிந்து'' என்றும் 926-வது பாடல் தொடங்கி 929-வது பாடல் வரை விளக்கிய பிறகு 934-ல்,

**''அத்துவிதான் மாவை யபரோக்க மாவுணர்தல்**
**முற்றுணர்வாம்; அல்ல பிற''**

என்று கூறி 935-வது பாடலால்,

**''அனைத்துமா வொன்றுமான் மானுபவ மெய்தல்**
**அனைத்தே யனைத்து மறிவு''**

என்றும் சர்வஜ்ஞத்வ லக்ஷணம் கூறித் தீர்ப்பளிக்கின்றது குருவாசகக் கோவை!

'அகம் பிரம்மாஸ்மி, சிவோஹம்' என்பவை யெல்லாம் நம் முடிந்த நிலையின் முன்னறிவிப்பே என்றுணராது அவற்றைச் செபித்தும் நினைத்தும் சாதகர்கள் அகந்தைத் தடிப்புறாதபடி 897-வது செய்யுளால்,

**''யானுயிரென் றெண்ணி யியலழிந்த வென்னெஞ்சே**
**யானிறையென் றேமாந்து போதியால் .....''**

என்றெச்சரித்துவிட்டு,

**''மோனமய மாக முடிந்த முழுமுதலை**
**நானதுவென் றெண்ணி நலிதலெவன் - மோனமயம்**
**நண்ணுவதே நிட்டை; அது நானறலே; நானறவே**
**எண்ணுவதற் கெங்கே யிடம்?''**

என்று 902-வது உபதேசத்தால் மகாவாக்கியக் குறிக்கோளான பர நிலை எய்தும் வழியும் முடிவும் காட்டியருள்கின்றது இந்நூல்.

மதியத்தின் ஒளிமுற்று மிழக்கப் பட்ட நிலையே அமாவாசைச் சுபதின மாவது போல், மன வுணர்வாம் ஜீவமதியினொளி ஆன்மக் கதிரொளியுட்புக்கு ஆங்கு, ''இறந்து போய்த் தன்மயமாய் என்றொழியும் அன்றே, சிறந்த வமாவா சியை'' என்று அமாவாசைப் புனித நாளின் தத்துவமிசைக்கின்றது 857-வது வெண்பா!

வள்ளுவர் இல்லற தர்ம மிசைக்கையில்,

**''குழலினிதி யாழினி தென்பர்தம் மக்கள்**
**மழலைச்சொற் கேளா தவர்''**

என்று கூறினரன்றோ? அதனினு மினிய தொன்றை 1198-வது குருவாசகம் எடுத்துக் கொடுக்கின்றது! அது யாது?

**''குழலினிது யாழினிது கொஞ்சுந்தம் மக்கள்**
**மழலைமொழி மாணவினி தென்பர் - உழலுமனம்**
**ஓய்ந்துபரா வாக்கா முடையா னருண்மொழியை**
**ஆய்ந்துதாங் கேளா தவர்!''**

தம் மக்கள் மழலைமொழி கேளாதார்க்கே குழலினிது யாழினிதாவது போல, உடையானான சற்குருவின் அருண் மொழியாம் பராவாக்கைக் கேளாதார்க்கே தம் மக்கள் மழலைச் சொல் இனிதாகும் என மெய்யறிவின்பமெது வென்று விளக்கித் தருகின்றது இப் பாடல்!

தம்மை ஆட்கொண்ட சற்குரு ரமண பகவானிடம் சிரவண மனன நிதித்தியாசனம் உற்றுப் பெற்ற இவ் வரும்பெரும் ஆன்ம ஞான சாத்திரத்தின் பயனைத் தாம் துய்த்த வண்ணத்தை,

**''அன்னதா லந்தச்சிற் றம்பலமே யாராலும்**
**பன்னலா காமெய்ப் பரசிவமாம் - என்னவே**
**தேர்வித்தா னென்னைச் சிவமயமாந் தன்னிலையைச்**
**சீர்வித் தகரமண தேவு''**

**''தன்னுருவாம் போழ்தத்துத் தன்னுருவாந் தானத்துத்**
**தன்னுருவாந் தானெய்தத் தானுவந்து - தன்னுருவாம்**
**தன்னைத் தனதுருவாந் தான்காட்டித் தந்திடலும்**
**தன்னுருவாந் தன்னையுணர்ந் தான்''**

என்ற 1020,1021-ஆம் பாடல்கள் இரண்டாலும் ஸ்ரீ முருகனார் விளக்குவது இந் நூலைக் கற்போர் அடையவிருக்கும் ஞானப் பேற்றுக்குப்

பிரமாணமாக அமைகின்றது. இங்ஙனம் தருமார்த்த காமச் சலன மறக் காணும் பரமார்த்த தீபப் பயனை ஸ்ரீ முருகனார் அருணைரமண னருள்விழியாற் கொண்டு, கூடிப் பெற்று, உலகையும் பரமார்த்தஞ் சேர்க்கப் பரிந்து, குருவாசகக் கோவையை அளித்துள்ளார். பக்குவர் இந் நூலைக் கற்று, கற்றாங்கு நிற்றலால், உள்ள பொருளை யுணர்ந்து கள்ளவகத்தைக் களைந்து பரமான்ம சொரூபமே தானாம் பரம நிலை யெய்துவாராக.

திருவருணை **சாது ஓம்**

1971.

ஓம்
நமோ ரமணாய

# சிறப்புப் பாயிரம்

திருவருணை
## ஸ்ரீ நடனானந்த சுவாமிகள் இயற்றியது

**(நேரிசை வெண்பா)**

1. அருணைரம ணேச னருளியமெய்ஞ் ஞானப்
பொருளையநு சந்திக்கும் போத - முருகன்
பரமார்த்த தீபமெனப் பார்க்கொருநூ லீந்தான்
குருவார்த்தை யெல்லாங் குவைத்து.

2. உள்ள பொருளே பொருளா வுணர்வதூஉம்
கள்ள வகத்தைக் களைவதூஉம் - உள்ளொளி
தோற்ற வணமதனைச் சூழு நினைவிருளைப்
பாற்றுவதூஉ மிந்நூற் பயன்.

ராவ்பஹதூர்

## வ.சு.செங்கல்வராயபிள்ளையவர்கள், எம்.ஏ,

*(Retired Personal Assistant*
*to the Inspector-general of Registration)*

உதவியது

**(நேரிசை வெண்பா)**

1. ***யானேக்குங் காலேநில*** **னென்ற திருக்குறளை**
**மேனேக்க மெய்ப்பொருளை மேதினியோர் - தானோக்கி**
**உண்மை யுணரவெடுத் தோதுதிறல்***வித்தகன்காண்
**கண்ண முகவைமுரு கன்.**

2. **முகவையூர்க் கண்ண முருகனுர் சொற்ருர்**
**பகவனு ருண்மைப் பரிசைச் - சகவிருளைத்**
**தீர்க்கும் பரமார்த்த தீப விளக்கத்தால்**
**யார்க்கு மிடர்நீங்க வே.**

3. **குருவா சகங்களெலாங் கோவைபடச் சேர்த்திங்**
**கொருவா சகமா வுரைத்த - திருவா!**
**முகவை முருக முனியே யுனது**
**தகவைப் புகழுஞ் சகம்.**

ஓம்
நமோ ரமணாய

# ஆக்கியோன் குறிப்பு

அந்தமில்பே ரின்ப வருட்குருவா வுள்ளம்புக்
கெந்தமைநன் காண்ட விறைரமணன் பாதார
விந்தமே மிக்க விழுப்பொருளாத் தன்னடியேன்
புந்தியிலே பொங்குமனு பூதியா லோதியவற்
றெந்தநூல் யார்பதிக்க வேற்ருலும் பெற்றிசே
ரந்தநூ ***லச்சுப் பிழையறவே*** யாராய்ந்து
விந்தைசே ரன்பால் வெளியிடுக வஃதிறைக்குச்
சந்தமார் தொண்டாகத் தான்கடவ வாற்றாலே.

சிவமயம்

## சமரச சன்மார்க்கம்

**உதித்த விடத்தி லொடுங்கி யிருத்தல்**
**அதுகன்மம் பத்தியு முந்தீபற**
**அதுயோக ஞானமு முந்தீபற.**

**வினையும் விபத்தி வியோகமஞ் ஞானம்**
**இனையவையார்க் கென்றாய்ந் திடலே - வினைபத்தி**
**யோகமுணர் வாய்ந்திடநா னின்றியவை யென்றுமில்தான்**
**ஆகமன லேயுண்மை யாம்.**

**ஸ்ரீ பகவான்**

சிவமயம்

ஸ்ரீ

## அருணாசல தத்துவம்

புத்தியகங் காரம் புலம்பெய்த வோங்கும்
மத்தியித யந்தான் மறையவனு மாலும்
நத்தவறி யாது நலங்குலைய வன்னார்
மத்தியொளி ரண்ணா மலையினது மெய்யே.

**ஆசிரியர்**

சிவமயம்

## தீபதரிசன தத்துவம்

இத்தனுவே நானா மெனுமதியை நீத்தப்
புத்தியித யத்தே பொருந்தியக நோக்கால்
அத்துவித மாமெய் யகச்சுடர்காண் கைபூ
மத்தியெனு மண்ணா மலைச்சுடர்காண் மெய்யே.

**ஸ்ரீ பகவான்**

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ ரமணாய

**ஸ்ரீ முருகனாரருளிய**

# பரமார்த்த தீபம்

**என்னும்**

# குருவாசகக்கோவை

---

## பாயிரம்

## 1. குரு வணக்கம்

**(நேரிசை வெண்பா)**

1. **அருளவா வான்மே லலந்துபடா துள்ளந்**
**தெருளவான் மாவாத் திகழும் - மருளவாய்**
**நின்றயா னென்னதெனு நீசமனப் பான்மையறத்**
**துன்றுகுரு போதச் சுடர்.**

அருள் அவாவால் மேல் அலந்து படாது உள்ளம் தெருள ஆன்மாவாத் திகழும் மருள் அவாய் நின்ற யான் என்னது எனும் நீச மனப்பான்மை அறத் துன்று குரு போதச் சுடர்.

**அலந்து படாது-தளர்வடையாது; மருள் அவாய்-மயக்கங்கொண்டு; துன்று-பொருந்துகின்ற,சேருகின்ற.**

நான் என்றும் எனதென்றும் கற்பிக்கும் நீசமனம் சடவஸ்துவாயினும் ஆன்மாபோல் விளங்கி எல்லா அனர்த்தங்களையும் விளைவிக்கும். அம்மனப்பான்மையற்று விளங்கும் குருவே போதச் சுடராம்.

2. **உடலுருவாப் பேதுற் றுழன்றேனை யூத்தைச்
சடவுருநா னன்றாகத் தள்ளிக் - கெடலருமெய்ஞ்
ஞானகுரு வாக நயந்தாண்ட நல்லருண்
மோனகுரு பாதம் முடி.**

உடல் உருவாப் பேதுற்று உழன்றேனை ஊத்தைச் சட உரு நான் அன்றாகத் தள்ளிக் கெடல் அரு மெய்ஞ்ஞான குருவாக நயந்து ஆண்ட நல்ல அருள் மோன குரு பாதம் முடி.

**பேதுற்று-மயங்கி.**

3. **மிகவேறு பட்ட விவாதங்கட் கெல்லாந்
தொகவே சமரசமாத் தோன்றத் - தகவே
சமர்த்தித்து மெய்ப்பொருளைத் தந்துரைக்கும் போத
சமர்த்தகுரு பாதந் தலை.**

மிக வேறுபட்ட விவாதங்கட்கு எல்லாம் தொகவே சமரசமாத் தோன்றத் தகவே சமர்த்தித்து மெய்ப்பொருளைத் தந்து உரைக்கும் போத சமர்த்த குரு பாதம் தலை.

**தகவே-தக்கவாறு.**

வேறுபட்ட விவாதங்களையெல்லாம் சமரஸப்படுத்தி மெய்ப்பொருளைத் தந்துரைக்கும் போதகுருவின் அடிகள் என் தலைப்படுவதாக என்றார். அவ்வாறு அனுபவமேலிட்டாலன்றி சமரஸந் தோன்றாமையின் விவாதங்கள் எல்லையற்றனவாகவும், புத்தியில் தம்முள் முரணாற் சுழற்சி செய்து இடர்ப்படுத்துவன வாகவுமுள.

## 2. நூற்பெயரும் தோற்றமும்

4. **தெளிந்த *பரமார்த்த தீபமீ* துண்மை
ஒளிர்ந்திடக்கா ணாத வுளத்தேன் - இளந்தை
அறிவாற் கொளுத்தியதன் றாண்ட*ரம ணன்மூ*
தறிவாற் கொளுத்திய தாம்.**

தெளிந்த பரமார்த்த தீபம் ஈது உண்மை ஒளிர்ந்திடக் காணாத உளத்தேன் இளந்தை அறிவால் கொளுத்தியது அன்று ஆண்ட ரமணன் மூது அறிவால் கொளுத்தியது ஆம்.

**இளந்தை-பக்குவ முதிர்வற்ற.**

5. **ஒளிர்மெய் யுணர்வாக வுள்ளதே தானாக்
கிளர்சொருப மானவருட் கேள்வன் – தளர்வறவே
சாற்றியபல் போதனையுட் சார்ந்தசில ஞாபகத்திற்
போற்றியுரைக் கின்றேன் புலத்து.**

ஒளிர் மெய் உணர்வு ஆக உள்ளதே தானாக் கிளர் சொருபம் ஆன அருள் கேள்வன் தளர்வு அறவே சாற்றிய பல் போதனையுள் சார்ந்த சில ஞாபகத்தில் போற்றி உரைக்கின்றேன் புலத்து.

**6. எங்கிருந் தேரமண னென்னை யணைந்தானோ**
**வங்கிருந்தே நானுமவ் வாண்டானோ - டெங்க**
**ளொருமித்த வாழ்வி லுணர்ந்தபர மார்த்த**
**தருமத்தை யோதுவேன் சற்று.**

எங்கிருந்தே ரமணன் என்னை அணைந்தானோ அங்கிருந்தே நானும் அவ் ஆண்டானோடு எங்கள் ஒருமித்த வாழ்வில் உணர்ந்த பரமார்த்த தருமத்தை ஓதுவேன் சற்று.

எத்தானத்தினின்று சற்குரு தம்மை யாண்டானோ அத்தானத்திலே தாமுமவனோ டொருங்கு ரமித்தலால், அங்கு அவ்வுணர்வில் தழைத்த பரமார்த்த தருமத்தைச் சிறிது கூறுவ னென்றார். தடுத்தாட் கொண்டது கூறல் அடியார் மகிழ்வாம். இவரும் 1247 வது பாடலில் ''பூண்டதுபோன் மாயை புலம்பியவென் சுட்டறிவுக் கீண்டுகுரு வாய்த்தா னெதிர் தோன்றி யாண்டதனால்'' என்று கூறியது காண்க.

**7. முளைத்த வகந்தைமதி மோகமற வென்னைத்**
**தெளித்த ரமணகுரு தேவன் - அளித்தவருட்**
**பார்வையாற் கண்ட பரமார்த்த *பா*வமொரு**
***கோவை*யாக் கோப்பேன் குறித்து.**

முளைத்த அகந்தை மதி மோகம் அற என்னைத் தெளித்த ரமண குருதேவன் அளித்த அருள் பார்வையால் கண்ட பரமார்த்த **பா**வம் ஒரு கோவையாக் கோப்பேன் குறித்து.

**தெளித்த-தெளிவித்த.**

அகந்தையை யழித்துத் தன்னை யாண்ட வருட் குருநாதன் தனக்களித்த மோனச் செல்வத்தைப் பிறரும் பெறும் வண்ணம், அந்தச் சொலற்கரிய பரமார்த்த **பா**வத்தை நுண் கருத்துக்களாக மொழியில் ஒருவாறு வெளிப்படுத்துவனெனச் சங்கற்பிக்கின்றார்.

## 3. நூற்பயன்

**8. அனைத்துமாய் நின்றபர மான்மாவுக் கெய்தல்**
**எனைத்துமே யின்றா மெனவே - மனத்துத்**
**தருமார்த்த காமச் சலனமறக் காண்டல்**
***பரமார்த்த தீப*ப் பயன்.**

அனைத்துமாய் நின்ற பரமான்மாவுக்கு எய்தல் எனைத்துமே இன்றாம் எனவே மனத்துத் தரும அர்த்த காமச் சலனம் அறக் காண்டல் பரமார்த்த தீபப் பயன்.

9. **சுகசொருப மாகச் சுடருந்தன் மெய்யே**
**இகபரங்கட் கெல்லா மிடமாம் - தகவாற்**
**கதியெலா மெண்ணிக் கலங்காது தன்னிற்**
**பதிதலா மிந்நூற் பயன்.**

சுக சொருபமாகச் சுடரும் தன் மெய்யே இக பரங்கட்கு எல்லாம் இடமாம் தகவால் கதி எலாம் எண்ணிக் கலங்காது தன்னில் பதிதலாம் இந்நூல் பயன்.

## 4. அவையடக்கம்

10. **சந்தக் *குருவா சகக்கோவை* தேருங்கால்**
**மந்த மதிபடைத்த மத்தனேன் – புந்தியால்**
**எண்ணி யிசைத்ததுவன் றெண்ணா திசைப்பித்தோன்**
**புண்ணியனாம் *வேங்கடவன்* போன்ம்.**

சந்தக் குருவாசகக்கோவை தேருங்கால் மந்த மதிபடைத்த மத்தனேன் புந்தியால் எண்ணி இசைத்தது அன்று எண்ணாது இசைப்பித்தோன் புண்ணியனாம் வேங்கடவன் போன்ம்.

11. **யானென்போ தத்தா லெழுதாக் கிளவிக்கு**
**யானே னியம்ப லவையடக்கம் - மோன**
**சமாதியா லுள்ளத்துட் சான்றோர்தே ரந்தப்**
**புமானதே யிந்நூற் பொறுப்பு.**

யான் என் போதத்தால் எழுதாக் கிளவிக்கு யான் ஏன் இயம்பல் அவை அடக்கம் மோன சமாதியால் உள்ளத்துள் சான்றோர் தேர் அந்தப் புமானதே இந்நூல் பொறுப்பு.

**கிளவி-சொல், நூல்.**

## 5. சமர்ப்பணம்

12. **பேதுகடிந் தென்னையிப் பேறு பெறுவித்தாள்**
**ஆதலினன் றாக வடைவித்தேன் - சூதுவா**
**தேது மறியாத *வீன்ரு டிருவுளத்துக்***
**கீது சமர்ப்பணமா கென்று.**

பேது கடிந்து என்னை இப் பேறு பெறுவித்தாள் ஆதலின் நன்றாக அடைவித்தேன் சூது வாது ஏதும் அறியாத ஈன்றாள் திரு உளத்துக்கு ஈது சமர்ப்பணம் ஆக என்று.

# 6. ஆக்கியோன்

**13. குருவார்த்தை சிற்சிலவோர் கோவையாக் கோத்துப்
பரமார்த்த மாகப் பகர்ந்தான் – சருவார்த்த
வண்ணமுமவ் வாண்டான் வளர்கழலே யாகவருட்
கண்ணினிற்காண் *கண்ணமுரு கன்*.**

குரு வார்த்தை சிற்சில ஓர் கோவையாக் கோத்துப் பரமார்த்தமாகப் பகர்ந்தான் சருவ அர்த்த வண்ணமும் அவ் ஆண்டான் வளர்கழலே ஆக அருள் கண்ணினில் காண் கண்ண முருகன்.

— ❖ —

முதலாவது

# தத்துவ ஆராய்ச்சியியல்

## மங்கலம்

**(நேரிசை வெண்பா)**

**14. நீர்சூழ் நிலமகள்செய் நீதப் பெருந்தவத்தாற்**
**பேர்சான்ற சுத்தப் பிரம்மமே - சீர்சால்**
**சகளங்கொள் *சீரமண சற்குரு*சற் போத**
**வகளங்க பாத மகம்.**

நீர் சூழ் நிலமகள் செய் நீதப் பெருந் தவத்தால் பேர் சான்ற சுத்தப் பிரம்மமே சீர்சால் சகளம் கொள் சீரமண சற்குரு சத் போத அகளங்க பாதம் அகம்.

**நீத-தகுந்த, சிறந்த; அகளங்க-பரிசுத்த.**

ஸ்ரீ ரமண சற்குருவின் போதம் என்னும் குற்றமற்ற பாதமே அகமெனப்படுவ தென்றார்; அகத்திற்படுவதற் குரிய தெனினும் பொருந்தும்.

**15. எல்லாப் பொருட்கு மிதயமா நின்றவொரு**
**சொல்லான சுத்த சொரூபமே - கல்லார்**
**மயலகற்று ஞானகுரு வாசகக்கோ வைக்கு**
**நயனருளு நன்மங் கலம்.**

எல்லாப் பொருட்கும் இதயமா நின்ற ஒரு சொல்லான சுத்த சொரூபமே கல்லார் மயல் அகற்றும் ஞான குருவாசகக் கோவைக்கு நயன் அருளும் நல் மங்கலம்.

இருளகற்றும் ஞானக்குறிகொண்ட குருவாசகக் கோவைக்கு மங்கலமா யமைவது எல்லாப் பொருட்கும் இதயமாகிய ஓங்கார ரூபமான சுத்த சொரூப மென்றார். இவர் முன்னர் ''யானென்போ தத்தா லெழுதாக் கிளவிக்கு யானே னியம்ப லவையடக்கம்'' (பாடல் 11) எனக் கூறியது காண்க; இந் நூலின் கருத்தும் வடிவும் பல வகையிலும் ஸ்ரீ ரமண வாக்காகவே அமைந்தமையின்.

## 16. ஞானமயச் செம்பொருளாந் தன்மெய் யநுபவந்தான்
**மோனமயப் பண்பான் முயங்குவதாய் - நானெனும்பொய்த்**
**தன்மையதன் மெய்யாய்த் தழைத்தொளிருஞ் சுத்தபரத்**
**தன்மயமாந் தாளே தலை.**

ஞானமயச் செம்பொருளாம் தன்மெய் அநுபவம் தான் மோனமயப் பண்பால் முயங்குவதாய் நான் எனும் பொய்த் தன்மை அதன் மெய்யாய்த் தழைத்து ஒளிரும் சுத்த பரத் தன்மயமாம் தாளே தலை.

**முயங்குவது-விளங்குவது.**

அறிவு வடிவச் செம்பொருளான ஆன்ம சொரூப அபரோக்ஷானுபவம் மோன வியல்பா லடையத் தக்கதாயும், நானென்னுமகங்கார வடிவச் சிதாபாசத்தின் உண்மை வடிவாயும் தழைத்தொளிர்கின்ற, (எல்லாவற்றுக்கும்) மூலாதாரமான சுத்த பர சொரூபமே முடிந்த பொருளாம்.

## 17. உள்ளுறவு கொண்டார்க் குவட்டலுறா தார்வமெழும்
**தெள்ளுபர மானந்தத் தீங்கனியாய் - உள்ளமுறத்**
**தூண்டா மணிவிளக்காய்த் தூங்காதே தூங்குண்மை**
**ஆண்டா னருளே பொருள்.**

உள் உறவு கொண்டார்க்கு உவட்டல் உறாது ஆர்வம் எழும் தெள்ளு பரம ஆனந்தத் தீம் கனியாய் உள்ளம் உறத் தூண்டா மணிவிளக்காய்த் தூங்காதே தூங்கு உண்மை ஆண்டான் அருளே பொருள்.

உள்ளப்புணர்ச்சியுற்றார்க்குச் சற்றும் வெறுப்பற்று (மேன்மேல்) வேணவா விளைதற்கேதுவான பேரின்பத் தெளி மதுரச் செழுங்கனியாயும், தூண்ட வேண்டாது மணிவிளக்குப்போ லுள்ளத்திற் சுடரும் சுயஞ்சோதி யாயும் (அவ்வுள்ளத்தின்கட் டானே என்றும்) தூங்காது தூங்குகின்ற உண்மை வடிவான ஆண்டானருளே மெய்ப் பொருளாம்.

## 18. உறவொழிவு கூடா வுளமுடையான் ஞானத்
**துறவழகு வாய்ந்த சொரூபன் - மறவி**
**யலக்கணற வாண்டா னடிகளே யுண்மை**
**யிலக்கணங்கட் கெல்லா மிலக்கு.**

உறவு ஒழிவு கூடா உளம் உடையான் ஞானத் துறவு அழகு வாய்ந்த சொரூபன் மறவி அலக்கண் அற ஆண்டான் அடிகளே உண்மை இலக்கணங்கட்கு எல்லாம் இலக்கு.

**மறவி-பிரமாதம்; அலக்கண்-துன்பம்.**

உண்மை இலக்கணங்கட் கெல்லாம் இலக்காகியவை, உறவும் ஒழிவும் கூடாவுள முடையோனும், ஞானத்துறவின் எழில் பெற்ற சொரூபனும், மறப்பெனும் அந்தகனின் துயரறவாண்டவனு மாகிய சற்குருவினடிகளே யென்றார்.

## 1. உலகுண்மைத்திறன்

**19. காரணமே காரியமாக் காண்டலாற் சாத்திரங்கள்**
**பேருருவ மாத்திரமாப் பேசலுறும் - பேருலகக்**
**காரணமாஞ் சின்மயந்தான் கைந்நெலிமெய் யாதலினாற்**
**பேருலக மெய்யெனவே பேசு.**

காரணமே காரியமாக் காண்டலால் சாத்திரங்கள் பேர் உருவம் மாத்திரமாப் பேசல் உறும் பேர் உலகக் காரணமாம் சின்மயம் தான் கைந்நெலி மெய் ஆதலினால் பேர் உலகம் மெய் எனவே பேசு.

காரணமே காரியமாகக் காணப்படுவதாலும், நாம ரூப மாத்திரமென்று சாத்திரங்களாற் சொல்லப்பட்ட பெரிய உலகத்துக்குக் காரணமான சேதனம் கரதலாமலகம் போன்ற உண்மையாதலாலும் பெரிய உலகம் உண்மை யென்றே கூறத்தகும்.

**20. மூவே ழுலகு முதற்கா ரணநோக்க**
**ஓவா துளவாற்றா லுண்மையாம் - தாவாத**
**காரியமாம் பேருருவங் காணுங்காற் காரணமும்**
**பூரணமாஞ் சூனியமே போன்ம்.**

மூ ஏழ் உலகு முதல் காரணம் நோக்க ஓவாது உள ஆற்றால் உண்மையாம் தாவாத காரியம் ஆம் பேர் உருவம் காணுங்கால் காரணமும் பூரணம் ஆம் சூனியமே போன்ம்.

**ஓவாது-இடைவிடாது ; தாவாத-ஒழியாத.**

**21. ஈசன் படைப்பா மெதிரிற் புலப்படூஉம்**
**காசினிமெய் யாகக் களிப்பார்க்குப் - பாச**
**மயற்கற் பனையா மனோமாத் திரமே**
**துயக்கறுதன் மெய்த்துணிவுற் றோர்க்கு.**

ஈசன் படைப்பாம் எதிரில் புலப்படூஉம் காசினி மெய்யாகக் களிப்பார்க்குப் பாச மயல் கற்பனையாம் மனோ மாத்திரமே துயக்கு அறு தன்மெய்த் துணிவு உற்றோர்க்கு.

**காசினி-உலகம்; துயக்கறு-தடையற்ற, பந்தமற்ற.**

(ஜீவ போதச் சுட்டறிவுக்கு) எதிர்ப்படத் தோன்றும் உலகம், அதனை மெய்யாக நம்பிக் களிக்கும் பாமரர்க்குக் கடவுள் படைப்பாம்; ஆனால் பாசபந்தமற்ற ஆன்மசொரூபத்தை அபரோக்ஷமாக வறிந்த திடஞானிகளுக்கு மாயா மோகமான மனோமயக் கற்பனா மாத்திரமே.

## 22. சொச்சபர மான்ம சொரூபத்தி லைம்புலமாம்
## துச்சவுரு நாமசகத் தோற்றமந்தச் - சச்சிற்
## சொரூபமதிற் கற்பிதமாய்த் தோற்றுமன மாயைத்
## திருவிளையாட் டென்றே தெரி.

சொச்ச பரமான்ம சொரூபத்தில் ஐம்புலமாம் துச்ச உரு நாம சகத் தோற்றம் அந்தச் சத் சித் சொரூபம் அதில் கற்பிதமாய்த் தோற்றும் மன மாயைத் திருவிளையாட்டு என்றே தெரி.

**சொச்ச-ஸ்வச்ச, சுத்த.**

பரிசுத்தமான பரமான்ம சொரூபத்தில் (காணப்படும்) பஞ்ச விஷயவடிவான, துச்சமான நாமரூப ஜகத்தோற்றம், அந்த சத்தியஞான (பரமான்ம) சொரூபத்திற் கற்பிதமாய்த் தோன்றிய மனமாயையின் திருவிளையாட்டென்றே தேறத்தகும்.

## 23. இறைவனது திட்டியிலே யில்லா வுலகை
## நிறைபடுமெய் யாக நிகழ்த்தார் - நிறைந்த
## அறிவுருவாந் தன்னையலா லன்னியமா வொன்றை
## அறியா வறிவி னவர்.

இறைவனது திட்டியிலே இல்லா உலகை நிறைபடு மெய்யாக நிகழ்த்தார் நிறைந்த அறிவு உருவாம் தன்னை அலால் அன்னியமா ஒன்றை அறியா அறிவினவர்.

பரிபூரண ஞானஸ்வரூபமான ஆன்மாவையன்றி அதற்கன்னியமாக வேறொன்றை யோராத மெய்யுணர்வுடையோர் (அவ்வான்ம சொரூபமான) இறைவன் பார்வையில் இல்லா தொழியு முலகைப் பரிபூரண (லக்ஷணத்தினின்று என்றும் பிரியாத) உண்மையெனக் கூறார்.

## 24. இலவுகாத் திட்டகிளி யென்றே புலனாம்
## உலகுபொரு ளாக்காத் துழல்வோய் - உலகு
## புலப்படலான் மட்டும் பொருளேற் பொருளாம்
## புலப்படலாற் கானற் புனல்.

இலவு காத்திட்ட கிளி என்றே புலன் ஆம் உலகு பொருளாக் காத்து உழல்வோய் உலகு புலப்படலால் மட்டும் பொருளேல் பொருள் ஆம் புலப்படலால் கானல் புனல்.

புலவிடயமா முலகை (உறுதி பயக்கும்) உண்மையாக நம்பிக்காத்து இலவு காத்த கிளிபோல் (ஈற்றில்) வருந்துவோய்! இவ்வுலகம் புலப்படலான் மட்டும் உண்மையெனின், புலப்படலாற் கானல் நீரும் உண்மையே.

## 25. தோற்றத்தை மெய்யாத் தொடராதே காண்சொருபத்
**தேற்றத்தை நீங்கித் திகைத்துநீ - தோற்றங்
கரப்பதான் மெய்யன்று காண்பான் சொரூபங்
கரப்பதன்று மெய்யதுவே காண்.**

தோற்றத்தை மெய்யாத் தொடராதே காண் சொருபத் தேற்றத்தை நீங்கித் திகைத்து நீ தோற்றம் கரப்பதால் மெய் அன்று காண்பான் சொரூபம் கரப்பது அன்று மெய் அதுவே காண்.

**தேற்றம்-அறிவு; கரப்பது-மறைந்து போதல்.**

## 26. மாயா விகார மனப்புலத்துக் கல்லாலம்
**மாயா விகார மனத்துக்குத் - தாயகமா
நின்ற தனக்கு நிகழா திருக்குங்கால்
ஒன்றுமோ வுண்மை யுலகு.**

மாயா விகார மனப் புலத்துக்கு அல்லால் அம் மாயா விகார மனத்துக்குத் தாய் அகமா நின்ற தனக்கு நிகழாது இருக்குங்கால் ஒன்றுமோ உண்மை உலகு.

**நிகழாது-விளங்காது.**

மாயா விகாரமான மனவுணர்வுக்கே எதிர்ப்படுவதன்றி அம்மாயா விகார மனத்துக்குப் பிறப்பிடமாக நின்ற ஆன்ம சொரூப உணர்வுக்கு எதிர்ப்படா திருக்கையில் உண்மை யுலகம் எவ்வா றுளதாம்?

## 27. சொப்பனமே யாகமருட் சூனியத்தே தோற்றிடுமிவ்
**வற்பசமு சாரங்கண் டஞ்சாதீர் - சிற்பரமெய்ந்
நேசக் கருத்தூடு நில்லாது காரிருள்சேர்
பாச மனக்கற் பனை.**

சொப்பனமே ஆக மருள் சூனியத்தே தோற்றிடும் இவ் அற்ப சமுசாரம் கண்டு அஞ்சாதீர் சித்பர மெய்ந் நேசக் கருத்தூடு நில்லாது கார் இருள் சேர் பாச மனக் கற்பனை.

**28. உலகத்துக் கஞ்சி யொடுங்குவீ ருள்ள
உலகத் தலமொன்று மில்லை - புலனாகும்
பொய்ச்சகத்துக் கஞ்சல் புரிகயிற்றிற் பொய்ப்பாம்புக்
கச்ச முறுத லனைத்து.**

உலகத்துக்கு அஞ்சி ஒடுங்குவீர் உள்ள உலகத் தலம் ஒன்றும் இல்லை புலன் ஆகும் பொய்ச் சகத்துக்கு அஞ்சல் புரிகயிற்றில் பொய்ப் பாம்புக்கு அச்சம் உறுதல் அனைத்து.

உலகைக் கண்டு நடுங்கி யொடுங்கும் மாந்தரே! (மெய்யாகவே) உள்ள உலக மொன்றும் இல்லவே யில்லை; (ஆதலால் உண்மை போலக்) காணப்படும் கற்பிதவுலகைக் கண்டு கலங்கல் கயிற்றிற் கற்பிதமான பாம்பைக் கண்டு கலக்கமுறல் போன்றதேயாம்.

**29. சங்கற்பத் தோற்றமுள சாக்கிரத்துஞ் சொப்பனத்தும்
பங்கமற விவ்வுலகம் பார்ப்பதலாற் - சங்கற்பம்
கிஞ்சித்துந் தோற்றாத கேவலத்துக் காண்பதுண்டோ
சங்கற்பந் தானுலக சத்து.**

சங்கற்பத் தோற்றம் உள சாக்கிரத்தும் சொப்பனத்தும் பங்கம் அற இவ்வுலகம் பார்ப்பது அலால் சங்கற்பம் கிஞ்சித்தும் தோற்றாத கேவலத்துக் காண்பது உண்டோ சங்கற்பம் தான் உலக சத்து.

**பங்கம்-கேடு, ஐயம்; கேவலம்-தூக்கம்.**

சங்கற்பத் தோற்றமுள்ள ஜாக்கிரத்திலும் சொப்பனத்திலும் மட்டும் உலோபமற உலகம் காணப்படுவதன்றி சங்கற்பம் சிறிதும் தோன்றாத சுழுத்தியிற் காணப்படுவ துண்டோ? (இல்லையே! ஆதலால்) சங்கற்பமே உலகின் சத்தையாம்.

**30. சிந்தனையின் மாட்சியே தேறு முலகமெனிற்
சிந்தனையில் லாதமைதி சேர்பொழுதும் - முந்தெனவே
சொற்பனம்போ லேனுமெதிர் தோன்றலது முற்பட்ட
கற்பனைவே கத்தாலே காண்.**

சிந்தனையின் மாட்சியே தேறும் உலகம் எனில் சிந்தனை இல்லாது அமைதி சேர் பொழுதும் முந்து எனவே சொற்பனம் போல் ஏனும் எதிர் தோன்றல் அது முற்பட்ட கற்பனை வேகத்தாலே காண்.

**மாட்சி-விளக்கம்; தேறும்-காணப்படும்; முந்து என-மேலெழுந்து வருவதாய்.**

காணப்படு முலகம் கற்பனையின் மாட்சியேயாயின், கற்பனையின்றி (மனம்) அமைதியடைந் திருக்கும் பொழுதும் முன்பு (தோன்றினாற்) போலவே சொப்பனம் போலாயினும் அவ்வுலகம் எதிர்ப்பட்டுத் தோன்றுவது முன்பு நிகழ்ந்த கற்பனை வேகத் (தின் காரணத்) தாலாம்.

**31. வாயு ளிருந்தே வலைநூல் வெளிப்படுத்தி
வாயுளதை மீள வயப்படுக்கும் - மாயச்
சிலந்திபோ லிவ்வுலகைச் சிந்தையுந்தன் னுண்ணின்
றலர்ந்தே யகப்படுக்கு மால்.**

வாயுள் இருந்தே வலைநூல் வெளிப்படுத்தி வாயுள் அதை மீள வயப்படுக்கும் மாயச் சிலந்திபோல் இவ்வுலகைச் சிந்தையும் தன் உள்நின்று அலர்ந்தே அகப்படுக்கும் ஆல்.

**சிந்தை-மனம்; அலர்ந்து-வெளிப்படுத்தி.**

வலைநூலை வாய்க்குள்ளிருந்தே வெளிப்படுத்தி மறுபடியும் அதனை அவ்வாய்க்குட் கவர்ந்து கொள்ளும் விசித்திர சக்தியுள்ள சிலந்தி போலவே சிந்தையும் இவ்வுலகைத் தனக்குள்ளிருந்தே வெளிப்படுத்தி (மறுபடியும், முன்போலவே) தனக்குட் கவர்ந்து கொள்ளும்.

**32. உந்தப் படுவ வுருப்பெயர்தா முண்ணின்றே
சிந்தைபொறி மூளைவழிச் சேருங்கால் - சிந்தை
இதயத்தே தங்கி யிருக்குங்கான் மீளப்
புதைவனவாங் கேயவையுட் புக்கு.**

உந்தப் படுவ உருப் பெயர் தாம் உள் நின்றே சிந்தை பொறி மூளை வழிச் சேருங்கால் சிந்தை இதயத்தே தங்கி இருக்குங்கால் மீளப் புதைவன ஆங்கே அவை உள் புக்கு.

சிந்தை, மூளைவழியாகவும் பொறிகள் வழியாகவும் வெளிப்படும் பொழுது (உலக வடிவான) நாமரூபங்களும் உண்ணின்று (அதனோடு கூடவே, புறத்துத்) தள்ளப்படுவனவாம். அவ்வாறே, சிந்தை இதயத்துள் (அகமுகப்பட்டுத்) தங்கியிருக்கும் பொழுது அவை மீளவும் அவ்விதயத்துட் புக்கே யொடுங்குவனவாம்.

**33. பேருருவத் தாலே பிணங்கும் பிரபஞ்சம்
பேருருவம் பேர்ந்தாற் பிரம்மமாம் - பேருருவக்
கற்பனையா லுண்மைக் கடவுளைமீப் போர்த்துலகா
வற்பமதி தான்மருள்கின் றான்.**

பேர் உருவத்தாலே பிணங்கும் பிரபஞ்சம் பேர் உருவம் பேர்ந்தால் பிரம்மம் ஆம் பேர் உருவக் கற்பனையால் உண்மைக் கடவுளை மீப்போர்த்து உலகா அற்ப மதி தான் மருள்கின்றான்.

**பிணங்கும்-பேதப்படும்; மீப்போர்த்து-மேலே மூடி.**

நாமரூப மயமான பிரபஞ்சமும், நாமரூபங்களற்றிடின் பிரம்ம சொரூபமே யென்றார். ''ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்'' என்பதைக் காண்க. நாமே, அற்ப புத்தியால் அவ்வகண்ட சொரூபியான கடவுளை நாமரூபக் கற்பனையால் மறைத்துச் சின்னமாகவும் நானாவாகவும் கண்டு மருளடைகிறோம்.

**34. தன்னை யுடலாத் தடுமாறும் புந்தியே**
**துன்னும் பெயருருவத் தோற்றமா - மின்னுலகை**
**யுண்மைபோல் வேட்பித் துறுபாச பந்தத்துட்**
**டுண்ணென் றகப்படுத்துஞ் சூது.**

தன்னை உடலாத் தடுமாறும் புந்தியே துன்னும் பெயர் உருவத் தோற்றமாம் மின் உலகை உண்மைபோல் வேட்பித்து உறு பாச பந்தத்துள் துண் என்று அகப்படுத்தும் சூது.

**துன்னும்-பொருந்துகின்ற; மின்-கணம் மட்டும் தோன்றுகின்ற;**
**வேட்பித்து-ஆசைப்படுத்தி; உறு-வலிய; துண் என்று- திடீரென.**

தன்னை யுடலாகக் கருதித் தடுமாறுந் தேகாத்ம புத்தியே, நாமரூபத் தோற்றம் காண்பிக்கும் மாயை என்றார்; உடலின்றி உலகத்தோற்ற மின்மையின். நாம ரூபத்தோற்றங்களைச் சொரூபத்தினின்றும் வேறுபட்டுக் காணும் மயக்கமே உலகம் உண்மையெனச் சாதிக்கின்றது. அதன் வேராவது, தான் உடலென்ற ஆதி அஞ்ஞானவடிவே.

**35. செறியுங் கனசொருப திட்டியிலே யில்பொய்**
**யறிவின் சுழல்வட்ட மாகும் - அறிவின்**
**இலகுமவ தானத் திருமையொடு மும்மை**
**உலகவிவ கார முணர்.**

செறியும் கனசொருப திட்டியிலே இல் பொய் அறிவின் சுழல்வட்டம் ஆகும் அறிவின் இலகும் அவதானத்து இருமையொடு மும்மை உலக விவகாரம் உணர்.

**செறியும்-பரிபூரண; சுழல் வட்டம்-கொள்ளி வட்டம்;**
**அவதானம்-நினைப்பு; இருமை-இரட்டைகள்; மும்மை-முப்புடிகள்.**

நினைவால் விளங்கும் இரட்டை முப்புடிகளோடு கூடிய இவ்வுலக விவகாரம் நிறைந்த சிற்கன சொரூப (ஆன்ம) நோக்கத்திற் சூனியமான அக்கற்பனா மனத்தின் கொள்ளிவட்டம் போன்ற சுழற்சியாகும்.

**36. நீதமொடு சான்றோர் நிகழ்த்தும் பரஞான**
**போதனைதே றாவுலகப் புந்தியோய் - வாதனையின்**
**சூதுகா ணுள்ளபடி சோதிப்பின் மாமோக**
**வூதுகா மாலை யுலகு.**

நீதமொடு சான்றோர் நிகழ்த்தும் பரஞான போதனை தேறா உலகப் புந்தியோய்! வாதனையின் சூதுகாண் உள்ளபடி சோதிப்பின் மாமோக ஊது காமாலை உலகு.

**ஊது-பெருத்துக் காண்கின்ற.**

பரஞான போதனையைத் தேறாத உலகபுத்தியுடையவர் வாதனையின் சூதை யுள்ளபடி சோதித்து, உலகமே மோகவுருவாகிய நித்தக் காமாலைத் தோற்றமென அறிந்தாரில்லை.

## 37. நிகழ்ந்தவெறு ஞான நிறைவன்றி நின்னால்
## முகந்துபுல னாமுலக முற்றும் - அகந்தையொடு
## வஞ்சக்கா மாதி மருவு மனோமயமாம்
## மஞ்சட்கா மாலை மயக்கு.

நிகழ்ந்த வெறு ஞான நிறைவு அன்றி நின்னால் முகந்து புலனாம் உலகம் முற்றும் அகந்தையொடு வஞ்சக் காமாதி மருவும் மனோமயம் ஆம் மஞ்சள் காமாலை மயக்கு.

**நிகழ்ந்த-என்றுமுள்ள; வெறு-கேவல; முகந்து-அளவிட்டு அல்லது உணர்ந்து.**

(நிருபாதிக வுண்மை வடிவாக) நிகழும், நிர்விஷய ஞான நிறைவன்றி உன் (கற்பனையான சுட்டறிவி) னால் (விஷயமாகக்) கவர்ந்து புலப்படும் உலக முழுதும் மஞ்சட் காமாலை (க் கண்மயமாகக் காணப்படும் விபரீதக் காட்சி) போல அகந்தை, வஞ்சம், காமம் முதலிய குற்றம் பொருந்திய மனோமயமான மயக்கக் காட்சியாம்.

## 38. ஞான வெயின்முன் னலிதலான் மஞ்சள்போற்
## பானுவா மீசன் படைப்பன்று - பானசகம்
## பீலிக்கண் ணேரும் பெருஞ்சித் திரஞ்சித்த
## நீலிக்கண் ணாடி நிழல்.

ஞான வெயில் முன் நலிதலால் மஞ்சள்போல் பானுவாம் ஈசன் படைப்பன்று பான சகம் பீலிக்கண் நேரும் பெரும் சித்திரம் சித்த நீலிக் கண்ணாடி நிழல்.

**நலிதல்-அழிதல்; பான சகம்-பிரகாசமான இவ்வுலகத் தோற்றம்.**

(அம் மனோமயமாகக்) காணப்படும் இவ்வுலகம் தத்துவஞான மாகிய வெயிலின்முன் மஞ்சள்போல் வெளிறிக் கெடுதலால் அது மெய்ஞ்ஞான சூரியனாகிய இறைவன் படைப்பன்றாம்; மற்றோ, மயிலிறகின் கண் போன்ற (பல்வண்ணப்) பெருஞ்சித்திரமா மஃது அசுத்த மனமாகிய நீலக்கண்ணாடியிற் காணப்படும் நிழலேயாம்.

## 39. ஆன்ம சொரூபஞா னானுபவத் திவ்வகிலம்
## வான்மருவு பைஞ்ஞீல வண்ணமே - ஊன்மயல்சே
## ராணவமோ கத்தா லலமந்து சுட்டறிவாற்
## காணுமவை கற்பனையே காண்.

ஆன்ம சொரூப ஞானானுபவத்து இவ் அகிலம் வான் மருவு பைஞ்ஞீல வண்ணமே ஊன் மயல் சேர் ஆணவ மோகத்தால் அலமந்து சுட்டறிவால் காணும் அவை கற்பனையே காண்.

**மருவு-பொருந்தும், சேரும்; அலமந்து-கலங்கி.**

**40. எல்லார்தம் புந்தியையு மேமாற்றஞ் செய்துழக்கும்**
**பொல்லாத விப்பெரும் பொய்யுலகு - புல்லாது**
**தன்னைத்தான் சோர்ந்த தவற்றாலே யன்றிமற்**
**றென்னத்தா லும்வந்த தின்று.**

எல்லார்தம் புந்தியையும் ஏமாற்றம் செய்து உழக்கும் பொல்லாத இப்பெரும் பொய் உலகு புல்லாது தன்னைத் தான் சோர்ந்த தவற்றாலே அன்றி மற்று என்னத்தாலும் வந்தது இன்று.

**உழக்கும்-கலக்கும்; புல்லாது-நிட்டையாற் சேர்ந்து நில்லாமல்;**
**சோர்ந்த தவறு-பிரமாதம்.**

எல்லோருடைய மதியையும் வஞ்சித்துக் கலக்குகின்ற பொல்லா மகத்தான இம்மாயாப் பிரபஞ்சம், தன் சொரூபத்தைத் தான் சார்ந்திராமல் தவறவிட்ட பிரமாதத்தா லன்றி மற்றெதனாலும் தோன்றிற்றன்றாம்.

**41. வேட்கைவெறுப் பாதி விராய்நடக்கு மிவ்வுலக**
**வாழ்க்கைமயல் வந்த வறுங்கனா - தூக்கப்**
**பொழுதுண்மை போலப் புலப்பட்டு மெய்யா**
**விழித்தக் கடைவெறும் பொய்.**

வேட்கை வெறுப்பு ஆதி விராய் நடக்கும் இவ்வுலக வாழ்க்கை மயல் வந்த வறும் கனா தூக்கப் பொழுது உண்மை போலப் புலப்பட்டு மெய்யா விழித்தக்கடை வெறும் பொய்.

**விராய்-உபகரணம்; வறும்-பயனற்ற, வறண்ட.**

விருப்பு வெறுப்பு முதலிய துவந்துவ குணங்களாற் கலந்து நடக்கும் இவ்வுலக வாழ்க்கையாகிய நிஸ்ஸாரமான, மயக்கம் பொருந்திய கனாத் தோற்றம், மாயா நித்திரைக்கு வசப்பட்டிருக்கு மளவும் உண்மை போலப் புலப்பட்டு, (மாயா ரகிதமான ஆன்ம சொரூபத்தில்) உண்மையாகவே விழிக்கும் பொழுது பொய் (யாகவே முடிவதாம்).

**42. இச்சை முதலா வியலும்பல் சத்திகளும்**
**சொச்சமாந் தன்சிற் சொரூபத்தே - மிச்சையாங்**
**கற்பனையாத் தீரக் கழல்வனகாண் தன்சொருபச்**
**சிற்பரத்தே சித்தமற்றக் கால்.**

இச்சை முதலா இயலும் பல் சத்திகளும் சொச்சம் ஆம் தன் சித் சொரூபத்தே மிச்சை ஆம் கற்பனையாத் தீரக் கழல்வன காண் தன் சொருபச் சிற்பரத்தே சித்தம் அற்றக்கால்.

**இயலும்-சொல்லப்படும்; சொச்ச-தூய; மிச்சை-மித்தை, பொய்.**

**43. சிற்பர மான சிவமதிட் டானமா**
**நிற்பவதன் மாட்டு நிகழ்வனவாம் - சிற்பரா**
**சத்தி விலாசமாச் சாருஞ் சகவடிவச்**
**சித்திரமா முப்புடி தேர்.**

சிற்பரம் ஆன சிவம் அதிட்டானமா நிற்ப அதன் மாட்டு நிகழ்வனவாம் சித் பரா சத்தி விலாசமாச் சாரும் சக வடிவச் சித்திரம் ஆம் முப்புடி தேர்.

**44. கயிற்றரவுங் குற்றிக்கட் கள்வனுமே யன்றி**
**மயற்றகைசேர் பேய்த்தேரு மானும் - இயற்கைத்தால்**
**உண்மையிலே யில்லா வுலகம் புலப்பாட்டால்**
**இன்மையிலே யுள்ள வியல்பு.**

கயிற்று அரவும் குற்றிக்கண் கள்வனுமே அன்றி மயல் தகை சேர் பேய்த்தேரும் மானும் இயற்கைத்து ஆல் உண்மையிலே இல்லா உலகம் புலப்பாட்டால் இன்மையிலே உள்ள இயல்பு.

**குற்றி-கட்டை; மயல் தகை சேர்-மயக்கக் கட்டோடு கூடிய; பேய்த்தேர்-கானல் நீர்; மானும்-போன்றதாம்; இயற்கைத்து-அப்படிப்பட்ட இயல்பை யுடையது; புலப்பாட்டால்-பார்ப்பதால்; இன்மை-பொய்மை.**

(ஆதலால்) பரமார்த்தத்தில் இல்லா வுலகம் புலப்படுங் காரணத்தால் மாயையில் உளதாகுந்தன்மை, கயிற்றின்கட் பாம்பும், கட்டையின்கட் கள்வனும், கானலின்கண் நீரும் போலக் கற்பனையாகக் காணப்படும் தன்மைத்தாம்.

**45. பொன்னிடத்துத் தோன்றிப் பொலியும் பலவணிபோற்**
**றன்னிடத்துத் தோன்றுஞ் சராசரங்கள் - தன்னையொழிந்**
**தன்னியமோ வல்ல வவிரும் பலவணியும்**
**பொன்னியலே யாமாறு போல்.**

பொன் இடத்துத் தோன்றிப் பொலியும் பல அணிபோல் தன் இடத்துத் தோன்றும் சராசரங்கள் தன்னை ஒழிந்து அன்னியமோ அல்ல அவிரும் பல அணியும் பொன் இயலே ஆமாறு போல்.

**அவிரும்-விளங்கும்; ஆமாறு-ஆவது.**

பொன்னின்கட் டோன்றி விளங்கும் பல்வகை யாபரணங்கள் போல ஆன்ம சொரூபத்திற் றோன்றி விளங்கும் இச்சராசர பேதப் பிரபஞ்சமும், பலவாக விளங்கும் அவ்வாபரணங்களும் (உண்மையிற்) பொன்வடிவே யாமாறு போலச் சிதான்ம சொரூபத்தை விட்டு அதற் கன்னிய மன்றாம்.

**46. இகத்திற் பரங்கரக்கு மின்றேற் பரத்தி**
**லிகங்கரக்கு மன்றி யிரண்டும் - வகைப்படவெவ்**
**வேறா வொருங்கு விளங்கலிலை நாய்கல்வெவ்**
**வேறா வொருங்குவிளங் கா.**

இகத்தில் பரம் கரக்கும் இன்றேல் பரத்தில் இகம் கரக்கும் அன்றி இரண்டும் வகைப்பட வெவ்வேறா ஒருங்கு விளங்கல் இலை நாய் கல் வெவ்வேறா ஒருங்கு விளங்கா.

**நாய்கல்-நாய் வடிவிற் செதுக்கப்பட்ட கற்சிலை.**

''நாயைக் கண்டாற் கல்லைக் காணோம்; கல்லைக் கண்டால் நாயைக் காணோம்'' என்பது பாமர வசனம். இவையிரண்டுக்கும் தொடர்பு, ஒன்று தனித்த காலத்தில் ஏற்படுவதில்லை. அதுபோலவே, பரம் விளங்குங் காலத்தில், இகந் (உலகம்) தோன்றாது. உலகந் தோன்றுமட்டில் அது சொரூபத்தை மறைப்பதாம்.

**47. ஆன்ம சொரூபத்தை யாச்சா தனஞ்செய்து**
**தோன்று முலகுகனாத் தோற்றமே - தோன்றுமுல**
**கான்ம சொரூபத்தா லாச்சா தனமெய்தின்**
**ஆன்ம சொரூபமே யாம்.**

ஆன்ம சொரூபத்தை ஆச்சாதனம் செய்து தோன்றும் உலகு கனாத் தோற்றமே தோன்றும் உலகு ஆன்ம சொரூபத்தால் ஆச்சாதனம் எய்தின் ஆன்ம சொரூபமே ஆம்.

**ஆச்சாதனம்-மறைப்பு.**

நாம ரூபத்தா லான்ம சொரூபத்தை மறைத்தல் செய்து தானோர் மாயமாயுண்மை போலத் தோன்றுமுலகு கனாப்போலுங் கற்பனைத் தோற்றமாம். அவ்வாறன்றி அவ்வுலகே, ஆன்ம சொரூபத்தால் மறைப்பெய்தி அறிவு மாத்திரமாய்த் தோன்றின் அப்பொழு ததுவும் ஆன்ம சொரூபமா யுண்மையேயாம்.

**வி-ரை:-** உலகு கனாத் தோற்றமென்றது முழு அறியாமையின் கண் மட்டுமன்றிப் பரமார்த்தமாம் பேரறிவு நிலையினும் அது தான் அற்றாகத் தோற்றாமையி னென்க. நினதருளால், வீட்டைக் கருது மப்போது வெளியா முலக வியப்பனைத்தும், ஏட்டுக்கடங்காச் சொப்பனம் போலெந்தா யிருந்த தென் சொல்வேன் - என்பதாதிய ஆன்றோர் வாக்குக்களாலும் உலகு கனாத் தோற்றமே யாதலுணர்க.

**48. தப்பருமெய் போலத் தடுமாற்றஞ் செய்யுமிந்த**
**முப்புரிசேர் மோக வுலகுமுற்றுந் - தற்பரமாந்**
**தன்னையன்றி யில்லாதாய்த் தன்னிலே யென்றென்றும்**
**மன்னியசிற் சத்தி வடிவு.**

தப்பு அரு மெய் போலத் தடுமாற்றம் செய்யும் இந்த முப்புரி சேர் மோக உலகு முற்றும் தத் பரம் ஆம் தன்னை அன்றி இல்லாதாய்த் தன்னிலே என்றென்றும் மன்னிய சித் சத்தி வடிவு.

**முப்புரி-முப்புடி; மன்னிய-இருப்பிடமாகக் கொண்ட.**

## 49. புகையான்மூ டுண்டொளிர்தீப் போலே யுலகத் தொகையான்மூ டுண்டொளிர்சிற் சோதித் - தகையாம் திருவருளாற் சிந்தை தெளிந்தக்கான் மெய்யே மருளுருவ மன்றுலக மாண்பு.

புகையால் மூடுண்டு ஒளிர் தீப்போலே உலகத் தொகையால் மூடுண்டு ஒளிர் சித்சோதித் தகை ஆம் திரு அருளால் சிந்தை தெளிந்தக்கால் மெய்யே மருள் உருவம் அன்று உலக மாண்பு.

**தகை-சிறப்பு.**

புறத்தே புகையான் மூடப்பட்டு அகத்தே தழலாய் விளங்குந் தீப்போலத் தத்துவத் தொகையா முலகாற் புறப்பார்வையிற் போர்க்கப்பட்டு அகப்பார்வைக் கான்ம சொரூபமாகவே விளங்கும் அறிவொளியா மிறைவனது இயல்பாந் திருவருளால் சிந்தை தான் சுட்டறிவாங் கலக்கத்தினின்று தெளிந்த விடத்து உலகின் மாண்பு உருவெளித் தோற்றம் போல்வதோர் மனமயக்கமேயன்று; பரமார்த்த வுண்மையே யாம்.

**வி-ரை:-** தத்துவத் தொகையையன்றித் தனித்து உலகென் றொரு பொருளின்மையின் தொகையுலகெனற் பாலது உலகத்தொகை யென முன்பின்னாக மாறி நின்றது. ஈண்டு உலகென்றது உடலையு முட்கொண்டு நின்றது. உடல் ஆன்ம சொரூபத்தையும் உலகு இறைவடிவத்தையும் மூடி நிற்பனவாம். உடலுலகுகள் தத்துவத் தொகை மாத்திர மாமியல்பா லொன்றாதல் போல ஆன்மாவும் இறைவனும் சொரூபத்தா லொன்றேயாம். முறையே, ‘உடலன்றி யுண்டோ வுலகம்’ என ‘உள்ளது நாற்பதும்’ ‘இருக்குமியற்கை யாலீச ஜீவர்கள் ஒருபொருளேயாவ ருந்தீபற’ என ‘உபதேச உந்தியாரும்’ ஓதல் காண்க. ஆன்ம சொரூபமா முண்மை மாத்திரமாய் இறைவன் ஆருயிரகத் தூடிருந்து விளங்கும் விளக்கமே திருவருளாதலின் ஒளிர் சிற்சோதித் தகையாந் திருவருளெனப்பட்டது. அத் திருவருளா லான்ம சொரூபமாய்ச் சுட்டறத் துலங்குஞ் சுத்தமனம் உலகை அற்றாகவே ஓர்ந்துறைவதன்றி நாமரூப மாத்திரமாக நாடாமையின் உலக மாண்பு மெய்யே யெனவும் பின்னும் வற்புறுத்து மருளுருவமன்றெனவுங் கூறினார்.

## 50. அறிவுகளுக் கெல்லா மடிப்படையா மம்மெய் யறிவுவிடார்க் கம்மயமே யாகும் - குறியதனால் அன்னா ரவைகளுமெய் யாமெனலை யவ்வறிவு துன்னார் துணித லெவன்.

அறிவுகளுக்கு எல்லாம் அடிப்படையாம் அம்மெய் அறிவு விடார்க்கு அம்மயமே ஆகும் குறி அதனால் அன்னார் அவைகளும் மெய்யாம் எனலை அவ்வறிவு துன்னார் துணிதல் எவன்.

**குறி அதனால்-அந்தத் திருஷ்டியால்; துன்னார்-அடையாதவர்கள்; துணிதல்-உணர்தல்; எவன்-எப்படி.**

(கற்பனாபேத) அறிவுகளுக் கெல்லாம் ஆதாரமான அவ்வான்ம சொரூப வறிவை அகலா(த்திட ஞானிய)ர்க்கு அவையாவும் அதன் வடிவே யாகுங் கருத்தால், அன்னார் அவைகளும் மெய்யேயாமென்பதன் பொருளை அவ்வறிவடையப்பெறாத பாமரர் உள்ளவாறுணர்தல் எவ்வாறியல்வதாம்.

## 51. உலகுணர்வொன் றோவதனோ டொட்டாதுந் தானே
## இலகுபர வுண்மையுணர் வேயும் - குலவி
## மலவன்மை மாய்ந்தமன மாந்தரே மன்ற
## உலகுண்மை யர்த்தமுணர் வோர்.

உலகுணர்வு ஒன்றோ அதனோடு ஒட்டாதும் தானே இலகு பர உண்மை உணர்வேயும் குலவி மல வன்மை மாய்ந்த மன மாந்தரே மன்ற உலகு உண்மை அர்த்தம் உணர்வோர்.

உலகின் உணர்வொன்றுமட்டுமன்று, அவ்வுலகோ டொட்டாமலும் (நிருபாதிக மாகத்) தானே யொளிரும் சிற்பரத்தின் மெய்யுணர்வும் ஒக்க விளங்கி மாயா மலத்தின் வன்மையழிந்த சுத்த மனமுடைய மாந்தரே உலகம் உண்மை என்பதன் பொருளை நிச்சயமாக உள்ளபடி யுணர்வோர்.

## 52. ஞானமய மாகத்தன் னாட்டத்தை மாற்றிமெய்ஞ்
## ஞானமய மானவந் நாட்டத்தாற் - றானாடின்
## வானமுத லைம்பூத வையகமு மெய்யாகும்
## ஞானமயச் செம்பொருளா நாடு.

ஞானமயம் ஆகத் தன் நாட்டத்தை மாற்றி மெய்ஞ் ஞானமயம் ஆன அந் நாட்டத்தால் தான் நாடின் வானம் முதல் ஐம்பூத வையகமும் மெய் ஆகும் ஞானமயச் செம்பொருளா நாடு.

ஒருவன் தன் ஜடவிழியை ஞானமயமாக முதலில் மாற்றி ஞானமயமான அவ்வுண்மை விழியா லுற்று நோக்கின், ஆகாச முதலிய பஞ்சபூத (வடிவாக முற்காணப்பட்ட) உலகம் ஞான மயமான மெய்ப்பொருள் வடிவேயாம்.

## 53. துன்பக் கடலாகத் தோன்றிவ் வுலகம்பே
## ரின்பக் கடலா வியல்வதாம் - தன்பொக்கப்
## பார்வையைமெய்ஞ் ஞானப் பரவடிவாப் பண்ணியந்தப்
## பார்வையாற் பார்க்கப் படின்.

துன்பக் கடலாகத் தோன்று இவ் உலகம் பேர் இன்பக் கடலா இயல்வதாம் தன் பொக்கப் பார்வையை மெய்ஞ்ஞானப் பரவடிவாப் பண்ணி அந்தப் பார்வையால் பார்க்கப்படின்.

## 54. சேட்டையற லாற்சச் சிதானந்த மாத்தீர்ந்த
நாட்டமுறக் காணுமெய்ஞ் ஞானிக்கு - நாட்டமுறும்
கண்ணலாற் காட்சியிலாக் காரணத்தா லன்னதே
திண்ணமா யிவ்வுலகுந் தேர்.

சேட்டை அறலால் சத் சித் ஆனந்தமாத் தீர்ந்த நாட்டம் உறக் காணும் மெய்ஞ்ஞானிக்கு நாட்டம் உறும் கண் அலால் காட்சி இலாக் காரணத்தால் அன்னதே திண்ணமாய் இவ்வுலகும் தேர்.

**தீர்ந்த-மிஞ்சிய, முடிந்த.**

ஜீவபோதச் சேட்டை யறலாற் சச்சிதானந்தமாக முடிந்த உண்மை விழியாற் காணும் மெய்ஞ்ஞானிக்கு, காணும் கண்ணியல்பை யன்றிக் காணப்படுங் காட்சி யியல்பு வேறாகாக் காரணத்தால் இவ்வுலகமும் நிச்சயமாக அத்தன்மைத்தாம்.

## 55. மனமாயை விஞ்சி வயங்குசச் சித்தாம்
கனமாய காட்சிக்கே காணும் - கனவின்
மயங்குநோக் காய மனோமாத் திரமாய்
இயங்குலகக் காட்சி யியல்பு.

மனமாயை விஞ்சி வயங்கு சத் சித் ஆம் கனம் ஆய காட்சிக்கே காணும் கனவின் மயங்கு நோக்கு ஆய மனோமாத்திரமாய் இயங்கு உலகக் காட்சி இயல்பு.

**விஞ்சி-கடந்து; வயங்கு-விளங்குகின்ற; கனம்-பூர்ணம்.**

கனாப்போல மயக்கவுணர்வாகிய மனோமாத்திரமாக நிகழும் உலகக் காட்சியின் உண்மையியல்பு, அம் மன மாயையைக் கடந்து விளங்கும் சச்சிற்கனமான உண்மை உணர்வுக்கே உள்ளபடி தோன்றும்.

## 56. நின்மயமே யாக நிகழ்கனவைக் கண்டுநிதம்
மன்மயங்கு மாய மடநெஞ்சே - நின்மெய்ந்
நிறத்தைநீ காண்டியே லுண்மையறி வின்பப்
புறத்ததோ விந்தப் புவி.

நின்மயமே ஆக நிகழ் கனவைக் கண்டு நிதம் மல் மயங்கும் மாய மடநெஞ்சே நின் மெய்ந் நிறத்தை நீ காண்டியேல் உண்மை அறிவு இன்பப் புறத்ததோ இந்தப் புவி.

**மல்-வலிய; நிறம்-இயல்பு.**

நின் வடிவேயாக நிகழ்கின்ற (நனவாகிய) கனவை (உனக் கயல் போலக்) கண்டு நாளும் பெரிதும் மயங்குகின்ற மடம் பொருந்திய வஞ்ச மனமே! உன் நிஜ சொரூபத்தை நீ உள்ளபடி யுணர்வாயேல் இவ்வுலகம் அச் சச்சிதானந்த சொரூபத்தின் வேறாமோ?

## 57. மண்டுபல வாக மயங்குமிப் பாழுலகப் பண்டைநிலை பல்வண்ணப் பச்சைமயில் - அண்டரசம் ஒன்றேபோ லொன்றா யுறுசுகமா மிவ்வுண்மை நின்றேபா ரான்ம நிலை.

மண்டு பலவாக மயங்கும் இப் பாழ் உலகப் பண்டை நிலை பல்வண்ணப் பச்சைமயில் அண்டரசம் ஒன்றேபோல் ஒன்றாய் உறு சுகம் ஆம் இவ்வுண்மை நின்றே பார் ஆன்ம நிலை.

**மண்டு-விரிந்து; ஒன்றாய் உறு-ஏகமான; நிலை-நிஷ்டை.**

பல வர்ணங்களோடு கூடித்தோன்றும் பச்சை மயிலின் முட்டைக்கரு ஒரே வர்ணமாயிருந்தது போல, (நாம ரூப பேதத்தால்) மிக்க பலவாக மயங்கித் தோன்றும் இந்தப் பாழுலகத்தின் பண்டை நிலையும், ஒரே விதமான சுக சொரூபமாகவே யிருந்ததாம். (அச்சொரூபம் மாயாசக்தியால் உலக வடிவாகக் காரியப்பட்ட இந்நிலையிலும்) அவ்வுண்மையை ஆன்ம நிலையில் நிற்றலால் அறிந்துகொள்.

## 58. குலவுமெய்ஞ் ஞானக் குறிக்கோளர் பாராப் பலவிகற்ப மென்றுந்தாம் பாரார் - உலகாத் திரள்விகற்பம் முற்றுமொரே சிற்சத்தி யான வருள்விலா சத்தளவே யாம்.

குலவு மெய்ஞ்ஞானக் குறிக்கோளர் பாராப் பல விகற்பம் என்றும் தாம் பாரார் உலகாத் திரள் விகற்பம் முற்றும் ஒரே சித்சத்தி ஆன அருள் விலாசத்து அளவே ஆம்.

**குலவு-சித்தியுற்ற; குறிக்கோளர்-ஞானலக்ஷியம் உடையவர்கள், ஞானிகள்; பாரா-உலகமாக; உலகா-உலகமாக.**

## 59. துன்னு முடலகந்தைத் தொற்றற்றுத் தன்னிலையின் மன்னியமெய்ஞ் ஞான வரனுக்குத் - தன்னுருவாம் போதமே யாகப் பொலிதலா லிவ்வுலகம் பேதமா நோக்கல் பிழை.

துன்னும் உடல் அகந்தைத் தொற்று அற்றுத் தன் நிலையில் மன்னிய மெய்ஞ்ஞான வரனுக்குத் தன் உருவாம் போதமே ஆகப் பொலிதலால் இவ்வுலகம் பேதமா நோக்கல் பிழை.

**தொற்று-தொடர்பு.**

## 60. உலகத்தைப் பாழி லொடுக்கு முகத்தா
## லுலகக் கலக்கமற வோட்டி - உலகந்தீர்
## பாழை விடயமாப் பார்ப்பான் சொரூபவறி
## வாழியினைப் பாழை யழி.

உலகத்தைப் பாழில் ஒடுக்கும் முகத்தால் உலகக் கலக்கம் அற ஓட்டி உலகம் தீர் பாழை விடயமாப் பார்ப்பான் சொரூப அறிவு ஆழியின் அப் பாழை அழி.

**பாழில் ஒடுக்கும்-அறவே ஒடுக்கும்; ஓட்டி-செய்து; தீர்-நீங்கிய; பாழ்-சூன்யம்.**

உலகத்தைப் பாழிலொடுக்கி, அவ்வகையால் உலகக் கலக்க மற விரும்புவோன், சூனிய தர்சனத்திலேயே சிக்குறும் ஆபத்தினின்றும் காக்க, அப்பாழை விடயமாகக் காணும் காட்சியை சொரூப அறிவால் அழிக்கக்கடவனென்றார். என்னை? உலகம் சூனியத்தி லடங்கினும், சூனியமென்பது இறுதி தத்துவமல்ல. அஃது அறிவைப் பாழாகக் காணும் குற்றமே.

## 61. எச்சித்தாய் நின்றொளிரு மெல்லாமே நீயந்தச்
## சச்சித்தா யுள்ளந் தரித்துவிடில் - அச்சந்
## தருமயல்சேர் பொய்த்துவிதத் தன்மைபோய் நின்னோ
## டொருமயமா மிந்த வுலகு.

எச்சித்தாய் நின்று ஒளிரும் எல்லாமே நீ அந்தச் சத்சித்தாய் உள்ளம் தரித்துவிடில் அச்சம் தரு மயல்சேர் பொய்த் துவிதத் தன்மை போய் நின்னோடு ஒருமயம் ஆம் இந்த உலகு.

**தரித்துவிடில்-நிலைபெற்றுவிட்டால்.**

## 62. துன்னுபுல னாமுலகத் தோற்றத்தைச் சிற்பரமாந்
## தன்மயமா யாவன் றரிசித்தான் - அன்னோன்
## அனைய சொரூபத்தை யைம்பொறியா லுந்தேர்ந்
## தனுபவிக் கின்றா னறி.

துன்னு புலன் ஆம் உலகத் தோற்றத்தைச் சித் பரம் ஆம் தன்மயமா யாவன் தரிசித்தான் அன்னோன் அனைய சொரூபத்தை ஐம்பொறியாலும் தேர்ந்து அனுபவிக்கின்றான் அறி.

இஃது, சகஜ நிலை பாஹ்ய அனுபவத்திலும் நிகழ்வது என்ற அரிய உண்மையை விளக்குவது. எவனொருவன் புலத் தோற்றங்களை உண்மையாகவே தன்மயமாக அறிகிறானோ, அவனுக்கு உலகம் பிரதிபந்த மன்று. எல்லா ஸ்பர்ஸங்களிலும் தன்னைத் தானே யனுபவித்து பந்த நினைவு சிறிதுமின்றி உள்ளும் புறமும் ஒன்றாய் மகிழ்கிறான்.

# 2. உலகமித்தைத்திறன்

## 63. நித்தியமன் றென்னினுங்கண் ணேர்புலனா மிவ்வுலகு சத்தியமே யென்றுசிலர் சாதிப்பார் - நித்தியமா மன்னலுமவ் வுண்மைக்கு வாய்த்தகுறி யேயன்றோ என்னமறுக் கின்றே மியாம்.

நித்தியம் அன்று என்னினும் கண் நேர் புலன் ஆம் இவ்வுலகு சத்தியமே என்று சிலர் சாதிப்பார் நித்தியமா மன்னலும் அவ் உண்மைக்கு வாய்த்த குறியே அன்றோ என்ன மறுக்கின்றேம் யாம்.

**நேர்-முன்; சத்தியமே-உள்ள பொருளே; மன்னலும்-இருப்பதும், இருக்குந் தன்மையும்; வாய்த்த-அமையவேண்டிய; குறி-அடையாளம்; என்ன-என்று.**

கண்ணெதிர்க் காணு மிவ்வுலகு தோற்ற மறைவுடைமையால் என்று முளதாவ தன்றெனினும் உண்மையே யென தேற்றம்பட வுரைப்பர் ஒரு சாரார். என்று முளதாமியல்பும் உண்மைக் குற்ற தோரறிகுறி யன்றோ வென அவருரையை எதிர் மறுத்துக் கடாவுகின்றோம் யாம்.

## 64. கூறு படினுங் குலவுமுல குண்மையொடு மாறுபடா தென்றுசிலர் வாதிப்பார் - கூறுபடாத் தன்மையுமவ் வுண்மைக்குச் சார்ந்தகுறி தானன்றோ என்னமறுக் கின்றே மியாம்.

கூறு படினும் குலவும் உலகு உண்மையொடு மாறுபடாது என்று சிலர் வாதிப்பார் கூறுபடாத் தன்மையும் அவ் உண்மைக்குச் சார்ந்த குறி தான் அன்றோ என்ன மறுக்கின்றேம் யாம்.

**கூறுபடினும்-பாகுபாடு (கண்டத் தன்மை) உடையதாயினும்; குலவும்-விளங்குகின்ற.**

பொறிக்கு விடயமாய்ப் புலப்படு மிவ்வுலகு பரிச்சின்னப் படினும், அவ்வுலகுண்மை யாதலோடு அப்பான்மை தானுறழா தெனத் தர்க்கிப்பர் ஒரு சாரார். பரிச்சின்னப்படாப் பரிபூரணப்பான்மையும் உண்மைக் குற்றதோ ரறிகுறி யன்றோவென அவர் கூற்றை எதிர்மறுத்துக் கடாவுகின்றோம் யாம்.

**வி-ரை:-** இரண்டு (63,64) செய்யுட்களுக்கும் ஒன்று சேர்த்து விசேடவுரை யுரைக்கப்படும். உலகு தானுளதாவதற்கு, அச்சொல்லே காணப் படுவதெனப் பொருள்படலால் காண்பா னொருவனே இன்றியமையாது அவாவி நிற்பதாம். அவனுண்மையோ ஆராய்ச்சிக்கிடமாம். ஆராய் வுழி அவன்றான் மாப்பிள்ளைத் தோழன் போல் மாயமாய், உள்ள பொருளிற்

புக்கொடுங்குவான். அப்பொருளோ அறிவு வடிவாய்த் தன்னிற்றானவிர்ந்து கொண்டிருப்பினும், தனக்கறிதற் கறிவித்தற் கன்னியமின்மையால் அறிதற் றொழில் அபாவமானது. ஆதலால் அவிசாரத்திற் றோன்றிய கற்பனாபுருடனா மவனை யவாவி நின்றவுலகும் அவனொடுக்கத்தோடு தானுங் காணப்படாது கழிதலின் உலகே (காணப்படுவது) உளறுபடியாயொழிதல் காண்க.

எக்காலத்தும் எவ்விடத்துங் குறைவற்ற நிறைவே யன்றோ உண்மையாவது. அற்றாக, ஒருகாலத்தும் ஓரிடத்தும் மட்டுங் காணப்படு மொன்றையும் உண்மையென வற்புறுத்துவா ருணர்வை யாமென் னென்பது! உண்மையைப் பல்வகைப்படுத்து, தன்னியல்பானே மிகத்தூய்தான அச்சொல்லை வியபிசாரக் குற்றத்துக் குட்படுத்த யாஞ் சற்று மிசையோம்.

## 65. கால மெனுஞ்சக் கரத்தா லறுப்புண்ணும்
## ஞாலம் பொருளென்னார் நல்லறிஞர் – கால
## அதீதமொடு தேச வதீதமுமாம் பூன்ற
## சதோதயமே மெய்ப்பொருளின் சால்பு.

காலம் எனும் சக்கரத்தால் அறுப்புண்ணும் ஞாலம் பொருள் என்னார் நல் அறிஞர் கால அதீதமொடு தேச அதீதமும் ஆம் பூன்ற சதா உதயமே மெய்ப் பொருளின் சால்பு.

**அறுப்புண்ணும்-அழிக்கப்படுகின்ற; சதோதயம்-நித்திய விளக்கம்.**

காலச் சக்கரத்தா லிடைவிடாது அறுக்கப்படுகின்ற வுலகை உண்மையென் றோதார் உள்ளபடி உண்மை யுணர்ந்தோர்; கால தேசங்களுக் கதீதமாய் எங்கும் என்றும் இடைவிடா தொளிரும் பூரணமே மெய்ப் பொருளின் பண்பாம்.

## 66. ஒப்பமாம் பூரணமா வுள்ளபொருள் சாந்திமயத்
## தற்பரமா மேக சதாசிவமே – கற்பனா
## பேதங்க ளாகப் பிரிந்தமனப் பொய்யறிவே
## ஏதங்க ளீண்டிவ் வுலகு.

ஒப்பம் ஆம் பூரணமா உள்ளபொருள் சாந்திமயத் தற்பரம் ஆம் ஏக சதா சிவமே கற்பனா பேதங்கள் ஆகப் பிரிந்த மனப் பொய் அறிவே ஏதங்கள் ஈண்டு இவ் உலகு.

**ஏதங்கள்-தீமைகள்.**

## 67. அறிவன்றி யில்லா வகிலங் களுமவ்
## வறிவாய தன்னி னயல்போற் – குறிசே
## ருடலகந்தை யாலே யுபயமா வோர்த்தல்
## படலமா மோகப் படைப்பு.

அறிவு அன்றி இல்லா அகிலங்களும் அவ் அறிவு ஆய தன்னின் அயல்போல் குறிசேர் உடல் அகந்தையாலே உபயமா ஓர்த்தல் படலம் ஆம் மோகப் படைப்பு.

**ஆய-ஆகிய; குறிசேர்-நாமரூபச் சின்னத்துடன் கூடிய;**
**உடல் அகந்தை-தேகாத்மபுத்தி; உபயமாக-வேறொரு பொருளாக.**

## 68. பொய்யாய மெய்யின் புலத்தா லறிபவெலாம்
## பொய்யாமோ வன்றிப் புறமாமோ - மெய்யாக
## உய்த்துணர்ந்து தூக்கி யுரையா யுலகியல்வாய்
## எய்த்தொழிந்த நெஞ்சே யினி.

பொய் ஆய மெய்யின் புலத்தால் அறிப எலாம் பொய் ஆமோ அன்றிப் புறம் ஆமோ மெய் ஆக உய்த்து உணர்ந்து தூக்கி உரையாய் உலகியல்வாய் எய்த்து ஒழிந்த நெஞ்சே இனி.

**புறம்-அதற்கு வேறான; உய்த்து-ஆராய்ந்து; தூக்கி-சீர்தூக்கிப் பார்த்து;**
**உலகியல்வாய்-உலகாயதத்தில்; எய்த்து-இளைத்து.**

பொய்யா முடம்போடு பொருந்திய கண்ணாதியைம் பொறிகளாலறியப்படுவன வெல்லாம் பொய்யாமோ அன்றி மெய்யாமோ? உலகியல்வாய் (மூழ்கி) இளைத்தொழிந்த மனமே! இப்பொழுதாயினும் சீர் தூக்கி யாராய்ந்து அறிந்து கூறாய்.

**வி-ரை:-** பொய்க்குப் புறமெனவே மெய்யாயிற்று.

## 69. பொய்யா மிருளிற் புதையுண்டு பாவத்தா
## லையோ வுடலா வகங்கரித்தே - மெய்யாஞ்
## சுவத்தநிலை சோர்ந்தவுயிர் தோன்றக்காண் கிற்ப
## தவத்துவன்றி வத்துவன் றால்.

பொய் ஆம் இருளில் புதையுண்டு பாவத்தால் ஐயோ உடலா அகங்கரித்தே மெய் ஆம் சுவத்த நிலை சோர்ந்த உயிர் தோன்றக் காண்கிற்பது அவத்து அன்றி வத்து அன்று ஆல்.

**புதையுண்டு-மூழ்கி; சோர்ந்த-நழுவிய; காண்கிற்பது-காண்பது.**

### (வேறு)

## 70. சித்த மெனுஞ்சிதா பாசத்தி லேசத்
## தியம்போலத் தோற்றி மருட்டுகினும்
## சுத்தசை தன்ய சொரூபத்தி லேஜகத்
## தோற்ற விவகாரம் மித்தையேகாண்.

சித்தம் எனும் சிதாபாசத்திலே சத்தியம் போலத் தோற்றி மருட்டுகினும் சுத்த சைதன்ய சொரூபத்திலே ஜகத் தோற்ற விவகாரம் மித்தையே காண்.

**சித் ஆபாசம்-அறிவின் பிரதிபிம்ப ஒளி; மருட்டுகினும்-மயக்குகின்ற.**

சித்தின் ஆபாசமாகிய மனதில் ஜகம் சத்தியம் போலவே தோற்றிடினும், சைதன்ய சொரூபத்தில் அது கேவலம் மித்தையாம். அது ஆதாரமின்றித் தன்னில் நிற்பதன்று என்பது தெளிவாதலின்.

## 3. உலகமயக்கத்திறன்

### (நேரிசை வெண்பா)

**71. உலகா சரணைக் குவகையோ டாட்டின்
அலைதாடி யாவீ ணலைவார் - நிலையான்ம
மோக்கவா சார முனிவார் திறனந்தோ
பார்க்கலா காப்பரிதா பம்.**

உலக ஆசரணைக்கு உவகையோடு ஆட்டின் அலைதாடியா வீண் அலைவார் நிலை ஆன்ம மோக்க ஆசாரம் முனிவார் திறன் அந்தோ பார்க்கல் ஆகாப் பரிதாபம்.

**உலகாசரணை-லௌகீக மேன்மைக்கான கர்மானுஷ்டானத்திற்கு; மோக்க ஆசாரம்-ஆத்ம விசாரம்; முனிவார்-கோபிப்பார்.**

(நிலையற்ற) உலகியலொழுக்க நிமித்தம் மகிழ்ச்சியோடு, ஆட்டின் அலைதாடிபோல வீணாக வலைவார்; நிலைபேறுள்ள ஆன்மசொரூபமான வீட்டியலொழுக்கத்தைக் கண்டு வெறுப்பார்; (அத்தகைய பாமரர்தம் ஒழுகலாற்றுத்) திறன் அந்தோ! (அறிஞராற் கண்ணெடுத்துக் கூடப்) பார்க்கப் பொறாத அத்துணைப் பரிதாபகரமாம்.

**72. கள்ளப் புலத்தைக் கருத்தா லுழுதிடர்ப்பட்
டெள்ளத் தனைமகிழ்வுக் கேங்குவார் - உள்ளலெழும்
உள்ளப் புலத்தை யுணர்வா லுழுதுவிளை
வெள்ளமகிழ் வேண்டார் வியப்பு.**

கள்ளப் புலத்தைக் கருத்தால் உழுது இடர்ப்பட்டு எள் அத்தனை மகிழ்வுக்கு ஏங்குவார் உள்ளல் எழும் உள்ளப் புலத்தை உணர்வால் உழுது விளை வெள்ள மகிழ் வேண்டார் வியப்பு.

**உழுது-தொழிற் படுத்தி, முயன்று; உள்ளல்-எண்ணங்கள்; வெள்ள மகிழ்-அளவற்ற பேரின்பம் (ஆன்ம சாக்ஷாத்காரம்).**

மாயா காரியமான (ஊஷர) விஷய பூமியை மனத்தால் வருந்தியுழுது (அறவே ஐயத்துக் கிடமான) அற்ப போகத்துக்கு இரங்குவார்; (ஆனால், அம்) மனோ மூலமான யதார்த்த வளப்பமுள்ள இதய பூமியை அறிவாலெளிதாக உழுது

அதனால் விளைகின்ற அபரிமித போகத்தை இச்சியார் (இம் மாநிலத்தோர்) மாயா விசித்திரம் (இருந்தவா றென்னே?) ஊஷரம் - விளையா உவர்நிலம்.

**வி-ரை:-** கள்ளப்புலம் என்னுந் தொடரிற் புலம்-இரட்டுற மொழிதல்.

## 73. ஆன்மரவிக் கன்றே யறக்கிழத்தி யாவகத்துத்
## தான்மருவுஞ் சீவமதித் தையலாள் - ஆன்மசுகம்
## விட்டுலக போகம் விதும்பலருங் கற்புநிலை
## கெட்டுமடம் பட்ட கிறுக்கு.

ஆன்ம ரவிக்கு அன்றே அறக்கிழத்தியா அகத்துத் தான் மருவும் சீவமதித் தையலாள் ஆன்ம சுகம் விட்டு உலக போகம் விதும்பல் அரும் கற்பு நிலை கெட்டு மடம் பட்ட கிறுக்கு.

**அன்றே-முதலிலேயே; அறக்கிழத்தி-மனைவி; மருவும்-இருக்கும்;**
**விதும்பல்-விரும்பி வெளிப்படல்; கெட்டு-தவறிய; மடம்பட்ட-புத்தியற்ற.**

ஞான சூரியனாய் விளங்கும் ஆன்ம நாதனுக்கு, நானெனத்தானெழுந்தவன்றே தன்மபத்தினியாய்த் தகராகாயமாந்தன் னிதயத்துக் கற்புநிலைக்கட் கருத்தா யொழுகக் கடமைப்பட்ட சந்திரனாஞ் சீவ போதப் பெண்ணாவாள், அறத்தொடுபட்ட ஆன்மசுக மகன்று, அவ்வற வொழுக்கத்தினழுவிப் பரத்தமையா லுலகபோகத்துட் படிந்துழல்வது, அநாதியாம் பழவினையா லறிவு மடம்பட்ட வெறிச்செயலாம்.

**வி-ரை:-** உயிரான்மாக்கள் தத்துவம்பற்றிச் சந்திர சூரிய ரெனப்பட்டதற் கேற்பத் தகராகாயமா மிதயத் தென்றுரைக்கப் பட்டது. ஆன்மசுகம்- உண்மையில் மனங்கடந்த மாட்சிமையுடைத்தாம் தன்னியல்பான பேரின்பம். உலக போகம் - கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றடையும் ஐம்புல நுகர்ச்சி. அவ்விருவகையின்பங்களும் முறையே தம்மேற்றத் தாழ்வின் மலையும் மடுவும் போற் றம்முண் மாறுபட்ட தெய்வ சம்பத்து மாசுர சம்பத்து மாதலால், ஆன்ம சுகம்விட் டுலகபோகம் விதும்பல் மடம்பட்ட கிறுக்கென்றார். விதும்பல் - வேட்கைப் பெருக்கம். ஆன்மானுபவ மடைதலே அறிவுடைமைக் கழகென்பதாம்.

## 74. உலகின் மயற்கை யொழிந்தாலே யுண்மை
## குலவுபர முத்திகை கூடும் - உலகுக்கு
## வற்புறுத்தி யுண்மை வழங்கல் பரத்தைக்குக்
## கற்புறுத்துங் காமக் கதழ்.

உலகின் மயற்கை ஒழிந்தாலே உண்மை குலவு பரமுத்தி கைகூடும் உலகுக்கு வற்புறுத்தி உண்மை வழங்கல் பரத்தைக்குக் கற்பு உறுத்தும் காமக் கதழ்.

**மயற்கை-ஆசையாகிய மயக்கம்; உண்மை குலவு-சத்தியமான;**
**கற்புறுத்தும்-கற்புள்ளவளாக வாதிக்கும்; காமக் கதழ்-காம மிகுதி.**

உலக மோக மொழிந்தாலே உண்மை விளக்கமாம் பரமுத்தி ஒருவற்கு வாய்ப்பதாம். அவ்வாறிருக்க அம்மாயாகற்பிதமான உலகுக்கு (அதனிடத்து வேட்கை விளைவால், அதற்குத்தன் மதிவலத்தால்) வற்புறுத்தி யுண்மை வழங்குவது (பிறப்பியல்பாலே வியபிசாரியான) பரத்தைக்கு (அவள் காதற் பரத்தனொருவன், அவளிடத்துத் தனக்குள்ள காம வேகத்தால் அவளுக்கு)க் கற்புத்தாபித்தலாம்.

## 4. உலகவறட்சித்திறன்

### 75. மித்தையா மேதினியை மெய்யென் றலமரூஉம்
### பித்தரா லன்றிமெய் வித்தகராற் - சித்தாம்
### பிரமத்தை யல்லாற் பிறிதோர் பொருளும்
### இரமித்தற் கேற்ற தல.

மித்தை ஆம் மேதினியை மெய் என்று அலமரூஉம் பித்தரால் அன்றி மெய் வித்தகரால் சித்து ஆம் பிரமத்தை அல்லால் பிறிது ஓர் பொருளும் இரமித்தற்கு ஏற்றது அல.

**அலமரூஉம்-கலங்கும்.**

அறிவு வடிவான பிரம்மத்தையன்றி அதற்கயலாமெப் பொருளும், பொய்யான வுலகை மெய்யென்று கலங்கும் உன்மத்தரா லன்றி உண்மை யுணர்ந்த ஞானிகளால் (அடைந்து) மகிழத் தக்கதன்று.

**வி-ரை:-** அசேதன உலகம் சுக சூனியமாதலின் அறிஞரா லவாவத் தக்கதன்றென்பது கருத்து.

### 76. உண்மைப் பொருள்வழியே யுற்ற வுணர்வுடையோர்
### எண்மை யுலகியல்வா யேகுவரோ - திண்மையிலாப்
### புன்மை விலங்கின் புலவுணர்வே யன்றோவவ்
### வின்மை யுலகத் திழிபு.

உண்மைப் பொருள் வழியே உற்ற உணர்வு உடையோர் எண்மை உலகியல்வாய் ஏகுவரோ திண்மை இலாப் புன்மை விலங்கின் புல உணர்வே அன்றோ அவ் இன்மை உலகத்து இழிபு.

**பொருள் வழியே உற்ற-பொருளில் பதிந்த; எண்மை-இகழத்தக்க தன்மை; உலகியல்வாய்-உலகாயத வழியில்; திண்மை-மனவுறுதி; புன்மை-அற்ப; இழிபு-ஈடுபடுதல், இறங்குதல்.**

மெய்ப்பொருளின் கண்ணே சென்று தங்கும் உணர்வுடையோர் நீச உலகியல்வாய் மனஞ் செல்வரோ? அவ்வசத்தா முலகில் அதோ முகமாய்ச் சிந்தை சேர்தல் திட்பவுணர்வற்ற அற்ப விலங்கின் ஐம்புல வறிவின் காரியமன்றோ!

**வி-ரை:-** செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். (குறள்)

### 77. வெள்ளமாத் துன்று விடயபோ கங்களைவிட்
### டெள்ளறிவா லென்னபய னென்பீரேல் - உள்ளத்
### திடைவிடா தென்று மியல்சொருப சாந்தி
### நடைபெறன்மெய்ஞ் ஞான நலன்.

வெள்ளமாத் துன்று விடய போகங்களை விட்டு எள் அறிவால் என்ன பயன் என்பீரேல் உள்ளத்து இடைவிடாது என்றும் இயல் சொருப சாந்தி நடைபெறல் மெய்ஞ்ஞான நலன்.

**வெள்ளமா-அளவற்றனவாய்; துன்று-உள்ள; எள்-வெறும், இகழத்தக்க; நடைபெறல்-அனுபவிக்கப்படுவது.**

### 78. உலகின் மருவுபொரு ளொன்றிலே தானும்
### இலகு சுகமென்ப தில்லை - உலகப்
### பொருள்களினின் றின்பம் புணர்வதா வெண்ணி
### மருள்வதெவன் மூட மனம்.

உலகில் மருவு பொருள் ஒன்றிலே தானும் இலகு சுகம் என்பது இல்லை உலகப் பொருள்களில் நின்று இன்பம் புணர்வதா எண்ணி மருள்வது எவன் மூட மனம்.

**மருவு-உள்ள; ஒன்றிலே தானும்-ஒன்றிலும்; இலகு-உண்டாவது; புணர்வதா-அடைவதாக; எவன்-எப்படி உசிதமாகும்.**

ஜட உலகிலுள்ள எப்பொருளிலும் (அறிவுக்கு) விளங்கும் இன்பமில்லை; அவ்வாறிருக்க, இவ்வுலகப் பொருள்களினின்று இன்பமுண்டாவதாக (விபரீதமாக) வெண்ணி மூடமனம் கலங்குவ தென்னோ ?

## (குறள் வெண்பா)

### 79. கைத்துடைமை கண்டு களிக்குமட மாக்கள்பின்
### னெய்த்துளைய நீங்குந் திரு.

கைத்து உடைமை கண்டு களிக்கும் மட மாக்கள் பின் எய்த்து உளைய நீங்கும் திரு.

**கைத்து-கையிற் பெற்றிருக்கும்; உடைமை, திரு-விஷயபோகப் பொருள்கள்; எய்த்து-குறைந்து; உளைய-துன்புற.**

பிறர் துயரிற் களிக்கும் மட நெஞ்சினர், பின்பு எய்த்துத் துன்பம் துய்க்கத் திரு அவரைவிட்டு நீங்கு மென்றார். இது பிறர் தாமென்ப தெல்லாம் மித்தையான மனபேத மாதலின், பிறர் துயர்நோக்கிக் களிகூர்வார் தமக்குத் தாமே இடரிடங் கொள்ள அழைத்துக் கேடு புரிபவரா மென்பது.

**(நேரிசை வெண்பா)**

**80. சுலவுதொல் வாதனையாற் றோற்றும் வறும்பா
ழுலகக் கனாச்சுரத்தே யோடிப் - பலவுயிருஞ்
சேருமுத் தாபமறத் தீர்த்தொளிரு மெய்த்துரியத்
தாருமகன் போதியான் மா.**

சுலவு தொல் வாதனையால் தோற்றும் வறும் பாழ் உலகக் கனாச் சுரத்தே ஓடிப் பல உயிரும் சேரும் முத்தாபம் அறத் தீர்த்து ஒளிரும் மெய்த் துரியத்து ஆரும் அகன் போதி ஆன்மா.

> **சுலவு-சுழன்று வருகிற; தொல் வாதனை-பண்டை வாசனை; வறும்-பயனற்ற; சுரம்-பாலைவனம்; முத்தாபம்-மூவாசைத்தீயின் வெப்பம் ; அற-அறவே; ஆரும்-விளங்கும்; அகன்-அகன்ற; போதி-ஞான விருக்ஷம்.**

துரிய நிலைக்குச் சுகமயமான சுழுத்தியே இவ்வுலகியலில் அண்மை நிதர்சனமாதலின், வாதனையால் தோற்றும் பாழுலகத்தில் கனாக்கண் பலவாறு சென்றயர்ந்த மகன் (ஆன்மா) இறுதியில் கனாவின் சிரமத்தை ஆழ் துயிலான சுழுத்தியில் நீத்தல் போல், பந்த இடர்களை மறந்து துரியநிலை கொள்கின்றா னென்றனர்.

## 5. உலகநடைத்திறன்

**81. இனைத்தெனத்தன் னுண்மைதெளிந் தேய்ந்திதயத் தென்றும்
தனித்தபர மாகத் தரித்தே - மனித்தனென
வேடத்துக் கேற்ப விளையாடு வாயுலகத்
தோடொத்துத் துக்கசுக முற்று.**

இனைத்து எனத் தன் உண்மை தெளிந்து ஏய்ந்து இதயத்து என்றும் தனித்த பரம் ஆகத் தரித்தே மனித்தன் என வேடத்துக்கு ஏற்ப விளையாடுவாய் உலகத்தோடு ஒத்துத் துக்க சுகம் உற்று.

> **இனைத்து-இப்படிப்பட்டதென்று; தன் உண்மை-தன் நிஜசொரூபம்; ஏய்ந்து-அடைந்து; தனித்த-உபாதியற்ற; தரித்து-(ஆதாரவஸ்துவாக) இருந்து கொண்டு; மனித்த-மனித; உற்று-உற்றவன் போல.**

(தன் பிறப்பிடமான) இதயத்தில் சேர்ந்து தன் பரமார்த்த சொரூபம் இது வெனத் தெளிந்து, (தெளிந்த அந்நிலையினின்றும் நழுவாமல்) அசங்க பரமான்ம சொரூபமாக ஆங்குத் தானே நிரந்தரந் தரித்து, தான் கொண்ட மனித வேடத்துக்கேற்ப உலகத்தார், பிறரோடொப்ப இன்பதுன்ப முற்றாற்போல (வெளிக்கு நடித்து) விளையாடுவாயாக.

**வி-ரை:-**வசிட்ட முனிவரும் ஸ்ரீராமபிரானுக்கு இவ்வாறே உபதேசித்தாரென்க.

**82. தேர்வதெலாந் தேர்ந்துசித்தி சேர்ந்தாலும் வேற்றுநடை**
**சார்வதுசான் றோர்க்குத் தகவன்றாம் - ஆவதனால்**
**எவ்வினத்தோ டேநீ யியல்வைவெளிக் கவ்வினத்தோ**
**டொவ்வுறுமாப் போலே யொழுகு.**

தேர்வது எலாம் தேர்ந்து சித்தி சேர்ந்தாலும் வேற்று நடை சார்வது சான்றோர்க்குத் தகவு அன்றாம் ஆவதனால் எவ் இனத்தோடே நீ இயல்வை வெளிக்கு அவ் இனத்தோடு ஒவ்வு உறுமாப் போலே ஒழுகு.

**தேர்வது-அறிய வேண்டியது; சித்தி-அடைய வேண்டியவை; வேற்றுநடை சார்வது-நெறிதவறி ஒழுகுவது; தகவு-உசிதம்; இயல்வை-சேர்ந்தவனாகக் காணப்படுகின்றாயோ; வெளி-வெளியுலகு; ஒவ்வ-பொருந்த.**

அறியவேண்டுவன வெல்லாம் அறிந்து அணிமாதி அட்டமாசித்திகளும் ஒருங்குபெற்றாலும் (உலக நடைக்கு) வேறான நடை பொருந்துவது சான்றோர்க்குத் தக்க தன்றாம். ஆதலால் (எப்போது) எவ்வினத்தோடு நீ பொருந்துவையோ (அப்போது) அவ்வினத்தோடு பொருந்துமாறு போல வெளிக்கு நடப்பாயாக.

**வி-ரை:-** சித்தி - ஜாதியொருமைப் பெயர்.
உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். (குறள்)

## 6. விவர்த்தசித்தாந்தத்திறன்

**83. *நாமுலக* மென்ன நயந்துரைத்த தாலுயிர்கட்**
**காமுறுதி யோது*ரம ணாசிரியர்* - சேம**
**விவர்த்தசித் தாந்தமே மெய்யாக விண்டார்**
**தவிர்த்துப் பிறவற்றைத் தாம்.**

நாம் உலகம் என்ன நயந்து உரைத்ததால் உயிர்கட்கு ஆம் உறுதி ஓது ரமண ஆசிரியர் சேம விவர்த்த சித்தாந்தமே மெய் ஆக விண்டார் தவிர்த்துப் பிறவற்றைத் தாம்.

உயிர்த் தொகைக்கு வேண்டு முறுதி உவந்தோதுங் குரு ரமணர் பிற சித்தாந்தங்களைப் பேணா தொழித்து 'நாமுலகம்' என்றுரைத்த (வெண்பா முகத்)தால் விவர்த்த சித்தாந்தமே உறுதி பயக்கு முண்மையாகக் கூறினார்.

**வி-ரை:-** (பழுதைப்) பாம்புக்குப் பழுதை போல உலகத் தோற்றத்துக்கு பாதான நிமித்தம் முதலிய எல்லாக் காரணங்களும் அறிவுருவ ஆன்மாவாகக் கூறுவது விவர்த்த சித்தாந்தமாம். பழுதையிற் பாம்பு போல உணர்வுருவ உண்மையில் உலகம் கற்பித மென்பது கருத்து. உண்மையாந் தன்னிலையை ஒழியவிட்டு, காண்பானாகத் தன்னைக் கலங்கி, காணப்படு முலகை

உண்மையாய்க் கோடலால் அஜாத சித்தாந்தத்தால் அமைதி பெறாதாற்கே அலமரும் பேதமகற்ற வேண்டிக் கூறலால், இதுதான் அதனோடு முரண்படாமை யறிக.

## 84. மதியத்து வாயிலா வந்தொளிர்ப வெல்லா
## மிதயத்து முன்பே யிருப்ப - புதையொத்துக்
## காணவெளிப் பட்டபழங் காதையாம் வாதனையா
## மாணவே தேர்க மனத்து.

மதியத்து வாயிலா வந்து ஒளிர்ப எல்லாம் இதயத்து முன்பே இருப்ப புதை ஒத்துக் காண வெளிப்பட்ட பழங் காதையாம் வாதனையா மாணவே தேர்க மனத்து.

**மதியம்-மனம்; புதை ஒத்து-புதையல் போல; மாணவே-நன்றாக.**

## 85. நானா விதமான நாமரூ பங்களொடு
## தானே யுலகாச் சமைவதலாற் - றானோர்
## நிமித்தனா யத்தை நிருமித் தளித்துச்
## சமித்தல் புரிவா னலன்.

நானா விதமான நாம ரூபங்களொடு தானே உலகாச் சமைவது அலால் தான் ஓர் நிமித்தனா அத்தை நிருமித்து அளித்துச் சமித்தல் புரிவான் அலன்.

**சமைவது அலால்-காணப்படுவதே தவிர; நிமித்தனா-காரணகர்த்தனாக; அத்தை-அதை; அளித்து-காத்து; சமித்தல்-அழித்தல்; அலன்-இல்லை.**

(ஆன்ம சொரூபமா மிறைவன்) பலவேறு விதமான நாமரூபங்களோடு தானே யுலகவடிவாகப் பொருந்துவதன்றி, (மட்பாண்ட காரியத்துக்கு முதற்காரணமான மண்ணினும் வேறாகநின்று அதனை நிகழ்த்தும் குயவன் போன்று) தானோர் நிமித்த காரணனாக (மாத்திரம் அவ்வுலகை) ஆக்கி யளித்தழித்தல் (ஆதிச் செயல்களைச்) செய்வானல்லன்.

**வி-ரை:-** சமைதல், (பொருந்தல்) - ஈண்டுத் தோற்றல். தானே யுலகாச் சமைதல் 87, 88, 90 ஆகிய மூன்று செய்யுட்களால் விளக்கப்படும்.

## 86. தானே யுலகாச் சமைந்துள்ள தத்துவத்தைத்
## தானே யறியாத் தடுமாற்றம் - ஏனோதான்
## ஏய்ந்ததெனக் கேளாதீர் யார்க்கெனநீர் காண்பீரேல்
## ஏய்ந்ததடு மாற்றமே யில்.

தானே உலகாச் சமைந்து உள்ள தத்துவத்தைத் தானே அறியாத் தடுமாற்றம் ஏனோதான் ஏய்ந்தது எனக் கேளாதீர் யார்க்கு என நீர் காண்பீரேல் ஏய்ந்த தடுமாற்றமே இல்.

**87. தானே யுலகாச் சமைதலெனி னோர்பழுதை**
**தானே யரவாச் சமைதலாம் - காணுங்காற்**
**சர்ப்பமே யில்லையெனிற் றான்சமைந்தாற் போலுலக**
**உற்பவமோர் காலு மிலை.**

தானே உலகாச் சமைதல் எனின் ஓர் பழுதை தானே அரவாச் சமைதலாம் காணுங்கால் சர்ப்பமே இல்லை எனில் தான் சமைந்தால் போல் உலக உற்பவம் ஓர் காலும் இலை.

**சமைதல்-காணப்படுகிறது; பழுதை-கயிறு; உற்பவம்-உண்டாதல்.**

**88. அந்நினைவே யல்லால்வே றாகா வரவுருவை**
**அந்நினைவே யல்லவோ வாயுங்கால் - அந்நியமாம்**
**தாம்பிற் பிறப்பித்துத் தன்றுயர்க்குக் காரணமாய்**
**ஓம்பி யொடுக்கு வது.**

அந்நினைவே அல்லால் வேறு ஆகா அரவு உருவை அந்நினைவே அல்லவோ ஆயுங்கால் அந்நியம் ஆம் தாம்பில் பிறப்பித்துத் தன் துயர்க்குக் காரணமாய் ஓம்பி ஒடுக்குவது.

**ஆம்-ஆகும்படி; தாம்பு-கயிறு; ஓம்பி-போஷித்து; ஒடுக்குவது-நீக்குவது.**

**89. வித்துமுளை யாதியா மேவுவன காரணமா**
**வொத்தொருங்கு தம்மு ளுடன்றழிவ - மத்தமனக்**
**கற்பனையா லன்றியவை காரியமா வொன்றினின்றொன்**
**றுற்பவமா கின்ற வல.**

வித்து முளை ஆதியா மேவுவன காரணமா ஒத்து ஒருங்கு தம்முள் உடன்று அழிவ மத்த மனக் கற்பனையால் அன்றி அவை காரியமா ஒன்றின் நின்று ஒன்று உற்பவம் ஆகின்ற அல.

**ஆதியா-முதலிய; ஒருங்கு-ஒன்றாகி; உடன்று-முரண்பட்டு; மத்த-அறியாமை வடிவான; நின்று-இருந்து.**

காரண காரியங்களாக நிகழ்வன வெல்லாம் மனச்செயலே என்கிறார். அன்றெனின் வித்தினின்று மரமும், மரத்தினின்று வித்தும் அனந்த உற்பவமாகக் காரணமின்றி முடியும். கௌடபாத காரிகை, ஸ்ரீ சங்கர பாஷ்யம் கூடிய மாண்டூக்கிய உபநிஷத்தின் மூன்றாம் பாகத்தில், இது நன்கு விளக்கப்பட்டுள்ளது.

**90. அறிவாய வுண்மையே யான்மா வுலகவ்**
**வறிவாம் புடைபெயர்ச்சி யாமே - அறிவாக**
**மேவினா லோர்பழுதை வேண்டுமோ வந்நியமா**
**யாவனையும் பாம்பா யிடற்கு.**

அறிவு ஆய உண்மையே ஆன்மா உலகு அவ் அறிவு ஆம் புடை பெயர்ச்சி ஆமே அறிவாக மேவினால் ஓர் பழுதை வேண்டுமோ அந்நியமா யாவனையும் பாம்பு ஆயிடற்கு.

**ஆய-ஆகிய; புடைபெயர்ச்சி-திரிபு; மேவினால்-ஆகிவிட்டால்; வேண்டுமோ-தேடுமோ; யாவனையும்-எவனையும்; ஆயிடற்கு-ஆவதற்கு, காணப்படுவதற்கு.**

## 91. சத்தா மியல்போய்ச் சலித்ததோ வான்மாமற்
## றெத்தா லியைந்ததெனி னிவ்வுலகம் - மித்தையாம்
## அஞ்ஞானத் தாலே யடைந்ததலா லான்மாவுக்
## கெஞ்ஞான்று மோர்சலன மின்று.

சத்து ஆம் இயல் போய்ச் சலித்ததோ ஆன்மா மற்று எத்தால் இயைந்தது எனின் இவ் உலகம் மித்தை ஆம் அஞ்ஞானத்தாலே அடைந்தது அலால் ஆன்மாவுக்கு எஞ்ஞான்றும் ஓர் சலனம் இன்று.

**சத்து-இருப்பு; இயல்-தன்மை; மற்று-அல்லது; எத்தால்-எக்காரணத்தால்; இயைந்தது-ஏற்பட்டது; எஞ்ஞான்றும்-ஒருக்காலும்.**

## 92. பின்னப் படாவிசும்பு பேணுங்காற் காரியமாம்
## பின்னத் தசும்பே பிறங்காதேற் - பின்னத்
## தசும்பசைவு கொண்டு தசும்புதனி லுற்ற
## விசும்பசைவு கூறன் மிகை.

பின்னப்படா விசும்பு பேணுங்கால் காரியமாம் பின்னத் தசும்பே பிறங்காதேல் பின்னத் தசும்பு அசைவு கொண்டு தசும்புதனில் உற்ற விசும்பு அசைவு கூறல் மிகை.

**பின்னப்படா-அகண்ட; விசும்பு-ஆகாயம்; பேணுங்கால்-பார்க்கும்போது; பின்னத் தசும்பு-தனிவடிவமுள்ள குடம்; பிறங்காதேல்-தோன்றாதென்றால்.**

## 93. ஆன்மநிறை வின்க ணநான்ம வுடலுலக
## ஊனமொரு காலு மொளிராதேல் - ஊனமுறல்
## ஆய வவற்றசைவா லான்மா தனக்குமசை
## வாயதெனக் கூறலறி வன்று.

ஆன்ம நிறைவின்கண் அநான்ம உடல் உலக ஊனம் ஒருகாலும் ஒளிராதேல் ஊனம் உறல் ஆய அவற்று அசைவால் ஆன்மா தனக்கும் அசைவு ஆயது எனக் கூறல் அறிவு அன்று.

**நிறைவு-பரிபூரண; ஊனம்-பின்ன வஸ்துக்கள்.**

## 94. ஆன்றபரி பூன்றவச லான்மா மனோபாதி
## ஏன்றசலத் தாற்சலித்தா லேய்ந்திடினும் - தோன்றும்
## நிழலுயிருக் கன்றி நிசபரமான் மாவுக்
## குழல்வென்று மில்லை யுணர்.

ஆன்ற பரிபூன்ற அசல ஆன்மா மனஉபாதி ஏன்ற சலத்தால் சலித்தால் ஏய்ந்திடினும் தோன்றும் நிழல் உயிருக்கு அன்றி நிச பரமான்மாவுக்கு உழல்வு என்றும் இல்லை உணர்.

**ஆன்ற-மாண்புள்ள; ஏன்ற-ஏற்ற; சலித்தால் ஏய்ந்திடினும்-சலிப்பதுபோல் தோன்றினாலும்; நிழல் உயிர்-சிதாபாசன் அல்லது ஜீவன்; நிஜ பரமான்மா-நிஜ உயிர்; உழல்வு-பாடு.**

யானென்றுதிக்குஞ் சிதாபாச ஜீவநோக்கா மவிச்சையால் உபாதியா மந்தக்கரணத்தோ டான்மாவுக் குளதாகத் தோன்று மியைபால் நிறைந்த நிறைவா லசலமா யமர்ந்த வான்மா, அவ்வந்தக்கரண வசைவாற் றானுஞ்சலனமுற்றாற் போலக் காணப்படினும், பிறப்பிறப்புப் பந்தமுக்தியாதிய அச்சம்சார சலனந்தான் அச்சீவனுக்கே யன்றிக் கடந்தவுண்மையா மான்மாவுக் கொருகாலு மின்றாம்.

**வி-ரை:-** ஆன்மா வசலமா யிருக்கக் காரணம் அதன் பரிபூர்ணத் தன்மை யென்பார், 'ஆன்ற பரிபூன்ற வசலான்மா' வெனவும் அதுதான் சலனமுற்றாற் போலக் காணப்படக் காரணம் அந்தக்கரணச் சலன மென்பார் ''மனோபாதியேன்றசலத்தாற் சலித்தா லேய்ந்திடினு'' மெனவுங் கூறினார். தண்ணீர்க் கலக்கத்தாற் கதிரவனுங் கலக்க முற்றாற் போலக் காணப்படினும், அக்கலக்கந்தான் கதிரவன் பிம்பத்துக் கன்றி யுண்மைக் கதிரவனுக் கின்றா மாறு காண்க.

## 95. அத்துவித மாயபர மான்மா தனக்குமயற்
## சித்த வுபாதியெங்ஙன் சேர்ந்ததெனின் - மத்தவுயிர்த்
## திட்டியாற் சேர்ந்ததலாற் சித்துக் குபாதிமெய்யா
## ஒட்டியதே யில்லை யுணர்.

அத்துவிதம் ஆய பரமான்மா தனக்கு மயல் சித்த உபாதி எங்ஙன் சேர்ந்தது எனின் மத்த உயிர்த் திட்டியால் சேர்ந்தது அலால் சித்துக்கு உபாதி மெய்யா ஒட்டியதே இல்லை உணர்.

அயலற்றதாம் பரமான்மாவுக்கு அவிச்சை வடிவா மந்தக்கரணோபாதி அடைந்தவா றெங்ஙன மெனில், மயக்க மடைந்த ஜீவ நோக்கத்தாற் சேர்ந்ததன்றி ஆன்மசைதன்னியத்துக் கவ்வுபாதி உள்ளவாற்றா லென்றுமே யடைந்த தில்லை.

**வி-ரை:-** ஒருவன் கலக்கத்தாற் கயிறே பாம்பாகக் காணுமாறு போல, உயிர் மயக்கத்தாற் சித்தே சித்தமாகத் தோன்றுவதன்றி, ஆராய் வழிச் சித்துக் கயலாய்ச் சித்தமென் றொன்று சிறிதுமே இன்றென்பதாம். பெற்றாரைப் பேணும் பெருங்குணத்தா னொருவனைப் பிறனொருவன் உன்னீன்றாரைத் தெழிக்கும் வழக்கம் உன்பா லெவ்வாறு சேர்ந்ததெனக் கேட்ட வினாப்போல, இவ்வினாவே முதற்கண் அசங்கதமா மென்க.

## 96. பூரணஞா னச்செம் பொருளினின் றாருயிர்தா
## னோரணுவாய் நானென் றுதியாதாம் - பாரணவக்
## கண்டமாந் தீப்பிழம்பி னின்றே கணப்புலிங்கம்
## விண்டு தெறிப்பன வாம்.

பூரண ஞானச் செம்பொருளின் நின்று ஆருயிர்தான் ஓர் அணுவாய் நான் என்று உதியாதாம் பார் அணவக் கண்டம் ஆம் தீப்பிழம்பின் நின்றே கணப்புலிங்கம் விண்டு தெறிப்பன ஆம்.

**ஆருயிர்-ஜீவன்; பார் அணவ-பூமிமேல் எங்கும் பரவும்படி; கணப்பு லிங்கம்-நெருப்புப் பொறி; விண்டு-வெடித்துப் பின்னமாகி.**

## 97. மயலாக்கத் தாலே மனமருண்டு நோக்கும்
## அயனோக்கி னன்றிமெய் யான்ம - வியனோக்கிற்
## றேகமே யின்றேற் சிதாகாய வான்மாவைத்
## தேகியெனச் சாற்றல் செயிர்.

மயல் ஆக்கத்தாலே மனம் மருண்டு நோக்கும் அயல் நோக்கின் அன்றி மெய் ஆன்ம இயல் நோக்கில் தேகமே இன்றேல் சிதாகாய ஆன்மாவைத் தேகி எனச் சாற்றல் செயிர்.

**ஆக்கம்-வலிமை; சாற்றல்-சொல்லுதல்; செயிர்-குற்றம்.**

## 98. சரீரமே நானாச் சரித்தாலே யன்றிச்
## சராசரமா மன்னியஞ்சா ராதேல் - பராபரமாத்
## தோன்று மயல்விடய சூனியத்தா லான்மாதான்
## ஏன்றகரி யென்ற லிழுக்கு.

சரீரமே நானாச் சரித்தாலே அன்றிச் சராசரமாம் அன்னியம் சாராதேல் பராபரமாத் தோன்றும் அயல்விடய சூனியத்தால் ஆன்மாதான் ஏன்ற கரி என்றல் இழுக்கு.

**சரித்தாலே-வியவகரித்தால்; சாராதேல்-இராது என்றால்; ஏன்ற-தகுந்த;கரி-சாட்சி; இழுக்கு-பிழை, குற்றமாகும்.**

**(இன்னிசை வெண்பா)**

**99. உடலொழிந் தில்லை யுலகம் - உடலும்
உளமொழிந் தோர்காலு மில்லை - உளமும்
உணர்வொழிந் தோர்காலு மில்லை - உணர்வேயும்
உண்மையொழிந் தோர்காலு மில்.**

உடல் ஒழிந்து இல்லை உலகம் உடலும் உளம் ஒழிந்து ஓர்காலும் இல்லை உளமும் உணர்வு ஒழிந்து ஓர்காலும் இல்லை உணர்வேயும் உண்மை ஒழிந்து ஓர்காலும் இல்.

**ஒழிந்து-இல்லாமல், அன்றி.**

## 7. அஜாதசித்தாந்தத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**100. அநேகசித் தாந்த மவரவர்க் கேற்பச்
சொனாலுங் குரு*ரமண*த் தோன்றல் - தனாது
நிஜாநுபவ மாக நிகழ்த்தயாங் கேட்ட
தஜாதசித் தாந்த மறி.**

அநேக சித்தாந்தம் அவர் அவர்க்கு ஏற்பச் சொனாலும் குருரமணத் தோன்றல் தனாது நிஜ அநுபவம் ஆக நிகழ்த்த யாம் கேட்டது அஜாத சித்தாந்தம் அறி.

**தோன்றல்-அரசன், அவதரித்தவர்; தனாது-தனது; நிகழ்த்த-சொல்ல.**

இறைவன் சொரூபமாயவதரித்த குருரமணன் தன்னடியடுத்த அவ்வவ்வடியார் (நிலைக்) கொள்கைக் கேற்பப் பல்வேறு சித்தாந்தங்களும் பகர்ந்திடினும், தனதுண்மை யநுபவமா யுரைத்தருள யாமந்தரங்கமாய்க் கேட்கப் பெற்றது அஜாத சித்தாந்தம் ஒன்றேயாம்.

**101. அர்ச்சுனற்குக் கண்ணபிரா னாதிக்கட் சொற்றதூஉம்
உச்சமுறு மிந்தநிலை யுண்மையே - அர்ச்சுனன்றன்
சிந்தைகொள மாட்டாத் தியக்கத்தாற் காண்டியதன்
பிந்தி யுரைத்தான் பிற.**

அர்ச்சுனற்குக் கண்ணபிரான் ஆதிக்கண் சொற்றதூஉம் உச்சம் உறும் இந்த நிலை உண்மையே அர்ச்சுனன் தன் சிந்தைகொள மாட்டாத் தியக்கத்தால் காண்டி அதன் பிந்தி உரைத்தான் பிற.

**ஆதிக்கண்-கீதையின் ஆரம்பமாகிய 2 வது அத்தியாயத்தில்; தியக்கம்-மயக்கம்; காண்டி-கண்டுகொள்க; அதன் பிந்தி-3 முதல் 18 வரை உள்ள அத்தியாயங்களில்; பிற-ஏனைய சித்தாந்தங்கள்.**

## 8. படைப்புடன்பாட்டுத்திறன்

**102. சிட்டிமுறை பற்பஃ றிறத்தாலே சாத்திரங்கள்
கட்டுரைக்கு மந்தக் கருத்திதுவாம் - சிட்டிமுறை
ஓதலன்று சாத்திரத்தி னுள்ளமுதன் மூலவுண்மை
ஆய்தலொன்றே யந்நூ லகம்.**

சிட்டி முறை பற்பல் திறத்தாலே சாத்திரங்கள் கட்டுரைக்கும் அந்தக் கருத்து இது ஆம் சிட்டி முறை ஓதல் அன்று சாத்திரத்தின் உள்ளம் முதல் மூல உண்மை ஆய்தல் ஒன்றே அந்நூல் அகம்.

**திறம்-விதம்; கட்டுரைக்கும்-எடுத்து உரைத்தல்; கருத்து, உள்ளம், அகம்-நோக்கம், உள்ளக் கிடக்கை.**

நூல்கள் பல்வேறு விதமாகப் படைப்பு முறை யோதலாலே தாற்பரிய மிதுவாம். நூல்களின் ஆழ்ந்த நோக்கம் படைப்பு முறை யோதலினன்று : அது அப்படைப்புக் காதிமூலமான பராபரப் பொருளை ஆராய்தலின் கண்ணேயாம்.

**வி-ரை:-** மெய்ஞ்ஞான நூல்கள் முடிந்த முடிவில் அஜாத சித்தாந்தத்தையே அதிதீவிர பக்குவர்க் கறிவுறுத்துவன வாதலால், உண்மை யுணர்த்தலில் மட்டும் பெரிதும் ஒற்றுமைப்படும் அவை, உய்த்துணர வல்லார்க்கு ஆராய்ச்சி பிறக்க, படைப்பு முறை மட்டும் பல்வேறு விதமாகப் பாரிப்பனவாம்; ஆகவே, கற்பிக்குமென்னும் பொருள்படக் கட்டுரைக்குமெனக் கூறினார்.

## 9. இறைதொழிற்றிறன்

**103. மாயத்தா லேதான் மறைபட்டு நின்றுமனா
காயத் தவத்தைக் கயிற்றையெறிந் - தேய
வபிமானி தன்னை யதன்மேலே யேற்றி
யவிகாரி யாடுகின் றான்.**

மாயத்தாலே தான் மறைபட்டு நின்று மன ஆகாயத்து அவத்தைக் கயிற்றை எறிந்து ஏய அபிமானி தன்னை அதன் மேலே ஏற்றி அவிகாரி ஆடுகின்றான்.

**ஏய-பொருந்திய; அபிமானி-தேகாபிமானி, ஜீவன்; அவிகாரி-விகாரமற்ற ஆன்மா.**

அவிகாரி (யாகத் துரீய பூமியின்கட் டானிருந்தவாறிருந்தே, ஆன்ம சொரூபமான மாயாவி, மாயா மோஹிதர்களான அவிசாரிகள் கண்ணுக்குத் தோன்றாது) மாயா சக்தியாலே தான் மறைபட்டு நின்று, ஜாக்கிராதி அவஸ்தை வடிவான கயிற்றை மனாகாயத்தே விசிறியெறிந்து அவற்றுக்குரிய விசுவாதி அபிமானிகளை அக்கயிற்றின் மேலேற்றி (விகாரங்களோடு கூடிய விசித்திரமான வெகுவித விவகார ஜாலங்களை அவர்களால் அங்கே தோற்றுவித்து) விளையாடுகின்றான் என்பதாம்.

**104. அதிகார மாயைக் களித்தபர மேசன்
அதிகார மாயையா லாற்றும் - சதிகார
வாணைக்குத் தானு மடங்கினாற் போற்புறக்கண்
காணிக்குக் காண்படுவான் காண்.**

அதிகாரம் மாயைக்கு அளித்த பரமேசன் அதிகார மாயையால் ஆற்றும் சதிகார ஆணைக்குத் தானும் அடங்கினால் போல் புறக் கண்காணிக்குக் காண்படுவான் காண்.

**ஆற்றும்-செலுத்தும்; புறக்கண்காணி-பகிர்முக ஜீவர்கள்.**

மாயைக்கு அதிகாரமளித்த ஈசன், அம்மாயாசக்தியின் ஆணைக்குத் தானும் உட்பட்ட பந்தன் போல் (லீலையாகவே) பிறராற் காணப்படுகின்றான். எவ்வாறெனின், நித்திய முத்தரும் அவதார புருஷருங் கூட மாயா சக்திக்கு உடன் படுபவர் போல் நடக்கின்றனர். உண்மையில் அவர்க்குப் பந்தமில்லை.

**105. கருத்தொன்று மின்றிவான் கண்ணே யெழுந்த
அருக்கன்றன் முன்னிலைமட் டாலே - வருக்கமுறு
சேதனா சேதனங்கள் சேட்டித்த லாகுமந்
நாதனால் யாவு நடை.**

கருத்து ஒன்றும் இன்றி வான்கண்ணே எழுந்த அருக்கன் தன் முன்னிலை மட்டாலே வருக்கம் உறு சேதன அசேதனங்கள் சேட்டித்தல் ஆகும் அந்நாதனால் யாவும் நடை.

**அருக்கன்-சூரியன்; வருக்கம்-கூட்டம்; நடை-நடப்பது.**

**106. கக்குவதூஉஞ் செங்கனலைக் காந்தக்கல் கஞ்சத்து
மொக்குண் மலர்ந்தாம்பன் மூடுவதூஉம் - மிக்க
அகிலவுயிர் சேட்டித் தடங்குவதூஉ மென்றூழ்
திகழ்சந் நிதிமாத் திரம்.**

கக்குவதூஉம் செங்கனலைக் காந்தக்கல் கஞ்சத்து மொக்கு உள் மலர்ந்து ஆம்பல் மூடுவதூஉம் மிக்க அகில உயிர் சேட்டித்து அடங்குவதூஉம் என்றூழ் திகழ் சந்நிதி மாத்திரம்.

**செங்கனல்-நெருப்பு; காந்தக் கல்-குவிலென்சு; கஞ்சம்-தாமரை;
ஆம்பல்-அல்லிப்பூ; என்றூழ்-சூரியன்; திகழ்-விளங்கும்.**

**107. காந்தமுன் னூசி கலங்குவதூஉந் திங்கண்முற்
காந்தச் சிலைதண்ணீர் கால்வதூஉம் - வாய்ந்த
குமுதமலர்ந் தம்புயந்தான் கூம்புவதூஉ மிக்க
சமுகவியல் பாற்றுந் தரம்.**

காந்தம் முன் ஊசி கலங்குவதூஉம் திங்கள் முன் காந்தச்சிலை தண்ணீர் கால்வதூஉம் வாய்ந்த குமுதம் மலர்ந்து அம்புயம் தான் கூம்புவதூஉம் மிக்க சமுக இயல்பு ஆற்றும் தரம்.

**காந்தச்சிலை-சந்திரகாந்தக் கல்; கால்வது-வடிப்பது; மிக்க சமுக இயல்பு-எண்ணிறந்த சிருஷ்டியாதி காரியங்கள்; ஆற்றும் தரம்-செய்யும் விதம்.**

**108. கருத்தணுவு மில்லாக் கருத்தனது முன்னே**
**உருத்ததொழிற் குள்ளா முயிர்தாம் - பொருத்தும்**
**கதிபலவுட் புக்குத்தங் கன்மாநு சார**
**விதிவழிமீண் டெய்துவன வீடு.**

கருத்து அணுவும் இல்லாக் கருத்தனது முன்னே உருத்த தொழிற்கு உள் ஆம் உயிர் தாம் பொருத்தும் கதி பல உள் புக்குத் தம் கன்மாநுசார விதிவழி மீண்டு எய்துவன வீடு.

**உருத்த-நிறைந்த; பொருத்தும்-ஈடுபடும்; கதி-வழி; விதி-விதிக்கப்பட்ட.**

**109. உலகியலவ் வென்றூழை யொட்டாமை யோடு**
**குலவுசது பூத குணந்தாம் - அலகிலா**
**விண்ணைமரு வாமைமதி மேவாக் கருத்தனைப்போய்த்**
**திண்ணமுயிர்க் கன்மமுறாச் சீர்.**

உலகு இயல் அவ் என்றூழை ஒட்டாமையோடு குலவு சது பூத குணம்தாம் அலகு இலா விண்ணை மருவாமை மதி மேவாக் கருத்தனைப் போய்த் திண்ணம் உயிர்க் கன்மம் உறாச் சீர்.

**அலகிலா-எல்லையற்ற; மதிமேவா-மனவுபாதியற்ற; உறாச் சீர்-அடையாத தன்மை.**

## 10. திரிபதார்த்தத்திறன்

**110. சீவனா ரென்றகத்துத் தேற விசாரிப்பிற்**
**சீவனே யின்றிச் சிவன்வெளியாம் - ஆவலாய்க்**
**காணுறுவா னின்றாகக் காணப் படுமுலகைப்**
**பேணுறலுண் டாகவெறும் பித்து.**

சீவன் ஆர் என்று அகத்துத் தேற விசாரிப்பின் சீவனே இன்றிச் சிவன் வெளி ஆம் ஆவலாய்க் காண் உறுவான் இன்றாகக் காணப்படும் உலகைப் பேண் உறல் உண்டாக வெறும் பித்து.

**தேற-தெளிய; பேண் உறல் உண்டாக-இருப்புக் கொடுக்க.**

**111. இவ்வண்ண மேனை யிரண்டுங் கழிந்தபிற்
செவ்வண்ண நிற்றல் சிவமொன்றே - எவ்வமறும்
உண்மையிது வென்னினுமவ் வுண்மைதனைத் தானிறந்தோன்
எண்ணலெவ னத்துவித மென்று.**

இவ்வண்ணம் ஏனை இரண்டும் கழிந்தபின் செவ்வண்ணம் நிற்றல் சிவம் ஒன்றே எவ்வம் அறும் உண்மை இது என்னினும் அவ் உண்மைதனைத் தான் இறந்தோன் எண்ணல் எவன் அத்துவிதம் என்று.

**செவ்வண்ணம்-சாக்ஷாத், நேரே; எவ்வம்-குறைபாடு, துன்பம்.**

**112. இறைவன்போ லேனை யிரண்டுநிச மேலவ்
விறைவன் பரிபூ ரணத்திற் - குறைவாம்
இறைவன் பரிச்சின்ன னென்றா லொழியப்
பறையலா காதப் பரிசு.**

இறைவன்போல் ஏனை இரண்டும் நிசமேல் அவ் இறைவன் பரிபூரணத்தில் குறைவு ஆம் இறைவன் பரிச்சின்னன் என்றால் ஒழியப் பறையல் ஆகாது அப்பரிசு.

**பரிச்சின்ன-பின்னப்பட்ட; பறையல்-சொல்லுதல்.**

மற்றிரண்டு பொருளும் பதிபோலப் பரமார்த்தத்திலும் மெய்யாமேல் அப்பதி தன் பரிபூரணத் தன்மையிற் பங்கமாம்; அதேபோல பதி பரிச்சின்னனென் றொப்பினாலொழிய அவ்வாறு கூறலாகாது.

**வி-ரை:-** இறைவன் : எப்பொருட்கண்ணும், அப்பொருளாய்த் தங்குவோன். மற்றிரண்டு பொருள் : பசு, பாசங்கள். பரிச்சின்னன் : அளவுபட்டோன். அப்பரிசு : ஏனையிரண்டும் நிஜமெனல். உண்மையாவது முழுமுதற் பொருளாங் கடவுளொன்றே யென்பதாம்.

**113. பானமாஞ் சீவன் பரத்தின்வே றாமெய்யே
தானோர் முதலாத் தழைப்பனேல் - ஆன்றோரால்
சீவச் செயல்கள் சிவச்செயலாந் தேற்றமனோ
பாவனையே போலும் பகர்.**

பானம் ஆம் சீவன் பரத்தின் வேறு ஆம் மெய்யே தான் ஓர் முதலாத் தழைப்பனேல் ஆன்றோரால் சீவச் செயல்கள் சிவச் செயல் ஆம் தேற்றம் மனோ பாவனையே போலும் பகர்.

**பானம்-தோற்றம்; தழைப்பனேல்-இருப்பானேல்; தேற்றம்-முடிவு.**

சீவன் பரத்தினின்றும் வேறுபட்டவோர் முதலாகத் தான் தழைத்தலால், அந்நிலை மெய்போல் இருவினைகளியற்றி அவைகளின் பயனை யடைகின்றான். உண்மையில் எனக்கெனச் செயல் யாதொன்றுமில்லை எனவறிந்த இடத்து ஜீவச் செயல்கள் சிவச் செயல்களாகவே திகழ்வன. வேறுபட்ட மனோபாவனையில் தான் வித்தியாசம் அமைவதாம்.

**114. சின்னவொளி பேரொளியிற் சேர்ந்தொழியி லவ்வொளியிற்
றுன்னுபடக் காட்சி தொலைந்தாங்கே - மன்னியமெய்ச்
சித்தொளியிற் சித்தவொளி சேர்ந்தொழியிற் றீர்ந்தொழியும்
முத்திறப்பொய்க் காட்சி முடிந்து.**

சின்ன ஒளி பேர் ஒளியில் சேர்ந்து ஒழியில் அவ்வொளியில் துன்னு படக் காட்சி தொலைந்து ஆங்கே மன்னிய மெய்ச் சித்து ஒளியில் சித்த ஒளி சேர்ந்து ஒழியில் தீர்ந்து ஒழியும் முத்திறப் பொய்க் காட்சி முடிந்து.

**ஒழியில்-அழிந்து போனால்; துன்னு-விளங்கும்; தொலைந்தாங்கே-மறைந்து போவது போலவே; மன்னிய-நிலைபெற்றுள்ள; முத்திறப் பொய்க்காட்சி-ஜீவேசுவர ஜகத் தோற்றம்.**

**114 a** ***பெண்ணா ணலிமுதலாம் பெற்றியாற் காரியமாங்
கண்ணோக்கா லிவ்வுலகின் காரணனாப் - பண்ணோர்
கருத்த னுளனவனிக் காசினிமாய்த் தாக்குங்
கருத்த னரனாக் கருது. -பகவான்***

பெண் ஆண் அலி முதல் ஆம் பெற்றியால் காரியம் ஆம் கண் நோக்கால் இவ்வுலகின் காரணனாப் பண் ஓர் கருத்தன் உளன் அவன் இக் காசினி மாய்த்து ஆக்கும் கருத்தன் அரனாக் கருது.

**115. ஒன்றே முதலாக வுள்ளனபோன் மும்முதலை
நன்றெனயா ரும்முன் னயப்பதேன் - என்றாலோ
சுட்டறிவு தன்னாற் சுழலுமுயிர்க் கன்னவுடன்
பட்டலதவ் வொன்று படாது.**

ஒன்றே முதல் ஆக உள்ளனபோல் மும்முதலை நன்று என யாரும் முன் நயப்பது ஏன் என்றாலோ சுட்டறிவு தன்னால் சுழலும் உயிர்க்கு அன்ன உடன் பட்டு அலது அவ் வொன்று படாது.

**யாரும்-எந்த ஆசானும், எந்த மதமும்; முன்-முதலில்; நயப்பது-ஏற்றுக் கொள்வது; அன்ன-அவ்வாறு; படாது-உணரப்படாது.**

## 11. திரோதானத்திறன்

**116. எறிந்துமெறி பட்டுமுயி ரெண்ணில் பிறப்பிற்
செறிந்தவர லாற்றுத் திறந்தாம் - அறிவின்
மருவலறு மிக்க மறப்பா மறைப்பு
திருவருளே யாகத் தெளி.**

எறிந்தும் எறி பட்டும் உயிர் எண் இல் பிறப்பில் செறிந்த வரலாற்றுத் திறம் தாம் அறிவில் மருவல் அறு மிக்க மறப்பாம் மறைப்பு திருவருளே ஆகத் தெளி.

**எறிந்தும்-வருத்தியும்; செறிந்த-நிறைவு; திறம்-தன்மை; மருவல் அறு-சேர்ந்து நில்லாத.**

**117. இந்தவொரு சன்மத் தியல்வசில வற்றைமனத்
துந்துநினை வாய வுணர்ச்சியே - தந்தமுயிர்
வாழ்வதனைத் துன்ப மயமாக்க லான்மறப்பே
ஆவ லுறத்தக்க தால்.**

இந்த ஒரு சன்மத்து இயல்வ சிலவற்றை மனத்து உந்து நினைவு ஆய உணர்ச்சியே தம்தம் உயிர் வாழ்வு அதனைத் துன்ப மயம் ஆக்கலால் மறப்பே ஆவல் உறத் தக்கது ஆல்.

**இயல்வ-நிகழ்கின்ற; உந்து நினைவு-ஞாபகமூட்டும்; உற-அடைய.**

## 12. வியத்தித்துவத்திறன்

**118. வியத்தியொடு சத்திக்கு மெய்ம்மை யவற்றை
வியக்குமனக் கற்பனையான் மேவும் - உயிர்க்கு
மருளுறுத்து மந்தமன மாயையதீ தான்மப்
பொருளிடத்து முக்காலும் பொய்.**

வியத்தியொடு சத்திக்கு மெய்ம்மை அவற்றை வியக்கும் மனக் கற்பனையால் மேவும் உயிர்க்கு மருள் உறுத்தும் அந்த மன மாயை அதீத ஆன்மப் பொருள் இடத்து முக்காலும் பொய்.

**வியத்தி-நாமரூபத் தனியிருப்பு; மேவும்-இருக்கும்.**

வியத்தி சத்திகள் அவற்றை வியப்பார்தம் மனக்கற்பனையால் உண்மை போலத் தோன்றுவனவாம். ஆயின், உயிரைத் தடுமாற்றஞ் செய்யும் அம் மனக் கற்பனையான மாயை மனங்கடந்த மெய்ப்பொருளா மான்மாவிடத்து முக்காலும் பொய்யாம்.

**வி-ரை:-** எனவே, உண்மையுணர்வாம் ஆன்மாவலோகனத்தில் வியத்தி சத்தி விவாத விளைவுக்கே யிடமில்லை யென்க.

**119. மெய்யுறுமுத் தர்க்கு வியத்தியுள தாமென்னல்**
**பொய்யுறுபெத் தப்புலவோர் புல்லறிவே - பொய்யறுமெய்**
**ஆய வியோமத் தவர்வியத்தி யவ்வியத்தி**
**நேயர் வியத்தி நிழல்.**

மெய் உறும் முத்தர்க்கு வியத்தி உளதாம் என்னல் பொய் உறு பெத்தப் புலவோர் புல் அறிவே பொய் அறு மெய் ஆய வியோமத்தவர் வியத்தி அவ்வியத்தி நேயர் வியத்தி நிழல்.

**பெத்த-பந்தப்பட்ட.**

பராபரமேனும், உண்மையில் வியத்தாவியத்தமிரண்டுங் கடந்தொளிரும் உண்மைநிலை யுற்ற ஜீவன் முத்தர்க்கு அவருணர்வாலுந் தமக்கென்றோர் தனிவியத்தியுளதாகச் சாற்றின், அவ்வாறு சாதிக்குஞ் சாதனை பாசபந்தப்பட்ட பண்டிதர்தஞ் சிற்றறிவாற் சேர்ந்ததே. நிருமலமாய் அடுத்தது காட்டும் பளிங்கனைய சிதாகாய வடிவினராமவர்க் குளதாகத் தோன்றும் வியத்தி, அத்தகைய வியத்திவிருப்போர்க் குளதாய வியத்தியின் வெளிச்சாயையே.

**வி-ரை:-** முத்தர்க்குப் பிறருணர்வாலன்றித் தம்முணர்வால் வியத்தித்துவமில்லை யென்பதாம்.

**120. நாடுவா ருள்ளத்துண் ஞானமே செம்பொருளாய்**
**நீடலா லூனகந்தை நீங்கியபின் - ஈடிலா**
**ஞானியவர் ஞானியிவ ரென்னவவ ருண்மையிலே**
**ஊனுருவர் தாமோ வுரை.**

நாடுவார் உள்ளத்து உள் ஞானமே செம்பொருளாய் நீடலால் ஊன் அகந்தை நீங்கியபின் ஈடு இலா ஞானி அவர் ஞானி இவர் என்ன அவர் உண்மையிலே ஊன் உருவர் தாமோ உரை.

**நீடலால்-பரந்து விளங்குவதால்.**

**121. அந்த மகான்மாவை யிந்த மகான்மாவை**
**விந்தையொடு காண விழைகின்றீர் - சொந்தமாம்**
**உந்தமகான் மாவுருவை யோர்ந்துளத்து ளுற்றுணரின்**
**எந்தமகான் மாக்களுமொன் றே.**

அந்த மகான்மாவை இந்த மகான்மாவை விந்தையொடு காண விழைகின்றீர் சொந்தம் ஆம் உம்தம் மகான்மா உருவை ஓர்ந்து உளத்து உள் உற்று உணரின் எந்த மகான்மாக்களும் ஒன்றே.

**122. வியத்திசம் பந்தியாய் மேவுங்கா றுந்தான்
அயத்தன மெய்ஞ்ஞானி யாகான் - வியத்தகுமாண்
சால்புடைய வெந்தத் தவநிலையே சார்ந்திடினும்
ஏல்புடைய சாதகனே யெண்.**

வியத்தி சம்பந்தியாய் மேவுங்காறும் தான் அயத்தன மெய்ஞ்ஞானி ஆகான் வியத்தகு மாண் சால்பு உடைய எந்தத் தவநிலையே சார்ந்திடினும் ஏல்பு உடைய சாதகனே எண்.

**அயத்தன-முயற்சியற்ற ; சால்பு-தகுதி; ஏல்புடைய-ஏற்புடைய.**

தனக்குள்ள வியத்தி சம்பந்தம் வேரோடழியுமளவும் ஒருவன் கர்த்தத்துவமற்ற மெய்ஞ்ஞானியாகான். வியக்கத்தக்க பெருஞ் சிறப்புவாய்ந்த எந்தத் தவநிலை தானெய்திடினும், அவன் உண்மை யுணர்தற்குற்ற சாதகனேயாம்.

**வி-ரை:-** சித்தனன்றெனத் தேற்றமுறக் கூறுவார் ஏல்புடைய சாதகனே யென்றார்.

**123. வியத்தித் துவந்தீர்ந்த மெய்யுணர்வு விட்டுப்
பயிற்றுபல சித்திகளும் பாழே - பயித்தியமாம்
அந்தப்பல் சித்திகளை யார்விழைவா ரான்மாவாம்
தந்திறந்தே றாதார் தவிர்த்து.**

வியத்தித்துவம் தீர்ந்த மெய் உணர்வு விட்டுப் பயிற்று பல சித்திகளும் பாழே பயித்தியம் ஆம் அந்தப் பல் சித்திகளை யார் விழைவார் ஆன்மாவாம் தம் திறம் தேறாதார் தவிர்த்து.

**விட்டு-தவிர்ந்து; விழைவார்-ஆசைப்படுவார்.**

வியத்தித்துவங் கரைந்த உண்மை யுணர் வொன் றொழிய, அகந்தைமதியா லாற்றுமநேக சித்திகளும் அவலமேயாம். ஆதலால் மனமயக்கந்தரும் அவ்வநேக சித்திகளை அகண்டான்ம சொரூபமாந் தம்முண்மை யுணராது வியத்தியை விடாப்பிடியாய்ப் பற்றும் வெறியரன்றி வேறியாரே விரும்புவார்!

**வி-ரை:-** சித்திகள் ஊழாலுற்ற விடத்தும், உண்மை யுணர்ந்தோன் சான்று மாத்திரமாய்த் தன்னிலையிற்றான் மகிழ்தலன்றி, அவற்றுக்குக் கர்த்தாவாய்த் தன்னைக் கருதிக் களியானென்க. வியத்தித்துவ மாவது பிரமாதத்தால் உயிர்க்குளதாகத் தோன்றும் உருவம் பற்றிய தனித்தன்மை. இதன் கருத்தை

சத்தியினாற் றாமியங்குந் தன்மையுண ராதகில
சித்திகணாஞ் சேர்வமெனச் சேட்டிக்கும் - பித்தர்கூத்
தென்னை யெழுப்பிவிடி னெம்மட்டித் தெவ்வரெனச்
சொன்னமுட வன்கதையின் சோடு.

(உள்ளது நாற்பது - அநுபந்தம்)

என்பதன் பொருளோ டொருபுடை யொப்பு நோக்கித் தெளிக.

**124. ஆன்றநிரா காரஞா னான்மபர நிட்டனே**
**தோன்றுபல சித்தர் தொகையாவான் - சான்றெனா**
**நிற்கு மவனவே நேரும்பல் சித்திகளும்**
**தெக்கணா மூர்த்தியவன் றேர்.**

ஆன்ற நிராகார ஞானான்ம பர நிட்டனே தோன்று பல சித்தர் தொகை ஆவான் சான்று எனா நிற்கும் அவனவே நேரும் பல் சித்திகளும் தெக்கணாமூர்த்தி அவன் தேர்.

**ஆன்ற-மேலான, மாட்சிமை பொருந்திய; தொகை-தொகுக்கப்பட்ட ஒன்று; சான்றெனா-சாட்சியாக; அவனவே-அவனதே.**

வேரோடழிந்த வியத்தித்துவத்தான் மேம்பட்டு விளங்கும் அகண்டான்ம ஞான நிட்டனே அவ் வியத்தித்துவத்தால் வெவ்வேறாகத் தோன்றும் அநேக சித்தரினமாவான். அவர்களால் நிகழ்வனவாகத் தோன்றும் அநேக சித்திகளும், அவ்வெவற்றுக்குஞ் சான்றுமாத்திரமாய்த் தன்னுண்மை நிலையி லூன்றப்பெற்ற அவனுடையனவேயாம். அவன் தக்ஷிணாமூர்த்தியாம்.

**வி-ரை:-** அணிமாதி யட்டமாசித்திகளுமாற்ற வல்ல அந்நிய சித்தரனைவரும் ஞானசித்தனாம் ஆன்மநிட்டனெதிரில் ஆடமாட்டாதடங்கி நிற்றலால் அவர்களெல்லா மவனிடத்தைக்கிய மெனவும், எல்லா சித்திகளுமிறைவனுடை யனவே யாதலால் அவையாவும் அப்பிலுப்பென அவனோ டிரண்டறக்கலந்த அவனுடையனவாகவும் உபசாரத்தாலன்றி உண்மையாகவே கூறினார். சாமானியர் கருதுமாறு அவன் தனிப்புருடனல்லனென்பதாம்.

## 13. பொய்யுறவுத்திறன்

***(1) இழிவுடல்யா னென்ன லிகந்திடுக வென்றும்***
***ஒழிவிலின் பாந்தன்னை யோர்க - அழியும்***
***உடலோம்ப லோடுதனை யோரவுனல் யாறு***
***கடக்கக் கராப்புணைகொண் டற்று. - பகவான்.***

இழிவு உடல் யான் என்னல் இகந்திடுக என்றும் ஒழிவு இல் இன்பாம் தன்னை ஓர்க. அழியும் உடல் ஓம்பலோடு தனை ஓர உனல் யாறு கடக்கக் கராப் புணை கொண்டு அற்று.

**இகந்திடுக-விட்டொழிக; ஓம்பல்-போஷித்தல்; ஓர-உணர; உனல்-எண்ணல்; கரா-முதலை; புணை-தெப்பம்; அற்று-போன்றது.**

**125. முதலையைக் கட்டையா முன்னிப் புனற்கு**
**மதலையாக் கொண்டுகைத்தான் மானும் - குதலை**
**உடன்மல்கு மார்த்தியராய்த் தம்முயிரைக் காண**
**உடன்முயல்வ தாவுரைப்பார் மாண்பு.**

முதலையைக் கட்டையா முன்னிப் புனற்கு மதலையாக் கொண்டு உகைத்தான் மானும் குதலை உடல் மல்கும் ஆர்த்தியராய்த் தம் உயிரைக் காண உடன் முயல்வதா உரைப்பார் மாண்பு.

**முன்னி-எண்ணிக்கொண்டு; புனற்கு-ஆற்றுக்கு; மதலை-தெப்பம்; உகைத்தான்-செலுத்தினான்; மானும்-போலும்; குதலை-அற்பமான; மல்கும்-நிறைந்த; ஆர்த்தி-ஆசையுள்ளவர்கள்; உயிர்-ஆன்மா.**

## 126. வாக்குமன மெட்டாத வாய்மையறி வானந்தச்
## சூக்குமமே யெண்ணாது தூலமாம் - யாக்கைத்
## தொழிலுக் குழைத்தல் துலாமிதித்துத் தண்ணீர்
## விழலுக் கிறைத்து விடல்.

வாக்கு மனம் எட்டாத வாய்மை அறிவு ஆனந்தச் சூக்குமமே எண்ணாது தூலம் ஆம் யாக்கைத் தொழிலுக்கு உழைத்தல் துலா மிதித்துத் தண்ணீர் விழலுக்கு இறைத்து விடல்.

**துலா-ஏற்றம்; விழல்-ஒருவகைப் புல்.**

சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாய அதிநுட்பமும் உண்மை யுணர் வின்ப வடிவுமான ஆன்ம சொரூபத்தை அதன்கட் பயிலு நிட்டை வாயிலாய் அநுசந்தானஞ் செய்யப் பாடுபடாது மிகத் திட்பமும் அநித்த ஜடதுக்கமுமான உடலை யோம்பும் தொழிற்கண் அதுவே யுறுதிப் பொருள் போன்று வாணாள் வீணாளாக வுழைத்தல் செந்நெற் பயிர் செழிக்கச் சிறிதும் பாடுபடாது விழல் விளைய உடல் வருந்தத் துலா மிதித்துத் தண்ணீரிறைக்கும் சடமதியாம்.

## 127. அகந்தைமனப் பான்மைசே ரற்பவுயிர் வாழ்க்கை
## யுகந்தார் மகத்தா வுளத்து - முகந்துகொள
## எல்லையில்பே ரின்ப வியற்பரவாழ் வுள்ளதனை
## இல்லையே போலவிகந் தார்.

அகந்தை மனப் பான்மை சேர் அற்ப உயிர் வாழ்க்கை உகந்தார் மகத்தா உளத்து முகந்து கொள எல்லை இல் பேரின்ப இயல் பரவாழ்வு உள்ளதனை இல்லையே போல இகந்தார்.

**உகந்தார்-மேற்கொண்டவர்; முகந்துகொள-அனுபவிக்க; இயல்-சத்; இகந்தார்-துறந்தார்.**

## 128. எதிர்ந்தவுல கேதப்பா டெய்துவித்த லெண்ணா
## திதந்தருமெய் யாப்பற்றி யிட்டார் - மிதந்த
## உளியம் புணையெனக்கொண் டூர்ந்தாற்போ லாழ்ந்து
## விளிவர் பிறவி வெளத்து.

எதிர்ந்த உலகு ஏதப்பாடு எய்துவித்தல் எண்ணாது இதம் தரு மெய்யாப் பற்றியிட்டார் மிதந்த உளியம் புணை எனக்கொண்டு ஊர்ந்தால்போல் ஆழ்ந்து விளிவர் பிறவி வெளத்து.

**எதிர்ந்த-தன்முன் இருக்கின்ற; ஏதப்பாடு-கேடு;**
**பற்றியிட்டார்-பற்றிக்கொண்டவர்கள்; உளியம்-கரடி; புணை-தெப்பம்;**
**ஊர்ந்தால்-மிதந்துசென்றால்; விளிவர்-அழிவர்.**

## 129. வாகனத்தின் போக்கு வரத்தைத் தமதுகம
## னாகமன மாமயங்கி யாய்வதுபோற் - றேகவுயிர்
## மேவுசமு சாரமுந்தம் மேலதாக் கொண்டவல
## மேவுவர்தம் மெய்யுணரா தார்.

வாகனத்தின் போக்கு வரத்தைத் தமது கமன ஆகமனமா மயங்கி ஆய்வது போல் தேக உயிர் மேவு சமுசாரமும் தம் மேலதாக் கொண்டு அவலம் மேவுவர் தம் மெய் உணராதார்.

**கமனம்-போதல்; ஆகமனம்-வருதல்; ஆய்வது-கருதுவது; தேகவுயிர்-அகந்தை;**
**மேவு-சேர்கின்ற; தம்மேலதா-தம்மேல் வந்துள்ளதாக; அவலம்-துன்பம்;**
**மேவுவர்-அடைவர்.**

தம்மெய் யுணராதவர், தாம் பந்தம் அற அனைத்தையும் அறியும் அறிவாக விருந்தும், சின்னா பின்ன அநுபவங்கொண்ட மனமே தாமென இடருறுதல், ஒருவன் தேகாத்மபுத்தியால், வாகனங்கள் தனக்கயலான தேகத்தை அங்குமிங்கும் சேர்த்த விடத்து, நான் வந்தேன், போனேன் என்று மருளுறுத லொக்குமென்றார்.

## 130. உடம்போ டுலகை யுறுதியெனப் பற்றி
## மடம்படுவோன் சாந்தி மடுத்தல் - மடம்பேர்ந்
## துடும்புபோன் றுள்ளத் துயிர்நிலையுற் றோவான்
## இடும்பையுற லென்று மில.

உடம்போடு உலகை உறுதி எனப் பற்றி மடம் படுவோன் சாந்தி மடுத்தல் மடம் பேர்ந்து உடும்பு போன்று உள்ளத்து உயிர்நிலை உற்று ஓவான் இடும்பை உறல் என்றும் இல.

**மடம்படுவோன் - அறிவற்றவன்; மடுத்தல் - அடைதல்; பேர்ந்து-விட்டு;**
**ஓவான்-விட்டு நீங்காதவன்; இடும்பை-துன்பம்; உறல்-அடைதல்.**

## 131. அகந்தைவாழ் வான வசற்கா ரியத்தை
## மகிழ்ந்தவுயிர் சிந்தைமிக மாழ்கும் - அகந்தைதீர்
## ஆன்ம சொரூபவாழ் வானவருட் சிற்பரமே
## தான்மகிழ வேண்டுவது தான்.

அகந்தை வாழ்வு ஆன அசத்காரியத்தை மகிழ்ந்த உயிர் சிந்தை மிக மாழ்கும் அகந்தை தீர் ஆன்ம சொரூப வாழ்வு ஆன அருள் சித்பரமே தான் மகிழ வேண்டுவது தான்.

**உயிர்-மக்கள்; மாழ்கும்-கெடும்; தீர்-அற்ற; தான்-ஒருவன்.**

# 14. பண்டிதத்திறன்

## 132. பண்டிதனென் றென்னைப் பலரழைப்ப தென்னோமெய்ப் பண்டிதனுக் குற்றகுறிப் பண்புதான் - பண்டுமுதல் ஆய்ந்தகலை யாவுமறி யாமையாய்ப் போகவவை ஆய்ந்தவனை யாயு மறிவு.

பண்டிதன் என்று என்னைப் பலர் அழைப்பது என்னோ மெய்ப் பண்டிதனுக்கு உற்ற குறிப் பண்பு தான் பண்டுமுதல் ஆய்ந்த கலை யாவும் அறியாமையாய்ப் போக அவை ஆய்ந்தவனை ஆயும் அறிவு.

**உற்ற-உள்ள; குறிப்பண்பு-அடையாளத் தன்மை; பண்டுமுதல்-வெகுகாலமாக; ஆயும் அறிவு-விசாரம் அல்லது விசாரத்தால் பெற்ற ஞானம்.**

## 133. ஆய்ந்தவனா ரென்றுளம்புக் காய்வதனா லவ்வகந்தை ஓய்ந்தொழிவ தாலவ் வுணர்வழிய - மீந்ததன்மெய் கண்டவனே யன்றித்தற் காணா வகங்காரி பண்டிதனா மாறென் பகர்.

ஆய்ந்தவன் ஆர் என்று உளம்புக்கு ஆய்வதனால் அவ்வகந்தை ஓய்ந்து ஒழிவதால் அவ் உணர்வு அழிய மீந்த தன் மெய் கண்டவனே அன்றித் தன் காணா அகங்காரி பண்டிதன் ஆம் ஆறு என் பகர்.

**ஆறு என்-எவ்வாறு.**

**உரை (132, 133 பாடல்கள்) :** பயின்றார் பலரும் என்னைப் பண்டித னென்றழைப்பதேனோ? உண்மையான பண்டிதனுக் கின்றியமையாக் குறியாயிருக்க வேண்டுவதா மிலக்கணந்தான், ஆதிமுதல் தனக்கயலாக் கற்றறிந்த கலை ஞானங்களெல்லாம் கல்லாமையாயொழிய அறியும் வினை முதலாயிருந்து அவற்றையெல்லா மறிந்த தன்னைத் தானா ரென்றறியு மறிவாம். அறிந்தவனாரெனத் தன்னகத்திலாழ்ந் தாராய்வதனால், அறிந்தவன் நான் என்னுமகந்தை ஆண்டே தலைதூக்கா தோய்ந் தொழிவதாலே, அதனோடு, அதனாலுணரப்பட்ட அக்கலைஞானவுணர்ச்சியும் உடன் கழிய, அதன் பின்னெஞ்சி நின்ற தன்னுண்மை நிலையைத் தப்பாதுள்ளபடி யறிந்தவனேயன்றி அவ்வான்ம சொரூபத்தை யறியா வகங்காரி பண்டிதனாமாறென்னோ?

## 134. அறிந்தவைகள் யாவு மறமறக்கக் கற்றுட்
## செறிந்தவரே யுண்மை தெளிந்தார் - மறந்தவற்றை
## ஞாபகத்துக் குய்ப்பார் நலிந்து கலங்குவார்
## பாவகமாம் பொய்க்கே பதைத்து.

அறிந்தவைகள் யாவும் அற மறக்கக் கற்று உள் செறிந்தவரே உண்மை தெளிந்தார் மறந்தவற்றை ஞாபகத்துக்கு உய்ப்பார் நலிந்து கலங்குவார் பாவகம் ஆம் பொய்க்கே பதைத்து.

**அற-முற்றும்; செறிந்தவர்-ஸ்திரமாயிருப்பவர்; உய்ப்பார்-கொண்டுவருபவர்; நலிந்து-கஷ்டமடைந்து; பாவகம்-அக்கினி அல்லது பாவனை; பொய்க்கே-பொய்யாகிய சமுசாரத்திலே.**

சுட்டறிவா லறிந்தவை யனைத்தும் அறவே மறக்குமாறறிந்து, ஆன்ம சோதனையா லகத்துளடங்கப்பெற்றாரே உண்மை யுணர்ந்தோராவர். அவ்வாறன்றி, மறந்தொழிந்த விடயங்களை ஓயா தெண்ணியெண்ணி ஞாபகத்துக்குக் கொணர்வார், கேவலம் பாவனாமயமாம் சமுசாரத்தின் கண்ணே படிந்து வாளா மனம் பதைத்து வருந்திக் கலங்குவர்.

**வி-ரை:-** நினைப்பு மறப்புக்குத் தனை விடயமாக்கத் தானிரண் டில்லாத் தன்மையால், பாரமார்த்திகத்தில் அச்சுட்டறிவுக் கவகாசமே யின்றாதலோடு, மாயமா முலகியலில் பொருள் போற் கருதி யயலைச் சுட்டி யலையு மறிவே, உள்ளொடுங்கி யுணரும் உண்மை விளக்கத்துக்கு உற்றதோர் தடையா மாதலின், அதனழிவே யாற்றற்பால தென்பதாம். அகமுக விசாரத்தால், ‘அறிபவன் நான்’ என்னு மகங்காரமழியவே அதனைப்பற்றியெழும் நினைப்பு மறப்பெண்ணங்களும் உயிர்த்தலற்று உடனழியு மென்பதாம்.

## 135. எலாந்தேர்ந் திறுமாக்கு மேழை மனுசா
## எலாந்தேர்ந்த நீயா ரெனுங்கால் - அலமந்து
## வெட்கித் தலைகுனியு மேதா யறவிளிக
## மட்கிமட மாமுன் மதி.

எலாம் தேர்ந்து இறுமாக்கும் ஏழை மனுசா எலாம் தேர்ந்த நீ யார் எனுங்கால் அலமந்து வெட்கித் தலை குனியும் மேதாய் அற விளிக மட்கி மடம் ஆம் உன் மதி.

**ஏழை மனுசா-வெற்று மனிதா; அலமந்து-புத்தி தடுமாறி; மேதாய்-வித்துவானே; விளிக-ஒழிந்து போகட்டும்; மட்கி-மண்ணாகி மடிந்து.**

உன்னை யொழியப் பிறவற்றை யெல்லாம் பெரிதுமுணர்ந்து ‘‘என்னை நிகர்ப்பாரெவர் ?’’ என வீண் செருக்குற்ற வெற்று மனிதா, உன்னை நோக்கி ‘‘அவ்வனைத்து மறிந்த நீயாவனோ?’’ என, ஆன்றமைந்த அறிஞனான ஆன்மநிட்டன் வினாவுங்கால் மதிமயங்கி, அவ்வினாவுக்கு விடை பகரமாட்டாமையின் வெட்குற்று, நிமிர்ந்த தலை குப்புறக் குனியும் மேதாய், மூடமா முன்னறிவு மண்ணாய்ப் பொன்றக் கெடுக.

**வி-ரை :-** புறத்தே யனைத்து மறியு மகன்ற வறிவு, உற வொடுங்கியுள்ளாழ வேண்டியிருத்தலின், அதன்கட் பயின்ற நுண்ணறிவு போல ஆன்ம விசாரத்திற் சற்றும் பயன்படா தென்பதாம். மேதை என்றது இகழ்ச்சிக் குறிப்பு. மேதை-பேரறிஞன். ''தன்னையறிதலின்றிப் பின்னையெதறி கிலென், தன்னை யறிந்திடிற் பின் னென்னை யுளதறிய'' -ஆன்ம வித்தை.

**136. ஐயந் திரிபுவடி வாய மயலுணர்ச்சி**
**நையுற் றறத்தெளிமெய்ஞ் ஞானத்தாற் - பொய்தீர்**
**நிலையான தன்மய நிட்டா பரனே**
**கலைஞான பாரங் கதன்.**

ஐயம் திரிபு வடிவு ஆய மயல் உணர்ச்சி நை உற்று அறத்தெளி மெய்ஞ் ஞானத்தால் பொய் தீர் நிலையான தன்மய நிட்டா பரனே கலைஞான பாரங்கதன்.

**திரிபு-ஒன்றை மற்றொன்றாய் அறிதல், விபரீதம்; ஆய-உள்ள; நையுற்று-அழிந்து; அறத்தெளி-முற்றும் தெளிந்த; பாரங்கதன்-கரைகண்டவன்.**

**137. யானென்னுந் தன்மை யியற்பெயரோ டேய்ந்தவினை**
**யான விருத்த லரும்பொருளை - நானின்றாய்**
**உள்ளபடி யாவ னுணர்கிற்ப னன்னவனே**
**கள்ளமறு மெய்ப்புலவன் காண்.**

யான் என்னும் தன்மை இயற் பெயரோடு ஏய்ந்த வினையான இருத்தல் அரும் பொருளை நான் இன்றாய் உள்ளபடி யாவன் உணர்கிற்பன் அன்னவனே கள்ளம் அறு மெய்ப்புலவன் காண்.

**ஏய்ந்த-கூடி விளங்கும்; அரும் பொருள்-அரிய அர்த்தத்தை; நான் இன்றாய்-அகந்தையற்று; கள்ளம் - மாயை.**

## 15. கவித்திறன்

**138. நரத்துதியே பாடுந்தன் னாப்புன்மை யெண்ணிக்**
**கருத்தறவே மாழ்கிக் கரைந்து - பரத்திறமே**
**பாடுவே னூத்தைநரம் பாடேன்மற் றென்றுறுதிப்**
**பீடுபெற வாழ்க கவி.**

நரத் துதியே பாடும் தன் நாப் புன்மை எண்ணிக் கருத்து அறவே மாழ்கிக் கரைந்து பரத்திறமே பாடுவேன் ஊத்தை நரம் பாடேன் மற்று என்று உறுதிப் பீடு பெற வாழ்க கவி.

**மாழ்கி-மயங்கி; பரத்திறம்-பரமனது பெருமை; பீடு-சிறப்பு.**

கவியின் அழகு யாதெனின், நரத்துதி பாடிய தன் நாவின் புன்மைக் கிரங்கி, இனிப் பரத் திறமே பாடுவனென உறுதி பெறலே.

**139. ஆண்டா னருளா லடைந்தகவி வாணியையவ்
வாண்டா னடிக்குரிமை யாக்காது - தீண்டா
நரத்தைப் புகழ்வார்தந் நாமகளை யந்தோ
பரத்தைத் தொழிற்படுப் பார்.**

ஆண்டான் அருளால் அடைந்த கவி வாணியை அவ் ஆண்டான் அடிக்கு உரிமை ஆக்காது தீண்டா நரத்தைப் புகழ்வார் தம் நா மகளை அந்தோ பரத்தைத் தொழில் படுப்பார்.

**தீண்டா-தொடுதற்குக்கூடத் தகுதியற்ற; நாமகள்- நாவன்மையாகிய பெண், சரசுவதி; படுப்பார்-உட்படுத்துவோர்.**

''யாமோதிய கல்வியும் எம்மறிவும் தாமேபெற வேலவர் தந்ததனால்'' என்ற அருணகிரியாரின் அருமை மொழி நோக்குக. ஆண்டா னருளா லடைந்த கவி வாணியை ஆண்டான் புகழ்க்கே யர்ப்பணஞ் செய்யாது, நரஸ்துதி செய்வோர், தாயாகிய அந்நாமகளைப் பரத்தைத் தொழில் புகுத்துகின்றாரென இடித்துக் கூறினர்.

**140. நானென் பதனையக நாட்டத்தாற் றானல்லா
தானவன்ன கோசமுத லைந்தனுளும் - தானணுக
ஒண்ணா தொழித்தமைந்த வுள்ளத் தெளிவினின்றே
உண்மைக் கவித்துவமுண் டாம்.**

நான் என்பதனை அக நாட்டத்தால் தான் அல்லாது ஆன அன்ன கோசம் முதல் ஐந்தன் உளும் தான் அணுக ஒண்ணாது ஒழித்து அமைந்த உள்ளத் தெளிவில் நின்றே உண்மைக் கவித்துவம் உண்டாம்.

**அணுக ஒண்ணாது-நெருங்காது.**

## 16. கலையவலத்திறன்

**141. காட்டுபல நூலுங் கருத்தடக்க லேசிறந்த
வீட்டுநெறி யென்ன விளம்பலால் - நாட்டும்
கலையிதய மஃதேயாக் கண்டுணர்ந்த பின்னர்ப்
பலகலையா லென்னோ பயன்.**

காட்டு பல நூலும் கருத்து அடக்கலே சிறந்த வீட்டு நெறி என்ன விளம்பலால் நாட்டும் கலை இதயம் அஃதேயாக் கண்டு உணர்ந்த பின்னர்ப் பல கலையால் என்னோ பயன்.

**காட்டு-வழிகாட்டுகின்ற; வீட்டுநெறி-மோக்ஷ மார்க்கம்; விளம்பலால்-சொல்லுவதால்; நாட்டும்-நிலைநிறுத்தும்.**

மனமடக்கலே சிறந்த முக்தியுபாயமென உய்தியுணர்த்தும் அறிவுநூலெல்லாம் ஒப்பக் கூறலால், அறிஞரால் வற்புறுத்தப்படுஞ் சுருதியினுள்ளக்கிடக்கை அதுவேயாக ஒருவாற்றா லாய்ந்தறிந்த பின்னர், அதன் கண்ணே தம் முழு முயற்சியு மொருங்கு செலுத்தாது, பலநூல்களையும் மேன்மேற் கற்றுக்கொண்டே போதலால் ஒருவனடையும் பயன் யாதோ ?

## 142. ஆத்திகவாழ்க் கைக்கே யடாநடையார் வேதாந்த
## சாத்திரவா ராய்ச்சித் தலைப்பாட்டாற் - சீர்த்த
## விசுத்தமா நின்றொளிரவ் வேதாந்தந் தன்னை
## யசுத்தப் படுத்துகின் றார்.

ஆத்திக வாழ்க்கைக்கே அடா நடையார் வேதாந்த சாத்திர ஆராய்ச்சித் தலைப்பாட்டால் சீர்த்த விசுத்தமா நின்று ஒளிர் அவ்வேதாந்தம் தன்னை அசுத்தப் படுத்துகின்றார்.

**அடா நடையார்-தகுதியற்ற நடத்தை கொண்டவர்கள்;**
**தலைப்பாட்டால்-ஈடுபடுதலால்; சீர்த்த-பரம.**

ஆத்திக வாழ்க்கைக்கே அருகதையற்ற இயல்பினர் மிகநுட்பமான வேதாந்த ஆராய்ச்சியில் தலைப்படலால், அப்பரமபாவனமான ஞானத் தொகுதியைத் தம் போலிவேதாந்தத்தால் அசுத்தப்படுத்துகின்றனர். ஞான மார்க்கத்தில் மிகத்தூய்மை வேண்டுமென்பது கருத்து.

## 143. ஆய திருவருண்முன் னாக்கொண் டகங்காரம்
## ஓயவுளத் தெய்தற் குதவாதேல் - மாயப்
## புலையாடு மாந்தர் பொறுக்குங் கலையாட்
## டலைதாடி யன்றிமற்றென் னாம்.

ஆய திருவருள் முன்னாக் கொண்டு அகங்காரம் ஓய உளத்து எய்தற்கு உதவாதேல் மாயப் புலை ஆடு மாந்தர் பொறுக்கும் கலை ஆட்டு அலை தாடி அன்றி மற்று என் ஆம்.

**ஆய-சித்தமாயிருக்கின்ற; முன்னாக் கொண்டு-முன்னிட்டுக் கொண்டு;**
**புலையாடு-புலையுடலை 'நான்' என்று எண்ணி நடக்கின்ற; பொறுக்கும்- கற்றுச் சுமக்கும்.**

திருவருளை முன்னிட்டுக் கொண்டு, அகந்தை யொழிய அதன் மூலமாமிதயத்தில் தாஞ் சென்றடைதற் குதவாதாயின், தம்மறிவுக்குச் சுமையாய் மனிதர் சுமக்குங் கலை ஞானம் ஆட்டின் அலை தாடியன்றி வேறன்று.

**வி-ரை:-** ஆயதிருவருள்-எவ்வுயிர்க்கும் என்றென்றும் இயல்பாய்ச் சுரப்பதாய இறைவன் றிருவருள். மாயப்புலையாடு மாந்தர்- மாயமான மாம்ச பிண்டமா முடல்மயமா வொழுகும் மனிதர். கலை-கலை ஞானத்துக் காகு பெயர். உளத்தெய்தற் குதவாதாயின் அந்த ஞானம் முற்றும் வீணென்பார், ''ஆட்டலை

தாடி'' யென்றார். ஆட்டலை தாடி-ஆட்டின் மிடற்றில் அமையா தலைந்தாடும் தாடி. அஜாகளஸ்தம் என்பர் வடநூலார். உளத்தெய்துங்காறும் அகங்காரமோயாமையின் அகங்காரமோய வுளத்தெய்தற்கென்றும், ஜீவபோதத்தை முன்னாக் கொண்டுளத் தெய்தச் செய்யும் முயற்சி முற்றும் அவலமாமாதலின் திருவருள் முன்னாக் கொண்டுளத் தெய்தற் கென்றும் கூறினார்.

## 144. எந்த வுபாயத்தா லேனு மனமிறந்து
## சொந்த சொரூபத் துலக்கத்தாற் - சிந்தைக்
## கலக்கமறி னன்றிவெறுங் கல்வியான் மட்டும்
## மலக்கமறல் வாசி மருப்பு.

எந்த உபாயத்தாலேனும் மனம் இறந்து சொந்த சொரூபத் துலக்கத்தால் சிந்தைக் கலக்கம் அறின் அன்றி வெறும் கல்வியால் மட்டும் மலக்கம் அறல் வாசி மருப்பு.

**துலக்கம்-விளக்கம்; மலக்கம்-மயக்கம்; வாசி மருப்பு-குதிரைக் கொம்பு.**

## 145. காற்றெனவென் றென்றுங் கலங்கித் தடுமாறும்
## ஊற்றமில்விஞ் ஞான வுயிருக்கவ் - வூற்றுத்
## தலையா மிதயமுப சாந்தநிலை யல்லாற்
## கலையார வாரக் களம்.

காற்று என என்றென்றும் கலங்கித் தடுமாறும் ஊற்றம் இல் விஞ்ஞான உயிருக்கு அவ் ஊற்றுத் தலை ஆம் இதயம் உபசாந்தநிலை அல்லால் கலை ஆரவாரக் களம்.

**ஊற்றம்-உறுதி; விஞ்ஞான உயிர்-சிதாபாசனாகிய ஜீவன்; ஊற்றுத்தலை-உற்பத்தி ஸ்தானம், பிறப்பிடம்; ஆரவாரக் களம்-இரைச்சல் நிறைந்த சந்தைக்களம்.**

## 146. விசாலவே தாகமத்தை விட்டுச்சச் சித்தே
## உசாவுதுணை யாவகத்து ளோரும் - விசார
## விசாரதரே யுண்மை விளக்கத்தால் வேரோ
## டசாரவிட யாசையறுப் பார்.

விசால வேத ஆகமத்தை விட்டுச் சத்சித்தே உசாவு துணையா அகத்துள் ஓரும் விசார விசாரதரே உண்மை விளக்கத்தால் வேரோடு அசார விடய ஆசை அறுப்பார்.

**சச்சித்து-ஆன்மா; உசாவு-விசாரித்தல்; துணை-சாதனை; ஓரும்-அறிகின்ற; விசாரதன்-வல்லுநன்; அசார-சாரமற்ற.**

மிகவிரிந்த வேதங்களையும், ஆகமங்களையும் அறவே விடுத்து தன்னுள் ஆழும் விசாரத்திலமைவதே பயன். என்னை ? அவை தனக்குப் புறம்பா யிருத்தலாலும், அவைகளின் சாரம் தன் சொரூபப் பிராப்தியே என்பதாலும் அறிக. தன்னைத் தான் காணல் வேண்டின் அன்னியத்தை நாடிப் பயனிலை; தன்னுள்ளேயே சொரூபம் பிராப்தியாதலின். அவ்வாறு விசாரத்தால் ஆன்மலாபம் அடைந்தவரே உண்மையில் ஆசையை வேருடன் வென்றவர் ஆவர்.

**147. குற்றமறு ஞானங் குலவுநூ லாமென்னக்
கற்றலுறு மார்வத்தாற் கற்றாலும் - கற்றுச்
சிறந்தகலை யெல்லாஞ் செறிவுமுய லுங்கால்
மறந்தகல வேண்டி வரும்.**

குற்றம் அறு ஞானம் குலவு நூல் ஆம் என்னக் கற்றல் உறும் ஆர்வத்தால் கற்றாலும் கற்றுச் சிறந்த கலை எல்லாம் செறிவு முயலுங்கால் மறந்து அகல வேண்டி வரும்.

**குலவு-பொருந்திய; கற்றல் உறும்-கற்கின்ற; செறிவு-நிஷ்டை.**

அறிவு விளங்கற்காதாரமாய நூல்கள் கற்கக்கடவனவேயா மென்று தனக்குக் கல்வியின் மீதுள்ள காதலால் எத்துணை யூக்கமா யொருவன் கற்கினும் பரிபாகப்பட்டு மூலத்து ளொடுங்கலைப் பின்னர் முயலும் பொழுது, முன்னர்த்தானரிதிற் கற்று மேம்பட்ட கலை ஞான மெல்லாம் முற்றும் மறந்தொழிய வேண்டியே நேரும்.

**வி-ரை:-** குற்றமறு ஞானமென்றேனும் குற்றமறு நூலென்றேனுங் கூட்டுக.

## 17. வேதாந்தவுண்மைத்திறன்

**148. புலவிடய மன்றிப் பொருள்வேறு தேறார்
கிலமடையும் புந்திக் கிறுக்கர் - புலத்தின்
திறத்துவிரா கத்தாற் செழிப்புறுஞா னத்தை
வறட்டுவே தாந்தமென் பார்.**

புல விடயம் அன்றிப் பொருள் வேறு தேறார் கிலம் அடையும் புந்திக் கிறுக்கர் புலத்தின் திறத்து விராகத்தால் செழிப்பு உறு ஞானத்தை வறட்டு வேதாந்தம் என்பார்.

**புலவிடயம்-இந்திரிய விஷயங்கள்; கிலம்-அழிவு; புந்திக்கிறுக்கர்-கிறுக்குப் புத்தியுடையோர்.**

**149. வேட்கையற விட்டோர்க்கே வேதாந்தங் கைகூடும்
வேட்கையுளார்க் கஃது வெகுதூரம் - வேட்கையுளார்
வேட்கையிலா வீசன்பால் வேட்கையால் வேற்றுமயல்
வேட்கையற நோற்றல் விதி.**

வேட்கை அற விட்டோர்க்கே வேதாந்தம் கைகூடும் வேட்கை உளார்க்கு அஃது வெகு தூரம் வேட்கை உளார் வேட்கை இலா ஈசன்பால் வேட்கையால் வேற்று மயல் வேட்கை அற நோற்றல் விதி.

**வேற்று மயல் வேட்கை -மயக்கந்தரும் இதர ஆசைகள்; நோற்றல்-தவமியற்றல்; விதி-செய்யவேண்டியது.**

## 18. ஊழ்நடைத்திறன்

**150. ஊழேகூ ழாக வுணர்ந்தோ ருளங்கலங்கிக்
கூழுக்கா வென்றுங் குலைவுறார் - கூழதனை
வேண்டினும் வேண்டா விடினு மெவர்க்குமவ்
வூண்டா னொழியா துணர்.**

ஊழே கூழ் ஆக உணர்ந்தோர் உளம் கலங்கிக் கூழுக்கா என்றும் குலைவு உறார் கூழ் அதனை வேண்டினும் வேண்டா விடினும் எவர்க்கும் அவ் ஊண் தான் ஒழியாது உணர்.

**ஊழ்-பிராரப்தம்; கூழ்-புஜிப்பு, அனுபவிக்கும் பொருள்கள்; குலைவு-கவலை; ஊண்-புஜிப்பு; ஒழியாது-தவறாது.**

ஊழே ஆகாரமாக அமைவதை அறிந்தோன், பிராரத்தம் போஷிக்கும் என்ற திடநிச்சயத்தால், உணவு தேட உள்ளம் கலங்கி அலையமாட்டான். தான் வேண்டினும் வேண்டாவிடினும் ஊழால் விளையும் போகங்கள் அமைந்தே தீருமென்றார். இதனால், தள்ளல் கொள்ளுதல் இவையிரண்டும் மாயையின் விருத்தி யெனப் புலனாயிற்று.

**151. அவனவ னூழை யவனவ னுண்ணச்
சிவன்கரியாத் தன்னிற் றிகழ்வான் - எவனூழை
யுண்போனாத் தான்பே துறாதுசச் சித்தளவாம்
பண்போ னவனப் பரன்.**

அவன் அவன் ஊழை அவன் அவன் உண்ணச் சிவன் கரியாத் தன்னில் திகழ்வான் எவன் ஊழை உண்போனாத் தான் பேது உறாது சத் சித்து அளவாம் பண்போன் அவன் அப் பரன்.

**உண்போனா-அனுபவிப்போனாக; பேதுறாது-மயங்கி நினையாது; பண்போன்-தன்மையோன்; பரன்-சிவன்.**

சிவமென்ற பரம்பொருள் சாக்ஷிமாத்திரமாய்ப் பிரகாசித்தலின், அந்த சாந்நித்ய அளவிலே, கருமங்கள் நடைபெறுகின்றன. கடவுளுக்குப் பக்ஷபாதம் எள்ளளவுமில்லை. கர்மியாகத் தன்னை யெண்ணிப் பேதுறாமல், எவன் தன்னையும் சித்தின் இயல்பாகக் காண்கிறானோ, அந்த அளவில் அவன் பரனாகவே விளங்குகின்றான்.

## 19. ஊழ்வலித்திறன்

**152. விளக்கடிக்கே நின்று விலகா விருள்போல்
அளக்கருஞா னாசா னடிக்கே - துளக்கமறக்
காத்துமகங் காரமயற் காரிருள்போ காதுடலம்
மூத்துவிளிந் தாலூழ் முறை.**

விளக்கு அடிக்கே நின்று விலகா இருள்போல் அளக்கஅரு ஞான ஆசான் அடிக்கே துளக்கம் அறக் காத்தும் அகங்கார மயல் கார் இருள் போகாது உடலம் மூத்து விளிந்தால் ஊழ் முறை.

**அளக்கரு-காலதேச எல்லைக்குட்படாத; துளக்கம் அற-அசைவு அற; ஊழ்-அபக்குவம்; காரியமான அபக்குவம் ஈண்டுக் காரணமான ஊழாக உபசரித்துக் கூறப்பட்டது.**

விளக்கைச் சூழ்ந்திருந்த விருளும் அதனொளியால் விலகவும், அதனடிக்கண்ணே நின்றதுமட்டும் அதனாலகலாமை போன்று பூரணமான போத குருவைச் சேய்மைக்கணின்ற சீடருமுள்ளத்தா லுபாசித்துய்வாராக, தூலத்தில் அவனடிக்கண்ணே, அவன் சாயையைப் போலத் தாமசைவறக் காக்கப் பெற்றும் மற்றுஞ் சிலர் மட்டும் அவ்வாறகந்தை யிருளகன்று ஞான விருத்தராக நடவாமல் வயோ விருத்தராய் மட்டும் மடிவரேல், அஃது அவரூழ் முறையாம்.

**வி-ரை:-** சொரூபத்தா லகவிருளகற்று மான்ம சூரியனான ஆசான் உண்மையில் உதயாத்தமனமற்ற சிதாகாயமேயாதலால், இடம் பொழு திரண்டாலுமே அளக்கரு ஞானாசானென்றார். அத்தகைய குருவை அதிட்ட வசத்தாற் குறுகினோர் அவனைத் தாமடைந்த கன்மத்தை யயர்ந்து விடாது அல்லும் பகலும் அதுவே கண்ணாய் அவனருளை முன்னிட்டான்ம லாபத்தையடைந்தே தீரவேண்டு மென்பதாம்.

''பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும் - என்னோ
பயனில் பொழுதாக் கழிப்பாரே நல்ல
நயமி லறிவி னவர்'' - நாலடியார்

''பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை'' - குறள்.

## 153. அட்டமா சித்திபர மான்மஞா னம்மிரண்டும் பெட்டவா றொன்றப் பெறாமையென்னோ - சுட்டின் இருவே றுலகத் தியற்கை திருவேறு தெள்ளிய ராதலும் வேறு.

அட்டமா சித்தி பரம ஆன்ம ஞானம் இரண்டும் பெட்டவாறு ஒன்றப் பெறாமை என்னோ சுட்டின் இரு வேறு உலகத்து இயற்கை திரு வேறு தெள்ளியர் ஆதலும் வேறு.

**பெட்டவாறு-விரும்பியவாறு, பேணியவாறு; ஒன்றப் பெறாமை-ஒருங்கே அடையாமற் போதல்; சுட்டின்-காரணம் நோக்குமிடத்து; திரு-ஐஸ்வரியம், அஷ்டசித்தி; தெள்ளிமை-அறிவு, ஆன்ம ஞானம்.**

வேண்டுவோர் வேண்டுமாறு அணிமாதி யட்டமா சித்தியும் சிறந்த ஆன்மஞானமும் இரண்டு மிணை பிரியாது நியமமாகச் சேர்ந்திருக்கப் பெறாத நிமித்த மென்னோ ? காரணங் குறிக்கின், உலகிடத்து மக்கட்கு

ஊழானாகுமியற்கை இருவகைப்படும். ஆகலான் அவர்தாம் சித்திச் செல்வம் படைத்தோராதலும், உண்மையுணர் வுடையோராதலும், இரண்டும் ஒன்றினொன்று வெவ்வேறாம்.

**வி-ரை:-** இருவகையூழும் ஒருவற்கொருங்கு கூடிய வழியல்லது சித்தி ஞானமிரண்டும் ஒன்றுக் கேதுவாவதே மற்றொன்றுக்கு மேதுவாகாமையே அவை ஒன்றினொன்று தனித்தொழியக் காரணம் என்பதாம். இதனால் சிலர் கருதுமாறு சித்தர்க ளெல்லாம் ஞானிகளாகவும், ஞானிகளெல்லாம் சித்தர்களாகவுங்கூட இருக்க வேண்டுமென்றோ அன்றி மற்றுஞ் சிலர் கருதுமாறு அவ்வாறிருக்கக் கூடாதென்றோ, எதற்குமாவசியக மின்மையறிக.

## 20. ஆன்ம சீவ வியற்றிறன்

**154. குட்டிச்சாத் தான்போற் குதுகலித்துக் குத்திரஞ்செய்**
**பட்டியாய்ப் பல்கற் பனைபரப்பிச் - சுட்டித்**
**தெரிந்துழல்கை போலியாஞ் சீவமனோ தன்மம்**
**இருந்தொளிர்கை தன்மெய் யியல்பு.**

குட்டிச் சாத்தான் போல் குதுகலித்துக் குத்திரம் செய் பட்டியாய்ப் பல் கற்பனை பரப்பிச் சுட்டித் தெரிந்து உழல்கை போலியாம் சீவ மனோ தன்மம் இருந்து ஒளிர்கை தன்மெய் இயல்பு.

**குத்திரம் செய்தல்-வஞ்சித்தல்; பட்டியாய்-நெறி நில்லாமல்;**
**சுட்டித் தெரிந்து-எதிரிட்டறிந்து.**

ஒன்றை ஒன்றாக அறிவதும், பின்னப்படுவதும், உழல்வதுமே தர்மமாகக் கொண்ட ஜீவபோதம் உண்மையில் நம் இயல்பன்று. அவ்வாறு எண்ணுவதே மாயாவிகாரம். என்றும் நினைவின்றி இருப்பதாக ஒளிர்வதே நம் சொரூபமாதலின், ஜீவபோதம் நமதன்று எனவொழித்துச் சுத்த சிவமாகவே அமரல் வேண்டும்.

## 21. வாதனைவலித்திறன்

**155. ஆற்றங் கரையென்னு மான்மநிலை நிற்கத்தாம்**
**ஆற்றாத சிற்சிலவா மாருயிரே - ஆற்று**
**மறிபுனலாம் வாழ்க்கையிடை வாசச் சிறாரால்**
**எறியுண் டிடர்ப்படு வார்.**

ஆற்றங்கரை என்னும் ஆன்ம நிலை நிற்கத் தாம் ஆற்றாத சிற்சில ஆம் ஆர் உயிரே ஆற்று மறிபுனல் ஆம் வாழ்க்கை இடை வாசச் சிறாரால் எறியுண்டு இடர்ப் படுவார்.

**சிற்சிலவாம் ஆருயிர்-சிறிய பிராணிகள்; மறிபுனல்-சுழல்; வாச-வாசனைகளாகிய.**

## 22. அகந்தைமுடித்திறன்

**156. காணுந்தன் மெய்யாங் கனசிதா காயவளம்**
**பேணுங் கருத்துப் பிறிதாகி - ஆணவத்தால்**
**யானென் றெழுந்த விழுக்கே விடயமாத்**
**தானொன் றெதிர்காண் சழக்கு.**

காணும் தன் மெய் ஆம் கன சிதாகாய வளம் பேணும் கருத்துப் பிறிது ஆகி ஆணவத்தால் யான் என்று எழுந்த இழுக்கே விடயமாத் தான் ஒன்று எதிர் காண் சழக்கு.

**பிறிதாகி-மாறுபட்டு; சழக்கு-குறைபாடு.**

**157. விண்மையே போலும் விவிதவிட யங்கண்டு**
**கண்மயங்கிக் காதலாற் காழ்த்திடுமால் - உண்மையே**
**போலாகங் கொண்டு புலையாடு வஞ்சப்பொய்ம்**
**மூலாகங் கார முடிச்சு.**

விண்மையே போலும் விவித விடயம் கண்டு கண்மயங்கிக் காதலால் காழ்த்திடும் ஆல் உண்மையே போல் ஆகம் கொண்டு புலை ஆடு வஞ்சப் பொய்ம் மூல அகங்கார முடிச்சு.

**காழ்த்திடல்-உரப்படுதல்; ஆகம்-தேகம்.**

**158. பாசமிலாத் தன்சொருபப் பான்மைதனைப் பாராத**
**பாசம் படர்ந்தவிழிப் பார்வையே - கோசவுடல்**
**தானாத் தனைமூடித் தன்முன் னுலகமுமாய்த்**
**தானே புலனாகுந் தான்.**

பாசம் இலாத் தன் சொருபப் பான்மைதனைப் பாராத பாசம் படர்ந்த விழிப் பார்வையே கோச உடல் தானாத் தனைமூடித் தன்முன் உலகமும் ஆய்த் தானே புலன் ஆகும் தான்.

**சொருபப் பான்மை-சொரூபத்தின் தன்மை.**

**159. உடலையிட மாக்கொண்ட வூத்தையகங் கார**
**மடமையொடு வாழுமுயிர் வாழ்க்கை - கடவதொரு**
**மெய்ப்பனையா காதுசிவ மிக்கபர மான்மாவிற்**
**கற்பனையாக் காணுங் கனா.**

உடலை இடமாக் கொண்ட ஊத்தை அகங்கார மடமையொடு வாழும் உயிர் வாழ்க்கை கடவது ஒரு மெய்ப்பனை ஆகாது சிவம் மிக்க பரம ஆன்மாவில் கற்பனையாக் காணும் கனா.

**கடவது-ஆவதாம்; மெய்ப்பனை-உண்மை.**

அநாதியாயடைந்த வவிச்சையால் ஒருவன் தன்னுண்மையாக மயங்கும், உடலிடமாயுதித்த ஆணவமலமா மகங்காரம் உண்மையாகவே யுள்ளதொரு பரிச்சின்னா கங்காரமன்று; ஆகாயம் போலனைத்துமா யல்லதுமா மான்ம சைதன்ய பூரணத்தில், அவ்வுண்மையாந் தன்னை மறந்த மறதியால் கற்பனையாய்க் காணுங் கனாத் தோற்றமாம்.

**(குறள் வெண்பா)**

**160. நிழல்களி லொன்றா நிகழ்வதே நானென்**
**றுழல்வுறும் போலி யுயிர்.**

நிழல்களில் ஒன்றா நிகழ்வதே 'நான்' என்று உழல்வு உறும் போலி உயிர்.

**உழல்வுறும்-வியவகரிக்கும்.**

அசைபட நிழல்களில் ஒன்றாக நிகழ்வதாம் 'நான்' என்ற அகங்கார ரூப ஜீவன். அப்போலியுயிர் மறையவும் ஆதார உணர் வொன்றே விகற்பமின்றி யொளிர்வது.

## 23. அகந்தைவலித்திறன்

**(வேறு)**

**161. அகந்தை யழிந்தா லடியரு மாவர்**
**அகந்தை யழிந்தா லறிஞரு மாவர்**
**அகந்தை யழிந்தா லண்ணலு மாவர்**
**அகந்தை யழிந்தா லருள்வெளி யன்றே.**

அகந்தை அழிந்தால் அடியரும் ஆவர் அகந்தை அழிந்தால் அறிஞரும் ஆவர் அகந்தை அழிந்தால் அண்ணலும் ஆவர் அகந்தை அழிந்தால் அருள்வெளி அன்றே.

அகந்தையே பந்தமாதலின், அதன் அழிவொன்றே ஜீவனைச் சிவமாக்குவது. விளக்குவேறு, இருளொழிதல் வேறென்றின்மையின் அகந்தை அழிந்த கணமே அருள்வெளியாம்.

**(நேரிசை வெண்பா)**

**162. ஊன வகந்தை யொழித்தவுர வோனேமெய்**
**யானதுற வோன்மறையோ னாயிடினும் - மானத்**
**துறவோர் மறையோர் சுமக்கு மகந்தை**
**அறவோய்த லம்மா வரிது.**

ஊன அகந்தை ஒழித்த உரவோனே மெய் ஆன துறவோன் மறையோன் ஆயிடினும் மானத் துறவோர் மறையோர் சுமக்கும் அகந்தை அற ஓய்தல் அம்மா அரிது.

**உரவோன்-தீரன்; மான-வர்ணாசிரம அபிமான முள்ள.**

உண்மைப் பிராமணனுந் துறவியும் திடவுணர்வா லுடலகந்தை யொழிந்தவனேயாயினும், வருணப்பிராமணரும், ஆசிரமத் துறவிகளும் மாத்திரம் அவ்வருணாசிரமப் பெருமை பாராட்டித் தந்தலை மிசைத் தாங்குமகங்காரம் பொன்றக் கெடுதல் சற்று மெளிதன்று, மிக வரிதாம்.

**வி-ரை:-** ஊன+அகந்தை : பரிச்சின்னாகங்காரம் என்றுமாம். உடலகந்தை யென்னும் பொருளில் ஊனென்னுஞ் சொல் அகரச்சாரியை பெற்றதாகக் கொள்க.

## 163. அன்னியமா நானா வறிவுற்றோ னான்மறையும்
## பன்னியதான் மாத்திரம்பார்ப் பானாகான் - தன்னிழவு
## பார்ப்பான் பொருளுணரும் பார்ப்பான்மற் றோனுள்ளம்
## வேர்ப்பான் பிறர்பழிக்க வீழ்ந்து.

அன்னியம் ஆம் நானா அறிவு உற்றோன் நால் மறையும் பன்னியதால் மாத்திரம் பார்ப்பான் ஆகான் தன் இழவு பார்ப்பான் பொருள் உணரும் பார்ப்பான் மற்றோன் உள்ளம் வேர்ப்பான் பிறர் பழிக்க வீழ்ந்து.

**நானா-பலவாக; பன்னியதால்-அத்தியயனம் செய்ததால்; தன் இழவு-தன்னிழப்பு, அகங்கார நாசம்; வேர்ப்பான்-புழுங்கித் துன்புறுவான்.**

தனக்கயலாகப் பலவற்றைச் சுட்டியறிவோன், அவ்வாறறிந்து கொண்டிருக்குங்காறும், தான் சாங்கோ பாங்கமாய்ச் செய்த சதுர் வேதாத்தியயனத்தான் மாத்திரம் பிராமணனாய்விட மாட்டான். அவ்வாறத்தியயனஞ் செய்த தன்னகங்கார நாசத்தை யறிந்தவனே உண்மையில் அவ்வேதக் கருத்தறிந்த பிராமணன். அந்நாசத்தை யறியாதோன் தலையினிழிந்த மயிர்போலத் தன்னிலை யினிழிந்து வீழ்ந்து பிறரிகழத் தன்மனங் கொதிப்போனேயாவன்.

**வி-ரை:-** மெய்ப்பொருளறிந்த பிராமணன் என்றுமாம்.

## 164. கண்ணையிடந் தப்புங் கனிவுடைக்கண் ணப்பற்கும்
## கண்ணையிடந் தப்புமது காறுந்தன் - கண்ணின்
## சிறப்பா லுடலகந்தை சேர்ந்ததேற் சற்றஃ
## தறப்பாற லம்மா வரிது.

கண்ணை இடந்து அப்பும் கனிவு உடைக் கண்ணப்பற்கும் கண்ணை இடந்து அப்பும் அது காறும் தன் கண்ணின் சிறப்பால் உடல் அகந்தை சேர்ந்ததேல் சற்று அஃது அறப்பாறல் அம்மா அரிது.

**இடந்து-பறித்து; அறப்பாறல்-அறவே அகற்றுதல்.**

**165. சிவபத்தி மாட்சி செடவுடனா னென்னும்
அவபுத்தி யாலே யழிவைத் - தவிர்ப்பதே
கண்ணா லகங்கரித்த கண்ணப்பன் கண்ணப்பக்
கண்ணுதலோன் கொண்ட கருத்து.**

சிவபத்தி மாட்சி செட உடல் நான் என்னும் அவபுத்தியாலே அழிவைத் தவிர்ப்பதே கண்ணால் அகங்கரித்த கண்ணப்பன் கண் அப்பக் கண் நுதலோன் கொண்ட கருத்து.

**அவம்-கீழ்மை; நுதல்-நெற்றி.**

## 24. அகந்தைநடத்திறன்

**166. மூலமா யேய்ந்த முனைவ னதுதிருக்கூத்
தேலவே காணி னிதுவாகும் - ஞாலத்
தெழுமே லகந்தை யெழுமகில மஃது
விழுமே லனைத்தும் விழும்.**

மூலமாய் ஏய்ந்த முனைவனது திருக்கூத்து ஏலவே காணின் இது ஆகும் ஞாலத்து எழுமேல் அகந்தை எழும் அகிலம் அஃது விழுமேல் அனைத்தும் விழும்.

**ஏய்ந்த-இருக்கிற; முனைவன்-முன்னவன், இறைவன்;
திருக்கூத்து-திருவிளையாடல், நியதி; ஏலவே காணின்-பொருந்துமாறு ஆராய்ந்தால்; ஞாலம்-இங்கே, உலகம்; அகிலம்-எல்லாம்.**

**167. மூவுலகின் கண்ணுமுழு மோகத்தாற் கட்டுண்டு
யாவுயிருந் துன்னகந்தை யேய்வாழ்க்கை - மேவுபிணம்
தீயாடு காட்டிற் சிதையுடலா வேசித்துப்
பேயாட லல்ல பிற.**

மூ உலகின் கண்ணும் முழு மோகத்தால் கட்டுண்டு யா உயிரும் துன் அகந்தை ஏய் வாழ்க்கை மேவு பிணம் தீ ஆடு காட்டில் சிதை உடல் ஆவேசித்துப் பேய் ஆடல் அல்ல பிற.

**யா-எல்லா, எந்த; துன்-பொருந்துகின்ற; ஏய்-அடைகின்ற; பிணம் மேவு தீ-பிணத்திற்கு இடும் தீ; தீயாடு காடு-சுடுகாடு; சிதை உடல்-சிதையின் மேல் வைக்கப்பட்டுள்ள பிணம்.**

**168. இம்மையிலே நல்ல விறும்பூ திதுகேளீர்
செம்மை யுளவகில சிற்சத்தி - தம்மை
நினைப்பித்தா லன்றி நினைப்பியலா மாந்தர்
வினைப்பித்தாற் றுள்ளும் விதம்.**

இம்மையிலே நல்ல இறும்பூது இது கேளீர் செம்மை உள அகில சித்சத்தி தம்மை நினைப்பித்தால் அன்றி நினைப்பு இயலா மாந்தர் வினைப்பித்தால் துள்ளும் விதம்.

**இறும்பூது-அதிசயம்; வினைப்பித்து-கர்த்ருத்வம், கர்மப்பித்து.**

**169. இணக்கமிலாத் தெம்முனையை யானே யெதிர்த்துப்**
**பிணக்குவிய லாகப் ளைந்து - வணக்குவேன்**
**என்னையினித் தூக்கினெவ ரேனுமென வோர்முடவன்**
**சொன்னகதைச் சூதே யது.**

இணக்கம் இலாத் தெம்முனையை யானே எதிர்த்துப் பிணக் குவியல் ஆகப் பிளந்து வணக்குவேன் என்னை இனித் தூக்கின் எவரேனும் என ஓர் முடவன் சொன்ன கதைச் சூதே அது.

**இணக்கம் இலா-அடங்காத; தெம் முனை-பகைவர் சேனை.**

**(2) *சத்தியினற் றாமியங்குந் தன்மையுண ராதகில***
***சித்திகணாஞ் சேர்வமெனச் சேட்டிக்கும் - பித்தர்கூத்***
***தென்னை யெழுப்பிவிடி னெம்மட்டித் தெவ்வரெனச்***
***சொன்னமுட வன்கதையின் சோடு.***

***- பகவான்***

சத்தியினால் தாம் இயங்கும் தன்மை உணராது அகில சித்திகள் நாம் சேர்வம் எனச் சேட்டிக்கும் பித்தர் கூத்து என்னை எழுப்பிவிடின் எம்மட்டு இத் தெவ்வர் எனச் சொன்ன முடவன் கதையின் சோடு.

**தெவ்வர்-பகைவர்; சோடு-சுவடு, அவ்வழிப்பட்டது, அது போன்றது.**

**170. நொய்ய சிறுதுரும்பை நூக்கவோ மற்றெரித்தல்**
**செய்யவோ வாயுவங்கி தேவர்க்கும் - ஐயவோ**
**ஆற்றலிலை யென்றா லகங்கரித்துத் தந்திறலால்**
**ஆற்றுவது யார்க்கெங்ங னாம்.**

நொய்ய சிறு துரும்பை நூக்கவோ மற்று எரித்தல் செய்யவோ வாயு அங்கி தேவர்க்கும் ஐயவோ ஆற்றல் இலை என்றால் அகங்கரித்துத் தம் திறலால் ஆற்றுவது யார்க்கு எங்ஙன் ஆம்.

**நொய்ய-அற்ப, இலேசான; நூக்கல்-அசைத்தல்; அங்கி-அக்கினி.**

இலேசும் அற்பமுமான ஒரு துரும்பை அசைத்துத் தள்ளவோ அன்றித் தகிக்கவோ முறையே வாயு அக்கினியாகிய தேவர்களுக்கும் அந்தோ! சிறிதும் வலியில்லை யென்றால் யான் என்றகங்கரித்துத் தமது வலியானே யாதாமொரு காரியத்தைச் செய்து முடிப்பது, எவர்க்கு, எவ்வாறியல்வதாம்.

**வி-ரை:-** ‘‘அவனன்றி யோரணுவு மசையாது’’ என்னு முண்மை உபநிடதத்துக் காணுமோருதாரணத்தின் மேல் வைத்துக் கூறியவாறு.

## 171. ஆவரணத் தாலே யடைப்புண்ட ஞானத்தாற்
பாவருணத் தாலே பதைத்துத்தாம் - பார்வையிழந்
தாபரங் காணா தகங்கரிப்பா ராடுநடம்
கோபுரந் தாங்கிநகைக் கூத்து.

ஆவரணத்தாலே அடைப்பு உண்ட ஞானத்தால் பாவ ருணத்தாலே பதைத்துத் தாம் பார்வை இழந்து ஆ பரம் காணாது அகங்கரிப்பார் ஆடும் நடம் கோபுரம் தாங்கி நகைக் கூத்து.

**பாவருணம்-(அறம்) பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டப்பட்ட நிலை; பதைத்து-துயருற்று; பார்வை-சொரூபதிருஷ்டி; பரம் காணாது-‘பரம்பொருளே இருந்து இயக்குகிறது’ என்ற உண்மையை அறியமாட்டாமல்.**

## 172. அரும்பாரச் சும்மைகணீ ராவிவலி யாலே
துரும்பாகக் கொண்டுநெடுந் தூரம் - விரைந்தோடும்
பொங்கழலின் வண்டியிலே போமறிஞர் தஞ்சுமையைத்
தங்கடலை மேற்சுமவார் தாம்.

அரும் பாரச் சும்மைகள் நீராவி வலியாலே துரும்பாகக் கொண்டு நெடும் தூரம் விரைந்து ஓடும் பொங்கு அழலின் வண்டியிலே போம் அறிஞர் தம் சுமையைத் தங்கள் தலைமேல் சுமவார் தாம்.

**சும்மைகள்-சுமைகள்; பொங்கு அழலின் வண்டி-புகை வண்டி.**

## 173. அன்னதே போல வகிலபரா சத்தியே
தன்னியல்பா லெவ்வெவையுந் தாங்கலால் - மன்னுயிர்தம்
சிந்தா குலச்சுமையுஞ் சிற்சத்தி மேற்போட்டுச்
சிந்தா குலந்தவிர்தல் சீர்.

அன்னதே போல அகில பராசத்தியே தன் இயல்பால் எவ்வெவையும் தாங்கலால் மன் உயிர் தம் சிந்தாகுலச் சுமையும் சித்சத்தி மேல் போட்டுச் சிந்தாகுலம் தவிர்தல் சீர்.

**அன்னதே போல-அது போன்றே; மன் -நிலைபெற்ற; சிந்தாகுலம்-மனக்கவலை.**

**உரை (172, 173 பாடல்கள்):** சுமத்தற்கரும் பெரும்பாரமமைத்த பல் சுமைத்திரள்களை ஒரு துரும்பே போலவ்வளவு நொய்தாயிழுத்துக் கொண்டு நீராவியாற்றலால் வெகுதூரம் விரைந்தோடும் மிக்கபுகை வண்டியிற் பிரயாணஞ் செய்யும் மாந்தர் தஞ்சுமையை மட்டுந் தந்தலைமேற் சுமந்து போகார். அதுபோன்று, அகில பராசத்தியே தன் சுபாவத்தாற் பல்வேறுவகைப் பாரங்களையும் ஒருங்கு தாங்கலால், நிலைபெற்ற அறிவுடையுயிர்களும்

மனக்கவலைகளா மாபாரங்களையும் அச்சிற் சத்தி பாலடைவித்துத் தம் மனக்கவலை மாறியிருத்தலே மாண்புடைமை யாம்.

**வி-ரை:-** அண்ட பிண்ட சராசரமனைத்தையும் ஒருங்கேயாக்கி யளித் தழிக்கு மதீனத்தா லகில பராசத்தியென்றார்.
இயல்பு - ஈண்டுப் பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை முதலியன.

***(3) பூபரந் தாங்கவிறை போலியுயிர் தாங்கலது***
***கோபுரந் தாங்கியுருக் கோரணிகாண் - மாபரங்கொள்***
***வண்டிசெலு வான்சுமையை வண்டிவை யாதுதலை***
***கொண்டுநலி கொண்டதெவர் கோது.***

***- பகவான்***

பூபரம் தாங்க இறை போலி உயிர் தாங்கல் அது கோபுரம் தாங்கி உருக் கோரணி காண் மாபரம் கொள் வண்டி செலுவான் சுமையை வண்டி வையாது தலை கொண்டு நலி கொண்டது எவர் கோது.

**பூபரம்-பூமிபாரம்; கோரணி-பரிகாசச் செயல்; மாபரம்-பெரும் பாரம்; நலி கொண்டது-துன்பப்படுவது; கோது-குற்றம்.**

**174. மருவுதியா னத்துவெரு வந்தெனமெய்க் கம்பம்**
**மருவலகங் கார மதியால் - உருவகந்தை**
**வீந்துசிதா காய வெறுவெளியாய் நிற்கினுப**
**சாந்தமுறக் கம்பமறுந் தான்.**

மருவு தியானத்து வெருவந்து என மெய்க் கம்பம் மருவல் அகங்கார மதியால் உரு அகந்தை வீந்து சிதாகாய வெறு வெளியாய் நிற்கின் உபசாந்தம் உறக் கம்பம் அறும் தான்.

**வெருவந்தென-பயந்து; மெய்க் கம்பம்-உடல் நடுக்கம்; வீந்து-இறந்து.**

**175. வரையாது பாயு மனப்பேய் மயக்கப்**
**புரைபா டொழிந்த புலத்தால் - திரைபா**
**டவிந்தமுந் நீர்போ லகந்தை யடங்கிக்**
**குவிந்து கிடத்தல் குணம்.**

வரையாது பாயும் மனப்பேய் மயக்கப் புரைபாடு ஒழிந்த புலத்தால் திரைபாடு அவிந்த முந்நீர்போல் அகந்தை யடங்கிக் குவிந்து கிடத்தல் குணம்.

**வரையாது-இடைவிடாது; புரைபாடு ஒழிந்த புலம்-குற்றம் நீங்கிய மெய்யறிவு; திரைபாடு-அலைவு; அவிந்த-அடங்கிய; குவிந்து-ஒருமுகப்பட்டு.**

**176. கல்லா வகந்தைக் கலக்கத்தி னின்றுகழன்
றெல்லா மிறைசெயலென் றேயுணர்ந்து - பொல்லாத்
தவறாங்கர்த் தத்துவந்தான் சாய்தலே யுண்மைத்
தவந்தாங்கு சத்தி தரி.**

கல்லா அகந்தைக் கலக்கத்தின் நின்று கழன்று எல்லாம் இறை செயல் என்றே உணர்ந்து பொல்லாத் தவறாம் கர்த்தத்துவம் தான் சாய்தலே உண்மைத் தவம் தாங்கு சத்தி தரி.

**கல்லா அகந்தை-தன்னியல்பே தானறியாத அகந்தை; கழன்று-விலகி.**

தன்னியல்பே தானறியாத அகந்தை மோகத்தினின்று மப்புறப்பட்டு, அவனன்றி யோரணுவும் அசையாதெனும் அரியதோ ருண்மையை, எல்லாங் கடவுள் செயலென அனுபவஞானத்தா லறிந்து கடைப்பிடித்து, பொல்லாப் பாவமாங் கர்த்தத்துவ புத்திதான் பொன்றக் கெடுதலே, தவத்தாலொருவனடையும் உண்மையான சத்தியாம்.

## 25. ஆன்மாபகாரத்திறன்

**177. பன்மயமாய்த் தோற்றும் பலவுலகும் பல்லுயிரும்
தன்முகமாய்த் தோற்றித் தனிலொடுக்கும் - சின்மயமாம்
வானா தந்நிலையை மாழாந்த பேதையரே
ஆன்மாப காரஞ்செய் வார்.**

பல் மயமாய்த் தோற்றும் பல உலகும் பல் உயிரும் தன் முகமாய்த் தோற்றித் தனில் ஒடுக்கும் சின்மயம் ஆம் வான் ஆய தம் நிலையை மாழாந்த பேதையரே ஆன்ம அபகாரம் செய்வார்.

**பன்மயமாய்-ஒன்றுக்கு மேற்பட்டதாய்; தன்முகமாய்த் தோற்றி - 'நானே' எனக் கண்டு; வான் ஆய - பராகாயமாகிற; மாழாந்த-அறியாது மயங்கிய.**

## 26. சொர்க்கநரகத்திறன்

**178. சொர்க்கமுத லாகச் சொலுமுலக வுண்மைதனைத்
தர்க்கமிட வேண்டா தமக்குள்ளே - மக்காள்
எதுகாறு மிவ்வுலக மெத்துணைமெய் சொர்க்கம்
அதுகாறு மத்துணைமெய் யாம்.**

சொர்க்கம் முதல் ஆகச் சொலும் உலக உண்மைதனைத் தர்க்கம் இட வேண்டா தமக்குள்ளே மக்காள் எதுகாறும் இவ் உலகம் எத்துணை மெய் சொர்க்கம் அதுகாறும் அத்துணை மெய் ஆம்.

**179. இந்த வுடலுலக மெல்லாமிவ் வாறுளதாப்
புந்தியுற வாய்ந்த புலவோர்தாம் - எந்தமோ
டாய்ந்தா லமரநர காதியுல கெல்லாமெய்
வாய்ந்தா லெனவேசொல் வாம்.**

இந்த உடல் உலகம் எல்லாம் இவ்வாறு உளதாப் புந்தி உற ஆய்ந்த புலவோர் தாம் எம் தமோடு ஆய்ந்தால் அமர நரகு ஆதி உலகு எல்லாம் மெய் வாய்ந்தால் எனவே சொல்வாம்.

**புந்தி உற-புத்தியுடன்.**

இவ்வுடலுலகம் யாவும் பொறிக்குப் புலனாமாறே உண்மையிலு முள்ளதாகத் தம்மதியா லாராய்ந்தறிந்த புலவர்தாம் எம்மோ டாராய்ந்தால், காணப்படு மிவ்வுலகே யன்றி நூல்களிற் கேட்கப்படும் இறைவருலகு நரகவுலகு முதலிய ஏனையுலக மெண்ணிறந்தனவும் உண்மை பொருந்தினாற் போலவே அவரோ டுரையாடுவோம்.

**வி-ரை:-** விஞ்ஞான நூல் வல்லாருள்ளுமே சிலர், பொறிகள் புலன்களை யுள்ளவாறுணர்த்துவனவல்ல வெனவும், ஆதலால் அவ்விடயத்தில் அவைகள் சற்றுமே நம்பத்தகும் கருவிகளல்ல வெனவுங் கூறல் காண்க. புலவோர் - அறிஞரென வுயர்த்துக் கூறுவார் போன்று, ஐம்புல வுணர்வே யுடையாரெனக் குறிப்பா லிகழ்ந்த வாறு. அனைத்துலகமும் காண்பானை யன்றி யின்மையாற் சின்மாத்திரமாய் ஆன்மாவிற் கற்பனையே யாகவும், அவ்வாறு கூறாது உலகெல்லா மெய் வாய்ந்தா லெனவே சொல்வது தான் உள்ளது உள்ளவா றுரைப்பின், வாசனை வசத்தராமவர் அதனை நம்பி விடய வேட்கையற்று உண்மையுணர்ந்து உபசாந்தி யுறாராகலானும், ஒருகாலதனை நம்பினும், ஞான சாதனமாங் கன்மம் பத்தியாதியவற்றில் அவர்களுக்கு முன்னிருந்த வாசத்தியுமகன்று இகபரமிரண்டும் அதனாலொருங்கிழக்க நேர்தலானு மென்க.

ஆன்மநிலை யொன்றேமெய் யன்புநிலை யல்லால்
வான்முளரி போற்பரத்து வைகுநிலை யெல்லாம்
கானலுறு நீர்நிலைபோற் கற்பனையாற் றோன்றி
மேன்மயலை யூட்டுமன மித்தைநிலை தாமே.

- குருவாசகக்கோவை 1025

## 27. நரகபயத்திறன்

### (கலிவிருத்தம்)

**180. நரக பயத்தா னடுங்குது மென்பார்
நரக சொரூப நவையுண ராரே
நரக சொரூப நவையை யுணர்ந்தோர்
விரகறிந் துண்மையை மேவினர் தாமே.**

நரக பயத்தால் நடுங்குதும் என்பார் நரக சொரூப நவை உணராரே நரக சொரூப நவையை உணர்ந்தோர் விரகு அறிந்து உண்மையை மேவினர் தாமே.

**நடுங்குதும்-நடுங்குகிறோம்; நரகம்-துன்பம்; நவை-கேடு; விரகு-உபாயம்.**

## 28. நரகஜயத்திறன்

**181. நரகனை மாய்த்தன னாரண னென்பர்
நரகுட னானா நடப்போ னரகன்
நரக னெவணென நாடித் தொலைத்தோர்
நரகனை மாய்த்தவந் நாரண னாரே.**

நரகனை மாய்த்தனன் நாரணன் என்பர் நரகு உடல் நான் ஆக நடப்போன் நரகன் நரகன் எவண் என நாடித் தொலைத்தோர் நரகனை மாய்த்த அந் நாரணனாரே.

**நரகனை-நரகாசுரனை; எவண்-எங்கே.**

**182. நரக னுறைபுல நாடி நடந்து
நரகனை மாய்த்துமெய்ஞ் ஞானநீ ராடல்
நரக ஜயத்துக் கறிகுறி யான
நரக சதுர்த்தசி நானம தாமே.**

நரகன் உறை புலம் நாடி நடந்து நரகனை மாய்த்து மெய்ஞ் ஞான நீராடல் நரக ஜயத்துக்கு அறிகுறியான நரக சதுர்த்தசி ஸ்நானம் அது ஆமே.

**உறைபுலம்-இருக்கின்ற இடம்; நாடி நடந்து-(இதயம் சேர்ந்து) விசாரித்துச் சென்று; நானம்-ஸ்நானம்.**

**(4) *நரகுட னானா நரகுல காளும்
நரகனெங் கென்றுசாஅய் ஞானத் திகிரியால்
நரகனைக் கொன்றவ னாரண னன்றே
நரக சதுர்த்தசி நற்றின மாமே.***

***- பகவான்***

நரகு உடல் நான் ஆக நரகு உலகு ஆளும் நரகன் எங்கு என்று உசாஅய் ஞானத் திகிரியால் நரகனைக் கொன்றவன் நாரணன் அன்றே நரக சதுர்த்தசி நல் தினம் ஆமே.

**உசாஅய்-உசாவி, விசாரித்து; திகிரி-சக்ராயுதம்.**

**(நேரிசை வெண்பா)**

**183. ஊனொன் றுடலுருவா மூத்தை நரகத்தை**
**நானென் றழிந்த நரகனைத் - தானுசாஅய்**
**ஆபாதஞ் செற்றொளிர்பே ரான்ம சதோதயமே**
**தீபா வளியாத் தெளி.**

ஊன் ஒன்று உடல் உருவாம் ஊத்தை நரகத்தை நான் என்று அழிந்த நரகனைத் தான் உசாஅய் ஆபாதம் செற்று ஒளிர் பேர் ஆன்ம சதா உதயமே தீபாவளியாத் தெளி.

**ஊன் ஒன்று-மாமிசக் குவியலான; ஊத்தை-மலம், அழுக்கு; ஆபாதம்-ஆபாசம், பிரதிபலன ஒளி, அசுத்தம்; செற்று-கொன்று; சதோதயம்-சதா உதயம், என்றும் பிரகாசித்தல்.**

(5) *நரக வுருவா நடலை யுடல*
*கிரக மகமெனவே கெட்ட - நரகனாம்*
*மாபா வியைநாடி மாய்த்துத்தா னாயொளிர்தல்*
*தீபா வளியாந் தெளி.* *-பகவான்*

நரக உருவாம் நடலை உடல கிரகம் அகம் எனவே கெட்ட நரகன் ஆம் மா பாவியை நாடி மாய்த்துத் தானாய் ஒளிர்தல் தீபாவளி ஆம் தெளி.

**நடலை-துன்பம்; உடல கிரகம்-உடம்பாகிய வீடு.**

## 29. அகமுகமாட்சித்திறன்

**184. அயலாம் புலஞ்சுட் டறிவான தன்மெய்**
**யியலே பிடிப்பா யிருக்க - முயல்வார்**
**உழல்கின்ற வாறுமற் றொன்றுபற்றி வெற்று**
**நிழல்சென்று பற்றலே நேர்.**

அயல் ஆம் புலம் சுட்டு அறிவு ஆன தன்மெய் இயலே பிடிப்பாய் இருக்க முயல்வார் உழல்கின்ற ஆறு மற்று ஒன்று பற்றி வெற்று நிழல் சென்று பற்றலே நேர்.

**பிடிப்பு-பிடிக்க வேண்டிய பொருள்; ஆறு-வழி; நேர்-சமானம்; முயல்வார் மற்றொன்று பற்றி உழல்கின்றவாறு என இயையும்.**

**185. புன்புலமே சுட்டலுறும் புத்திநா னாரென்று**
**தன்புலமே சுட்டத் தலைப்படலே - முன்பார்**
**குறிகுணமே சுட்டிக் குலைந்தழுங்குந் தன்சுட்**
**டறிவுதன் னுட்செறியு மாறு.**

புன்புலமே சுட்டல் உறும் புத்தி நான் ஆர் என்று தன்புலமே சுட்டத் தலைப்படலே முன் பார் குறிகுணமே சுட்டிக் குலைந்து அழுங்கும் தன் சுட்டு அறிவு தன்னுள் செறியும் ஆறு.

**சுட்டல் உறும் - காண்கின்ற; முன்பார் - முன்னால் பார்க்கப்படும் (அல்லது) முன்பு ஆர்-முன்னிலையில் உள்ள; குறி குணம்-வடிவம் இயல்பு; அழுங்கும்-துன்புறும்; செறியும்-நிஷ்டையுறும்; ஆறு-வழி, விதம்.**

## 186. பார்ப்பானைப் பாராமற் பார்க்கப் படுபொருளைப்
## பார்ப்பதனா லென்றும் பரிதவிக்கும் - பார்ப்பாரே
## நுந்தம் புறமேநீர் நோக்காதே யுண்ணோக்கித்
## தொந்த மறுத்தல் சுகம்.

பார்ப்பானைப் பாராமல் பார்க்கப்படு பொருளைப் பார்ப்பதனால் என்றும் பரிதவிக்கும் பார்ப்பாரே நும் தம் புறமே நீர் நோக்காதே உள் நோக்கித் தொந்தம் அறுத்தல் சுகம்.

**நும் தம்-உங்களுடைய; உள் நோக்கி-பார்ப்பவனைப் பார்த்து; தொந்தம்-துவந்தம், இருமையுணர்வு.**

## 187. வெளிப்படுத்த லுன்னை விவேகமன்று நெஞ்சே
## யுளப்படுத்த லொன்றே யுறுதி - வெளிப்படுத்தி
## யுன்னைக் கவிழ்க்க வுபாயஞ்சூழ் மாயையினின்
## றுன்னைக் கரந்துள் ளொழுகு.

வெளிப்படுத்தல் உன்னை விவேகம் அன்று நெஞ்சே உளப்படுத்தல் ஒன்றே உறுதி வெளிப்படுத்தி உன்னைக் கவிழ்க்க உபாயம் சூழ் மாயையினின்று உன்னைக் கரந்து உள் ஒழுகு.

**உளப்படுத்தல்-இதயத்துக்குள் புகுதல்; கரந்து-மறைந்து.**

## 188. வெளியிலே யோடி விநோதமே நாடிக்
## களியினா லாடிக் கழியா - தொளியினா
## லோர்ந்துதன் னுள்ளத் துறுதிபெறத் தன்சொருபஞ்
## சார்ந்துவாழ் கிற்றல் சதிர்.

வெளியிலே ஓடி விநோதமே நாடிக் களியினால் ஆடிக் கழியாது ஒளியினால் ஓர்ந்து தன் உள்ளத்து உறுதிபெறத் தன் சொருபம் சார்ந்து வாழ்கிற்றல் சதிர்.

**ஒளியினால்-அருளினால், அறிவினால், விசாரத்தால்; வாழ்கிற்றல்-வாழ்வது; சதிர்-சிறப்பு.**

## 189. தொந்தக் கருத்தே துயருழத்தற் கேதுவாய்த் தந்தமுப சாந்தியைத் தள்ளுதலால் - அந்தக் கருத்து மனத்தைக் கவராமற் சித்த விருத்தி யடங்கல் விதி.

தொந்தக் கருத்தே துயர் உழத்தற்கு ஏதுவாய்த் தம்தம் உபசாந்தியைத் தள்ளுதலால் அந்தக் கருத்து மனத்தைக் கவராமல் சித்த விருத்தி அடங்கல் விதி.

இரட்டை நினைப்பே மனத்தைக் கவற்றலான் மாந்தர் துன்பப்படுதற்குக் காரணமாய், தத்தமியல்பான சாந்த சுகத்தைத் தமக்கனுபவமாகா தகற்றுதலால், அத்தகைய நினைப்பு மனத்தைப் பற்றிக் கொள்ளாது மனோவிருத்தி உள்ளத்தின் கண் மாய்ந்தடங்கப் பெறுதலே செய்யத் தக்கதாம்.

**வி-ரை:-** விருத்தி-நினைப்பு; இரட்டை நினைப்பு-அறம் பாவம், இன்ப துன்பம் என்றாற்போல, ஒன்றை விட்டொன்று பிரியாது என்று மிரண்டிரண்டாய் சேர்ந்தேயெழு நினைப்பு. ஒத்த கருத்தாலன்றி யுபசாந்தி நுகரப்படாதெனவும் அவ்வொத்த கருத்து நசித்த மனத்தர்க்கன்றி யமையா தெனவும் உணர்க. அஃது அவர்க்கன்றி யமையாமைக்குக் காரணம், நினைப்பு என்றுமே, முற்கூறியவாறு இரட்டை யியல்புடைமையாம்.

## 190. உள்ளே யிருப்பதனை யோராம லூர்தோறும் புள்ளே யெனப்பறந்து போவீர்காள் - உள்ளத் தறிவோர் சிறிது மலையா தடங்கிச் செறிவே பரம சிவம்.

உள்ளே இருப்பதனை ஓராமல் ஊர்தோறும் புள்ளே எனப் பறந்து போவீர்காள் உள்ளத்து அறிவு ஓர் சிறிதும் அலையாது அடங்கிச் செறிவே பரம சிவம்.

**புள்-பறவை.**

## 191. வளியா லழிவெய்தும் வங்கத்தின் பாய்போல் வெளியே பரந்து விடாமை - நளிகடல்வாய்த் தாழப் படிந்து தரித்தநங் கூரம்போல் ஆழப் புகுவ தறிவு.

வளியால் அழிவு எய்தும் வங்கத்தின் பாய்போல் வெளியே பரந்து விடாமை நளிகடல்வாய்த் தாழப் படிந்து தரித்த நங்கூரம்போல் ஆழப் புகுவது அறிவு.

**வளி-காற்று; வங்கம்-பாய்மரக் கப்பல்; நளி கடல்-பரந்த கடல்.**

கடுங்காற்றாற் கிழிந்தழிவடையும் மரக்கலத்தின் பாய்போல் விளிதற் கேதுவாய் வெளிவிடயங்களிற் பரந்து விடாமல், நடுக்கடலினாழப் படிதலாய் அசைவறக் கிடந்த நங்கூரம் போல அசலநிலை பெற உள்ளத்துளாழ நுழைவதே உண்மையுணர்வாம்.

**192. புறமுகத்துப் பாயுந்தன் புத்திதனை யுள்ளே
அறநிறுத்துக் காக்கு மதுவே - அறவோர்
பதியா மிதயப் பரசொருபங் காணும்
அதிகார தீர மறி.**

புறமுகத்துப் பாயும் தன் புத்திதனை உள்ளே அற நிறுத்துக் காக்கும் அதுவே அறவோர் பதியாம் இதயப் பரசொருபம் காணும் அதிகார தீரம் அறி.

**அற-அறவே அல்லது அழிய; நிறுத்து-நிறுத்தி; காக்கும் அதுவே-காப்பதே; அறவோர்-முமுட்சுக்கள்; பதி-கடவுள் அல்லது ஸ்தலம்.**

**193. அன்னியமே சுட்டி யலையு மகந்தைமதி
தன்னியலே சுட்டத் தலைப்படின்மற் - றன்னியம்போய்
நெஞ்சத் தியல்பா நிறைந்தொளிர்தன் மெய்யுணர்வாற்
கிஞ்சித் துவநான் கெடும்.**

அன்னியமே சுட்டி அலையும் அகந்தைமதி தன் இயலே சுட்டத் தலைப்படின் மற்று அன்னியம் போய் நெஞ்சத்து இயல்பா நிறைந்து ஒளிர் தன் மெய் உணர்வால் கிஞ்சித்துவ நான் கெடும்.

## 30. பரலோகத்திறன்

**194. பரனுலகெங் கேயோ படிவதா வெண்ணம்
மருவ லுடலகந்தை மாயம் - மருவுறத்தான்
எங்கு மிலைதன் னிதயத்தி னன்றியரன்
துங்கவுல கென்று துணி.**

பரன் உலகு எங்கேயோ படிவதா எண்ணம் மருவல் உடல் அகந்தை மாயம் மருவு உறத்தான் எங்கும் இலை தன் இதயத்தின் அன்றி அரன் துங்க உலகு என்று துணி.

**படிவதா-இருப்பதாக; மருவல்-உண்டாதல்; மருவு உறத்தான்-அடைவதற்கு; அரன்-சிவன்; துங்க-பரிசுத்தமான.**

**195. அந்த வுலகுக் கவகாச நல்கலொடு
விந்தையா லத்தை விளக்கற்கும் - சொந்த
நிறைவொளியாய் நீதா னிகழக்காண் டல்காண்
இறைவனுல குன்னு ளிருப்பு.**

அந்த உலகுக்கு அவகாசம் நல்கலொடு விந்தையால் அத்தை விளக்கற்கும் சொந்த நிறைவு ஒளியாய் நீதான் நிகழக் காண்டல் காண் இறைவன் உலகு உன்னுள் இருப்பு.

**அவகாசம் நல்கல்-இடம் கொடுத்தல்; நிகழ-இருக்க.**

**196. ததீயரா மன்பர் சமாகிதசித் தத்துட்**
**புதீயதுபோற் பூரணமாப் பொங்கும் - அதீதத்**
**துரீயவெளி தானே சொரூபவொளி யாலோங்**
**கரீயசிவ லோக மறி.**

ததீயர் ஆம் அன்பர் சமாகித சித்தத்துள் புதீயதுபோல் பூரணமாப் பொங்கும் அதீதத் துரீயவெளிதானே சொரூப ஒளியால் ஓங்கு அரீய சிவ லோகம் அறி.

**ததீயர்-அடியார்; சமாகித-ஒடுங்கிய.**

## 31. சிவநிலைத்திறன்

**197. தைிர்சித்த மானமருட் பேயகந்தை பேரச்**
**சிதசித்தாம் பேதத் திறந்தீர்ந் - ததிசுத்த**
**சாந்தவுணர் வான சகஜ சமாதியொளி**
**தோய்ந்தவுயிர் சுத்த சிவம்.**

பிதிர் சித்தம் ஆன மருள் பேய் அகந்தை பேரச் சித்து அசித்து ஆம் பேதத் திறம் தீர்ந்து அதி சுத்த சாந்த உணர்வு ஆன சகஜ சமாதி ஒளி தோய்ந்த உயிர் சுத்த சிவம்.

**தைிர் சித்தம் - சிதறிய மனம்; பேர-விலக; அசித்து-அறிவற்றது, ஜடம்;**
**திறம்-தன்மை; உயிர்-ஒருவன்.**

**198. பிறிதா மகந்தை பிரிய வகத்தூ**
**டறிவேதா னாக வழுந்திச் - செறிவுறுபொய்க்**
**கற்பனைகள் யாவுங் கழிந்தொழிந்த சித்தமே**
**சிற்பரமாத் தேறுஞ் சிவம்.**

பிறிது ஆம் அகந்தை பிரிய அகத்து ஊடு அறிவே தானாக அழுந்திச் செறிவு உறு பொய்க் கற்பனைகள் யாவும் கழிந்து ஒழிந்த சித்தமே சித்பரமாத் தேறும் சிவம்.

**பிறிது-வேறு; பிரிய-விலக; ஊடு-உள்ளே, வழியே; தேறும்-தேற்ற மடைகின்ற.**

**199. அடர்ந்தெங்குந் தானா யனந்தசிவ மாகக்**
**கடந்தவதி நுட்பங் கடவுள் - படர்ந்த**
**கருத்துத்தன் மூலங் கலந்துமல மற்றுத்**
**திருத்தமுற்றாற் றேறுஞ் சிவம்.**

அடர்ந்து எங்கும் தானாய் அனந்த சிவம் ஆகக் கடந்த அதி நுட்பம் கடவுள் படர்ந்த கருத்துத் தன் மூலம் கலந்து மலம் அற்றுத் திருத்தம் உற்றால் தேறும் சிவம்.

## 32. அரியரவபேதத்திறன்

**200. ஞான முயிர்த்தொகைக்கு நல்க லரனாக**
**வானம் வழங்க லரியென்பர் - ஞான**
**உரனே பரனா வொளிர்விசும்பா மொன்றே**
**அரனோ டரியென் றறி.**

ஞானம் உயிர்த்தொகைக்கு நல்கல் அரனாக வானம் வழங்கல் அரி என்பர் ஞான உரனே பரனா ஒளிர் விசும்பு ஆம் ஒன்றே அரனோடு அரி என்று அறி.

**உரன்-வலிமை; பரன்-கடவுள்; விசும்பு-வானம், வானுலகம்.**

உயிர்த்தொகைக்கு ஞானமளிப்பது ஆலமர் கடவுளாக முத்தியளிப்பது மட்டும் முகுந்த னென்பர். திடஞானமே சிதாகாய வடிவான பரமபதமாம். ஆதலான் ஞான மளிக்குஞ் சிவனும் முத்தியளிக்குந் திருமாலும் வேறலராம்.

**வி-ரை:-** ஆலமர் கடவுள்-சிவபிரான் கொண்ட தக்ஷிணாமூர்த்தி யவசரம். முகுந்தன்-இம்மை மறுமை யிரண்டு மீதலாற் றிருமாலுக்குண்டாய காரணப் பெயர். சாமானிய மக்கள் கருதுமாறு ஞான முத்திகளிரண்டும் முறையே காரண காரியங்களாகாது, உண்மையி லொன்றுக் கொன்று சொரூபமே யாதலால் அவற்றை யளிக்கும் அவ்விருவருங் கூடப் பெயரளவினன்றிப் பொருளளவில் ஆங்கே யன்னியரல்ல ரென்றறிக.

## 33. சத்திசிவத்திறன்

**201. தனிமுதலா மெந்தத் தனையன்றிச் சிந்தை**
**தனதுருவா நின்றபரா சத்தி - தினையளவும்**
**இல்லையோ வந்த வெழுவாயா முள்ளமே**
**தில்லைவாழ் சுத்த சிவம்.**

தனி முதல் ஆம் எந்தத் தனை அன்றிச் சிந்தை தனது உருவா நின்ற பராசத்தி தினை அளவும் இல்லையோ அந்த எழுவாய் ஆம் உள்ளமே தில்லை வாழ் சுத்த சிவம்.

**தனை-ஆன்மாவை; தினையளவு-சிறிதளவு; எழுவாய்-எழுமிடம்.**

கிரியை வடிவாய் வெளிப்பட்டுக்கிளரா நின்ற ஞான சத்தி, தனித்த முதலாமெந்தத் தன்னைவிட்டு இயங்குதல் அறவே யின்றோ எவற்றுக்கு மாதிமூலமா யுற்ற உண்மை மாத்திரமா மந்தவான்ம சொரூபமே தில்லைக்கண் ணுறையும் சுத்த சிவமாம்.

**வி-ரை:-** வினை முதலை விட்டு வினை நிகழ்ச்சி யின்றாமாறு போலச் சிவத்தை விட்டுச் சத்தியு மில்லை யென்பதாம். உண்மை மாத்திரமா

மிறைவனுக்கு வினை முதலாந் தன்மை, மனோமயத்தோற்றமாமுலகை மாறுபட உண்மை யென்றோரும் பாமரர் மதியாலன்றிப் பாரமார்த்திகத்தி லின்றேனும், அவ்வுலகைக் கருவியாகக் கொண்டே அவனுண்மை (யுணர்த்த) யுணர வேண்டி யிருத்தலின் எழுவாயாம் உள்ளம் எனப்பட்டது. வினை முதலாந் தன்மை - எழுவாயியல்பு, கர்த்தத்துவம்.

## 202. மன்னியபே ரின்பான் மனந்தா னெதனையடைந்
## தன்னியத்தை நாடி யலையாதோ - துன்னும்
## நவநவஞா னாநுபவ நல்கவ் வுளமாம்
## சிவமே மனோரஞ் சிதம்.

மன்னிய பேர் இன்பால் மனம் தான் எதனை அடைந்து அன்னியத்தை நாடி அலையாதோ துன்னும் நவநவ ஞானாநுபவம் நல்கு அவ் உளம் ஆம் சிவமே மனோரஞ்சிதம்.

**நவநவ-புத்தம் புதிய; ரஞ்சிதம்-மகிழ்ச்சிதரும் பொருள்.**

## 203. மட்டறுமெய்க் காதன் மயக்குற்ற கோபிகை
## சிட்டர் தமக்குத்தஞ் சித்தமே - விட்டிலைச்செந்
## தீபசிகை போலகந்தைச் சீரழிக்கு முள்ளமே
## கோபிகா நாதன் குறி.

மட்டு அறு மெய்க் காதல் மயக்கு உற்ற கோபிகை சிட்டர் தமக்குத் தம் சித்தமே விட்டிலைச் செம் தீப சிகை போல் அகந்தைச் சீர் அழிக்கும் உள்ளமே கோபிகா நாதன் குறி.

**மட்டு-அளவு; விட்டிலை-விட்டிற் பூச்சியை; செந்தீப சிகை-விளக்குச் சுவாலையின் உச்சி; குறி-அறிந்துகொள்க.**

# 34. சிவபூஜைத்திறன்

## 204. அறிவான வுண்மையா மான்ம சொரூப
## நிறைவோடு மோன நினைப்பாற் - பிறிவுபடா
## தொத்தொழுக லுற்ற வுபசாந்த நீர்மையே
## சுத்தசிவ பூஜை துணி.

அறிவு ஆன உண்மையாம் ஆன்ம சொரூப நிறைவோடு மோன நினைப்பால் பிறிவு படாது ஒத்து ஒழுகல் உற்ற உபசாந்த நீர்மையே சுத்த சிவ பூஜை துணி.

**மோன நினைப்பு-அகண்டாகார விருத்தி, (அதாவது) நினைப்பற்ற நிலை, விருத்தியற்ற நிலை; நீர்மையே-தன்மையே.**

## (இன்னிசை வெண்பா)

**205. இழைத்தநா ளெல்லை யிகந்து பிழைத்தொரீஇக்
கூற்றங் குதித்துய்ந்தான் மார்க்கண்டன் - ஆற்றுசிவ
பூசனையால் வன்கால நாசனையா யிற்கால
பாசநையா நிற்கும் பரிந்து.**

இழைத்த நாள் எல்லை இகந்து பிழைத்து ஒரீஇக் கூற்றம் குதித்து உய்ந்தான் மார்க்கண்டன் ஆற்று சிவ பூசனையால் வன்கால நாசனை ஆயின் கால பாசம் நையா நிற்கும் பரிந்து.

**இழைத்த-முன் வினைப்படி அடைந்துள்ள; இகந்து-கடந்து; பிழைத்தொரீஇ-பிழைக்க; கூற்றம்-யமன்; ஆற்று-செய்கின்ற; வன் கால நாசன்-சிவன்; பாசம்-கயிறு; நைந்து பரியா நிற்கும்-நைந்து அறுந்து போகும்.**

தனக்கு விதிக்கப்பட்ட வாணாளெல்லையைக் கடந்து, தப்பாத விதியுந் தப்புவதாக, யாவராலுந் தணத்தற்கரிய சாவினின்றுந் தணந்து, கூற்றுவ னொடும் பொருது வென்று அமுத வடிவா யுய்யப் பெற்றான் மார்க்கண்டேயன். ஆதலால் கடுந்திறல் வாய்ந்த காலனை மாய்த்த கழற்கா லரனைப் புந்தியோ டாற்றும் பூசனையால் எவரேனுமாராய்ந்து வழிபடின், உயிர்களை யெல்லாந் தப்பாது வலிக்கும் உரனுடைக் காலபாசம் அவரை மட்டிலும் வலிக்கமாட்டாது நைந்தறா நிற்கும்.

**வி-ரை:-** பிழைக்க வென்னுஞ் செயவெனெச்சம் செய்தெனெச்ச மாகத் திரிந்து நின்றது. நைந்து பரியாநிற்கும் என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. பரிதல் - அறுதல். மரணத்தையும் மாற்றலாகுமெனக் கடவுள் வழிபாட்டுச் சிறப்புக் கூறுவார், கூற்றங் குதித்துய்ந்தாரீங்கில்லை என்றதனை யெதிர் மறுக்க வெழுந்தார் போன்று கூற்றங் குதித்துய்ந்தான் மார்க்கண்டன் என்றார்.

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு

— குறள்

மரணபய மிக்குளவம் மக்களர ணாக
மரணபவ மில்லா மகேசன் - சரணமே
சார்வர்தஞ் சார்வொடுதாஞ் சாவுற்றார் சாவெண்ணம்
சார்வரோ சாவா தவர்.

— உள்ளது நாற்பது - மங்கலம்

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே - உலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி.

-நீதிநெறி விளக்கம்

சிவாய நமவென்னச் சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை - உபாய
மிதுவே மதியாகு மில்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்.

வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலா
மெனைத்தாய நூலகத்து மில்லை - நினைப்பதெனக்
கண்ணுறுவ தல்லாற் கவலையுறே னெஞ்சமே
விண்ணுறுவார்க் கில்லை விதி. (ஔவையார்)

இந்நூலில் பாடல் 697 - தடைபடா ... விதி - என்னுஞ் செய்யுளால் விண்ணுறுவார்க் கில்லை விதி என்பதனுண்மைப் பொருளை அறிக.

**(நேரிசை வெண்பா)**

**206. எண்ணுவன வாமெட் டெழில்வடிவு மெந்தையாம்
அண்ணலுரு வென்னு மபேதமதி - நண்ணினராய்
ஆங்கவற்றுக் கேற்றவா றாற்றுவழி பாடனைத்தும்
ஓங்குசிவ பூசை யுணர்.**

எண்ணுவன ஆம் எட்டு எழில் வடிவும் எந்தையாம் அண்ணல் உரு என்னும் அபேத மதி நண்ணினராய் ஆங்கு அவற்றுக்கு ஏற்றவாறு ஆற்று வழிபாடு அனைத்தும் ஓங்கு சிவ பூசை உணர்.

**எழில்-அழகிய; நண்ணினராய்-உடையவர்களாய்.**

## 35. வணக்கவுண்மைத்திறன்

**207. ஊனமாஞ் சீவ னுடையான் றிருவடிக்கீழ்
மானமுடி சேர்க்கும் வணக்கந்தான் - யானென்னுஞ்
சீவபோ தத்தைச் செறுத்துச் சிவபோத
மேவலா மாங்கதன் மேல்.**

ஊனம் ஆம் சீவன் உடையான் திருவடிக்கீழ் மான முடி சேர்க்கும் வணக்கம்தான் யான் என்னும் சீவ போதத்தைச் செறுத்துச் சிவ போதம் மேவல் ஆம் ஆங்கு அதன் மேல்.

**ஊனம்-குறைபாடு; உடையான்-தன்னை உடைமையாக உடையவன், கடவுள்; மான-கௌரவமுள்ள; செறுத்து-அடக்கி; மேவல்-அடைதல்.**

ஆட்கொண்ட குருவின் பாதத்தில் முடிசேர்க்கும் நமஸ்காரமென்ற வணங்கலின் பொருள், யானென்னும் ஜீவபோதத்தை சிவ போதத்தில் திறையாய்ச் செலுத்தி, அச்சிவ போதத்தில் மறைதலே யென்க.

## 36. விக்கிரக ஆராதனைத் திறன்

**208. விக்கிரகா ராதனையின் மிக்க ரகசியத்தை**
**நெக்குருகிக் காணாது நிந்திப்போய் - பொக்கமா**
**வூரு முடல்வடிவ விக்கிரக மேநானென்**
**றாராதிக் கின்ற தெவன்.**

விக்கிரக ஆராதனையின் மிக்க ரகசியத்தை நெக்கு உருகிக் காணாது நிந்திப்போய் பொக்கமா ஊரும் உடல் வடிவ விக்கிரகமே நான் என்று ஆராதிக்கின்றது எவன்.

**பொக்கம்–பொய், ஜடம்; ஊரும்-நடமாடும்.**

விக்கிரக ஆராதனையை நிந்திப்பவர், ஜடவஸ்துவாகிய உடல் விக்கிரகத்தை யெவ்வாறு சைதன்யமாகிய தாமெனப் பாவித்துப் போற்றுகின்றனர் என்றார். இதனால் ஞான முறும் வரையில், எல்லாப் பாவனையும் விக்கிரக பாவனை யென்றும் பிறர் சாதனையைப் பழித்தல் அறியாமை யென்றும் புலன்.

## 37. திருநீற்றுத்திறன்

**209. உள்ளத் தநாதியா யுற்றபழ வாதனைசேர்**
**கள்ளவுயிர் ஞானக் கனலால்வெந் - துள்ளே**
**விராவுசீ ருண்மையாய் மிஞ்சுதிரு நீறே**
**பராவிபூ திப்படிவம் பார்.**

உள்ளத்து அநாதியாய் உற்ற பழ வாதனை சேர் கள்ள உயிர் ஞானக் கனலால் வெந்து உள்ளே விராவு சீர் உண்மையாய் மிஞ்சு திரு நீறே பரா விபூதிப் படிவம் பார்.

**வாதனை-வாசனை; கள்ள உயிர்-போலியுயிர், அகந்தை; விராவு-கலந்து; படிவம்-வடிவம்.**

உள்ளத்தின்கண் அனாதியாயடைந்த பழவாதனைத் திரளோடு கூடிய அறிவுப் போலியா மகந்தை வடிவவுயிர் ஞானாக்கினியால் அறவே அவ்வுரு வழிய வெந்து அவ்வுள்ளத்தின்கட் கலந்த வெற்றுண்மை மாத்திரமாய் மிஞ்சிப்படிந்த திருநீறே இறைவன் பராவிபூதி வடிவாம்.

**வி-ரை:-** உயிரைச் சேர்ந்த வாதனை முதலிய யாவும் உள்ளத்தின் கண் உறுதலை,

''அதன்முக மிகலுள தகமுள சிறுதுளை
யதனிலா சாதியொ டமர்ந்துள திருந்தமம்
அதனையா சிரித்துள வகிலமா நாடிக
ளதுவளி மனதொளி யவற்றின திருப்பிடம்''.
- உள்ளது நாற்பது அநுபந்தம்

என்பதனாலறிக. பரசிவத்தின் பராவிபூதி சுத்த சத்துவத்தானே அறிந்தடையப்படுவதாயினும் அதுதான் உண்மையில் குணாதீதமாதலால் வெண்ணீறெனாது வாளா நீ றெனவும், பூர்வ ஜன்ம புண்ணிய விசேடத்தாற் றன்னை யடைந்தார்க்கு அவர்தாம் பிறவித் துன்பத்தாற் பீடிக்கப்படாது எல்லா நலன்களு மினிது நல்கலால் திரு நீறெனவுங் கூறினார்.

## (பஃறொடை வெண்பா)

**210. குருவடிவங் கொண்டவருட் கோமானாம் பார்ப்பான்**
**வெருவலுறுஞ் சீவபோ தம்வெந் - துருவழிய**
**ஓதா தொருமொழியை யோதிப் பராவாக்காற்**
**றூய்தாய ஞானச் சுடர்கொளுவிப் - பூத**
**இதயத்தே சீடற் கினிதிற் புடம்வைத்**
**ததுவருள்வ தாகு மறி.**

குரு வடிவம் கொண்ட அருள் கோமானாம் பார்ப்பான் வெருவல் உறும் சீவ போதம் வெந்து உரு அழிய ஓதாது ஒரு மொழியை ஓதிப் பராவாக்கால் தூய்தாய ஞானச் சுடர் கொளுவிப் பூத இதயத்தே சீடற்கு இனிதில் புடம் வைத்து அது அருள்வது ஆகும் அறி.

**ஒரு மொழி-'அதுநீ'; சுடர் கொளுவி-விசாரத் தீயை மூட்டி; பூத-பரிசுத்தமான.**

வலையிடைபட்ட மான்போல் உலகிடைப் பதறலுற்ற பசு போதமே கோமயமாக அதுதானுருப்படாது வெந்தொழிய ஒரு மொழியைத் தூல வாக்கா லோதாமற் பராவாக்கா லோதித் தூயதாய ஞானாக்கினியை அதன்கண் மூட்டிப் பரிசுத்தமா மிதயத்தலத்திற் புடம் வைத்தெடுத்து உபாசித்தோர்க் குறுதி பயக்கக் குரு சொரூபமாய் அருட்டிருமேனி சாத்திவந்த இறைவனா மறையோனாற் சிவமயவாழ்வு சிறக்கென வாழ்த்திச் சீடற்கினிது நல்கப்படுவதாம் பராவிபூதி.

**வி-ரை:-** ஒரு மொழியோதல் - மவுனோபதேசம்.

## (நேரிசை வெண்பா)

**211. அந்த விபூதி யணிந்தோ ரகன்ஞாலத்**
**தெந்த விதத்து மெதிரிலார் - சிந்தையிலா**
**விந்தைசேர் ஞான விபூதியா முண்மையே**
**அந்தமிலாச் செம்பொரு ளாம்.**

அந்த விபூதி அணிந்தோர் அகல்ஞாலத்து எந்த விதத்தும் எதிர் இலார் சிந்தை இலா விந்தை சேர் ஞான விபூதி ஆம் உண்மையே அந்தம் இலாச் செம்பொருள் ஆம்.

**அகல்-அகன்ற, விசாலமான; எதிர்-இணை; அந்தமிலாச் செம்பொருள்-அழியாப் பெருஞ் செல்வம்.**

அந்த விபூதியணிந்தவ ராகிய ஞானச் செல்வர் இப் பரந்தவுலகில் எதற்கும் நிகராக மாட்டார். அவர் நிஜ நிலையில் நினைவென்பது அறவே யிலதாலும்,

அஃது (அந்நிலை) என்றும் புத்துயிர் பெற்றுத் தன்னிகரின்றி விளங்குவதாலும், அதைச் ‘சிந்தையிலா விந்தை’ யெனச் சிறப்பித்தார்.

## 212. விபூதியா மெய்யை விழைந்துபா சிப்போர்
விபூதியே தாமா விளைவார் - விபூதி
அகந்தை யழிந்தஞா னான்ம சொரூப
முகந்ததுதா னாக வொழுகு.

விபூதி ஆம் மெய்யை விழைந்து உபாசிப்போர் விபூதியே தாம் ஆக விளைவார் விபூதி அகந்தை அழிந்த ஞான ஆன்ம சொரூபம் முகந்தது தான் ஆக ஒழுகு.

**விபூதி-மகிமை; விழைந்து-விரும்பி; முகந்தது-அடைந்தது; ஆக-என்று; ஒழுகு-கொள்க.**

எஞ்சிநிற்பதே சொரூப குணமாதலின், ஞான விசாரத்தாலெரிக்கப்பட்டு எஞ்சிய விபூதியே அதுவாம். விபூதி தரித்தலென்பது அகந்தை யிழந்த ஞானான்ம சொரூபமாக நிற்றலே.

## 213. ஆன்மாவ லோகனத்தா லந்தர் முகப்பட்டுத்
தான்மாய்த லுற்ற சடவகந்தை - வான்மகிமற்
றெங்குமொன்றா யுள்ளத் தெரிஞானச் செந்தழலே
குங்குமச்சிந் தூரக் குலா.

ஆன்ம அவலோகனத்தால் அந்தர் முகப்பட்டுத் தான் மாய்தல் உற்ற சட அகந்தை வான் மகி மற்று எங்கும் ஒன்றாய் உள்ளத்து எரி ஞானச் செம் தழலே குங்குமச் சிந்தூரக் குலா.

**அவலோகனம்-பார்வை, நாட்டம்; வான்-வானுலகம்; மகி-பூவுலகம்; மற்று-மற்றுமுள்ள பாதாலம்; குலா-சிறப்பு, களிப்பு.**

யானாரென்னும் ஆன்மசோதனையால் அகமுகப்பட்ட வளவானே அழியத் தொடங்கி உதித்தவிடமாமுள்ளஞ் சேர்தலு மொருங்கழிந்த உணர்வுப் போலியா மகந்தை, மூவுலகு முற்ற ஒரேயொளிப் பிழம்பாக, ஆங்குப் பற்றி யெரியும் ஆன்ம ஞானச் செந்தழலின் அறிகுறியே செந்நிறஞ் சேர்ந்த குங்குமமாம்.

**வி-ரை:-** பாதலத்தைக் குறிக்க மற்றென்றார். ஆன்மசைதன்யமே குங்குமத்தாற் குறிக்கப்படும் தத்துவமென்பதாம். அகந்தை யழிதலும் ஆன்மஞானாகாண் டாநுபூதியுண்டாதலை,

நானா ரெனமனமுண் ணாடியுள நண்ணவே
நானா மவன்றலை நாணமுற - நானானாத்
தோன்றுமொன்று தானாகத் தோன்றினுநா னன்றுபொருள்
பூன்றமது தானாம் பொருள்.

- உள்ளது நாற்பது

என்பதனாலுணர்க.

## 38. இடபவாகனத்திறன்

### 214. படிப்படியா வெல்லாப் படிவங் களையும்
அடிப்படையா மீசனுரு வாகக் - கடைப்பிடிக்குங்
காட்சிவிளை விக்கவே காளைமுத லாம்பலவற்
றாட்சியடை வித்த தரற்கு.

படிப்படியா எல்லாப் படிவங்களையும் அடிப்படை ஆம் ஈசன் உரு ஆகக் கடைப்பிடிக்கும் காட்சி விளைவிக்கவே காளை முதலாம் பலவற்று ஆட்சி அடைவித்தது அரற்கு.

**படிவம்-உருவம்; அடைவித்தது-அடைந்துள்ளதாகப் புராணங்களிற் கூறப்படுவது; அரற்கு-சிவனுக்கு.**

அனந்த உருவங்களுக்கும் அடிப்படையாக உள்ளது ஈசனுருவே; சொரூபமே. இதை உய்த்துணரல் வேண்டி, அரனுக்கு (சிவரூபத்தில்) காளை முதலிய உபசாரமான பேத வடிவ அனுசரணைகள் (வாகனம், கொடி, படையென) ஏற்படுத்தியதாம். அவையனைத்தும் ஈசனுருவில் மறைவன.

## 39. சத்திசாந்தித்திறன்

### 215. ஆன்மவலி யான்முடிக்க லாகா வினையில்லை
ஆன்மவலி யென்ப தருள்வலியாம் - ஆன்மவலி
மாட்டாது தோள்வாள் வலிமாட்டு மென்னல்புலை
யாட்டாய மாயை யழுக்கு.

ஆன்ம வலியால் முடிக்கல் ஆகா வினை இல்லை ஆன்ம வலி என்பது அருள் வலி ஆம் ஆன்ம வலி மாட்டாது தோள் வாள் வலி மாட்டும் என்னல் புலை ஆட்டு ஆய மாயை அழுக்கு.

**மாட்டாது-முடியாது; மாட்டும்-முடியும்; புலை ஆட்டு ஆய மாயை-புலையுடலை 'நான்' என்று திருவிளையாடல் புரியும் அகங்கார மயக்கம்; அழுக்கு-குற்றம்.**

### 216. ஆற்ற லமைதிகளை யன்னியம்போல் வெவ்வேறாச்
சாற்றுவா ருள்ளபடி தாமறியார் - சாற்றும்
அகநோக்கத் தாலமைதி யாவதே யேனை
முகநோக்கத் தாலாற்ற லாம்.

ஆற்றல் அமைதிகளை அன்னியம் போல் வெவ்வேறாச் சாற்றுவார் உள்ளபடி தாம் அறியார் சாற்றும் அக நோக்கத்தால் அமைதி ஆவதே ஏனை முக நோக்கத்தால் ஆற்றல் ஆம்.

**ஆற்றல்-சக்தி; அமைதி-சாந்தி; சாற்றும்-சிறந்த சாதனை என்று கூறப்படுகின்ற; ஏனைமுகம்-புறமுகம்.**

**(குறள் வெண்பா)**

**(6) *சாந்தியதே யுண்ணோக்கிற் சத்தி புறநோக்கால்***
***ஆய்ந்தறிவார்க் கொன்றா மவை.*** **- பகவான்**

சாந்தி அதே உள் நோக்கில் சத்தி புறநோக்கால் ஆய்ந்து அறிவார்க்கு ஒன்றாம் அவை.

**(நேரிசை வெண்பா)**

**217. மிகைசா லொழுக்கம் விளையு நிலத்தில்**
**வகைசேர் தெறல்வன்மை வாய்ந்தும் - தகைமைசால்**
**எண்மையோ டேய்ந்த வியல்பே யிறைமைசேர்**
**உண்மை யுணர்வுக் கழகு.**

மிகை சால் ஒழுக்கம் விளையும் நிலத்தில் வகை சேர் தெறல் வன்மை வாய்ந்தும் தகைமை சால் எண்மையோடு ஏய்ந்த இயல்பே இறைமை சேர் உண்மை உணர்வுக்கு அழகு.

**மிகை சால் ஒழுக்கம்-மிகவும் நல்ல ஒழுக்கம்; விளையும் நிலம்-சாதகன்; தெறல் வன்மை-தண்டிக்கும் சக்தி; தகைமைசால்-தகுதியுடைய; எண்மை-எளிமை; ஏய்ந்த-பொருந்திய; இறைமை சேர்-தெய்வத்தன்மை பொருந்திய; உண்மை உணர்வு-மெய்ஞ்ஞானம்.**

## 40. மகத்தணுத்திறன்

**218. இருவேறு கோடி யிணைபடுங்காற் றம்மில்**
**உருவேறு பட்டவிரு காந்தம் - மருவும்**
**பெரிதின்பே ராற்றலே பெற்றுச் சிறிதும்**
**பெரிதினொரு பெற்றித்தே யாம்.**

இரு வேறு கோடி இணைபடுங்கால் தம்மில் உரு வேறுபட்ட இரு காந்தம் மருவும் பெரிதின் பேர்ஆற்றலே பெற்றுச் சிறிதும் பெரிதின் ஒரு பெற்றித்தே ஆம்.

**மருவும்-சேரும்; சிறிதும்-சிறிய காந்தமும்; ஒரு பெற்றித்தே-ஒரே தன்மையுடையதே.**

இது பௌதிக நூலில் காந்த இழுப்பின் தத்துவத்தை உருவக மாகக் கொண்டது. இருவேறு கோடியுள்ள காந்தங்கள் இணைபடுங்கால், சிறுகாந்தம் பெருங்காந்தத்தின் ஆற்றலே பெற்றுத் திகழ்வதுபோல, ஞானியின் சகவாசத்தால் ஞானமுறுபவன், சிறு ஆற்றல் பெற்றவனாயினும் ஞானஸ்வரூபத்தில் சமமேயாகிறான்.

# 41. சித்திவேட்கைத்திறன்

**219. யாவுமாய் நின்றதன்னை யேயுதவு மீசன்மாட்**
**டாவலா யற்பசித்தி யாசித்தல் - யாவும்**
**வழங்கு முதாரகுண வள்ளன்மாட் டற்பப்**
**பழங்கூ ழிரக்கும் பரிசு.**

யாவுமாய் நின்ற தன்னையே உதவும் ஈசன் மாட்டு ஆவலாய் அற்ப சித்தி யாசித்தல் யாவும் வழங்கும் உதாரகுண வள்ளல் மாட்டு அற்பப் பழங்கூழ் இரக்கும் பரிசு.

**இரத்தல் - யாசித்தல்; பரிசு-தன்மை.**

**220. அமிதசிதா காசசொரூ பான்மசித்த லோகத்**
**தமர்ந்துசில சித்தி யவாவல் - அமுத**
**வளங்காணு முண்டி வழங்குறுவா னத்துப்**
**புளிங்காடி வேண்டினாற் போன்ம்.**

அமித சிதாகாச சொரூப ஆன்மசித்த லோகத்து அமர்ந்து சில சித்தி அவாவல் அமுத வளம் காணும் உண்டி வழங்குறு வானத்துப் புளிங்காடி வேண்டினால் போன்ம்.

**அமித-அளவற்ற; வழங்குறு-வழங்குகின்ற; போன்ம்-போலும்.**

**221. சித்தித் தொகையொருங்கு சேர்வதாம் பாய்ந்தபர**
**பத்தித் தழற்கொழுந்து பற்றகத்தே - பத்தர்**
**உடையா னடிக்குமுற் றூணா முளத்தால்**
**அடையா ரவற்றுக் கவா.**

சித்தித் தொகை ஒருங்கு சேர்வது ஆம் பாய்ந்த பரபத்தித் தழல் கொழுந்து பற்று அகத்தே பத்தர் உடையான் அடிக்கு முற்று ஊண் ஆம் உளத்தால் அடையார் அவற்றுக்கு அவா.

**ஒருங்கு-ஒன்றாகத் திரண்டு; தழல்-அக்கினி.**

பரபக்தி நன்கு மேவிய இடத்தில் ஈசுவரனின் விபூதிப் பிரசாதத்தால், சித்திகள் தாமாகவே தொகுதியாகச் சேர்வனவாம். ஆனால் நிஜபக்தர் தாம் இறைக்கு ஊணாகும் அவாவுள்ளவராதலின் அச்சித்திகளைச் சிறிதும் விழையார்.

**222. முத்தி நெறிக்கண் முயல்சா தகர்வித**
**சித்திகளிற் சிந்தை செலுத்துவரேல் - மெத்திய**
**பந்தமேன் மேலும் பலப்படுமாற் றாலகந்தைக்**
**கந்தமேன் மேற்கொழுக்குங் காண்.**

முத்தி நெறிக்கண் முயல் சாதகர் விவித சித்திகளில் சிந்தை செலுத்துவரேல் மெத்திய பந்தம் மேல் மேலும் பலப்படும் ஆற்றால் அகந்தைக்கு அந்தம் மேல் மேல் கொழுக்கும் காண்.

**மெத்திய-மிகுந்த; அந்தம்-சிறப்பு.**

**(7) *சித்தத்தின் சாந்தியதே சித்தமா முத்தியெனிற்***
***சித்தத்தின் செய்கையின்றிச் சித்தியாச் - சித்திகளிற்***
***சித்தஞ்சேர் வாரெங்ஙன் சித்தக் கலக்கந்தீர்***
***முத்திசுகந் தோய்வார் மொழி. - பகவான்***

சித்தத்தின் சாந்தி அதே சித்தமாம் முத்தி எனில் சித்தத்தின் செய்கை இன்றிச் சித்தியாச் சித்திகளில் சித்தம் சேர்வார் எங்ஙன் சித்தக் கலக்கம் தீர் முத்தி சுகம் தோய்வார் மொழி.

**மொழி-சொல்லு.**

**223. சுத்தசிதா காச சொரூபான்மா வானநீ**
**ரத்தபா தாதியுட லத்தோடு - நித்தமெய்போல்**
**வந்துகூத் தாடு வதாமிந்த வான்சித்தி**
**விந்தையா மல்ல பிற.**

சுத்த சிதாகாச சொரூப ஆன்மா ஆன நீர் அஸ்த பாத ஆதி உடலத்தோடு நித்த மெய்போல் வந்து கூத்தாடுவதாம் இந்த வான் சித்தி விந்தை ஆம் அல்ல பிற.

**அத்த பாதாதி-கை, கால் முதலிய; வான் சித்தி-பெரிய சாமர்த்தியம்.**

விந்தையினும் விந்தையாதெனின் சித்ஜடக்கிரந்தியே எனலாம். சுத்த சிதாகாச சொரூபியாகிய ஆத்மா ஜடவுடலைத் தானெனப் பிரமித்து, என்று மில்லாத இச்சங்கத்தினால் மெய்போல் தோற்றும் சரீர ஜீவனாய்க் கூத்தாடுவதே விந்தை யென்றார்.

**224. முத்தி விலாச முழுமுதலாந் தன்சொருப**
**சித்தியே மெய்ஞ்ஞான சித்தியன்றி - மத்தமனக்**
**கற்பனா சத்திக் கலக்கத்திற் சேர்ந்தனவே**
**மற்றவணி மாதி வகை.**

முத்தி விலாச முழுமுதலாம் தன்சொருப சித்தியே மெய்ஞ்ஞான சித்தி அன்றி மத்த மனக் கற்பனா சத்திக் கலக்கத்தில் சேர்ந்தனவே மற்ற அணிமாதி வகை.

**224 *இந்திர ஜாலிகனுந் தான்மயக்க மெய்தாம***
***a லிந்தவுல கர்க்குமய லேய்விப்பான் - மைந்தனே***
***சித்தனோ தான்மயங்கிச் சேர்க்குமய லிவ்வுலகர்க்***
***கெத்தனை விந்தை யிது.***

***- பகவான்***

இந்திர ஜாலிகனும் தான் மயக்கம் எய்தாமல் இந்த உலகர்க்கு மயல் ஏய்விப்பான் மைந்தனே சித்தனோ தான் மயங்கிச் சேர்க்கும் மயல் இவ் உலகர்க்கு எத்தனை விந்தை இது.

## 42. அமுதநிலைத்திறன்

**225. ஆர்த்திதரு மெய்யுணர்வின் பாந்தன் னமுதவியல்
வேத்தியமா காதுமறை வித்தபாழ் - ஊத்தைப்
புலையாடு பேயகந்தை பொன்றினார்க் கேயாம்
தொலையா வமுதத் துவம்.**

ஆர்த்தி தரும் மெய் உணர்வு இன்பு ஆம் தன் அமுத இயல் வேத்தியம் ஆகாது மறைவித்த பாழ் ஊத்தைப் புலை ஆடு பேய் அகந்தை பொன்றினார்க்கே ஆம் தொலையா அமுதத்துவம்.

**ஆர்த்தி - விருப்பம்; வேத்தியமாகாது-அறியமுடியாமல்;
பொன்றினார்க்கு-அழிந்தவர்கட்கு; தொலையா-அழியாத.**

**226. ஏதிலுடம் பேதன்மெய் யென்னுமோ கத்தானே
சாதல்பிறப் புத்தனக்குச் சார்ந்தனவாம் - ஆதலால்
அந்தமா மோக மழிந்தளவே யெய்தியதாம்
சொந்த வமுதத் துவம்.**

ஏது இல் உடம்பே தன் மெய் என்னும் மோகத்தானே சாதல் பிறப்புத் தனக்குச் சார்ந்தனவாம் ஆதலால் அந்த மாமோகம் அழிந்த அளவே எய்தியது ஆம் சொந்த அமுதத்துவம்.

**ஏதில்-அன்னியமான; அழிந்தளவே-அழிந்த பொழுதுதான்.**

**227. அயலொன்று தேக மகமென்று தோன்றும்
மயலன்றி யில்லை மரணம் - மயலொன்
றகந்தையழிந் தொன்று மபேதஞா னான்ம
சுகந்தா னமுதத் துவம்.**

அயல் ஒன்று தேகம் அகம் என்று தோன்றும் மயல் அன்றி இல்லை மரணம் மயல் ஒன்று அகந்தை அழிந்து ஒன்றும் அபேதஞான ஆன்ம சுகம் தான் அமுதத்துவம்

**அயல் ஒன்று-வேறாக உள்ள; ஒன்று-சேர்ந்த.**

(ஆசிரிய விருத்தம்)

227 *திக்குகா றேய மாதி தேடாதெங் கும்ப ரந்தே*
a *யக்குளி ராதி போக்கு மகளங்க நித்யா னந்த*
*மிக்கொளி ரான்ம தீர்த்தம் வினையறப் படிவன் யாவ*
*னக்கரன் விபுவா யெல்லா மறிந்தவ னமுத னாவான்.*
*- பகவான்*

திக்கு கால் தேயம் ஆதி தேடாது எங்கும் பரந்தே அக்குளிர் ஆதி போக்கும் அகளங்க நித்ய ஆனந்த மிக்கு ஒளிர் ஆன்ம தீர்த்தம் வினை அறப் படிவன் யாவன் அக்கரன் விபுவாய் எல்லாம் அறிந்து அவன் அமுதன் ஆவான்.

(நேரிசை வெண்பா)

**228. இந்தச் சரீரமே யானென் றிருக்குமவன்**
**அந்தச் சரீர வழிவஞ்சிச் - சிந்தைதனை**
**ஆய்ந்துணர்ந்தான் மாவா யழிந்தொழிந்தா லன்றிமற்**
**றேய்ந்திடுமோ சாவா வியல்பு.**

இந்தச் சரீரமே யான் என்று இருக்கும் அவன் அந்தச் சரீர அழிவு அஞ்சிச் சிந்தைதனை ஆய்ந்து உணர்ந்து ஆன்மா ஆய் அழிந்து ஒழிந்தால் அன்றி மற்று ஏய்ந்திடுமோ சாவா இயல்பு.

இவ்வுடலே யானென்று ஆணவத்தாற் கட்டுண்டிருக்கு மவன் அறியாமையாற் றன்னழிவாக மயங்கும் அவ்வுடலழிவை யஞ்சி உண்முகப்பட்ட வுணர்வால் யானாரெனத் தன்னை யாய்ந்து உளம்புக்கு அமுதமயமா மான்மவுண்மை யொழியத் தனக் கென்றோருண்மை இன்மையுணர்ந்து அவ்வான்மாகாரமாய்ச் சிந்தையழிந் தொழிந்தா லொழிய எவற்கும் சாவாநிலை யெய்துமோ?

**229. சித்த விகாரத் தியக்கமறு மெய்த்தெளிவே**
**புத்தமுத மாகமனம் போற்றுக - சுத்த**
**உணர்வா மதனை யொழிந்தபிறி தாலே**
**தணவாதுண் மோகமாஞ் சாவு.**

சித்த விகாரத் தியக்கம் அறு மெய்த் தெளிவே புத்தமுதம் ஆக மனம் போற்றுக சுத்த உணர்வு ஆம் அதனை ஒழிந்த பிறிதாலே தணவாது உள் மோகம் ஆம் சாவு.

**தியக்கம் - தடுமாற்றம், மயக்கம்; புத்தமுதம்-புதிய (சிறந்த) அமிர்தம்; ஒழிந்த-தவிர்ந்த; தணவாது-நீங்காது.**

# 43. காயகற்பத்திறன்

**230. ஊறுபடு மாயமா யுற்றழிப வும்பொருளாக்
கூறலுப சாரமுறைக் கூற்றேகாண் - தேறும்
அறுதியாய் மிக்கமெய் யான்மவுணர் வொன்றே
உறுதிப் பொருளா முணர்.**

ஊறுபடு மாயமாய் உற்று அழிபவும் பொருளாக் கூறல் உபசார முறைக் கூற்றேகாண் தேறும் அறுதியாய் மிக்க மெய் ஆன்ம உணர்வு ஒன்றே உறுதிப் பொருளாம் உணர்.

**ஊறுபடு-கண்டப்படுகின்ற; அறுதியாய்-முடிவாய்.**

மாயமாய்த் தோன்றி மாயும் ஊனமுளவற்றையும் உறுதிப் பொருள்களாகக் கூறல், உபசார வழக்குப் பற்றிக் கூறுதலாம். யாவராலும் அறியவேண்டிய முடிவாய்ச் சிறந்த ஆன்ம ஞான வடிவான அரும்பெறல் வீடொன்றே உறுதிப் பொருளாம்.

**வி-ரை:-** அர்த்த காமங்களே யன்றி அறந்தானும் அனுபவத்தா லழிவதாக, அதற்கு முற்றிலும் மாறாய், ஆன்ம ஞானானுபவம் அவதியின்றி மேன்மேல் வளர்தலால் அதன் வடிவான சதா முத்தி யொன்றே சாசுவத மாதலின், அதனை மெய் யென்றே கூறினார்.

உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச்
சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ்
வாயிக் கொடியிடைதோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும்
போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல்
போல வளர்கின்றதே.

- திருக்கோவையார்.

ஆன்மஞானம் சாதன தசையில் வீடுபேற்றுக்குக் கருவியாதலே யன்றிச் சாத்திய தசையில் அது தானே அதன் சொரூபமாம்.

**231. அடுத்தடுத்து மூளு மகந்தையதன் மூலத்
திடத்தொடுக்க மாக விலங்கும் - வடித்தெடுத்த
உண்மைத் தெளிவா முயரான்ம ஞானமே
உண்மையாங் கற்ப முணர்.**

அடுத்து அடுத்து மூளும் அகந்தை அதன் மூலத்து இடத்து ஒடுக்கம் ஆக இலங்கும் வடித்து எடுத்த உண்மைத் தெளிவு ஆம் உயர் ஆன்ம ஞானமே உண்மை ஆம் கற்பம் உணர்.

**ஆக இலங்கும்-ஆகியபிறகு விளங்குகின்ற.**

## 44. காயசித்தித்திறன்

**232. பிணியா மனைத்தும் பிறப்பிக்கு மூலப்**
**பிணியா முடற்பெற்றி தேறார் - பிணியை**
**வெருவாது வேண்டி விழற்கிறைப்பார் போல**
**உருவசித்தி வேண்டியுழல் வார்.**

பிணி ஆம் அனைத்தும் பிறப்பிக்கும் மூலப் பிணி ஆம் உடல் பெற்றி தேறார் பிணியை வெருவாது வேண்டி விழற்கு இறைப்பார் போல உருவ சித்தி வேண்டி உழல்வார்.

**பெற்றி-தன்மை; தேறார்-அறியாதோர்; வெருவாது-வெறுக்காமல்; உருவ சித்தி-உடலழியாமை, காயசித்தி.**

**233. அடும்பிணிகட் கெல்லா மடிப்படையாய் நின்ற**
**விடம்படுமாங் காரப்பாழ் வீணர் - உடம்பு**
**வலுப்படற்கா நோய்வலுக்க மாமருந்துண் பார்போற்**
**சலிப்பறத்தாஞ் செய்வார் தவம்.**

அடும் பிணிகட்கு எல்லாம் அடிப்படையாய் நின்ற விடம் படும் ஆங்காரப் பாழ்வீணர் உடம்பு வலுப்படற்கா நோய் வலுக்க மாமருந்து உண்பார்போல் சலிப்பு அறத் தாம் செய்வார் தவம்.

**விடம்படும்-விஷம் போன்ற தீமை தரும்; வீணர்-பயனற்றவர்கள்; சலிப்பு அற-களைக்காமல்.**

**234. வருந்தித்தாம் வேண்டி வறுமையடைந் தாற்போற்**
**றிருந்தப் பலகாலஞ் செய்த - அருந்தவத்தாற்**
**பூன்றமா மோனம் பொருந்தா துடலகந்தை**
**ஊன்றலாந் திண்பே துறவு.**

வருந்தித் தாம் வேண்டி வறுமை அடைந்தால் போல் திருந்தப் பல காலம் செய்த அரும் தவத்தால் பூன்றம் ஆம் மோனம் பொருந்தாது உடல் அகந்தை ஊன்றல் ஆம் திண் பேதுறவு.

**ஊன்றல்-ஸ்திரப்படுத்திக் கொள்ளுதல், விரும்புதல்; திண்-வலிய; பேதுறவு-அறியாமை.**

**235. வாழ்க்கையா மிஃது மனோமயமாய் மெய்ஞ்ஞானத்**
**தூழ்க்கையா லுள்ளுவார்க் குண்மையன்றே - தாழ்க்கையா**
**லாருயிர்க்கு மிக்க வனர்த்தமே யன்றியதிற்**
**காரியமற் றேதுமிலை காண்.**

வாழ்க்கை ஆம் இஃது மனோமயமாய் மெய்ஞ்ஞானத்து ஊழ்க்கையால் உள்ளுவார்க்கு உண்மை அன்றே தாழ்க்கையால் ஆர் உயிர்க்கு மிக்க அனர்த்தமே அன்றி அதில் காரியம் மற்று ஏதும் இலை காண்.

**ஊழ்க்கை-முதிர்ச்சி; உள்ளுவார்க்கு-நோக்குவோர்க்கு; தாழ்க்கையால்-நீடித்துத் தங்கியிருக்க வைப்பதால்; அனர்த்தம்-தீமை.**

## 45. வைராக்கியத்திறன்

**236. கோரிக்கை வேண்டிக் குவலயத்தோர் நின்னுள்ளம்**
**பூரிக்க நல்கும் புகழ்பூசை - வீரியத்தோ**
**டாண்டதவத் தோயை யகப்படுக்க மாயையிடு**
**தூண்டிற்பொன் னாகத் துணி.**

கோரிக்கை வேண்டிக் குவலயத்தோர் நின் உள்ளம் பூரிக்க நல்கும் புகழ் பூசை வீரியத்தோடு ஆண்ட தவத்தோயை அகப்படுக்க மாயை இடு தூண்டில் பொன் ஆகத் துணி.

**குவலயத்தோர்-உலகத்தோர்; பூரிக்க-மகிழ; நல்கும்-கொடுக்கும்; வீரியம்-வைராக்கியம்; அகப்படுக்க-பிடிக்க; துணி-அறிக.**

**237. இம்மை மறுமையிரண் டின்பங் களினுமுவர்ப்**
**பெம்மனிதர் தம்மு ளியல்பேயாய் - உம்மையுள**
**திண்மையுறு பாக்கியத்தாற் சேரு மவர்க்கெளிதின்**
**உண்மை யுணர்ச்சி யுறும்.**

இம்மை மறுமை இரண்டு இன்பங்களினும் உவர்ப்பு எம்மனிதர் தம்முள் இயல்பேயாய் உம்மை உள திண்மை உறு பாக்கியத்தால் சேரும் அவர்க்கு எளிதின் உண்மை உணர்ச்சி உறும்.

**இம்மை மறுமை-இவ்வுலக மறு உலகம்; உவர்ப்பு-வெறுப்பு; உம்மை-முற்பிறப்பு.**

**238. சுகபோத சாந்தி சொரூபத்தி லன்றி**
**யிகமோக வாழ்க்கையிலின் றென்றே - தகவோர்ந்து**
**மோனப் பதமா முடிந்த சொரூபவருள்**
**வானமாம் போதம் மருவு.**

சுக போத சாந்தி சொரூபத்தில் அன்றி இக மோக வாழ்க்கையில் இன்று என்றே தகவு ஓர்ந்து மோனப் பதமா முடிந்த சொரூப அருள் வானம் ஆம் போதம் மருவு.

**சுகபோதம்-அறிவின்பம்; தகவு ஓர்ந்து-தக்கதை உணர்ந்து; போதம்-ஞானம்.**

**239. உன்னொடுநட் புப்பூண் டொழுகுங் கெழுதகைமை**
**துன்னுமெனை யென்றுந் துறவாதே - துன்னுமயல்**
**ஆசையற வெற்றி யறிவுச் சுடர்கொளுத்தும்**
**நேசவயி ராக்கியமே நீ.**

உன்னொடு நட்புப் பூண்டு ஒழுகும் கெழுதகைமை துன்னும் எனை என்றும் துறவாதே துன்னும் மயல் ஆசை அற எற்றி அறிவுச் சுடர் கொளுத்தும் நேச வயிராக்கியமே நீ.

**கெழுதகைமை-உரிமை; துன்னும்-சேருகின்ற; துறவாதே-விலக்காதே; எற்றி-அழித்து; நேச-அன்பான.**

**240. பேயொடுநட் டாலும் பிரிவரிதே லெம்மையினும்**
**தீயிடரொட் டாதுறுதி சேர்ப்பிப்பாய் - ஆயகுண**
**நல்லாயுன் னட்புரிமை நானிழக்க நேரினது**
**பல்லார் பகையிற் பழுது.**

பேயொடு நட்டாலும் பிரிவு அரிதேல் எம்மையினும் தீ இடர் ஒட்டாது உறுதி சேர்ப்பிப்பாய் ஆய குண நல்லாய் உன் நட்பு உரிமை நான் இழக்க நேரின் அது பல்லார் பகையில் பழுது.

**நட்டாலும்-சிநேகித்தாலும்; அரிது-கஷ்டம்; எம்மையினும்-எப்பிறப்பிலும்; தீ-தீய; உறுதி-உறுதிப்பொருளில்; பல்லார்-பலர்; பகையில்-பகைமையைவிட; பழுது-கெடுதலாகும்.**

**241. எவ்வெக் கருத்தெழினு மெட்டுணையு முய்யவிடா**
**தவ்வக் கருத்துமுழு தக்கணமே - தவ்வைத்**
**தளர்ச்சியுறா துற்பத்தித் தானத்தே சாய்த்தல்**
**கிளர்ச்சிதரு வைராக் கியம்.**

எவ்வெக் கருத்து எழினும் எள் துணையும் உய்யவிடாது அவ்வக் கருத்து முழுது அக்கணமே தவ்வைத் தளர்ச்சி உறாது உற்பத்தித் தானத்தே சாய்த்தல் கிளர்ச்சி தரு வைராக்கியம்.

**உய்ய-வாழ, இருக்க; தவ்வை-மூதேவி, சோம்பல்; கிளர்ச்சிதரு-தீவிர.**

**242. விந்தையா மான்ம விசாரத்தால் வாதனைதாம்**
**சிந்தையர ணின்றுவெளிச் சேர்தோறும் - அந்தத்**
**தொகைபடுதெவ் வோரைத் துடைத்துவரி னீற்றிற்**
**பகையரணந் தன்கைப் படும்.**

விந்தை ஆம் ஆன்ம விசாரத்தால் வாதனை தாம் சிந்தை அரண் நின்று வெளிச் சேர்தோறும் அந்தத் தொகைபடு தெவ்வோரைத் துடைத்துவரின் ஈற்றில் பகை அரணம் தன் கைப்படும்.

**சிந்தை அரண்-சித்தம் எனப்படும் கோட்டை; வெளிச்சேர் தோறும்-வெளியில் வரும்போது; தொகைபடு-எண்ணிக்கையில் மிகுந்த; தெவ்வோர்-பகைவர்கள்; துடைத்துவரின்-அழித்துவந்தால்; ஈற்றில்-கடைசியில்.**

## 46. ஞானவைராக்கியத்திறன்

**243. ஏன்றவுல கோர்வா னினுமயலா யற்றாகத்**
**தோன்றாமை ஞானத் துலக்கமாம் - ஊன்றியுளம்**
**பற்றலற விவ்வுலகைப் பாழா மதித்துத்தான்**
**எற்றல் வயிராக் கியம்.**

ஏன்ற உலகு ஓர்வானினும் அயலாய் அற்று ஆகத் தோன்றாமை ஞானத் துலக்கம் ஆம் ஊன்றி உளம் பற்றல் அற இவ்வுலகைப் பாழா மதித்துத் தான் எற்றல் வயிராக்கியம்.

**ஓர்வான்-காண்பான், அறிபவன்; அற்றாக-அவ்வாறே அன்னியமாக; எற்றல்-விலக்குதல்.**

## 47. சித்தமாட்சித்திறன்

**244. பளிங்கின்கண் ணேசெம் பரத்தநிறம் போல**
**விளங்கத்தி யாச விடயக் - களங்காம்**
**தகரமறு சித்தந் தனிப்பரசச் சித்தாம்**
**தகரமா யாவா சகம்.**

பளிங்கின்கண்ணே செம்பரத்த நிறம் போல விளங்கு அத்தியாச விடயக் களங்கு ஆம் தகரம் அறு சித்தம் தனிப் பர சத் சித்து ஆம் தகரம் மாயா வாசகம்.

**அத்தியாசம்-சேர்க்கை, ஒன்றின் குணம் மற்றொன்றிற் காணப்படுதல்; விடயக் களங்கு-ஐம்புல விஷய தோஷம்; தகரம்-'த' என்ற எழுத்து, 'தம்'-மாயையைக் குறிக்கும் சொல் என்பது கருத்து.**

பளிங்கின்கண் விடய பிரதிபிம்பத்தால் செம்மை முதலிய நிறங்கள் தோன்றினாலும், அப்பளிங்கு தன்மயம் மாறலின்றித் தோடமுறாதது போல், கேவல சித்தின்கண் விடயக் களங்கங்கள் தோன்றினும், அது மாசு படுவதன்று; தனித் தகராகாசமாகவே விளங்கும்.

## 48. சித்தசுத்தித்திறன்.

### 245. உளப்பாடு சான்றவுயி ரோவியத்திற் றெய்வ
### வெளிப்பாடென் றான்றோர் வியப்பர் - களிப்பால்
### மிகத்தீமை செய்யும்பல் வேறெழில்கள் போலா
### தகத்தூய்மை யேமெய் யழகு.

உளப்பாடு சான்ற உயிர் ஓவியத்தில் தெய்வ வெளிப்பாடு என்று ஆன்றோர் வியப்பர் களிப்பால் மிகத் தீமை செய்யும் பல் வேறு எழில்கள் போலாது அகத்தூய்மையே மெய் அழகு.

**உளப்பாடு-உண்மை; சான்ற-மிகுந்த; உயிர் ஓவியம்-மனிதன், புருடன்.**

மயக்கக் களிப்புண்டாக்கி அதன் வாயிலாய் உயிர்க்கு மிகத்தீமை செய்யும் பலவாய மற்றையழகுகள் போலன்றி ஞானானந்த நல்கலான், ஆன்ம சைதன்யம் அவிர்ந்து விளங்கும் உளத்தூய்மையே உண்மையழகாம். ஆதலான் உண்மை மிக்க உயிர் பெற்ற வோவியத்தின் கண் தெய்வத் தன்மை வெளிப்படுதல் என்று அதனை யான்றோர் கொண்டாடுவர்.

**வி-ரை:-** இம்மையினன்றி மறுமைக்கண்ணும் ஆருயிரை அருநிரயத் தாழ்த்தலான், மிகத் தீமை செய்யும் என்றார். பல்வேறெழில்கள் தனக்கயலாய் நின்று ஐம்புலன்களையும் அறக்கவரும் கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியும் விஷம விஷயங்கள்.

### 246. அகத்தழகல் லாது புறத்தழகு காணின்
### மிகுத்தழிவு பாடே விளையும் - முகத்தின்
### எரிசுடரை விட்டிலிச் சித்தலொடு நாகம்
### விரிபெடையோ டாடும் விதம்.

அகத்து அழகு அல்லாது புறத்து அழகு காணில் மிகுத்து அழிவுபாடே விளையும் முகத்தின் எரிசுடரை விட்டில் இச்சித்தலொடு நாகம் விரிபெடையோடு ஆடும் விதம்.

**விரிபெடை-விரியன் பாம்பின் பெண் இனம்.**

அறிவா லகத்தழகு கண்டமைவதன்றி, வடிவழகிதாய்ப் படர்ந் தெரியுஞ் சுடர்க் கொழுந்தை விட்டில் விழைந்து வீழ்ந்தாற் போன்றும், நாகம் விரியன் பெடையை விழைந்து கூடினாற் போன்றும் பொறிகளாற் புறத்தழகே கண்டு மோகிப்பின், அவற்றுக்கவை போன்று அவனுக் கதுவும் அனர்த்தமே விளைக்கும்.

**வி-ரை:-** அகத்தழகு-தெளிந்த மனத்திற் சேர்ந்து விளங்கும் ஆன்ம சைதன்ய வழகு. புறத்தழகு - உடலுறுப்புக்களாலும் ஆடை யாபரணங்களாலும் உளதாகும் புறப்பொலிவு. அவ்விரண்டுள் உயிரைப் பற்றி நின்ற முன்னையது அதற் குறுதி பயப்பதாக, அதனோடு கலவாவிடின், ஏனை யுடலையே பற்றிநின்ற பின்னையது அதன் கேட்டுக்கே காரணமாம்.

## 49. மிருத்தியுத்திறன்

**247. உழுவலன் புக்கிடனா வுற்றபே ரின்பாய்
விழுமியமெய்ஞ் ஞான விசும்பாய் - எழுவாய்
அழிவிலா வான்மநிலை யாம்பூன்ற நின்று
நழுவலே காலனென நாடு.**

உழுவல் அன்புக்கு இடனா உற்ற பேர் இன்பாய் விழுமிய மெய்ஞ் ஞான விசும்பாய் எழுவாய் அழிவு இலா ஆன்ம நிலையாம் பூன்றம் நின்று நழுவலே காலன் என நாடு.

**உழுவல் அன்பு-ஏழ் பிறப்பும் தொடர்ந்து வரும் நாயகன் நாயகி உறவு; இடன்-இடம்; விழுமிய-சிறந்த; எழுவாய்-மூலம் அல்லது எழுதல்.**

**248. கருவைக்காத் தேங்குங் கலக்கத்துக் கேது
குருவைக்காத் தந்தக் குருவின் - திருவருளால்
ஓர்ந்து பிரிவை யுணர்ந்திறுகத் தன்னைத்தான்
சேர்ந்து கிடக்கை சிறப்பு.**

கருவைக் காத்து ஏங்கும் கலக்கத்துக்கு ஏது குருவைக் காத்து அந்தக் குருவின் திரு அருளால் ஓர்ந்து பிரிவை உணர்ந்து இறுகத் தன்னைத் தான் சேர்ந்து கிடக்கை சிறப்பு.

**ஏது-காரணம்; குருவைக் காத்து-குருவுக்குச் சேவை செய்து; ஓர்ந்து-உணர்ந்து.**

சற்குருவையே தஞ்சமாகச் சார்ந்து, அகந்தை வடிவாய்த் தானலமரலால் ஆன்ம சொரூபமாமிறைவனிலும் தன்னை வேறு போலக் கருதும் பின்ன மதியே, பிறப்பையே பேணித் தானிடைவிடாது கலங்குங் கலக்கத்தின் காரணமாக வோர்ந்து, அதனை மாற்று முபாயத்தையும் அவனாலுணர்ந்தாற்றி, அன்னான் செய்யுந் திருவருளால் நிரகங்கார சொரூபமா மான்மாவைத் திடம்படச் சேர்ந்து மோனமுற நிற்றலே, ஒருவர்க்கேற்றமாம்.

**வி-ரை:-** அந்தக் குருவென்பது அவனென்னுஞ் சுட்டு மாத்திரமாய் நின்றது.

## 50. உயிர்நிலைத்திறன்

**249. சூதலா வுள்ளத்தே தோய்தலா லாருயிர்தன்
வாதனையு மாங்கே வதிவதலால் - மீதலமாம்
மூளைக்கே மூண்டு கிடக்குமேன் மூளையொடு
மாளாதோ வாதனைதான் மற்று.**

சூது அலா உள்ளத்தே தோய்தலால் ஆருயிர்தன் வாதனையும் ஆங்கே வதிவது அலால் மீதலம் ஆம் மூளைக்கே மூண்டு கிடக்குமேல் மூளையொடு மாளாதோ வாதனைதான் மற்று.

**சூதலா-பொய்யில்லாத; வதிவது-வசிப்பது; மீதலம்-மேலே.**

**250. குண்டலியா மங்கிக் கொழுந்துமே னோக்கலால்
மண்டையமு துங்கீழே வார்தலால் - அண்டர்
மதியமுதத் துக்குமதஞ் செய்குண் டலிக்கும்
இதயமே மூலமென் றெண்.**

குண்டலி ஆம் அங்கிக் கொழுந்து மேல் நோக்கலால் மண்டை அமுதும் கீழே வார்தலால் அண்டர் மதி அமுதத்துக்கும் மதம் செய் குண்டலிக்கும் இதயமே மூலம் என்று எண்.

**வார்தல்-இறங்குதல், வழிதல்; அண்டர்-தேவர்; மதம் செய்-வீரியம் மிக்க.**

**251. எவ்வெவ் வயிற்றன்னை யெண்ணினா னெண்ணியாற்
கவ்வவ் வயிற்றா னமர்ந்ததா - அவ்வெணத்தாற்
றோற்றிடினு நானெனுமத் தோன்றற் கிலயத்தும்
போற்றுமுளந் தானே புகல்.**

எவ்வெவ் வயில் தன்னை எண்ணினான் எண்ணியாற்கு அவ் அவ் வயில் தான் அமர்ந்ததா அவ் எணத்தால் தோற்றிடினும் நான் எனும் அத் தோன்றற்கு இலயத்தும் போற்றும் உளம் தானே புகல்.

**எவ்வெவ்வயில்-எவை எவையில், எந்தெந்தச் சக்கரங்களில்; தோன்றல்-எழுச்சி.**

**252. எவ்வவத் தைக்குமிட னென்னுமுளத் தன்னைவிடுத்
தெவ்வெவ் வயிற்றன்னை யெண்ணுவான் - அவ்வவ்
வயிற்போ யிலயித்து மாழ்கலல் லாலோர்ந்
துயப்போவா னல்ல னுளத்து.**

எவ் அவத்தைக்கும் இடன் என்னும் உளத் தன்னை விடுத்து எவ்வெவ்வயில் தன்னை எண்ணுவான் அவ் அவ் வயில்போய் இலயித்து மாழ்கல் அல்லால் ஓர்ந்து உயப்போவான் அல்லன் உளத்து.

**உயப்போவான்-உய்வு அடையப் போகிறவன்.**

## 51. இதயத்திறன்

**253. தள்ளத் தகுவதொடு கொள்ளத் தகுவதுமா
விள்ளப் படுமிதயம் வெவ்வேறாம் - எள்ளும்
புலவிடய மாகப் பொருந்துமுதன் மார்பின்
றலமிடது பக்கஞ் சடம்.**

தள்ளத் தகுவதொடு கொள்ளத் தகுவதுமா விள்ளப் படும் இதயம் வெவ்வேறு ஆம் எள்ளும் புல விடயமாகப் பொருந்தும் முதல் மார்பின் தலம் இடது பக்கம் சடம்.

**விள்ளப்படும்-சொல்லப்படும்; எள்ளும்-இகழத் தகுந்த.**

**254. உள்ளும் புறமு முறப்போர்த் தொளிரிதயம்
தெள்ளியோர் தேறவலஞ் சேர்வதாம் - எள்ளும்
உடன்மயமா மூடர்க்கே யூன்மயமாய் மார்பத்
திடமுகமா யேய்விதய மெண்.**

உள்ளும் புறமும் உறப் போர்த்து ஒளிர் இதயம் தெள்ளியோர் தேற வலம் சேர்வதாம் எள்ளும் உடல் மயமாம் மூடர்க்கே ஊன்மயமாய் மார்பத்து இடமுகமாய் ஏய்வு இதயம் எண்.

**உறப்போர்த்து-இருக்கும்படியாகச் சூழ்ந்து; தேற-அறிவதாக; ஏய்வு-இருக்கும்.**

அகண்டாகார விருத்தியால் அகம் புறமும் வியாபித்து விளங்கும் இதயம் அறிஞர்க் கனுபவமாக மார்பின் வலப்பால் வைகுவதாம். இகழப்படும் தேகான்ம புத்தியேய்ந்த மூடர்க்கே இதயம் மாம்ச பிண்டமாய் நெஞ்சினிடப் பாலியல்வதாம்

The wise man's heart is at his right hand
but a fool's heart at his left.
Ecclesiastes X-2

**255. உயிரின் கிழவோ னுடம்பிலித யத்தே
செயிர்தீரச் சேர்ந்துகிட வானேற் - பயில்வதேன்
யாவருநா னென்னும்போ தவ்விதயஞ் சேர்வலது
மார்வந்தாந் தட்டும் வழக்கு.**

உயிரின் கிழவோன் உடம்பில் இதயத்தே செயிர் தீரச் சேர்ந்து கிடவானேல் பயில்வது ஏன் யாவரும் நான் என்னும்போது அவ் இதயம் சேர் வலது மார்வம் தாம் தட்டும் வழக்கு.

**கிழவோன்-உடையவன்; செயிர் தீர-குற்றமற; சேர்ந்து கிடவானேல்-வீற்றிராவிட்டால்.**

**256. அனைத்துந்தோன் றுந்நிலைக்கண் ணாடியென லாகும்
இனைத்தெனலா காமெய் யிதயம் - தனித்தொளிரும்
வெற்றுணர்வாய் விஞ்சு விமலவெளி யாமஃதே
முற்றுமுழு மோன முதல்.**

அனைத்தும் தோன்றும் நிலைக் கண்ணாடி எனல் ஆகும் இனைத்து எனல் ஆகா மெய் இதயம் தனித்து ஒளிரும் வெற்று உணர்வாய் விஞ்சு விமல வெளியாம் அஃதே முற்று முழு மோன முதல்.

**இனைத்து-இத்தகையது; விஞ்சும்-கடந்து விளங்கும்; விமல வெளி-பரிசுத்த ஆகாயம்.**

## 257. இதயக் கருவே யெவற்றுக்கு மாதி
## இதயக் கருவே யிடையும் - இதயக்
## கருவே யிறுதி கனவிசும் பாமஃ
## துருவேயன் றுண்மை யொளி.

இதயக் கருவே எவற்றுக்கும் ஆதி இதயக் கருவே இடையும் இதயக் கருவே இறுதி கன விசும்பாம் அஃது உருவே அன்று உண்மை ஒளி.

**கரு-ஆதாரம், மூலம், நடு; கன விசும்பு-பராகாசம்; உண்மை ஒளி-சத்து சித்து; ஒளி-ஸ்வப்பிரஜ்ஞை (ஒரு வெளிச்சமல்ல).**

**பாடல் 257, 260 க்கும் ஆன உரை இது.** அகந்தை யுதிக்குமிடமாமிதயமே அஃதொழிந்த அகில சராசரங்கட்கும் தோன்றி நின்றொடுங்குமிடமாம். ஆதலால் அதுதான் பாமரர் கருதுமாறு வடிவமாதலின்றாம். பூரணமான உண்மை விளக்கமாம் பரமாகாயமே அதுவாம்.

எழும்புமகந்தை யெழுமிடமாம் அவ்விதயத்தை 'யானா' ரென்னும் அந்தர்முக விசாரத்தா லறிந்தடைந்தோர், அகந்தை யழிதலால், அதனை யாசிரயித்த பந்தமதியாந் தொந்த நினைப்பறவே கெட்டு, அதற்கடியாய் நின்ற அவிச்சை யிருளும் முற்ற நசித்து அநாதிமல முத்தமான அவ்விதயமாம் பரமான்ம சொரூபம் தாமே யாயினோர். அவர்தாம் தம் முள்ளே உண்மையான பேரின்ப வெழுச்சி யுற்றோராதலால் அந்நிலையே பிறவித் துன்பத்தினின்றும் பேர்ந்தோராவர்.

**வி-ரை:-** ''அகந்தையுண்டாயி னனைத்து முண்டாகும், அகந்தை யின்றே லின்றனைத்தும் அகந்தையே யாவுமா'' மாதலின் அதன் வாயிலாய் அவ்வனைத்துந் தன்மாட்டுத் தோன்றி நின்றொடுங்கப் பெறுதல், இதயந் தான் எத்துணைப் பெரியதாயினும் வடிவாயிற் பரிச்சின்னப் படுதலின் அதுதான் அறிவுருவாஞ் சூக்கப் பொருளா யிருப்பினன்றிக் கூடாமையின் கனவிசும்பாமஃதுருவே யன்றுண்மையொளி எனக் கூறினார். பிரித்துக் காட்டப்பட்ட ஏகாரம் தேற்றம். இதயமே பரமாதலாலும், அதனை யறிந்தோ ரதுவே யாதலாலும், இதயத்தை யறிந்தார் பரமானார் என்றார். மோக மென்றது ஆவரணத்தையும் தொந்த நினைப்பென்றது விக்கேபத்தையும் எனவறிக. அவ்விக்கேபத்தின் கருவாய் இதயத்துளையுளேய்ந்த அவிச்சையிருளிற் பந்த வேதுவாய்ப் பதிந்து கிடக்கும் பழவாதனைத் தொகுதி சாதி யேக வசனத்தாற் பந்தமதியெனப்பட்டது. வாசனையே நினைப்பாய்ப் பரிணமித்தலால் அவ்வொற்றுமை நோக்கிப் பந்த மதியாந் தொந்த நினைப்பென ஒன்றேயாக உரையிற் கூறப்பட்டது. இதயத்தை யறிதல்-இதயக்கிரந்தி பேதமாகக் காண்டல். ''அதன் முக மிக லுள தக முள சிறுதுளை யதனிலா சாதியொ டமர்ந்துள திருந்தமம்'' (உள்ளது நாற்பது அநுபந்தம் 19) என்றபடி தன்னகத்துளையுள் அவிச்சை யிருளும் வாசனைத் திரளும் உறைதற் கிடனாய் ஆம்பலரும் பென முன் குவிதலாயிருந்த இதயம், கிரந்தியற்றதும் அவை யாவும் ஒருங்கழிய மலர்ந்து கன விசும்பாம் உண்மை யொளியா யொளிரு நிலையே பரமுத்தியாம்.

அது பேரின்ப மயமாய்ப் பிறங்கலால் உள்ளே நிஜ பரமானந்த முனைப்புற் றாரெனவும், ஆங்குப் பேதைமையா லெய்தும் பிறவித்துன்பத்துக்கிட னின்மையின் அவலமுறா ரெனவுங் கூறினார். உள்ளே யுற்ற பந்த மதியாந் தொந்த நினைப்பெனக் கூட்டலுமாம். தொந்த நினைப்பு-இன்பு துன்பு, இருளொளி யென்றாற் போன்ற விரட்டை யெண்ணங்கள்: அவைதாம் ஒருவன்றுன்புறுதற் கேதுவாகப் பண்டை வாதனை யாலவனுள்ளத் துதிப்பன. அவ்வாதனை மாண்டு தொந்த நினைப் பொழிந்தால் துன்ப வுணர்ச்சியு மின்றாம்; உள்ளது உவகைக் கடலாம். தொந்த நினைப்பற்றார் உள்ளே நிஜ பரமானந்த முனைப்புற்றார் என்றதும் ஆதலினா லென்க.

## 258. போத சொரூபப் புணரியாந் தன்னகத்துச்
## சாதலுறும் புத்தி சதாமௌனம் - மோதப்பே
## ரின்பக் கடலா மிதயப் பரவெளியே
## யன்புசேர் தன்மெய் யகம்.

போத சொரூபப் புணரி ஆம் தன் அகத்துச் சாதல் உறும் புத்தி சதா மௌனம் மோதப் பேர் இன்பக் கடல் ஆம் இதயப் பரவெளியே அன்புசேர் தன் மெய் அகம்.

**புணரி-கடல்; மோதம்-சந்தோஷம்.**

## 259. அன்னியமொன் றின்றி யகண்டபரி பூரணமா
## மன்னியதுன் னாலே மதிப்பரிதால் - எந்நினைவும்
## எண்ணா திருந்தொளிர்மெய் யின்பா மிதயமே
## அண்ணா மலையெனான் மா.

அன்னியம் ஒன்று இன்றி அகண்ட பரிபூரணமா மன்னியது உன்னாலே மதிப்பு அரிதால் எந்நினைவும் எண்ணாது இருந்து ஒளிர் மெய் இன்பு ஆம் இதயமே அண்ணாமலை என் ஆன்மா.

**மன்னியது-இருப்பது.**

''அண்ணாமலை யெனான்மா'' என்னும் சொற்றொடர் ''ஆன்ம வித்தை'' என்னும் கீர்த்தனத்தில் பகவான் வாக்காக அமைந்துள்ளது (ஸ்ரீ ரமண நூற்றிரட்டில் காண்க). அப்பொருளையே ஆனந்த ரூபமாகவும், இதய மாகவும், நினைவின்றி கேவல சைதன்யமாக என்றும் பிரகாசிப்பதாகவும், பந்த ஜீவனால் அளவிட முடியாத அகண்ட பரிபூரண பூமியாகவும் சிறப்பிக்கிறார்.

## 260. அந்தவித யத்தை யறிந்தா ரவலமுறார்
## பந்தமதி கெட்டார் பரமானார் - தொந்த
## நினைப்பற்றா ருள்ளே நிசபரமா னந்த
## முனைப்புற்றார் மோக முசித்து.

அந்த இதயத்தை அறிந்தார் அவலம் உறார் பந்த மதி கெட்டார் பரம் ஆனார் தொந்த நினைப்பு அற்றார் உள்ளே நிச பரம ஆனந்த முனைப்பு உற்றார் மோகம் முசித்து.

**பரமானந்த முனைப்பு -ஆன்மஸ்புரணம் (அருள் எழுச்சி); முசித்து - முறித்து.**

**261. அகத்தும் புறத்து மணைவதாய் நின்றே**
**அகத்தும் புறத்துமதின் றாகும் - அகம்புறங்கள்**
**என்னும்பே தத்துக் கிடமாகத் தோன்றுமுடல்**
**உன்னுமனக் கற்பனையா லோர்.**

அகத்தும் புறத்தும் அணைவதாய் நின்றே அகத்தும் புறத்தும் அது இன்று ஆகும் அகம் புறங்கள் என்னும் பேதத்துக்கு இடமாகத் தோன்றும் உடல் உன்னும் மனக் கற்பனை ஆல் ஓர்.

**அணைவதாய்-இருப்பதாய்; உன்னும்-நினைக்கும்.**

**262. தன்னு ளுடலிருக்கத் தானுடலுட் டுன்னுவதா**
**வுன்னுமூ டாணவஞ்சே ரோர்மனிதன் - மன்னுமூ**
**லாதாரச் சீரையகத் தாடுநிழற் சித்திரத்தூ**
**டேய்தலா வஃதெண் ணினோன்.**

தன் உள் உடல் இருக்கத் தான் உடல் உள் துன்னுவதா உன்னும் மூட ஆணவம் சேர் ஓர் மனிதன் மன்னு மூலாதாரச் சீரை அகத்து ஆடும் நிழல் சித்திரத்து ஊடு ஏய்தலா அஃது எண்ணினோன்.

**சீரை அகத்து-திரைத் துணியிடம்; நிழல்-சித்திரம்; ஏய்தலா-இருப்பதாக.**

***(8) தன்னுட் டனுவிருக்கத் தானச் சடவுடலந்***
***தன்னு ளிருப்பதாத் தானுன்னு - மன்னவன்***
***சித்திரத்தி னுள்ளுளதச் சித்திரத்துக் காதார***
***வத்திர மென்றெண்ணு வான். - பகவான்.***

தன் உள் தனு இருக்கத் தான் அச்சட உடலம் தன்னுள் இருப்பதாத் தான் உன்னும் அன்னவன் சித்திரத்தின் உள் உளது அச் சித்திரத்துக்கு ஆதார வத்திரம் என்று எண்ணுவான்.

**தனு-உடல்.**

ஆதாரச் சீரை மீது ஆடுநிழல் சித்திரங்களில் (அசை படம்) ஒன்றை அச்சித்திரங்களின் ஆதாரமாக வெண்ணும் மூடவுணர்வை யொத்து, சரீரம் மற்ற திருசியங்களைப் போல் தன்னுளிருக்கப் புருடன் தான் சரீரத்துளிருப்பதாக அஞ்ஞானத்தினா லெண்ணுகின்றான்.

**263. ஆகலினவ் வாகவடி வாகுமகங் காரமறச்
சாகலைத்தாங் கண்ட சமர்த்தரே - மோகம்
அறத்தெளிந்த நுட்பமதி யாலதனை யெங்கும்
உறத்தெரிந்து சேர்வ ருயர்வு.**

ஆகலின் அவ் ஆக வடிவு ஆகும் அகங்காரம் அறச் சாகலைத் தாம் கண்ட சமர்த்தரே மோகம் அறத் தெளிந்த நுட்ப மதியால் அதனை எங்கும் உறத் தெரிந்து சேர்வர் உயர்வு.

**ஆக வடிவு - தேக வடிவம்.**

**264 ஆண்டவன் மோன வருட்சீ ரனுபூதி
யீண்ட விளங்கு மிதயமே - காண்டலரும்
பல்வகைய போகப் பதங்களும்புற் கென்றொழிய
வெல்வதொரு கைவல் லியம்.**

ஆண்டவன் மோன அருள் சீர் அனுபூதி ஈண்ட விளங்கும் இதயமே காண்டல் அரும் பல்வகைய போகப் பதங்களும் புற்கு என்று ஒழிய வெல்வது ஒரு கைவல்லியம்.

**ஈண்ட- சேர; புற்கென்று-அற்பமாய்; கைவல்லியம்-ஏகம்.**

**265. விக்கேப மோகமற வீந்துண்மை மாத்திரமாத்
தொக்கேயுஞ் சுத்தந் துலங்குளமே - மிக்க
நயந்தருவா னாள்வோரு நாட்டமுறுஞ் சீர்சால்
உயர்ந்தபர மான்ம வுலகு.**

விக்கேப மோகம் அற வீந்து உண்மை மாத்திரமாத் தொக்கு ஏயும் சுத்தம் துலங்கு உளமே மிக்க நயம் தரு வான் ஆள்வோரும் நாட்டம் உறும் சீர்சால் உயர்ந்த பரமான்ம உலகு.

**விக்கேபம்-விக்ஷேபம், அலைவு; வீந்து-நீங்கப்பெற்று; தொக்கு ஏயும்-ஒன்றாகி நிற்கும்; மிக்க நயம்-அதிக சுகபோகம்; சீர்சால்-சிறப்பை யுடைய.**

தன்னிடத்தினின்றுதிக்கும் பிறநினைப்பும் அதற்கடியாய் நின்ற தன்மறப்பும் அறவே யவிந்து உண்மை மாத்திரமாயுற் றியையுஞ் சுத்தநிலை இடையறாது இனிது விளங்கும் இதயமே மனத்துக் கினிமை தரும் இருவிசும் பாளும் இந்திரன் முதலா மிறைவரும் வேணவாக் கொண்டு விழையுஞ் சீர்சான்ற ஒப்பறவுயர்ந்த கடவுளுலகாம்.

**வி-ரை:-** மோகம்-ஆவரணம். விக்கேபாவரணமெனினும் சகல கேவல மெனினு மொக்கும்; ஏயுஞ் சுத்தம் - அவற்றழிவான் மேலெழும் நனவிற் சுழுத்தி யென்னுங் கடவுளறிவா முண்மை விளக்கம். கடவுளுலகெனினும் உண்மையுல கெனினும் பேதமின்றாம்.

## 52. குருவாராய்ச்சித்திறன்

**266. எந்தவுட லேனுமுடல் யானென்னு மெண்ணம்போய்ப்
பந்தமற நின்றொளிர்சற் பானமே - சிந்தும்
சகல வுயிருளமுந் தன்மயமாத் தங்கும்
அகிலபரா சத்தி யறி.**

எந்த உடலேனும் உடல் யான் என்னும் எண்ணம் போய்ப் பந்தம் அற நின்று ஒளிர் சத் பானமே சிந்தும் சகல உயிர் உளமும் தன்மயமாத் தங்கும் அகில பராசத்தி அறி.

**பானம்-பிரகாசம்; சிந்தும்-படைக்கப்பட்டுள்ள.**

உடலென்னின் அதுதான் எவ்வுடலாயினுமாகுக. 'ஓருடலே யா'னென்னு மெண்ண மழிந்து, அதனால் பாச பந்தமற நிருபாதிகமாய் நின்று வெறு வெளியாய் விளங்கு முண்மை விளக்கமே பின்னமா மனைத்துயிர்களுந் தன்மயமாய், நிருவிசேட ஞான வடிவாய் அவற்றுளந்தோறு மபின்னமா யுறைகின்ற அகில பராசத்தியாம்.

**267. தொந்தமற வுள்ளத்துட் சும்மா விருந்தொளிரும்
இந்தவுணர் வாமெய் யியற்கையே - மந்த
அவுணவியல் பாய வகந்தைமதி காணா
மவுனமெனு ஞான வரம்பு.**

தொந்தம் அற உள்ளத்து உள் சும்மா இருந்து ஒளிரும் இந்த உணர்வு ஆம் மெய் இயற்கையே மந்த அவுண இயல்பு ஆய அகந்தைமதி காணா மவுனம் எனும் ஞான வரம்பு.

**மந்த-மூடமான; அவுண இயல்பு-அசுரத் தன்மை; வரம்பு-எல்லை.**

**268. அந்த விலாச மமைந்தோனே தன்னடைந்த
எந்த வுயிரையுந்தன் னின்னருளாற் - றொந்தமிலாச்
சொல்லருஞா னான்ம சொரூபத்திற் சேர்க்கமிக
வல்லகுரு வாக மதி.**

அந்த விலாசம் அமைந்தோனே தன் அடைந்த எந்த உயிரையும் தன் இன் அருளால் தொந்தம் இலாச் சொல் அரும் ஞான ஆன்ம சொரூபத்தில் சேர்க்க மிக வல்ல குருவாக மதி.

**அந்த விலாசம் - அத்தகைய சத்தி விலாசம்; சொல்லரு-வாக்கிற் கெட்டாத.**

அந்தப் பராசத்திவிலாசம் தன்பால் அமையப்பெற்றோனே மெய்யன்பாற் றன்னை வந்தடைந்த எந்த வுயிரையும் ஏது வேண்டாத் தன்னின்னருளால்

இரட்டையற்ற, இயம்புதற்கரிய, நிருவிசேட ஞானவடிவான பரமான்ம சொரூபத்தில் ஒன்றுவிக்கப் பெரிது மாற்றல் படைத்த ஞான குருவா யெண்ணுதி.

## 269. பரத்துவமா மோனப் பதவொளியில் யானற்
## றுருத்தபர பத்தியுணர் வூற்றாங் - கருத்தின்
## றிரத்துவமா முத்தமசச் சீடத் துவமே
## குருத்துவமாக் கொள்க குறித்து.

பரத்துவம் ஆம் மோனப் பத ஒளியில் யான் அற்று உருத்த பர பத்தி உணர்வு ஊற்று ஆம் கருத்தின் திரத்துவம் ஆம் உத்தம சத் சீடத்துவமே குருத்துவமாக் கொள்க குறித்து.

**பரத்துவம்-பிரம்மநிலை; உருத்த-தோன்றுகின்ற, உருக்கொண்டுள்ள.**

பரபத்தியுணர்வே ஞான சொரூபமாதலின், தன்னிழப்புக் குறிகொண்ட அந்நிலையின் கருத்தின் திரத்துவமாம் உத்தம சத் சீடத்துவமே குருவாக விளங்குவதாம். இதனால் முறையே சாதக சாத்யங்களுடையவும் சீடத்துவ குருத்துவங்க ளுடையவும் உன்னத அபேத நிலை கூறப்பட்டது.

## 270. ஆன்மசொரூ பத்துக் கபிமுகமாச் சேர்த்துயிருக்
## கான்மபர போத மளிப்போனே - ஆன்ம
## சொரூபமா மீசன் சொரூபமென் றான்றோர்
## பராவுங் குருபரனாப் பற்று.

ஆன்ம சொரூபத்துக்கு அபிமுகமாச் சேர்த்து உயிருக்கு ஆன்ம பரபோதம் அளிப்போனே ஆன்ம சொரூபம் ஆம் ஈசன் சொரூபம் என்று ஆன்றோர் பராவும் குருபரனாப் பற்று.

**அபிமுகம்-நேர்முகம்; பரபோதம்-பரத்தை நல்கும் அறிவு; பராவும்-போற்றுகின்ற.**

ஆருயிரை ஆன்ம சொரூபத்துக் கபிமுகமாயடைவித்து அதனுக் கான்மஞான மபரோக்ஷமாயளிப்போனே, ஆன்ம சொரூபமா மீசன் சொரூப மென்று ஆன்றோர் கொண்டாடுங் குருபரனாம்.

**வி-ரை:-** அபிமுகம்-நேர்முகம், சாந்நித்தியம். பரபோதம்-மேலா மறிவு, பரத்தை நல்கு மறிவுமாம். ஆன்றோர்-கல்வியறி வொழுக்கங்களால் நிறைந்தோர். ஈசன் சொரூபமா யிருக்கினன்றி எவரையும் தன்சொரூபமா மான்ம சொரூபத்துக் கபிமுகமாய்ச் சேர்த்தலும், அவ்வாற்றா லவர்க்கான்ம பரபோத மளித்தலு மாகாமையின் அதனையாற்ற வல்லோன் அவன் சொரூபமே யென்பதாம்.'எழுத்தறிவித்தவன் இறைவனாகும்' என்னும் வாக்கியமும் இப்பொருள் பற்றியதே. ஈண்டெழுத் தென்றது அக்ஷரப் பொருளா மான்ம சொரூபத்தை யென்க.

**271. அடைந்தவர்க்குப் பின்னுமொன்றை யாணை யிடுவோன்
அடைந்தகொடுங் கூற்றுவிதி யாவான் - அடைந்தவரைச்
செய்வன செய்து முடித்தோராத் தீர்ப்போனே
தெய்வ வருட்குருவாத் தேர்.**

அடைந்தவர்க்குப் பின்னும் ஒன்றை ஆணை இடுவோன் அடைந்த கொடும் கூற்று விதி ஆவான் அடைந்தவரைச் செய்வன செய்து முடித்தோராத் தீர்ப்போனே தெய்வ அருள் குருவாத் தேர்.

**அடைந்தவர்க்கு-தன்னைச் சரணமாக வந்தடைந்தவர்க்கு; கூற்று-யமன்; விதி-பிரம்மா.**

முற்றிலும் சரணெனத் தன்னை நம்பியடைந்தவர்க்குப் பின்னுமொரு ஆணையிடுபவன், அதாவது ஞானத்தில் செலுத்தாது அவரைச் செய்யக் கடவன எனக் கர்மங்களில் செலுத்துபவன் கூற்றுவிதி யாவனாம். அடைந்தவரைச் செய்வன செய்து முடித்தவராகப் பிறவிப்பயன் எய்தினராய்ப் புரிபவனே தெய்வ அருட் குருவாம்.

**272. வெளியே குருவொருவன் வேண்டப் படுகை
களிசேருன் மத்தக் கருத்தால் - வெளிப்பாய்ந்து
சச்சித்தா மான்மா சதாவிதயத் தோதுமெய்யை
நச்சித்தாங் கேளாமை யால்.**

வெளியே குரு ஒருவன் வேண்டப்படுகை களி சேர் உன்மத்தக் கருத்தால் வெளிப் பாய்ந்து சத் சித்து ஆம் ஆன்மா சதா இதயத்து ஓதும் மெய்யை நச்சித் தாம் கேளாமை யால்.

**களி-உற்சாகம்; உன்மத்தம்-பைத்தியம்; நச்சி-விரும்பி.**

அபக்குவத்தினாலே, வெளியே போலியுருவத்துடன் குரு அமைவது என்றார். உண்மையில், குருவென்பது அந்தராத்மாவே. அவ்வாத்மா இதயத்தினின்றும் நீங்காது என்றும் பிரகாசிக்கும் உண்மையை நாம் விரும்பிக் கேட்டு நாடாமையால் நமக்கு அன்னியமாய் வெளியுலகில் அருட்சத்தி குரு உருவைத் தோற்றுவிக்கின்றது.

## (குறள் வெண்பா)

**273. எலாவற் றிலுந்தா னெலாமா விருந்து
குலாவுசற் போதங் குரு.**

எலாவற்றிலும் தான் எலாமா இருந்து குலாவு சத் போதம் குரு.

**குலாவும்-அளவளாவும், விளங்கும்; சற்போதம்-சத்சித்.**

குருவென்பது எல்லா நிலைகளின் அகமாகவும், எவற்றிலும் சமரஸம் காண்பது மான சற்போத மென்றார். அது அடியாருடன் குலாவுதலே குருத்வத்தின் வெளிப்படையாம்.

**(கலி விருத்தம்)**

**274. பராகாய மாகப் பயின்றிடா நின்றே**
**நராகார மாத்தோன்று ஞான குருவை**
**நிராகார னென்றுணர் நெஞ்ச மிலாதார்**
**துராசார பாப துரந்தரர் தாமே.**

பர ஆகாயமாகப் பயின்றிடா நின்றே நர ஆகாரமாத் தோன்றும் ஞான குருவை நிராகாரன் என்று உணர் நெஞ்சம் இலாதார் துராசார பாப துரந்தரர் தாமே.

**பயின்றிடா நின்று -பொருந்தி; நராகாரம்-மனித வடிவு; துரந்தரர்-மேலானவர்.**

## 53. குருவருட்டிறன்

**(நேரிசை வெண்பா)**

**275. ஈண்டுமா மோக விருள்சே ரிருவினையாற்**
**பூண்டசமு சாரப் புலப்பத்தோர்க் - காண்ட**
**குருவருளிற் கொள்ளுங் குதூகலமே சிந்தைப்**
**பருவரலைப் பாற்று மருந்து.**

ஈண்டு மா மோக இருள் சேர் இருவினையால் பூண்ட சமுசாரப் புலப்பத்தோர்க்கு ஆண்ட குரு அருளில் கொள்ளும் குதூகலமே சிந்தைப் பருவரலைப் பாற்றும் மருந்து.

**ஈண்டும்-செறியும், மிகும்; புலப்பத்தோர்-துன்பத்தில் அகப்பட்டவர்;**
**பருவரல்-துன்பம்; பாற்றும்-நீக்கும்.**

இருவினையால் சமுசாரமும், சமுசாரத்தால் ஜீவனுக்குச் சித்த விருத்தியும், சித்த விருத்தியால் துக்கமும் உண்டாவது நிதம் அனுபவம். சிந்தையின் விக்ஷேபமே துக்கமாதலின், அதை மாற்றும் மருந்து சாதகர்க்கு மிகவும் வேண்டப்படுவது. அதுவே குருவருளைச்சிந்தித்து உபதேசத்தை மேற்கொள்ளும் மனநிறைவாம். இதை விட மிகுந்த ஆறுதல் இல்லையென்றறியவும்.

**276. பசையா முவப்புவர்ப்புப் பற்றிச் செயலால்**
**வசைசேர் வினையின் வசத்தால் - விசியுண்**
**டடுப்பா ரவல மகற்றிவீட் டின்பம்**
**கொடுப்பானே போலுங் குரு.**

பசை ஆம் உவப்பு உவர்ப்புப் பற்றிச் செயலால் வசை சேர் வினையின் வசத்தால் விசி உண்டு அடுப்பார் அவலம் அகற்றி வீட்டு இன்பம் கொடுப்பானே போலும் குரு.

**பசை-பற்று; உவப்பு உவர்ப்பு-விருப்பு வெறுப்பு; செயலால்-செய்வதால்; விசியுண்டு-இழுத்து அலைக்கப்பட்டு; அடுப்பார்-தன்னை வந்தடைவோர்.**

### (கலி விருத்தம்)

**277. துரிசறுமெய்ஞ் ஞானசொரு பச்சுவண மாக**
**மருவயமாஞ் சீவர்களை மாற்றுமத னாலே**
**கரிசறநன் காராய்ந்து கவனமுறப் பேணுந்**
**தெரிசனமா வேதிகுரு தேவனருள் விழியே.**

துரிசு அறு மெய்ஞ் ஞான சொருபச் சுவணம் ஆக மரு அயம் ஆம் சீவர்களை மாற்றும் அதனாலே கரிசு அற நன்கு ஆராய்ந்து கவனம் உறப் பேணும் தெரிசன மா வேதி குரு தேவன் அருள் விழியே.

**துரிசு-குற்றம்; சுவணம்-சுவர்ணம், பொன்; மரு அயம்-துருவேறிய இரும்பு; கரிசு-குற்றம்; மாவேதி-சிறந்த ஸ்பரிசவேதி.**

சற்குருவின் அருள் விழிப்பார்வையால், பந்த ஜீவரும் ஞான மயமாகத் திகழும் மாற்றலுறலால், அதுவே கடவுள் தரிசனம். அவ்விடத்தில் தன்னிழப்பாகிய சிரத்தையுடன் அதைக்கவனமுறப் போற்றல் வேண்டுமென்றார்.

### (நேரிசை வெண்பா)

**278. பொய்யைமெய் யாகப் புலம்புவார்க் கம்மாய**
**மெய்யைப்பொய் யாக விளக்குவான் - வையமிசைத்**
**தூலமா யுற்ற சுடர்க்குஞ் சுடரொளியாம்**
**கோலமா யுற்ற குரு.**

பொய்யை மெய் ஆகப் புலம்புவார்க்கு அம்மாய மெய்யைப் பொய் ஆக விளக்குவான் வையம் மிசைத் தூலமாய் உற்ற சுடர்க்கும் சுடர் ஒளியாம் கோலமாய் உற்ற குரு.

**புலம்புவார்-கூறுவோர்; கோலம்-வடிவம்.**

**279. ஊனலகு வாக வுழலுயிரை யூனகந்தை**
**யானலகுத் தன்மை யறவொழித்து - ஞானபரி**
**பூரணமெய்த் தன்மை புணர்ப்போ னருள்வெளியாங்**
**கூரியமெய்ஞ் ஞான குரு.**

ஊன லகு ஆக உழல் உயிரை ஊன் அகந்தை ஆன லகுத் தன்மை அற ஒழித்து ஞான பரி பூரண மெய்த் தன்மை புணர்ப்போன் அருள்வெளி ஆம் கூரிய மெய்ஞ் ஞான குரு.

**லகு-இலேசானது, சிறியது; புணர்ப்போன்-சேர்ப்பிப்போன்; கூரிய-திடமான; குரு-கனமானது, பெரியது.**

ஸ்திரமாகிய குரு, நினைவெனும் காற்றில் உழலும் லகுத்தன்மை யுடைய போலி ஜீவனை யாண்டு அப்போலிச் சலனத்தைப் போக்கி அப்போதத்தைப் பரிபூரண அறிவில் பதிப்பித்து உய்விப்பான். அவனே ஞான குருவன்றி மற்றெவருமாகார்.

**280. அலகிலா மாட்சிசே ரான்மாவே யாகக்**
**குலவுமெய்ஞ் ஞானக் குரிசில் - உலகக்**
**கறைபிடித்த மோகக் கறட்டுவா தத்தை**
**முறியடிக்கும் மோன முதல்.**

அலகு இலா மாட்சி சேர் ஆன்மாவே ஆகக் குலவு மெய்ஞ் ஞானக் குரிசில் உலகக் கறை பிடித்த மோகக் கறட்டு வாதத்தை முறியடிக்கும் மோன முதல்.

**அலகிலா-எல்லையற்ற; குலவு-விளங்குகின்ற; குரிசில்-தலைவன், குரு; கறை-குற்றம்; கறட்டு-கீழ்த்தரமான.**

**281. இல்ல திலதாக வேகப் பரஞ்சுடராய்**
**உள்ள துளதா வொளிருமா - றொல்லெனவே**
**இல்லா துளனா யினானைத்தன் கண்ணிணையாற்**
**கொல்லாது கொல்வான் குரு.**

இல்லது இலது ஆக ஏகப் பரம் சுடராய் உள்ளது உளதா ஒளிருமாறு ஒல் எனவே இல்லாது உளன் ஆயினானைத் தன் கண் இணையால் கொல்லாது கொல்வான் குரு.

**ஒல்-விரைவு.**

**282. வெட்டி மனப்பேயை வீழ்த்திய மெய்ஞ்ஞானப்**
**பட்டயவாள் வீர ரருட்பலத்தால் - பட்டிமன**
**மானகுரங் காட்டமறி லன்றியகத் தற்புதமெய்ஞ்**
**ஞானநடங் காண்ட லரிது.**

வெட்டி மனப்பேயை வீழ்த்திய மெய்ஞ்ஞானப் பட்டய வாள் வீரர் அருள் பலத்தால் பட்டி மனம் ஆன குரங்கு ஆட்டம் அறில் அன்றி அகத்து அற்புத மெய்ஞ்ஞான நடம் காண்டல் அரிது.

**பட்டி-நெறிகளுக்கு அடங்காத; அறில்-நீங்கினால்.**

**283. அவிச்சைநன வாங்கனா வாசானாற் சீடர்**
**கவிச்சமயல் போய்த்தெளிவர் காணாய் - பவிச்ச**
**கனாவகத்துக் கண்டசிங் கத்தாலே யானை**
**தனாதுதுயில் போய்விழித்தல் சான்று.**

அவிச்சை நனவு ஆம் கனா ஆசானால் சீடர் கவிச்ச மயல் போய்த் தெளிவர் காணாய் பவிச்ச கனா அகத்துக் கண்ட சிங்கத்தாலே யானை தனாது துயில் போய் விழித்தல் சான்று.

**அவிச்சை-அவித்தை; கவிச்ச-கவிழ்த்த; பவிச்ச-உற்பவித்த, உண்டான.**

**284. நல்லா சிரியரருண் ஞானவிழிப் பட்டோர்தாம்
வல்லியத்து வாய்ப்பட்ட மான்போலப் - புல்லியல்போய்க்
கைவலியங் காணக் கடவரலா லெஞ்ஞான்றும்
கைவிடத் தாம்படார் காண்.**

நல் ஆசிரியர் அருள் ஞான விழிப்பட்டோர் தாம் வல்லியத்து வாய்ப்பட்ட மான்போலப் புல் இயல் போய்க் கைவலியம் காணக் கடவர் அலால் எஞ்ஞான்றும் கைவிடத் தாம் படார் காண்.

**வல்லியத்து-புலியின்; புல் இயல்-அற்பத் தன்மை; எஞ்ஞான்றும்-எப்போதும்.**

**285. ஆதித் தனைப்போ லபரிமித ஞானகுரு
பாதத் தொளியிற் படிந்தமனம் - போத
சொருபத்திற் கற்பிதமாத் தோன்றலுறும் பேதத்
திரயத்திற் சேர்த லிலை.**

ஆதித்தனைப் போல் அபரிமித ஞானகுரு பாதத்து ஒளியில் படிந்த மனம் போத சொருபத்தில் கற்பிதமாத் தோன்றல் உறும் பேதத் திரயத்தில் சேர்தல் இலை.

**பேதத்திரயம்-மூவித வேறுபாடுகள்; மூவவஸ்தைகள், முக்குணங்கள், முப்புடிகள் முதலியன.**

ஞானகுரு தடுத்தாண்டமையின் போத சொரூபத்தில் கற்பித மாகவே தோன்றும் பேதத் தொகுதிகளில் தம்மனம் முன் போல் செல்லாதென்றார்.

**286. ஒருசேட மாக வொளிரொளியைக் காட்டித்
தருமோன வள்ளலாய்த் தங்கும் - குருசீடர்
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.**

ஒரு சேடம் ஆக ஒளிர் ஒளியைக் காட்டித் தரும் மோன வள்ளலாய்த் தங்கும் குரு சீடர் கண்ணொடு கண் இணை நோக்கு ஒக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல.

**சேடம்-சேஷம், மிச்சம்.**

**287. ஆண்டா னருளா லதுவே யகத்தகமா
மூண்டொளிரு மென்பர்முழு மூதறிஞர் - காண்டலரு
வேதாந்த மான விசுத்தமோ னத்தொளிரும்
போதாந்த மாமெய்ப் பொருள்.**

ஆண்டான் அருளால் அதுவே அகத்து அகமா மூண்டு ஒளிரும் என்பர் முழு மூது அறிஞர் காண்டல் அரு வேதாந்தம் ஆன விசுத்த மோனத்து ஒளிரும் போதாந்தம் ஆம் மெய்ப் பொருள்.

**விசுத்த-அதி பரிசுத்த.**

## 54. உறுதியுரைத்தற்றிறன்

**288. பன்னற் கரிய பரமகுரு வின்னருளை**
**உன்னற் குரியபடி யுன்னியே - முன்னிற்கும்**
**பொய்ம்மாயத் தோற்றப் புணர்ப்பிற் புகுதாது**
**சும்மா விருப்பே சுகம்.**

பன்னற்கு அரிய பரமகுரு இன் அருளை உன்னற்கு உரியபடி உன்னியே முன் நிற்கும் பொய்ம்மாயத் தோற்றப் புணர்ப்பில் புகுதாது சும்மா இருப்பே சுகம்.

**பன்னல்-சொல்லுதல்; புகுதாது-புகாது.**

**289. யானா ரெனவிசா ரித்தோ விறையடியை**
**ஆனாது சிந்தித் தகங்குழைந்தோ - ஊனமுறு**
**கள்ளமே லிட்டவகங் காரவொழுக் கங்கடிந்த**
**உள்ளமே ஞான வொளி.**

யான் ஆர் என விசாரித்தோ இறை அடியை ஆனாது சிந்தித்து அகம் குழைந்தோ ஊனம் உறு கள்ளம் மேலிட்ட அகங்கார ஒழுக்கம் கடிந்த உள்ளமே ஞான ஒளி.

**ஆனாது-இடைவிடாது; கடிந்த-அழிக்கப்பட்ட.**

ஊனமாகிய கள்ளங்கூடிய அகங்கார புத்தியையொழித்து உள்ளமாகிய ஞானவொளி மேவலே பிறவிப்பயன். அஃது யான் யாரென்ற இடையறாத அக விசாரத்தாலோ, மனமுருகி இறைபணி நிற்றலெனும் பிரபத்தியாலோ அமைவதென்றார்.

**290. ஆண்டா னருளா லமைதி யடையிலன்றி**
**யாண்டு மெவர்க்கும்மற் றெத்திறத்தும் - வேண்டுவதோர்**
**சாந்தி விளைவதன்று சந்ததமு மவ்வருளே**
**யோர்ந்திடுக வுள்ளத் தொருங்கு.**

ஆண்டான் அருளால் அமைதி அடையில் அன்றி யாண்டும் எவர்க்கும் மற்று எத்திறத்தும் வேண்டுவதோர் சாந்தி விளைவது அன்று சந்ததமும் அவ்வருளே ஓர்ந்திடுக உள்ளத்து ஒருங்கு.

**யாண்டும்-எப்பொழுதும்; எத்திறத்தும்-எவ்விதமும்; ஒருங்கு-ஒன்றுசேர.**

**291. உய்ந்துபோ வாருக் குறுதி யுரைக்குங்கால்
ஐந்து மகப்படுக்கு மாமைபோல் - ஐந்தும்
அடங்கி யொடுங்கி யகநோக்கிச் சிந்தை
மடங்கி யிருப்பே மகிழ்வு.**

உய்ந்து போவாருக்கு உறுதி உரைக்குங்கால் ஐந்தும் அகப்படுக்கும் ஆமை போல் ஐந்தும் அடங்கி ஒடுங்கி அகம் நோக்கிச் சிந்தை மடங்கி இருப்பே மகிழ்வு.

**292. விளங்குவதா நிற்பதுதன் மெய்யான வுண்மை
உளங்கொளா யஃதே யுறுதி - களங்கமறக்
கண்டுணர்ந்தா லுண்மைக் கடவுளொரு தன்வடிவா
மண்டுவதா மின்ப மயம்.**

விளங்குவதா நிற்பது தன் மெய்யான உண்மை உளம் கொளாய் அஃதே உறுதி களங்கம் அறக் கண்டு உணர்ந்தால் உண்மைக் கடவுள் ஒரு தன்வடிவா மண்டுவது ஆம் இன்ப மயம்.

**மெய்யான உண்மை-சத்தியமான இருப்பு; உளம் கொளாய்-உள்ளத்தில் கொள்வாயாக; மண்டுவதாம்-நிறைவதாம்.**

**293. பற்பலவுட் சிற்சிலவும் பார்ப்பானை யன்றியிலாச்
சொற்பனமே யாகத் துணிவுற்றுக் - கற்பனையாம்
நாமரூ பத்துலகை நாடா தறிவுருவாம்
ஏமப் பொருளையே யெண்.**

பற்பலஉள் சிற்சிலவும் பார்ப்பானை அன்றி இலாச் சொற்பனமே ஆகத் துணிவு உற்றுக் கற்பனை ஆம் நாம ரூபத்து உலகை நாடாது அறிவு உருவு ஆம் ஏமம் பொருளையே எண்.

**ஏமம்-சிதானந்தம்.**

**294. ஏக சொரூபமா வென்று மிருந்தொளிரும்
பாகமில்சுத் தான்மபர பாவனையே - மோக
வுடல்சே ருயிருக் கொழியாப் பிறவிக்
கடலைக் கடத்தும் புணை.**

ஏக சொரூபமா என்றும் இருந்து ஒளிரும் பாகம் இல் சுத்த ஆன்மபர பாவனையே மோக உடல் சேர் உயிருக்கு ஒழியாப் பிறவிக் கடலைக் கடத்தும் புணை.

**பாகம் இல்-பிளவு இல்லாத.**

**295. ஒன்றான வுண்மை யுணர்ந்தாலே யன்றியுயிர்க்
கென்றும்பொய்ம் மோக மிகத்தலிலை - தொன்றுதொட்
டன்னியமென் றென்றுமின்றி யான்ம சொரூபமாத்
தன்னிலொளிர் சுத்தசச் சித்து.**

ஒன்று ஆன உண்மை உணர்ந்தாலே அன்றி உயிர்க்கு என்றும் பொய்ம் மோகம் இகத்தல் இலை தொன்று தொட்டு அன்னியம் என்றென்றும் இன்றி ஆன்ம சொரூபமாத் தன்னில் ஒளிர் சுத்த சத் சித்து.

**இகத்தல்-நீங்குதல்.**

**296. உலகவிட யத்தி னொழியா துழலும்
கலகமன மாயை கடிந்தே - சலவகந்தை
செத்துச் சிவமயமாய்த் தீர்ந்துலக வாதனைபோய்ச்
சுத்தவறி வாகத் துலங்கு.**

உலக விடயத்தின் ஒழியாது உழலும் கலக மன மாயை கடிந்தே சல அகந்தை செத்துச் சிவமயமாய்த் தீர்ந்து உலக வாதனை போய்ச் சுத்த அறிவு ஆகத் துலங்கு.

**கடிந்தே-ஒழித்தே.**

**297. அழலா மநான்மவிட யத்துவெறு மண்டின்
றுழலா தொழியா துளதண் - ணிழலாய்
விரிந்தார்ந்த சாந்தியொளிர் வீடா மிதயம்
பொருந்தான்ம போகம் புசி.**

அழல் ஆம் அநான்ம விடயத்து வெறும் மண் தின்று உழலாது ஒழியாது உள தண் நிழலாய் விரிந்து ஆர்ந்த சாந்தி ஒளிர் வீடு ஆம் இதயம் பொருந்து ஆன்ம போகம் புசி.

**அழல்-நெருப்பு; ஒழியாது-நீங்காது; தண்-குளிர்ந்த; ஆர்ந்த-பொருந்திய; இதயம் பொருந்து-இதயத்தில் உள்ள.**

**298. பத்தியுளம் பொங்கப் பரன்பதமே தஞ்சமாம்
புத்தியொடு செய்தவமேற் பூண்டோயே - சத்திதரு
சித்திப்பே ராசையறத் தீர்ந்தே சதாசிவமாம்
முத்திப்பே ரின்ப முயங்கு.**

பத்தி உளம் பொங்கப் பரன் பதமே தஞ்சம் ஆம் புத்தியொடு செய்தவம் மேல் பூண்டோயே சத்தி தரு சித்திப் பேராசை அறத் தீர்ந்தே சதாசிவம் ஆம் முத்திப் பேரின்பம் முயங்கு.

**மேல் பூண்டோயே-மேற்கொண்டவனே; முயங்கு-அடைக, அனுபவி.**

**299. அனர்த்தமறு மெய்யா மரன்வா லறிவின்
கனத்தபிழம் பாமொண் கழலை - மனத்து
நினைப்புமறப் பொன்று நிகழா தருளின்
முனைப்புவசப் பட்டு முயங்கு.**

அனர்த்தம் அறு மெய்யாம் அரன் வால் அறிவின் கனத்த பிழம்பு ஆம் ஒண் கழலை மனத்து நினைப்பு மறப்பு ஒன்றும் நிகழாது அருளின் முனைப்பு வசப்பட்டு முயங்கு.

**வாலறிவு-பேரறிவு; ஒண்-ஒளி பொருந்திய; முயங்கு-அனுபவி.**

**300. அருளையே முன்னிட் டடங்கினா லன்றி
மருளகந்தை சேர்ந்த மனத்தான் - வெருள்சேர்
கலக்கமொரு காலுங் கழன்றிடான் சற்றும்
வெலற்கரிது வேக வினை.**

அருளையே முன்னிட்டு அடங்கினால் அன்றி மருள் அகந்தை சேர்ந்த மனத்தான் வெருள் சேர் கலக்கம் ஒருகாலும் கழன்றிடான் சற்றும் வெலற்கு அரிது வேக வினை.

**வெருள் சேர்-பயத்துடன் கூடிய; கழன்றிடான்-நீங்கமாட்டான்.**

## 55. உச்சிட்டத்திறன்

**301. ஆசா னநுபூதி யாச்சீ டனுக்கருளும்
தேசார் மொழியேயுச் சிட்டமாம் - பேசாது
நிட்டா பரனாக நிற்றலே யுச்சிட்டம்
உட்டான் கொளலா முணர்.**

ஆசான் அநுபூதியாச் சீடனுக்கு அருளும் தேசு ஆர் மொழியே உச்சிட்டம் ஆம் பேசாது நிட்டா பரன் ஆக நிற்றலே உச்சிட்டம் உள் தான் கொளல் ஆம் உணர்.

**தேசு ஆர்-அறிவொளி வீசும்; உச்சிட்டம்-பிரசாதம்.**

ஆன்ம சித்தனான ஆசிரியன் தன்னனுபவமாக வருளிக் கூறும் ஞானோபதேசமே அவனுண்ட சேடமாம். அவ்வுபதேசங் கேட்ட சச்சீடன் பேச்சு மூச்சற்றுள்ளத் தொடுங்கி ஆங்கே ஆன்ம சொரூபத்தின் கண் நிட்டாபரனாய் நிலைத்தலே எச்சிலென் றிகழாது அகமகிழ்வா லதனைத்தானருந்தலாம்.

**வி-ரை:-** அநுபவத்தாற் கூறலின் எதிர் பேசா தென்றுமாம். அருளோடளையா வழி வெறு மொழியால் விசேடப்பயன் விளையாமையானும், பூரணநிலை பெற்ற ஆசானருள், அளவற்ற நல்லூழ் ஒரோ வழிச் சீடன் பாலமைந்த விடத் தல்லது சங்கற்ப பூர்வமாய்ச் சிறந்து நிகழாவிடினும் அப்பூரண நிலையினியல்பே அருள் வடிவாகலின் அவன் கூறுவன வெல்லாம் அருண்

மயமாகலானும், கூறுமொழி யென்னாது அருளுமொழியென்றும், அநுபவ மொழியாதலின் தேசார் மொழி யென்றுங் கூறினாரென்க.

## 302. மோனகுரு வாய முழுமுதலுக் கூணாக
## மானமாந் தன்னை வழங்கிப்பின் - பானமாய்
## எஞ்சிய தன்னை யிதயத்துட் கோடலே
## விஞ்சுமுச் சிட்ட மிசைவு.

மோன குரு ஆய முழுமுதலுக்கு ஊணாக மானம் ஆம் தன்னை வழங்கிப் பின் பானம் ஆய் எஞ்சிய தன்னை இதயத்துள் கோடலே விஞ்சும் உச்சிட்டம் இசைவு.

**ஆய-ஆகிய; பானம்-அறிவொளி; கோடல்-கொள்ளுதல்; விஞ்சும்-மிகச்சிறந்த; இசைவு-உட்கொள்ளல்.**

பூரணப்பொருளாய மோன குருவுக்கு நிவேதனமாகத் தன் னகந்தையை முதலில் அர்ப்பணஞ்செய்து, அதன்பின் மிஞ்சி விளங்கும் ஆன்ம சொரூபத்தை அநுபவமாக வுள்ளத்துட் கொள்ளுதலே அமுதினுமிக்க ஆசானெச்சிலருந்தலாம்.

**வி-ரை:-** அறியாமையா லகந்தையே வடிவாய்க் கருதியிருக்கும் சீடன் மதி பற்றி மானமாந் தன்னை யென்றும் எவருந் தன்னிழப்புக் கெளிதி லுடன்படா ராகலின், அவனை யதற்குடன்படுத்து முகத்தால், கங்கை யாற்றில் வீழ்ந்து கழியின் மறுமையில் திவ்ய தேகம் பெற்றுத் தேவ லோகத்திற் சிறந்து வாழ்தல் போல, ஆண்டவனுக் கர்ப்பணமாய்த் தன்னையே தத்தஞ் செய்யின் இம்மைக் கண்ணே அமுதமயமா மறிவுடல் பெற்று நிரதிசயானந்தத்தோ டான்ம வுலகாளலா மாகவே அது செய்க என்பார் தன்னை வழங்கி யென்றும், ஆரோபமா மகங்காரங் கழியவே அதிஷ்டானமா மான்ம சொரூபம் மிஞ்சி விளங்கு மாகலின் பின் பானமா யெஞ்சிய தன்னையென்றும் அனான்ம சிந்தைக் கவகாசமற அப்பரமான்ம யோகம் பலகாலும் பயிறல் என்பார் தன்னை யிதயத் துட் கோடல் என்றும் அருந்தினாரை யமுத சொரூபமாக்கவல்ல பெறலரும் பிரசாதம் அதுவொப்பது பிறிதின்மையின் விஞ்சு முச்சிட்ட மென்றுங் கூறினார்.

## 303. பாவமெலாம் பாற்றும் பரம பவித்திரமாம்
## தேவர் மிசைந்தபரி சேடமென்பர் - பூவுலகிற்
## சச்சிட்டர் வாழுஞ் சதாசார வாழ்வேயவ்
## வுச்சிட்ட மாக்கொ ளுளத்து.

பாவம் எலாம் பாற்றும் பரம பவித்திரம் ஆம் தேவர் மிசைந்த பரிசேடம் என்பர் பூ உலகில் சத் சிட்டர் வாழும் சதாசார வாழ்வே அவ் உச்சிட்டமாக் கொள் உளத்து.

**தேவர்-ஈசுவரன்; மிசைந்த-உண்ட; பரிசேடம்-உச்சிஷ்டம்; சச்சிட்டர்-ஞானிகள்; சதாசார வாழ்வு-சத்தில் ரமித்திருக்கும் ஜீவன் முக்தர் வாழ்வு.**

## 56. குருவழிபாட்டுத்திறன்

**304. உரிமையா லாண்டானுக் குற்றசச் சீடர்**
**மரியாதை யாற்று மரபு - தெரிவை**
**இறைவற் கியற்றுமரி யாதையே யென்ன**
**அறியிற் புறத்துமட்டே யாம்.**

உரிமையால் ஆண்டானுக்கு உற்ற சத் சீடர் மரியாதை ஆற்றும் மரபு தெரிவை இறைவற்கு இயற்றும் மரியாதையே என்ன அறியில் புறத்து மட்டே ஆம்.

**தெரிவை-பெண், மனைவி; இறைவற்கு-கணவனுக்கு.**

**305. கோதறுமெய்ஞ் ஞானக் கொழுந்தாங் குருமூர்த்தி**
**பாதமநு சந்திக்கும் பான்மையோர்க் - கேதமறு**
**பத்திதரு மந்தப் பரனருளான் மெய்ஞ்ஞான**
**சித்திவருஞ் சித்தந் தெளிந்து.**

கோது அறு மெய்ஞ்ஞானக் கொழுந்து ஆம் குருமூர்த்தி பாதம் அநுசந்திக்கும் பான்மையோர்க்கு ஏதம் அறு பத்தி தரும் அந்தப் பரன் அருளால் மெய்ஞ்ஞான சித்தி வரும் சித்தம் தெளிந்து.

**கோது-குற்றம்; கொழுந்து-சுடர்.**

**306. குருபரன் பாதங் குறிக்கொண் டொழுகுந்**
**திருவுடையோர்க் கன்பு செழிக்கும் - மருவுசிவ**
**மெய்யன்பே ஞானமாய் வேற்றுப்பொய் யாசைகளை**
**நையவே சுட்டெரிக்கு நன்கு.**

குருபரன் பாதம் குறிக்கொண்டு ஒழுகும் திரு உடையோர்க்கு அன்பு செழிக்கும் மருவு சிவ மெய் அன்பே ஞானம் ஆய் வேற்றுப் பொய் ஆசைகளை நையவே சுட்டு எரிக்கும் நன்கு.

**307. என்னையடை வாயே லிருவினையின் கட்டினின்று**
**முன்னைவிடு விப்பே னுணரென்று - தன்னை**
**யடையச்சொல் கின்றா னருட்கடலாங் கண்ணன்**
**இடையர்ச் சுனனைமுன் னிட்டு.**

என்னை அடைவாயேல் இருவினையின் கட்டில் நின்றும் உன்னை விடுவிப்பேன் உணர் என்று தன்னை அடையச் சொல்கின்றான் அருள் கடல் ஆம் கண்ணன் இடை அர்ச்சுனனை முன்னிட்டு.

பொருள் வெளிப்படை. ஆனால் இங்குக் கண்ணன் என்பது ஓர் உபாசனா மூர்த்தியன்று. பார்த்த னாகிய ஜீவனின் உயிர்க்குயிராய் என்றும் நான் நான் என்ற பிரகாசத்துடன் நம்முள் விளங்கும் நித்திய வஸ்து. இந்தச் சரணாகதி மகாவாக்கியமே இடையறாத அருட்பிரவாகம்.

## 308. வருவா தனைமாய்த்து மாயமோ கத்தால்
## வெருவாத ஞானம் விளைக்கும் - குருபாத
## வந்தனையார் பத்தி வழிபாடே யுண்மையுறு
## மந்திரமாம் புந்தி மதி.

வரு வாதனை மாய்த்து மாய மோகத்தால் வெருவாத ஞானம் விளைக்கும் குருபாத வந்தனை ஆர் பத்தி வழிபாடே உண்மை உறு மந்திரம் ஆம் புந்தி மதி.

**வெருவாத-அஞ்சாத.**

அநாதியா யடைந்த இருவாதனையும் ஒருசேர வொழித்து இனைத் தெனக் கூற முடியாத வவிச்சையால் அஞ்சாமைக் கேதுவான உண்மை யுணர்வை உளத்திலுதிப்பிக்கு மாதலால் அச்சிறப்பு வாய்ந்த பக்தியோடாற்றும் வந்தனோபசாரத் தோடு கூடிய குரு பாத சேவையே திடவைராக்கிய முள்ள சச்சீடர்க்கு உண்மை மந்திரமாகச் சால்வதாம்.

**வி-ரை:-** இருவாதனை-சுபா சுப வாதனைகள். மாய்த்து விளைக்கு மெனக் கூட்டுக. விளைக்கு மென்பதனைக் குருபாத வழிபாட்டுக்குப் பெயரெச்ச மாக்கினு மமையும். மந்திரயோகத்தாலெய்தும் மாண் பயனா மனோநாசத்தையும் மெய்யுணர்வையும் அவ்வழிபாடே அவரையடைவித்தலால், வழிபாடே மந்திரமாமெனப் பட்டது.

## 309. ஞானகுரு வாக நடக்கும் பரசிவனுக்
## கானவழி பாடனைத்து மாற்றிடினும் - யானற்
## றுயிர்க்குயிரா மந்த வுடையான்மாட் டொன்றும்
## அயிக்கியமே போற்றி யடைவு.

ஞான குரு ஆக நடக்கும் பரசிவனுக்கு ஆன வழிபாடு அனைத்தும் ஆற்றிடினும் யான் அற்று உயிர்க்கு உயிராம் அந்த உடையான் மாட்டு ஒன்றும் அயிக்கியமே போற்றி அடைவு.

**நடக்கும்-ஆட்கொள்ளும்; உடையான் மாட்டு-உரியவனிடம்;**
**ஒன்றும்-ஒன்றாகச் சேருகின்ற.**

ஞான குருவாய்த் தன்னை நயந்து வந்தாண்ட அப்பரசிவனுக்குத் திரி கரணத்தாலு மொருவன் செய்யக் கூடிய எல்லாவழிபாடு மெஞ்சா தியற்றினும், தன்னுயிர்க்குயிரா மவ்வுடையானுக் கயலாய் யானென் றொருவன் தனித்துள்ளே னென்னு மெண்ணமற்று அத்தனித்தன்மை அம்புவிலாலி

போலவன் பரசொரூபத்தி லன்புமயமா யறக்கரைந்திரண்டறக் கலக்கு மைக்கியமே அவனுக்குத் தானாற்றக் கடவதாய முழு வணக்கமாம்.

**வி-ரை:-** ஏனை வந்தன வழிபாடுகள் யாவும் அவ்வைக்கிய வணக்கம் போல் எல்லாக் கருவிகரணங்களாலு மிடையறா தாற்றலாகாமையின், அவை ஏகதேசமேயா மென்பது கருத்து. யானற்றியலு மிறைபணி நிற்றலையே அவையாவுந்தம் முடிவாகக் கொண்டன வென்பதாம்.

யானற் றியல்வது தேரி னெதுவது
தானற் றவமென்றா னுந்தீபற
தானாம் ரமணேச னுந்தீபற
- உபதேச உந்தியார்

## 310. சீடன் குருவென்னச் சீவன் சிவனென்ன
மூடவகங் கார முழுமோகம் - கூடும்பாழ்ம்
பேதமதி சற்றும் பிறவாத மோனமே
போதநமஸ் காரப் பொருள்.

சீடன் குரு என்னச் சீவன் சிவன் என்ன மூட அகங்கார முழு மோகம் கூடும் பாழ்ம் பேதமதி சற்றும் பிறவாத மோனமே போத நமஸ்காரப் பொருள்.

குரு சொரூபமும் சிவ சொரூபமுமான ஆன்மசொரூபமா மத்துவிதச் செம்பொருளையே குரு சீட ரெனவும் சிவசீவ ரெனவும் இத் தொடக்கத் தனவாயிருவேறு படக் கருதும் முழுமோகப் பாழாம் பேதமதி தோன்றக் காரணமான மூட வகங்காரம் உள்ளத்தினின்று சற்று முதிக்கப் பெறாத மோனமே, அவர்க்குத் தான் அறிவொடு பொருந்த வாற்றும் வணக்கத்தி னரும்பொருளாம்.

**வி-ரை:-** பேத ஞானமே அஞ்ஞானமாதலால் முழுமோகங்கூடும் பாழ்ம் பேதமதி யென்றார். நானாவா ஞான மஞ்ஞானமாம் என்பதுள்ளது நாற்பது. ஒன்றா மகந்தை மதி முதற்கணுதித்தா லன்றிப் பலவாம் பேதமதி தோன்றற் கிட மின்மையின் அதுவே யவற்றுக் கெல்லா மடியாயிற்று. அகங்கார வெழுச்சியே குருவையும், சிவனையும் தன்னின் வேறுபடுத்தலால், அவ்வகங்கார மழியும் மோனமே அவர்களை யுளப்படுத்து முபாசனை யுண்மையா மென்பது கருத்து. மோனமே நமஸ்காரப் பொருளெனக் கூறவந்தவர் அம்மோன வியல்பும் இனைத்தென வுடன் கூறினார். இத்தகைய மோனமே சுத்தமோன மெனத் தாயுமானவர் சொல்வதாமென்க.

## 311. கோனென்னு ஞான குருபோதக் கட்டழலால்
யானென்னுஞ் சீடவுணர் வீடழிய - மோன
நிருவா தனையோங்கு நிட்டையே ஞான
குருபூ சனையாக் குறி.

கோன் என்னும் ஞான குருபோதக் கட்டு அழலால் யான் என்னும் சீட உணர்வு ஈடு அழிய மோன நிருவாதனை ஓங்கும் நிட்டையே ஞான குரு பூசனையாக் குறி.

**கட்டழல்-பெருந்தீ ; ஈடு அழிய-அடியோடு அழிய.**

**312. ஏன்றநா னாரெனவுள் ளேய்ந்தவுசா வாலெழுந்த**
**பூன்றவநு போககுரு போதநிலை - ஊன்றலாற்**
**பொய்ச்சீட போதமறப் பொன்றலே தேசிகர்க்குச்**
**சச்சீடர் செய்பூ சனை.**

ஏன்ற நான் ஆர் என உள் ஏய்ந்த உசாவால் எழுந்த பூன்ற அநுபோக குருபோத நிலை ஊன்றலால் பொய்ச் சீட போதம் அறப் பொன்றலே தேசிகர்க்குச் சத் சீடர் செய் பூசனை.

**ஏன்ற-ஏற்றுக்கொள்ளப்பட்ட; ஏய்ந்த-இயற்றிய; உசா-விசாரணை; பூன்ற-பூரண; குருபோதம்-ஆத்ம உணர்வு; ஊன்றலால்-நிஷ்டையுறுவதால்; அறப் பொன்றல்-முற்றிலும் அழிதல்; தேசிகர்-குரு.**

**313. குருசொருப மாகக் குலவுறுமெய்ஞ் ஞானப்**
**பருதியென வெங்கும் பரந்த - பரவெளிக்கே**
**சீவமதி தோன்றாச் சிறப்பியல்பே செய்தக்க**
**தேவகுரு பூசை தெளி.**

குரு சொருபம் ஆகக் குலவு உறு மெய்ஞ்ஞானப் பருதி என எங்கும் பரந்த பரவெளிக்கே சீவ மதி தோன்றாச் சிறப்பு இயல்பே செய்தக்க தேவ குரு பூசை தெளி.

**பருதி-பரிதி, சூரியன்; தேவ குரு - குருதேவன்.**

**314. ஆத்தநடை யாற்றா லகமோ டிதமாகக்**
**கோத்தவடி வெல்லாங் குருவடிவாப் - பார்த்தலுடை**
**ஞானகுரு போதமலி நாட்டமே சச்சீடர்க்**
**கானகுரு பூசை யறி.**

ஆத்த நடை ஆற்றால் அகமோடு இதம் ஆகக் கோத்த வடிவு எல்லாம் குரு வடிவாப் பார்த்தல் உடை ஞான குரு போதம் மலி நாட்டமே சச்சீடர்க்கு ஆன குரு பூசை அறி.

**ஆத்த நடையாற்றால்-பிரியப்படும் ஒழுக்கவழியால்; இதம்-இது; கோத்த வடிவு-சேர்ந்த வடிவு.**

யானென்று மிதுவென்றும் ஒன்றையொன் றவாவி நிற்குந் தோற்ற மெலாந் தமது ஞான குரு சொரூபமாகவே சிட்டாசார முறையாற் காண்டலுற்ற குருபோதமென்னுங் கடையிலாக் காட்சியே சீட ரானோர் உண்மையிற் செய்தற்கேற்ற குருபூஜையாம்.

**வி-ரை:-** அறிபடு மகிலமும் அக மித மென்னு மிரட்டையுளடங்கலால் அகமோ டிதமாகக் கோத்த வடிவெல்லா மென்றார். சீவ போதங் கெட்ட

நிகழ்ச்சியைச் சிவபோத மென்னும் வழக்காற்றின் படியே சீடபோதங்கெட்ட நிகழ்ச்சியை இவருங் குருபோதமென்றார். சச்சீடர் - மெய்ச்சீடர்.

**315. ஏகரச மாக விருந்தொளிரு மான்மாநு**
**போககுரு போதப் புணரியிலே - தேக**
**உருவா மகந்தை யுணர்வாய வாலி**
**கரைவே குருபூசை காண்.**

ஏக ரசம் ஆக இருந்து ஒளிரும் ஆன்ம அநுபோக குருபோதப் புணரியிலே தேக உருவாம் அகந்தை உணர்வு ஆய ஆலி கரைவே குருபூசை காண்.

**ரசம்-இன்பம்; புணரியிலே-சமுத்திரத்தில்; ஆய-ஆகிய; ஆலி-பனிக்கட்டி.**

**316. நீக்கமறு மாசா னிறைவுபரிச் சின்னமா**
**ஆக்கலுறு மாசா மகங்கார - நோக்கம்**
**மருவா வியல்பே மலையிலக்கா நின்ற**
**குருபூ சனையின் குலா.**

நீக்கம் அறும் ஆசான் நிறைவு பரிச்சின்னமா ஆக்கல் உறு மாசு ஆம் அகங்கார நோக்கம் மருவா இயல்பே மலை இலக்கா நின்ற குருபூசனையின் குலா.

**நீக்கமறும்-அழிவற்ற; நிறைவு-பரிபூரணத் தன்மையை; பரிச்சின்னம்-துண்டுபடும் தன்மை; ஆக்கல் உறும்-செய்விக்கும்; மருவா-சேராத; மலை இலக்கு-மிகத் தெளிவான; குலா-சிறப்பு.**

**317. உடலாதி தேசிகனுக் கொப்படைத்த பின்பவ்**
**வுடலாதி யானெனதென் றுட்கொண் - டிடலாய**
**தத்தாப காரச் சழக்குத் தவிர்தலே**
**சுத்தகுரு பூசை துணி.**

உடல் ஆதி தேசிகனுக்கு ஒப்படைத்த பின்பு அவ் உடல் ஆதி யான் எனது என்று உட்கொண்டிடல் ஆய தத்தாபகாரச் சழக்குத் தவிர்தலே சுத்த குருபூசை துணி.

**உட்கொண்டிடலாய-ஏற்றுக் கொள்ளுவதாகிய.**

**318. அழலுமுத் தாபமவித் தாண்டகுரு நாதன்**
**கழலகன்று காண்புலவெங் கானற் - குழலுமுயிர்ச்**
**சேட்டை யொடுங்கிச் செறிதலே தீர்த்தன்பூந்**
**தாட்டுணைக்குச் செய்பூ சனை.**

அழலும் முத்தாபம் அவித்து ஆண்ட குருநாதன் கழல் அகன்று காண் புல வெம் கானற்கு உழலும் உயிர்ச் சேட்டை ஒடுங்கிச் செறிதலே தீர்த்தன் பூம் தாள் துணைக்குச் செய் பூசனை.

**அழலும்-எரிகின்ற; முத்தாபம்-மூவாசை; அவித்து-அணைத்து; காண்புல வெங்கானற்கு-காணப்படுகின்ற புலன்களாகிய பாலைவனத்திற்கு ஆசைப்பட்டு; செறிதல்-பதிதல்; தீர்த்தன் பூந்தாள்- குருவின் பாதமலர்; துணை-இரண்டு.**

**319. மனத்துருவ மாய மயலா மகந்தை**
**தனைத்துருவி யுள்ளத்துட் சார்தல் - அனைத்தே**
**மனாதீத மாய மவுனகுரு மூர்த்தி**
**தனாதுமலர்த் தாட்பூ சனை.**

மனத்து உருவம் ஆய மயல் ஆம் அகந்தை தனைத் துருவி உள்ளத்து உள் சார்தல் அனைத்தே மனாதீதம் ஆய மவுன குரு மூர்த்தி தனாது மலர்த்தாள் பூசனை.

**துருவி-ஆராய்ந்து; அனைத்தே-அவ்வளவே.**

**320. சடலமாச் சஞ்சரித்துஞ் சச்சித்தே போல**
**நடலஞ்செய் காரகந்தை நாட்டப் - படலம்**
**படராமை பூசை பரவெளியா நின்று**
**சுடராசான் பூந்தாட் டுணர்க்கு.**

சடலமாச் சஞ்சரித்தும் சத் சித்தே போல நடலம் செய் கார் அகந்தை நாட்டப் படலம் படராமை பூசை பரவெளியா நின்று சுடர் ஆசான் பூம் தாள் துணர்க்கு.

**நடலம் செய்-பாசாங்கு செய்கின்ற; பூம்-அழகிய; துணர்-பூ.**

## 57. குருமாட்சித்திறன்

**321. குற்றமெலா நீத்துக் குணமனைத்துஞ் சேர்ந்தாலும்**
**சுற்றமெலா நீத்துத் துறந்தாலும் - சொற்றபல**
**செய்தவங்கள் செய்தாலுந் தேசிகனைக் கூடுமள**
**வெய்துவரோ வின்ப நிலை.**

குற்றம் எலாம் நீத்துக் குணம் அனைத்தும் சேர்ந்தாலும் சுற்றம் எலாம் நீத்துத் துறந்தாலும் சொற்ற பல செய்தவங்கள் செய்தாலும் தேசிகனைக் கூடும் அளவு எய்துவரோ இன்ப நிலை.

**சொற்ற-சுருதிகளாற் சொல்லப்பட்ட; செய்-செய்யத்தக்க; கூடும் அளவு-சேரும் வரை.**

குற்றங்களெல்லா மொழிந்து குணங்களெல்லா மொருங்கு கூடினும், சங்கங்க ளெல்லாம் பற்றற வகற்றிவிடினும் சான்றோராற் செய்யத் தக்கனவாக

நூல்களால் விதிக்கப் பட்ட பலவகை நியமங்களுஞ் செய்து முடிப்பினும், நல்வினையான் ஞான குருவைக் காணப் பெறுமளவும், அறிவாற்றல்களாலெத்துணைப் பெரியரா னோரும், பேரின்ப மயமாங் கைவல்ய நிலை காணக் கிடைப்பரோ?

## 322. முடிவாய நன்மையா முத்திப்பே ரின்பக்
குடிவாழ்வு பெற்றுக் குலவல் - புடியாய
மூன்றுமொன் றாக முடிந்தகுரு நாதனருள்
ஏன்றுகொண் டன்றி யிலை.

முடிவு ஆய நன்மை ஆம் முத்திப் பேர் இன்பக் குடி வாழ்வு பெற்றுக் குலவல் புடி ஆய மூன்றும் ஒன்று ஆக முடிந்த குருநாதன் அருள் ஏன்று கொண்டு அன்றி இலை.

**குடிவாழ்வு-உரிமை வாழ்வு; குலவல்-சந்தோஷமாயிருத்தல்; புடியாய மூன்றும்-முப்புடி; ஒன்றாக முடிந்த-ஒன்றாகச் சேர்ந்த; ஏன்று கொண்டன்றி இலை-ஏற்றுக் கொண்டாலன்றி இல்லை.**

பிறவித் துன்பமாந் தாபமூன்றுந் தணிந்து, நன்மையு ளெல்லா முடிந்த நன்மையாய முத்திப் பேரின்பமயமாங் குடிவாழ்வு பெற்று இறைவன் திருவடி நிழற்கண் விளங்க வாழ்தல், திரிபுடி பேதந் தீர்ந்து அகண்டேகரசமாய் விளங்கும் சீவன் முத்தனாம் குருநாதன் ஒருவன் திருவருளை முதற்கண் அடையப் பெற்றாலன்றி எவர்க்கு மின்றாம்.

**வி-ரை:-** யாவரிதயத்தும் அவ்வவர் சொரூபமாய் 'யான்யா' னென்று இடையறா தினிது விளங்கும் நிருபாதிக பரசொரூபத்தை நேரிலறிந்துய்யப் பெறுதல் தேகான்ம புத்தி படைத்த சாமானிய வுயிர்கட் கரிதாதலால், அவை யாவும் சோபாதிக குருசொரூபத்தை முதற்கணுபாசித்தே மோகமழிந்துய்தி பெற வேண்டு மென்பதாம். பாமரர் பார்வையான் மனிதன்போற் காணப்படுவதல்லாது, குருநாதன் உண்மையா மவனநுபவத்தாற் பரசொரூபமே யாதலால் அவனுக்கு மதற்கும் பேதங் கற்பித்தல் பேதைமையாம்.

## 323. அகமும் புறமு மகமு மிதமும்
இகமும் பரமு மெலாமும் - புகுந்தளவற்
றாண்டா னறிவொளியா யம்மெய் யடியாருட்
டூண்டா மணிவிளக்காந் தூண்.

அகமும் புறமும் அகமும் இதமும் இகமும் பரமும் எலாமும் புகுந்து அளவற்று ஆண்டான் அறிவு ஒளியாய் அம்மெய் அடியாருள் தூண்டா மணிவிளக்கு ஆம் தூண்.

## 324. புருகூதன் போலவே பூவுலகில் வாழ்வார்
அருகூர் கழிகாத லாலே - குருகூ
ரருட்பார்வை தன்னை யறவேதா நம்பி
யிருப்பாருக் கில்லை யிடர்.

புருகூதன் போலவே பூவுலகில் வாழ்வார் அருகு ஊர் கழி காதலாலே குரு கூர் அருள் பார்வை தன்னை அறவே தாம் நம்பி இருப்பாருக்கு இல்லை இடர்.

**புருகூதன்-இந்திரன்; அருகு ஊர்-நெருங்கி யுண்டாகின்ற; கழி-அதிக; குருகூர்-சற்குரு செய்கின்ற.**

குருவின் கூர்ந்த அருட்பார்வையை முற்றிலும் நம்பியிருப்பார்க்கு இடரில்லை என்றார். அவர் புருகூதன் போல ஆன்மீக வாழ்வில் திளைத்து வாழ்வார்.

## 325. கலிவீட்டி யாண்டான்றன் காதலர்நெஞ் சத்திற்
## கொலுவீற் றிருக்குங் குலாச்சீர் - மலைபோற்றாம்
## கண்டவர்கள் விண்டிலர்கள் விண்டவர்கள் கண்டிலர்கள்
## மண்டு மடியார் மறை.

கலி வீட்டி ஆண்டான் தன் காதலர் நெஞ்சத்தில் கொலு வீற்று இருக்கும் குலாச்சீர் மலைபோல் தாம் கண்டவர்கள் விண்டிலர்கள் விண்டவர்கள் கண்டிலர்கள் மண்டும் அடியார் மறை.

**கலி-கலி தோஷம்; வீட்டி-வீழ்த்தி; குலாச்சீர்-பெருமையான நிலை; மண்டும்-நிறைந்த; மறை-கருத்து.**

## 326. உகந்த வடியா ருளமுடிச்சை யோச்சி
## அகழ்ந்தெறிய வல்ல வரிவாள் - அகந்தை
## மயல்போய தேசிகர்தம் மாண்பாய வான்ம
## இயல்பாய நிட்டை யினிது.

உகந்த அடியார் உள முடிச்சை ஓச்சி அகழ்ந்து எறிய வல்ல அரிவாள் அகந்தை மயல் போய தேசிகர்தம் மாண்பு ஆய ஆன்ம இயல்பு ஆய நிட்டை இனிது.

**உகந்த-அடுத்த; உளமுடிச்சு-இதயக் கிரந்தி; ஓச்சி-வெட்டி; அகழ்ந்து-வேரோடு களைந்து; போய-நீங்கிய.**

ஆணவ மலமகன்ற ஞானாசிரியர்தம் ஆன்ம சொரூபமான மாட்சிமிக்க சகஜ நிட்டை, அவரடியை மனமகிழ்ந் தினிதடைந்த சீடர்தஞ் சிச்சடக் கிரந்தியைக் கடி தோச்சி அடியோடு பெயர்த் தெறிய வல்ல வரிவாளாம்.

**வி-ரை:-** ஆணவத்தைப் பற்றியே ஏனையிரண்டும் அடைதலால் அது கழியவே அவையுங் கழிந்தனவாம். எனவே, மும்மலமும் மோசனமாகப் பெற்ற தேசிகர் என்றதாயிற்று. ஏனையிரண்டு கன்மம் மாயை யென்பன.

''சடவுடனா னென்னாது சச்சித் துதியா
துடலளவா நானொன் றுதிக்கு - மிடையிலிது
சிச்சடக்கி ரந்திபந்தஞ் சீவனுட்ப மெய்யகந்தை
யிச்சமு சாரமன மெண்''

என்னும் பாசுரத்தால் அகந்தை யிலக்கணமும் அதன் பரியாயங்களு மறிக. சகஜ நிட்டையினாற்றல் இனைத்தெனக்கூறியவாறு. புறத்தோற்றத்தில் அவர் வாளாவிருப்பது கொண்டு தமக்கருள் செய்கின்றில ரெனக் கருதற்க. அவர் **நிட்டையியல்பே அருள்வடிவ மென்பதாம். அவர் திருமுன் அகநோக்காலறிவடங்கி யமர்வார்க்கு அவ்வுண்மை தெள்ளிதிற் புலனாமென்க.**

**(இன்னிசை வெண்பா)**

**327. கற்றாங்கு ஞானங் கடைப்பிடித்துப் புன்புலமாம்**
**மற்றாங்குச் சிந்தை வழுவாது தேற்றமோ**
**டுண்மையொளி யாயுள் ளொழுகு மொழுக்கமே**
**உண்மையுப தேச முணர்.**

கற்று ஆங்கு ஞானம் கடைப்பிடித்துப் புன்புலம் ஆம் மற்று ஆங்குச் சிந்தை வழுவாது தேற்றமோடு உண்மை ஒளியாய் உள் ஒழுகும் ஒழுக்கமே உண்மை உபதேசம் உணர்.

**கற்றாங்கு-கற்றபடி; மற்றாங்கு - மற்ற திசையில்; தேற்றம்-தெளிவு.**

## 58. சாதுசங்கத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**328. அறத்தா றிதுவென் றடங்காது வாழ்க்கைக்**
**குறிக்கோள் கடைப்பிடித்துட் கொள்ளாத் - திறத்தால்**
**வெறுவாயை மெல்லும் விதண்டையார் சாரல்**
**குறுகா ரறிவுடை யார்.**

அறத்து ஆறு இது என்று அடங்காது வாழ்க்கைக் குறிக்கோள் கடைப்பிடித்து உட் கொள்ளாத் திறத்தால் வெறு வாயை மெல்லும் விதண்டையார் சாரல் குறுகார் அறிவு உடையார்.

**சாரல்-பக்கம்; குறுகார்-போகமாட்டார்.**

**329. சித்தங் கலங்கித் திருவாய் சளசளக்கும்**
**பித்தரினஞ் சேரிற் பிழைபலவாம் - செத்துமனம்**
**சுத்தமா மோனந் துலங்கப்பெற் றாருறவே**
**உத்தமநட் பாகு முணர்.**

சித்தம் கலங்கித் திருவாய் சளசளக்கும் பித்தர் இனம் சேரில் பிழை பல ஆம் செத்து மனம் சுத்தம் ஆம் மோனம் துலங்கப்பெற்றார் உறவே உத்தம நட்பு ஆகும் உணர்.

**330. சட்டோ படவெறிந்து சஞ்சலந்தீர் சாந்தபத**
**நிட்டரொடு சேர்ந்தொழுகாய் நெஞ்சமே - கெட்ட**
**அழிம்புதாம் பேசி யடாவழியிற் செல்லும்**
**தொழும்பரொடு பட்ட தொடர்பு.**

சட்டோபட எறிந்து சஞ்சலம் தீர் சாந்த பத நிட்டரொடு சேர்ந்து ஒழுகாய் நெஞ்சமே கெட்ட அழிம்பு தாம் பேசி அடா வழியில் செல்லும் தொழும்பரொடு பட்ட தொடர்பு.

**சட்டோபட-துரிதமாக, சட்டென்று; அழிம்பு-வீண் வம்பு; தொழும்பர்-கீழ் மக்கள்.**

அழிம்புகள் பேசி அடாத வழிகளில் செல்லும் உலகியலாருடன் வினைவழி மேவிய தொடர்பின் கொடுந்துயரை, சாந்தபத நிட்டருடன் கூடலால் தவிர்ப்பனென்றார். ஸ்ரீ ரமண பகவானும் ''கூர்வாட் கண்ணியர் கொடுமையில் படா ...... தருள்அருணாசலா'' வென (அக்ஷரமண மாலை) உலகியலாரை வெருவியது போல் கூறியது நோக்குக. இது ஆன்ம வொளியில் சிறிதேனும் திளைத்தவரின் இயல்பான மனோ நிலை.

**331. துர்க்குணங்கள் யாவுந்தற் சோர்ந்தபிர மாதமாம்**
**பொய்க்களியே மூலமாப் பூத்தலால் - அக்களிமால்**
**சேர்ந்த வகந்தை சிதைந்தமெய்ஞ் ஞானோப**
**சாந்தமே சற்குணச் சால்பு.**

துர்க் குணங்கள் யாவும் தன் சோர்ந்த பிரமாதம் ஆம் பொய்க் களியே மூலமாப் பூத்தலால் அக்களி மால் சேர்ந்த அகந்தை சிதைந்த மெய்ஞ் ஞான உபசாந்தமே சத்குணச் சால்பு.

**தற்சோர்ந்த-ஆன்ம நிஷ்டையிலிருந்து தவறுகின்ற; பூத்தலால்-உண்டாவதால்; சால்பு-நிறைவு.**

துர்க்குணங்க ளெல்லாம் சுகசொரூபமாந் தன்னை மறந்த மறதி யாலுண்டாய விடயக் களியாட்ட வேட்கை யடியாகவே விளைதலால், அக்களியாட்ட மயக்கஞ் சேர்ந்த வகங்காரம் ஆன்ம விசாரத்தா லழிந்த விடத்தடையும் மெய்ஞ் ஞானானுபவமான உபசாந்தமே சகல சற்குணங்களின் சால்பாம்.

**வி-ரை:-** களி -அதன் வேட்கைக் காகுபெயர்; சால்பு-நிறைவு.

**332. கோதிலா ஞான குணத்தவரே சற்குணத்தோர்**
**ஏதிலார் மற்றை யிழிகுணத்தோர் - ஆதலாற்**
**பொய்தீர்ந்த மெய்யுறுமப் புண்ணியர்தம் பக்கலே**
**உய்திபெற வேண்டு முணர்.**

கோது இலா ஞான குணத்தவரே சத்குணத்தோர் ஏதிலார் மற்றை இழி குணத்தோர் ஆதலால் பொய் தீர்ந்த மெய் உறும் அப் புண்ணியர்தம் பக்கலே உய்தி பெற வேண்டும் உணர்.

**கோது-குற்றம்; ஏதிலார்-ஞானமற்ற மற்றவர்; பக்கலே-பக்கத்திலே; உய்தி-உய்வு.**

உண்மை யுணர்ந்தோரே குற்றமற்ற உயர்குணத்தோ ராவர். அவரொழிந்த வயலாரெல்லாம் இழிகுணத்தோரே. ஆதலால் வீடு பேற்றில் வேட்கை யுள்ளோன், உலக மய லொழிந்த மெய்யுணர்வான் மெய்ப் பொருளே யாகவிளங்கும் முற்கூறிய அப்புண்ணியர் பாலடைந்தே உய்தலுற வேண்டும்.

**வி-ரை:-** உளத் தூய்மையால் உண்மையுணர்ந்தாருழை அருங் குணங்கள் யாவும் அதர்வினாய்ச் சென்றடைதலால் எல்லா நற்குணங்களும் இயல்பின் நிரம்பப் பெற்றுச் சான்றோரெனத் தக்கோர் அவரே யென்பார் குணத்தவரே சற்குணத்தோர் என்றார். ஏகாரம் பிரித்துக்காட்டப் பட்டது. உண்மையுணர் வற்றோர் பூண்டொழுகும் புற வொழுக்கங்களால் எத்தனைதா முயர் குணத்தோராயினும் துர்க்குணங்கட் கெல்லா மூலமா மகந்தை யழியாது இதயத்துளேய்தலால் ஏதிலார் மற்றையிழி குணத்தோரென்றார்.

ஏனைய வெல்லா மேதிலார் மாட்டெய்தலாமாயினும் உய்தியாகும் மனமடிந்த வுபசாந்த சுகமுதவும் உண்மையுணர்வு ஒன்று மட்டும் அப்புண்ணியர் பாலே யடையலாவ தென்பதாம். குருவாகக் கோடற்குரியோரிவரெனக் கூறியவாறு.

# 59. அடியார்மாட்சித்திறன்

**333. பொருவருஞா னான்மானு பூதிமாண் பாலே
பரசொருப மாகப் பழுத்த - குருவருட்கண்
ணோக்குக் கிலக்காக நோற்கப்பெற் றார்பெருமை
வாக்குக்கெட் டாது மதி.**

பொரு அரு ஞான ஆன்ம அனுபூதி மாண்பாலே பர சொருபம் ஆகப் பழுத்த குரு அருள் கண் நோக்குக்கு இலக்கு ஆக நோற்கப் பெற்றார் பெருமை வாக்குக்கு எட்டாது மதி.

**பொரு அரு-அழிக்க முடியாத; நோற்கப் பெற்றார்-பூருவ புண்ணிய முடையோர்; மதி-கொள்க.**

குரு அருட்கண் நோக்குக்கிலக்காகப் படுதலே நோன்பின் சிறப்பாம். அக்கணத்தினின்றும் அவ்வாறு பட்டோர் உய்வழி புக்கவ ராதலின். அந்த நோக்கின் சக்தியால் ஜீவ போதமும் அழியப் பெறக் கூடலால், அவர் பெருமை மதித்தற் கரி தென்றார்.

**334. ஒட்பவடி யாரோ டுறவுக் கலப்புவந்து
திட்பமுள வன்னார் திருக்கூட்டத் - துட்புக்
கொளித்துத்தன் மெய்யுருமற் றோருருக்கொண் டார்வந்
திளைத்துவிளை யாடுஞ் சிவன்.**

ஒட்ப அடியாரோடு உறவுக் கலப்பு உவந்து திட்பம் உள அன்னார் திருக்கூட்டத்து உள்புக்கு ஒளித்துத் தன் மெய் உரு மற்று ஓர் உருக் கொண்டு ஆர்வம் திளைத்து விளை யாடும் சிவன்.

**ஒட்ப-ஞான ஒளி பெற்ற; திட்பம்-திண்மை.**

சிவன் அடியாரை உய்விக்கும் பொருட்டு, அவர் திருக்கூட்டத்தில் அன்னாரோடு கலந்து, தன்மெய்யுரு வொளித்து அன்பினால் வேற்றுருக் கொண்டு அவருடன் திளைத்து விளையாடுவ னென்றார். இது ஸத்குரு வேடம் பூண்டது சிவனே யென்னும் சூசனை.

**(கலி விருத்தம்)**

**335. அடியார் பெருமை யளவறுக் கொண்ணா
அடியார் பெரிய ரரனினு மாலினும்
அடியார்க் கடியரா யவரேவல் செய்வர்
அடியார் பெருமையே யாரணம் போற்றலே.**

அடியார் பெருமை அளவு அறுக்க ஒண்ணா அடியார் பெரியர் அரனினும் மாலினும் அடியார்க்கு அடியராய் அவர் ஏவல் செய்வர் அடியார் பெருமையே ஆரணம் போற்றலே.

**ஒண்ணா-முடியாதது; ஆரணம்-வேதம்.**

## 60. பிரம்மவிச்சைத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**336. காணப் படுமுலகைக் காணாதே யவ்வுலகைக்
காணுந் தமைக்காணக் கற்பதே - மாணவரால்
பேணத் தகும்பிரம விச்சையெனப் பேசுவார்
காணருங் காட்சி யவர்.**

காணப்படும் உலகைக் காணாதே அவ் உலகைக் காணும் தமைக் காணக் கற்பதே மாணவரால் பேணத் தகும் பிரம விச்சை எனப் பேசுவார் காண் அரும் காட்சி அவர்.

**பேணத்தகும்-போற்றத் தகுந்த; காணரும்-காண்டற்கரிய;
காட்சியவர்-காட்சியுடையோர்.**

**337. கானனீர் வையமுமக் காசினியைக் காண்பானும்
பானமார் கண்களின் பார்வையுமாய் - ஆனதனை
எச்சமறச் சுட்டக்கா லெஞ்சியதைக் காண்டலே
விச்சைமற் றல்ல பிற.**

கானல் நீர் வையமும் அக் காசினியைக் காண்பானும் பானம் ஆர் கண்களின் பார்வையுமாய் ஆன தனை எச்சம் அறச் சுட்டக்கால் எஞ்சியதைக் காண்டலே விச்சை மற்று அல்ல பிற.

**காசினி-உலகம்; பானம்-பிரகாசம்; எச்சம்-மிச்சம்; சுட்டக்கால்-எரித்தபோது; விச்சை-வித்தை.**

கானலின்கண் நீர் போலக் கற்பனையா முலகமும், அவ்வுலகை யெதிரிட்டுச் சுட்டறிவாற் காணு மகங்கார வடிவாமுயிரும், வொளியமைந்த கண்களின் காட்சியும் எனுமிம் முத்திறனும் ஒருங்கு தானே யாக நின்றமனத்தை, அம்மனமென்னும் பெயரன்றி அதன் வடிவொருசற்றும் மிஞ்சா தொழியச் சுட்டக்கால் மிஞ்சிப் படிந்த வெறுஞ்சாம்பலா மெய்யைக் காணாது காண்டலே பிரம்ம வித்தை என்னுங் கடவுட் காட்சியாம்; ஒழிந்த பிற அதுவாகா.

**வி-ரை:-** மனமின்றி முப்புடிகள் வழங்கலின்மையின் அவை யாவும் சித்தமயமும், சிந்தனா தன்மமாகிய அச்சித்தவுருச் செத்தவிடத்து எஞ்சி நிற்பது சுத்த சைதன்யமு மாதலால், அதனைக் காண்டலே வித்தை யெனப்பட்டது. அறுமுகக் கடவுள் அறிவை யறிவது பொருளெனத் தமக்கருளியதாக அருணகிரிநாதர் கூறுவதாலும், இமையா நாட்டத் திறையோன் சித்தமலமறுவித்துச் சிவமாக்கித் தமையாண்டதாக மணிவாசகர் கூறுவதாலும் இக்கருத் தினிது விளங்கல் காண்க. கண்களின் பார்வை சுட்டறிவும், மனத்தை எச்சமறச் சுட்டக்கா லெஞ்சியது சுத்த வறிவு மாதலால் அவை ஒன்றினொன்று வேறாதல் காண்க. அவ்விரண்டனுட் பின்னர்க் கூறப்பட்ட சத்தா மாத்திரமாஞ் சைதன்யமே இறைவன் பராவிபூதி யாதலால் எஞ்சிய தென்பதற்கு மிஞ்சிப் படிந்த வெறுஞ்சாம்பலாமெய் யென்றும் சுட்டறிவு சுட்டெரி பட்டமையால் அதனைக் காண்டலென்பதற்கு காணாது காண்டலென்று முரைக்கப்பட்டது. காணாது காண்டலாவது எஞ்சிய வுண்மை சுயஞ்சோதி யாதலால் தனக்குத்தானே விளங்கப்பெறல். ஆங்குத் திரிபுடி பேத மின்றாம். முப்புடிகளுள் ஞேய மட்டுமே யன்றி அதுபோல மற்றிரண்டுங்கூட மனத்தின் கற்பனைகளே யாதலால் வையத்துக்கான அடைமொழியாங் கானலினீரென்பதனை அதனைக் காண்பதற்கும் அதன் பார்வைக்குங் கூட்டலுமாம். பானம்-ஒளி. ஆன்ம சொரூபமாஞ் சிவத்தினின்றும் சித்த வடிவாமதன் சத்தி வேறு பட்டொழியா தொன்றிக் கலத்தலே அசிபதப் பொருளா மைக்கிய நிலையாம்.

## 61. சமயவுண்மைத்திறன்

**338. இன்றி யமையா தியலுந்தன் னுண்மைதனைத்
துன்றுநா  னாரெனவுட் சோதித்தல் - ஒன்றே
உயலுணர்த்தும் பன்மதத்து மூடுருவிச் செல்லு
முயிர்நாடி யாக வுணர்.**

இன்றி அமையாது இயலும் தன் உண்மைதனைத் துன்றும் நான் ஆர் என உள் சோதித்தல் ஒன்றே உயல் உணர்த்தும் பல் மதத்தும் ஊடு உருவிச் செல்லும் உயிர்நாடி ஆக உணர்.

**உயல்-உய்தல்.**

நானாரென்னும் ஞானவிசாரமே எல்லா மதங்களிலும் உயிர்நாடியாக அமைந்துள்ளது. எவ்வாறெனின், தானின்றிச் சாதனை யின்மையின் தன்னை விசாரிப்பதே அவைகளின் உட்கருத்தாம். யோகத்தில் யோகியையும் பக்தியில் பக்தனையும் கர்மத்தில் கர்மியையும் உள்ளபடி அறிவதே ஞான விசார மென்க.

**339. அன்னியமோ வாகா தனனியமா யெல்லையிலா
மன்னுயிர்மாட் டெல்லாம் வயங்கொளியாம் - பின்னமறப்
பன்மணியி னூடும் பயிலுஞ் சரடுபோல்
எம்மதத்தி னூடு மிறை.**

அன்னியமோ ஆகாது அனனியமாய் எல்லை இலா மன் உயிர் மாட்டு எல்லாம் வயங்கு ஒளி ஆம் பின்னம் அறப் பல் மணியின் ஊடும் பயிலும் சரடுபோல் எம்மதத்தின் ஊடும் இறை.

**வயங்கு-விளங்குகின்ற; பயிலும்-செல்கின்ற.**

**340. பலவாந் தகளிகளைப் பற்றித்தீ யொன்றே
பலவாகக் காணும் பரிசே - நிலவும்
பலவா முபாதிகளைப் பற்றித்தா னொன்றே
பலவாகக் காணும் பரிசு.**

பல ஆம் தகளிகளைப் பற்றித் தீ ஒன்றே பல ஆகக் காணும் பரிசே நிலவும் பல ஆம் உபாதிகளைப் பற்றித் தான் ஒன்றே பல ஆகக் காணும் பரிசு.

**தகளி-அகல் விளக்கு; பரிசே-தன்மையே.**

**341. அமையுமதீ தத்தை யகவெள் ளிடையில்
இமயமெனக் காட்டுமொர்சொல் லின்றேற் - சமய
வருக்கமெலாஞ் சேர்ந்துபர வஸ்துவையாய் வாத
தருக்கமெலாஞ்  சந்தையிரைச் சல்.**

அமையும் அதீதத்தை அக வெள் இடையில் இமயம் எனக் காட்டும் ஒர் சொல் இன்றேல் சமயவருக்கம் எலாம் சேர்ந்து பர வஸ்துவை ஆய் வாத தருக்கம் எலாம் சந்தை இரைச்சல்.

**அக-இதயம்; வெள்ளிடையில் இமயமென-வெட்டவெளியில் மலைபோல; ஒர் சொல்-மகா வாக்கியம்.**

**342. தேற்றும் பலசமயஞ் சித்தப் பரிபாக**
**வேற்றுமை கொண்டே விளைந்தனவாம் - போற்று**
**சமயங் களிலே சமரசக் காட்சி**
**யமையப் பெறல்கா ணறிவு.**

தேற்றும் பல சமயம் சித்தப் பரிபாக வேற்றுமை கொண்டே விளைந்தனவாம் போற்று சமயங்களிலே சமரசக் காட்சி அமையப் பெறல் காண் அறிவு.

## 62. கடையிலாக் காட்சித்திறன்

**343. தன்னுளே மூழ்கித் தனையறிந்த காட்சியருக்**
**கன்னியமொன் றில்லை யறிபடவே - என்னை**
**உருவமாந் தன்மை யொழிந்துதா மன்னார்**
**அருவா மறிவுண்மை யால்.**

தன் உளே மூழ்கித் தனை அறிந்த காட்சியருக்கு அன்னியம் ஒன்று இல்லை அறிபடவே என்னை உருவம் ஆம் தன்மை ஒழிந்து தாம் அன்னார் அருவாம் அறிவு உண்மை ஆல்.

**344. உயிர்க்கோயி லுள்ளே யுடையானைத் தேடித்**
**தியக்கமறக் கண்டு தெளிந்தோர் - வியக்கும்**
**உலகப் பெருங்கோயி லுள்ளுமவன் றன்னைக்**
**குலவுறக்காண் கிற்பர் குறித்து.**

உயிர்க்கோயில் உள்ளே உடையானைத் தேடித் தியக்கம் அறக் கண்டு தெளிந்தோர் வியக்கும் உலகப் பெரும் கோயில் உள்ளும் அவன் தன்னைக் குலவு உறக் காண்கிற்பர் குறித்து.

உணர்ச்சி யுண்முகமாய் மிக நுண்ணிதா முயிர்க் கோயி லுள்ளே அவ்வுயிர்க்கிழவனை யாராய்ந்து கலக்கமறக் கண்டு தெளிந்த காட்சி யாளரே, பெருமையால் வியக்கத் தகும் ஏனையுலகக் கோயிலுள்ளும் ஆங்கே அவன் சொரூபத்தை அதுதா னகண்டமாக விளங்கக் குறிக் கொண்டு காணவல்லோராவர்.

**வி-ரை:-** உயிர்க்கிழவன் - சித்தாந்திகள், உயிர்க்குயிராய்த் தமக்குடையோனாகவோதும் ஆன்ம சொரூபமா மண்ணல். யாவரும் தம்மியல்பு பற்றியே உலகை யோர்வராதலின், பர சொரூபத்தை ஐயந்திரிபறத் தம்முள்ளாய்ந் தறியாதார் அதனைப் புறத்திலுங் காண மாட்டா ரென்பதாம்.

**345. உயிர்க்குயிரா வீச னுறைந்தொளிரு முண்மை
மயக்கறவே தேர்ந்த மனத்தோர் - நயக்க
நிகழும் பரன்சந் நிதியாகு மேனோர்
இகழும் புழுமுன் னெலாம்.**

உயிர்க்கு உயிரா ஈசன் உறைந்து ஒளிரும் உண்மை மயக்கு அறவே தேர்ந்த மனத்தோர் நயக்க நிகழும் பரன் சந்நிதி ஆகும் ஏனோர் இகழும் புழு முன் எலாம்.

**நயக்க-விரும்ப.**

**346. அருள்வடிவா நின்ற வகத்தோர்க் கறவே
யிருள்வடிவச் சிந்தை யிறக்கும் - பொருள்வடிவாப்
பொங்குமனு பூதிப் பொலிவுற்ற காட்சியின்மற்
றெங்குமெலா மின்ப மயம்.**

அருள் வடிவா நின்ற அகத்தோர்க்கு அறவே இருள் வடிவச் சிந்தை இறக்கும் பொருள் வடிவாப் பொங்கும் அனுபூதிப் பொலிவு உற்ற காட்சியில் மற்று எங்கும் எலாம் இன்ப மயம்.

**347. ஊன்கணார்க் கொண்மை யுருவத்து முள்ளப்பூ
வாங்கண்மா யோகியர்க்கு மந்தணர்க்கு - வான்கெழுதீ
அவ்வயினுங் கண்ணா யிரம்படைத்த வித்தகருக்
கெவ்வயினுந் தோன்று மிறை.**

ஊன் கணார்க்கு ஒண்மை உருவத்தும் உள்ளப் பூ ஆம் கண் மா யோகியர்க்கும் அந்தணர்க்கு வான் கெழு தீ அவ்வயினும் கண் ஆயிரம் படைத்த வித்தகருக்கு எவ்வயினும் தோன்றும் இறை.

**ஒண்மை-ஒளிபொருந்திய; வான்கெழு தீ-சிறந்து பிரகாசிக்கும் யாகத் தீ; அவ்வயினும்-அவ் விடத்திலும்; வித்தகர்-ஞானிகள்; எவ்வயினும்-எவ்விடத்திலும்.**

**348. கடவுளைத்தான் கண்ணாரக் காண்கின்ற காட்சி
யுடலுருத்தா னன்றாக வோய்ந்து - நடலைசே
ரெண்ணமாங் கற்பனையற் றேகசிதா காசவருட்
கண்ணளவாத் தான்கழிதல் காண்.**

கடவுளைத் தான் கண்ணாரக் காண்கின்ற காட்சி உடல் உருத் தான் அன்று ஆக ஓய்ந்து நடலை சேர் எண்ணம் ஆம் கற்பனை அற்று ஏக சிதாகாச அருள் கண் அளவாத் தான் கழிதல் காண்.

**அன்று ஆக-இல்லாதவாறு; நடலை-துன்பம்; கழிதல்-மிஞ்சுதல்.**

**349. கள்ளப் புலத்தைக் கடிந்துமனக் கற்பனையைத்
தள்ளித்தன் மெய்யிற் றடத்தமாய் - உள்ளத்
தறிவிலே யூன்றி யழுத்தமா நின்ற
செறிவிலே தோன்றுஞ் சிவம்.**

கள்ளப் புலத்தைக் கடிந்து மனக் கற்பனையைத் தள்ளித் தன் மெய்யில் தடத்தம் ஆய் உள்ளத்து அறிவிலே ஊன்றி அழுத்தமா நின்ற செறிவிலே தோன்றும் சிவம்.

**கடிந்து-கண்டித்து; தடத்தமாய்-பற்றற்று; செறிவிலே-திண்மையிலே.**

**350. கள்ளக் கரவறுமெய்க் காட்சியே யின்பவருள்
வெள்ளக் கடலா விளங்குநிலை - உள்ளற்
கரிதான தன்மயமா வாண்டடைந்த மோனத்
தொருதாழ்வு மில்லை யுயிர்க்கு.**

கள்ளக் கரவு அறு மெய்க் காட்சியே இன்ப அருள் வெள்ளக் கடலா விளங்கும் நிலை உள்ளற்கு அரிது ஆன தன் மயமா ஆண்டு அடைந்த மோனத்து ஒரு தாழ்வும் இல்லை உயிர்க்கு..

**கரவு-கபடம்; உள்ளற்கு-எண்ணுவதற்கு.**

## 63. தன்னிழப்புத்திறன்

**351. தொல்லை யகங்காரத் தோன்றற்குத் தேருங்காற்
சொல்லள வல்லாற் பொருளுண்டோ - இல்லையே
உள்ளதேற் பொய்யரவுக் குண்மைக் கயிறுபோற்
கள்ளமிலா மெய்ப்பொருளே காண்.**

தொல்லை அகங்காரத் தோன்றற்குத் தேருங்கால் சொல் அளவு அல்லால் பொருள் உண்டோ இல்லையே உள்ளதேல் பொய் அரவுக்கு உண்மைக் கயிறு போல் கள்ளம் இலா மெய்ப்பொருளே காண்.

**தோன்றல்-தோன்றுபவனான அகந்தை; தேருங்கால்-ஆராயுமிடத்து;
அல்லால்-இல்லாமல்.**

அநாதியாயடைந்த அகங்காரவடிவாஞ் சீவனுக்கு விசாரிக்குங்கால் பெயரளவன்றிப் பிறிது பொருளுண்டோ? அறவே யின்றாம். உளதெனின், மனமயக்க (மனக்கலக்க)த்தாற் றோன்றும் பொய்யரவுக்கு உண்மைக்கயிறே பொருளாவது போன்று அவிச்சையா லாரோபமா மகங்காரத் தோன்றற்கும் இயல்பாகவே பாசங்களினீங்கி யிலங்கும் அதிட்டானமா மான்ம சொரூபமே பொருளாயறியத்தக்கதாம்.

**வி-ரை:-** புருடன் பிறவித்துன்பம் பெரிதுமுழத்தல், அவ்வுண்மை யுணராது அவ்வான்ம சொரூபத்தின் வேறாகத் தன்னை மாறுபடவறிந்த மயக்கத் தாலேயாம். ஆதலால் விசாரத்தா லான்ம சொரூபத்தை யபரோக்கமா யறிந்த வளவில் அவன் அச் சம்சார பந்தத் தினின்றும் விடுதலை பெற்றானாம்.

**352. அகந்தையடங் கிற்றன் னதிட்டான மாக**
**நிகழ்ந்தபரந் தாம நிறைவாம் - அகந்தை**
**தொலையிற் றனாது சொரூபத்துக் கானி**
**இலைநீ கலங்கா திரு.**

அகந்தை அடங்கில் தன் அதிட்டானம் ஆக நிகழ்ந்த பரந்தாம நிறைவு ஆம் அகந்தை தொலையில் தனாது சொரூபத்துக்கு ஆனி இலை நீ கலங்காது இரு.

**தொலையில்-தொலைந்தால்; ஆனி-ஹானி, நஷ்டம்.**

**353. சிவத்துக் குணவாச் செழித்தொளிர்மெய்ஞ் ஞானத்**
**தவத்தழலிற் றம்மனத்தைப் பெய்தோர் - சிவத்தின்**
**சொரூபமே யாகத் துணிந்து வழிபட்**
**டரூபசிவந் தேற லடைவு.**

சிவத்துக்கு உணவு ஆய்ச் செழித்து ஒளிர் மெய்ஞ் ஞானத் தவத் தழலில் தம் மனத்தைப் பெய்தோர் சிவத்தின் சொரூபமே ஆகத் துணிந்து வழிபட்டு அரூப சிவம் தேறல் அடைவு.

**தேறல்-தெளிவது; அடைவு-பேறு, புருஷார்த்தம்; உணவாப் பெய்தோர் எனவும், பெய்தோர் சிவத்தின் சொரூபமே எனவும் கூட்டுக.**

**354. சீவபோ தத்தையொரு சேரவிடுத் தாற்சேர்வ**
**தியாவதோ வென்றைய மெய்தற்க - மேவுகிளை**
**கைந்நழுவ விட்டாலிக் காசினியே போலான்ம**
**மெய்ந்நிலையே சேர்தல் விதி.**

சீவ போதத்தை ஒரு சேர விடுத்தால் சேர்வது யாவதோ என்று ஐயம் எய்தற்க மேவு கிளை கைந்நழுவ விட்டால் இக் காசினியே போல் ஆன்ம மெய்ந்நிலையே சேர்தல் விதி.

**ஒருசேர-முற்றிலும்; எய்தற்க-அடைய வேண்டாம்; மேவு-(தான்) இருக்கின்ற; காசினி-பூமி.**

உயிருணர்வைப் போலி யென்றோராது, அதனை யொருங் கொழித்தால் எந்நிலை யெய்துமோ வென்று வீணில் எவரும் ஐயுறாதொழிக. கைப்பிடித்த கிளையை நழுவவிட்டால் விட்டவன் பூதலத்துப் பொத்தென வீழ்தல்போல உயிருணர் வொழிந்தோன் மெய்யுணர்வான ஆன்மநிலை மேவலுந் தப்பாதாம்.

**வி-ரை:-** உயிருணர்வு, மனவுணர்வு, சுட்டுணர் வென்பனவும் இறையுணர்வு, மெய்யுணர்வு, உணராவுணர்வு என்பனவும் பரியாயங்களாம்.

**355. தவலருமெய் யான்மபதார்த் தத்தையுல குண்மை**
**இகலுஞ் சுழுத்தி யிடத்தும் - அகமிதத்தின்**
**பொய்ப்பாடு காணுந்தன் போத சொரூபத்தின்**
**மெய்ப்பாட்டா லொப்பல் விதி.**

தவல் அரு மெய் ஆன்ம பதார்த்தத்தை உலகு உண்மை இகலும் சுழுத்தி இடத்தும் அகம் இதத்தின் பொய்ப்பாடு காணும் தன் போத சொரூபத்தின் மெய்ப்பாட்டால் ஒப்பல் விதி.

**தவலரு-நீக்கமற்ற, அழிவற்ற; இகலும்-மாறுபடும்.**

**356. யானென்னு மெண்ண மிறையு மெழாவியல்பே**
**தானென்னு மான்மபர தத்துவமாம் - யானெனுமவ்**
**வெண்ண மெழாமையால் யாரே யிலரானார்**
**கண்ணயர்ந்து நின்றக் கடை.**

யான் என்னும் எண்ணம் இறையும் எழா இயல்பே தான் என்னும் ஆன்மபர தத்துவம் ஆம் யான் எனும் அவ் எண்ணம் எழாமையால் யாரே இலர் ஆனார் கண் அயர்ந்து நின்றக் கடை.

**இறையும்-சிறிதும்; கண் அயர்ந்து நிற்றல்-தூங்குதல்.**

**357. நானறுமத் தன்மையே நாடுங்காற் பொய்ச்சடமாம்**
**ஊனமறு தன்மெய் யுணர்வுருவாம் - நானறுமத்**
**தன்மைக்கட் டானிலனோ தாக்கற் றறிதுயிலாம்**
**உண்மைக்கண் ணாடி யுணர்.**

நான் அறும் அத் தன்மையே நாடுங்கால் பொய்ச்சடம் ஆம் ஊனம் அறு தன் மெய் உணர்வு உரு ஆம் நான் அறும் அத் தன்மைக்கண் தான் இலனோ தாக்கு அற்று அறிதுயில் ஆம் உண்மைக்கண் நாடி உணர்.

**தன்மைக்கண்-தன்மையினிடத்தில்.**

**358. நானற்று நிற்றலே ஞான சொரூபநிலை**
**தேனொத்த சாந்த சிவோகநிலை - ஊனப்**
**பிறப்பிறப்பற் றோங்கும் பிரம்மநிர் வாணச்**
**சிறப்பெனுங்கை வல்லியமுந் தேர்.**

நான் அற்று நிற்றலே ஞான சொரூபநிலை தேன் ஒத்த சாந்த சிவோகநிலை ஊனப் பிறப்பு இறப்பு அற்று ஓங்கும் பிரம்ம நிர்வாணச் சிறப்பு எனும் கைவல்லியமும் தேர்.

**தேனொத்த-இனிமையான.**

## 64. சுத்தாகந்தைத்திறன்

**359. சீவ வகந்தையறச் செத்தா லகண்டான்ம**
**பாவ வகந்தைப் பரிசொளிரும் - பூவில்**
**உருத்துழலும் பந்தமா மூத்தையகந் தைபோற்**
**கிருத்திரிம மன்றக் கிளர்வு.**

சீவ அகந்தை அறச் செத்தால் அகண்ட ஆன்ம பாவ அகந்தைப் பரிசு ஒளிரும் பூவில் உருத்து உழலும் பந்தம் ஆம் ஊத்தை அகந்தை போல் கிருத்திரிமம் அன்று அக்கிளர்வு.

**பரிசு-நிலை,தன்மை; உருத்து-உருவமடைந்து; கிருத்திரிமம்-போலி; கிளர்வு-எழுச்சி.**

**360. இயல்பா யிடைவிடா தென்று முளதாய்**
**மயல்போ யெழுமிதய மாண்பே - செயல்களிடைக்**
**கத்தத் துவங்கமழாக் காட்சியான் முத்தரது**
**சுத்தாகங் காரந் துணி.**

இயல்பாய் இடைவிடாது என்றும் உளதாய் மயல் போய் எழும் இதய மாண்பே செயல்கள் இடைக் கத்தத்துவம் கமழாக் காட்சியால் முத்தரது சுத்த அகங்காரம் துணி.

**கமழா-தோன்றாத.**

**361. ஊன வுடலகந்தை யோய்தலாற் பூரணமெய்ஞ்**
**ஞானமய வாழ்க்கை நடாத்துவோர் - ஊனக்**
**கவலையறத் தம்மிற் களித்திருப்பர் சித்தச்**
**சபலமறு சாந்தி தழைத்து.**

ஊன உடல் அகந்தை ஓய்தலால் பூரண மெய்ஞ் ஞானமய வாழ்க்கை நடாத்துவோர் ஊனக் கவலை அறத் தம்மில் களித்து இருப்பர் சித்தச் சபலம் அறு சாந்தி தழைத்து.

**சபலம்-மன அலைவு.**

## 65. ஆன்மவெழுச்சித்திறன்

**362. உள்ளமாந் தன்மூல மோர்ந்தாலே நானெனும்பொய்க்**
**கள்ளமுதல் சாயக் கடவதாம் - கள்ளமாம்**
**அம்முதல்சாய்ந் தாலே யபரோக்க மாவான்ம**
**மெய்ம்முதல்வீ றுற்றெழும்பு மேல்.**

உள்ளம் ஆம் தன் மூலம் ஓர்ந்தாலே நான் எனும் பொய்க் கள்ள முதல் சாயக் கடவது ஆம் கள்ளம் ஆம் அம்முதல் சாய்ந்தாலே அபரோக்கமா ஆன்ம மெய்ம்முதல் வீறு உற்று எழும்பும் மேல்.

**வீறு-வலிவு.**

**363. அசாவிருள்வாய்த் தோன்றி யகிலமுமா யாடும்
அசார வகப்பே யதனை - உசாவவது
மாப்பிளைத்தோ ழன்போன் மறையமெய் யான்மரவி
மீப்புலனா மாயையிருள் விண்டு.**

அசா இருள் வாய்த் தோன்றி அகிலமும் ஆய் ஆடும் அசார அகப்பேய் அதனை உசாவ அது மாப்பிளைத் தோழன் போல் மறைய மெய் ஆன்மரவி மீப்புலன் ஆம் மாயை இருள் விண்டு.

**அசாவிருள்-மையிருள்; மீ-சிறந்து.**

தன்மறப்பா மையிருள்வாய்த் தோன்றித் தானே யனைத்துமாய் தலைவிரித்தாடும் தனக்கென் றோருண்மையற்ற பேய் போலு மகந்தையை, அது யாதென இதயஞ் சேர்ந்து விசாரிக்கவே விசாரணை நிகழாதவரை வெளிப்பட்டிருந்து நிகழ்ந்தவுடன் யாண்டோவோடி மறைந்த மாப்பிளைத் தோழன் போல் அது தானும் மறைதலால், அதனாதாரவுண்மையாய் நின்ற ஆன்ம சூரியன் அஞ்ஞானவிருளை யறப்பிளந்து இதயவெளியிற் சிறந்து விளங்குவான்.

**364. மோனவெளிப் புக்கு முடிந்தவகங் காரமே
ஞானவெளி யாக நடப்பதாம் - ஆனதாற்
பொய்யகந்தை பொய்க்கனாப் போன்மூலம் புக்கொழிய
மெய்யகந்தா னாவெழுமே மேல்.**

மோனவெளிப் புக்கு முடிந்த அகங்காரமே ஞானவெளி ஆக நடப்பதாம் ஆனதால் பொய் அகந்தை பொய்க்கனாப் போல் மூலம் புக்கு ஒழிய மெய் அகம் தானா எழுமே மேல்.

**365. உடற்சிலுவை யாங்க ணுடலகந்தை யேசு
உடற்றப்பட் டாங்கே யொழிய - உடற்சியற
எஞ்சியமெய் யான்மா விறையா யிலங்கலவர்
உஞ்சுயிர்த்து மீட்டுமெழ லோர்.**

உடல் சிலுவை ஆங்கண் உடல் அகந்தை ஏசு உடற்றப்பட்டு ஆங்கே ஒழிய உடற்சி அற எஞ்சிய மெய் ஆன்மா இறையாய் இலங்கல் அவர் உஞ்சு உயிர்த்து மீட்டும் எழல் ஓர்.

**ஆங்கண்-அங்கே; உடற்சி-துன்பம்; இலங்கல்-விளங்கல்; உஞ்சு-உய்ந்து.**

ஜடவுடலாஞ் சிலுவைக்கண் அவ்வுடலகந்தையாங் கிறிஸ்து மரண வேதனைப்பட ஆணிகொண்டறைந்து வருத்தப்பட்டு அந்நிலையே மரித்தொழிய, ஜனனமரணத் துன்பமற மிஞ்சி நின்ற வுண்மையா மான்மா இறைமயமாய் விளங்கக் காண்டலே அன்னா ருய்தலுற்று மீட்டுமுயிர்த்தெழலாம்.

**வி-ரை:-** உடற்றப்படல் ஈண்டுத்துன்பஞ் சுடச்சுட நோற்றலும், ஒழிதல் ஈண்டுச் சிச்சடக்கிரந்தியா மகந்தை நசித்தலுமாகக் கொள்க. 'சுடச்சுடரும் பொன்போ லொளி விடுந் துன்பஞ் சுடச்சுட நோற்கிற் பவற்கு' - குறள், உடற்சி-வருத்தம், துன்பம். உடற்சியற விலங்கல் எனக் கூட்டி இறைவனோடு வேறற விளங்கல் என்றுமாம்: இப்பொருளில் உடற்சி-மாறுபாடு, வேற்றுமை. மீட்டு முயிர்த் தெழல் - 'யான்' பிறந்த தெங்கிருந் தென உண்முக உணர்வாலுசாவித் தன் பிரம்ம மூலத்திற் போய்ப் பிறத்தல். அவ்வாறு பிறந்தோனே இருபிறப்பாளன் எனப்படுவோன்.

பிறந்த தெவன்றன் பிரம்மமூ லத்தே
பிறந்ததெவ ணானென்று பேணிப்-பிறந்தா
னவனே பிறந்தா னவனிதமு னீச
னவனவன வன்றினமு நாடு.

- உள்ளது நாற்பது அநுபந்தம்

இந்நூலிற் பிறிதோரிடத்து வரும் செய்யுட் (973) கருத்தோடு இச்செய்யுட் பொருளை ஒப்பிட்டு நோக்குக.

**366. அத்துவித மெய்யா மபரிமித மோனத்திற்**
**செத்துயிர்த்தல் கைவல்ய சித்தியாம் - வித்தகமா**
**மந்நிலையின் மேவு மதீதசுத் தானந்தந்**
**தன்னியல்பின் மன்னுந் தழைத்து.**

அத்துவித மெய் ஆம் அபரிமித மோனத்தில் செத்து உயிர்த்தல் கைவல்ய சித்தி ஆம் வித்தகம் ஆம் அந்நிலையில் மேவும் அதீத சுத்தானந்தம் தன் இயல்பில் மன்னும் தழைத்து.

**வித்தகமாம்-ஞானமயமான; தன் இயல்பில்-தன் இயல்பாகவே.**

கைவல்ய சித்தியென்பது அத்துவிதமெய்யால் அகங்கார வாழ்விறந்து மோனத்துயிர்த்தலேயாம். பூதவுடலை நீடிக்கச் செய்யும் காயகற்பங்கள் எவையும் அதுவல்ல என்பது சூசனை. அந்நிலையில் மேவும் அதீத சுத்தானந்தம் தன்னியல்பாகவே தழைத்து விளங்கும்.

## 66. துக்கநிவிருத்தித்திறன்

**367. மனக்குறையா லேங்கிமதி மாழ்குமுயி ரந்த**
**மனக்கவலை தீர்ந்தே மகிழத் - தனக்குமே**
**லாதிக்க மான வருட்பரமே தன்னுருவாச்**
**சாதிக்க வேண்டுவது தான்.**

மனக் குறையால் ஏங்கி மதி மாழ்கும் உயிர் அந்த மனக்கவலை தீர்ந்தே மகிழத் தனக்கு மேல் ஆதிக்கம் ஆன அருள் பரமே தன் உருவாச் சாதிக்க வேண்டுவது தான்.

**மாழ்கும்-மயங்கும்.**

**368. எதனை மறந்ததனா லிவ்வுலக மாயை**
**மதனுடைத்தாய்த் தன்னை மயக்கிற் - றதனை**
**அறிந்தாலே யன்றி யணுவளவுந் துன்பம்**
**இறந்தொழித லென்ப திலை.**

எதனை மறந்ததனால் இவ் உலக மாயை மதன் உடைத்து ஆய்த் தன்னை மயக்கிற்று அதனை அறிந்தாலே அன்றி அணு அளவும் துன்பம் இறந்து ஒழிதல் என்பது இலை.

**மதன் உடைத்து-பலமுள்ளதாய்.**

**369. தனது மனைமக்கள் சாவுக் கழுவோன்**
**தனதுநிலை யேதெனத்தற் சார்ந்து - முனதாத்**
**தனாஅ துடலகந்தைச் சாவுக் கழவே**
**தனாதரந்தை முற்றுமறச் சாம்.**

தனது மனை மக்கள் சாவுக்கு அழுவோன் தனது நிலை ஏது எனத் தன் சார்ந்து முனது ஆகத் தனாஅது உடல் அகந்தைச் சாவுக்கு அழவே தனாது அரந்தை முற்றும் அறச் சாம்.

**அரந்தை-துன்பம்.**

தன் மனைவி மக்கள் முதலிய பிறர் சாவுக்குத் துன்புற்றழுவோன், அவ்வாறதற் கழுவதன் முன், தன்னுண்மையாதாமெனத் தன்னுள் விசாரித்துத் தன் பரமார்த்த நிலையையடைந்து, அவ்வாற்றால், அவ்விசாரத்திலழிந்துபட்ட வுடலகந்தை யாந்தன் சாவுக் கழுது விடின், முற்கூறிய வழுகைக்குக் காரணமான தன் மனத் துன்பம் முழுவதும் மாய்ந்தொழியும்.

**வி-ரை:-** ஆன்ம சொரூபத்தில் அனைத்துயிரும் பிறப்பிறப் பற்ற வமுதமயமாக அநாதியே யமைந்திருத்தலின், கற்பனையா முபாதி நோக்கத்திலன்றி, உண்மையாமான்ம நோக்கத்தில், பிறவுயிர்களின் பிறப்பிறப்புப் பற்றி ஒருவன் முறையே மகிழவோ வருந்தவோ அவகாச மின்றாகவும், அவன் மாறி மாறி அவற்றைச் செய்வதற்குத் தன்னுடலகந்தையே காரணமாதலால், அஃதழியவே அதனோடவையும் ஒருங்கழியு மென்பார், அவ்விரண்டுள் அதிகாரமா யெடுத்துக்கொண்ட ஒரு புடையே பற்றி, தனாஅதுடலகந்தைச் சாவுக்கழவே தனாதரந்தை முற்றுமறச் சாம் என்றார். அகந்தைச் சாவுக் கழவே யென்றது அஃதழியப் பெறின் என்றவாறாம்.

**370. உயிருடலம் பற்றி யுயிர்க்கன்பு செய்யின்
உயிருடலஞ் சாவுறுங்கா லுண்டாம் - துயரறவே
அவ்வுயிரின் மெய்யுருவா மான்மாவைப் பற்றியே
எவ்வமறு மெய்யன் பியற்று.**

உயிர் உடலம் பற்றி உயிர்க்கு அன்பு செய்யின் உயிர் உடலம் சாவு உறுங்கால் உண்டாம் துயர் அறவே அவ் உயிரின் மெய் உரு ஆம் ஆன்மாவைப் பற்றியே எவ்வம் அறு மெய் அன்பு இயற்று.

**உயிருடலம்-அகந்தை; எவ்வம்-துன்பம்.**

## 67. நிராசைத்திறன்

**371. சார்வதன் முன்னமணுத் தானுமா மேருவாய்ச்
சார்ந்தபின் மாறாய்ச் சரிந்துநல் - கூர்ந்திடலால்
ஆர்தற் கரும்பே ரவாப்போல யாங்காணேம்
தூர்தற் கரும்பாழ்ங் குழி.**

சார்வதன் முன்னம் அணுத் தானும் மா மேருவாய்ச் சார்ந்தபின் மாறாய்ச் சரிந்து நல்கூர்ந்திடலால் ஆர்தற்கு அரும் பேர் அவாப்போல யாம் காணேம் தூர்தற்கு அரும் பாழ்ம் குழி.

**சரிந்து-வியவகரித்துக்காட்டி; நல்கூர்ந்திடலால்-வறுமையடைவதால்;
ஆர்தற்கு-நிறைதற்கு; காணேம்-காணவில்லை.**

அவாவிய பொருளை யடைவதன் முன்பு அணுவளவாமது பெரிய மலையளவாகப் பெருத்தும், ஆனாலதனை யடைந்த பின்போ அதற்கு நேர் மாறாய் மலையளவாமது அணுவளவாகச் சிறுத்தும் தோன்றி வறுமையுறலால் நிறைதற்கரிய பேராசை போல நிரம்புதற்கரிய பாழ்ங்குழி யாமெங்குங் கண்டிலேம்.

**வி-ரை:-** ஆராவியற்கை யவாவென்றார் நாயனாரும். செல்வமென்பது உண்மையில் சிந்தையின் நிறைவே யாதலால், அம்மன நிறை வில்லாத வழி எத்துணைப் பொருளீட்டத்தானும் எவனும் வறுமையினீங்கி வளவனாக முடியா தென்பதாம்.

**372. நிறைவையே நாடியநன் னெஞ்சரே நெஞ்சக்
குறைவாய வந்நல் குரவை - உறுபொருளால்
நீந்திக் கடக்க நினையாமற் சித்தோப
சாந்தி யடைதலே சால்பு.**

நிறைவையே நாடிய நல் நெஞ்சரே நெஞ்சக் குறைவாய அந் நல்குரவை உறு பொருளால் நீந்திக் கடக்க நினையாமல் சித்தோப சாந்தி அடைதலே சால்பு.

**நல்குரவை-வறுமையை; உறு-நிறைந்த.**

## 373. ஆண்டவன் பாதத் தழுந்துமனம் பூர்வம்போற்
## றாண்டவ மாடத் தலைப்படுமோ - பூண்ட
## வதூவரத் தன்மைசேர் வாழ்க்கையிலே மோகக்
## குதூகலங் கொண்டு குதித்து.

ஆண்டவன் பாதத்து அழுந்தும் மனம் பூர்வம்போல் தாண்டவம் ஆடத் தலைப்படுமோ பூண்ட வதூவரத் தன்மைசேர் வாழ்க்கையிலே மோகக் குதூகலம் கொண்டு குதித்து.

ஆண்டவன் பாதத்தே ஒரு முறையேனும் அழுந்திய மனம் முன்போல் சிற்றின்ப வாழ்வில் சிறிதேனும் திகை வின்றி ஈடுபடா தென்றார். உலகவியலில் அது வலிமை கொண்ட பாசமாவதால் அதையிங்குச் சிறப்பாகக் கூறினார்.

## 374. பெருத்தபே ரின்பமென்பர் பேரறிஞர் சித்த
## விருத்தி யனைத்தும் விளிவைக் - கருத்தின்
## இராகந் துவேஷ மிரண்டு மகன்ற
## நிராசையே நல்ல நெறி.

பெருத்த பேர் இன்பம் என்பர் பேர் அறிஞர் சித்த விருத்தி அனைத்தும் விளிவைக் கருத்தின் இராகம் துவேஷம் இரண்டும் அகன்ற நிராசையே நல்ல நெறி.

**விளிவு-அழிவு.**

## 375. ஆசை யுளார்க்கேயவ் வாசை யடர்ப்புறுங்கால்
## நீச வெகுளியெழு நிச்சயத்தால் - ஆசை
## இறுபவற்று ளெல்லா மிறுதியாங் காமஞ்
## செறுவெகுளிக் கட்செறிவ தாம்.

ஆசை உளார்க்கே அவ் ஆசை அடர்ப்பு உறுங்கால் நீச வெகுளி எழும் நிச்சயத்தால் ஆசை இறுபவற்றுள் எல்லாம் இறுதி ஆம் காமம் செறு வெகுளிக்கண் செறிவது ஆம்.

**அடர்ப்பு-தடுக்கப்படல்; இறுபவ - அழிவன; செறு-மிகுதியான; வெகுளிக்கண்-கோபத்தில்; செறிவது-இருப்பது.**

ஆசையுள்ளவர்க்கு, அவ்வாசைக்குப் பிரதிபந்தங்கள் ஏற்படுங்கால், நீசமான கோபம் அவரிடம் திண்ணமாக எழுவதால், அழிபவற்றுள் ஆசையே எஞ்சி நிற்பதாய் இறுதியில் அழிவதாய், கோபத்திலும் செறிவதென்க. ஆசை, வெகுளி இவற்றின் தொடர்பும், உட்பகையின் வலிமையும் ஒருங்கே விளக்கினார்.

**376. பேசாத மோனப் பெரும்பதப்பேற் றாசையுமே**
**ஆசார மாட்சிக் கயலென்றாற் - றேசிலா**
**மாசா ருடம்போடு மற்றவற்றின் மேலாசை**
**ஆசார மாமோ வறை.**

பேசாத மோனப் பெரும்பதப் பேற்று ஆசையுமே ஆசார மாட்சிக்கு அயல் என்றால் தேசு இலா மாசு ஆர் உடம்போடு மற்றவற்றின் மேல் ஆசை ஆசாரம் ஆமோ அறை.

**377. எனக்கிது வேண்டு மிதுவெனக் கில்லை**
**எனக்கருதுஞ் சிந்தை யிலாதான் - வினைக்கீடாப்**
**போந்ததுகொண் டின்பம் பொருந்தலன்றித் தன்னிலையிற்**
**பேர்ந்தெவன்கொல் பேதுழப் பான்.**

எனக்கு இது வேண்டும் இது எனக்கு இல்லை எனக் கருதும் சிந்தை இலாதான் வினைக்கு ஈடாப் போந்தது கொண்டு இன்பம் பொருந்தல் அன்றித் தன் நிலையில் பேர்ந்து எவன்கொல் பேது உழப்பான்.

**போந்தது-வந்து சேர்ந்தது; எவன் கொல்-ஏன்; பேது-பைத்தியம்.**

தன்னிலை விட்டுப் பெயராதிருக்க விரும்புவோன், எனக்கு இது வேண்டப்படுவதென்றும், இஃது இல்லாமையால் யான் இடருற்றனன் என்றும் சிறிதும் கருதாமல், வினையொப்ப வந்தடைந்த போகங்களைப் புஜித்து சாந்தமாகக் கடவன். ஏனெனின், நினைவே பந்தமும் துக்கமு மாதலின். நினைவுகள் நீங்கிய அளவில் சொரூபம் பிரத்யக்ஷமாம்.

**378. ஆசாபா சக்கட் டறவறுத்தோர்க் கல்லாது**
**மாசாருந் தோற்ற மடியாதே - தேசாரும்**
**பேசா வுபசாந்தப் பேரின்பத் தாசையையும்**
**கூசா தறுத்தல் குறி.**

ஆசாபாசக் கட்டு அற அறுத்தோர்க்கு அல்லாது மாசு ஆரும் தோற்றம் மடியாதே தேசு ஆரும் பேசா உபசாந்தப் பேர் இன்பத்து ஆசையையும் கூசாது அறுத்தல் குறி.

**பேசா உபசாந்தப் பேரின்பம்-மோக்ஷம்; குறி-குறிக்கோள்.**

**379. இம்மை மறுமைச்சிற் றின்பமே லாசையாய்**
**மம்ம ருழந்த மடநெஞ்சே - நிம்மதியாய்**
**நின்றானீ யெய்துவாய் நிண்ணயமா யவ்விரண்டை**
**வென்றாய பேரின்ப வீடு.**

இம்மை மறுமைச் சிற்றின்பம் மேல் ஆசை ஆய் மம்மர் உழந்த மடநெஞ்சே நிம்மதி ஆய் நின்றால் நீ எய்துவாய் நிண்ணயமாய் அவ் இரண்டை வென்று ஆய பேர் இன்ப வீடு.

**மம்மர் உழந்த-துன்புற்ற; நிண்ணயமாய்-நிச்சயமாக; வென்றாய-வென்ற நிலையாகிய.**

## 68. பந்தமுத்தித்திறன்

**380. தேகமகஞ் சீவ சுதந்தரமால் தேய்ந்திறலே**
**சோகமின்மெய் யான்ம சுதந்தரமாம் - சாகைச்**
**சமயமெலா வற்றின் சமரசமா யொக்க**
**அமைவதுவா மஃதே யறிவு.**

தேகம் அகம் சீவ சுதந்தர மால் தேய்ந்து இறலே சோகம் இல் மெய் ஆன்ம சுதந்தரம் ஆம் சாகைச் சமயம் எலாவற்றின் சமரசம் ஆய் ஒக்க அமைவது ஆம் அஃதே அறிவு.

**மால்-குற்றம்; இறல்-அழிதல்; சாகை-பிரிவு, கிளை; ஒக்க-ஒத்தாற்போல்.**

**381. தன்னை யறியாத் தவற்றா லுறும்பிறவி**
**பின்னை யெதனாலும் பேராது - துன்னுமயற்**
**கோச வகந்தை குலைந்தொழிந்த மெய்யுணர்வே**
**பாச விமோசம் பணும்.**

தன்னை அறியாத் தவற்றால் உறும் பிறவி பின்னை எதனாலும் பேராது துன்னும் மயல் கோச அகந்தை குலைந்து ஒழிந்த மெய் உணர்வே பாச விமோசம் பணும்.

**பேராது-நீங்காது; துன்னும்-நெருங்குகின்ற; பாச விமோசம்-கட்டு அறல்.**

**382. மெத்தவெழுஞ் சித்த விருத்தியையே யல்லாது**
**பெத்தமெனக் காணாத பேரறிஞர் - எச்சமறச்**
**செத்த விருத்தியுடைச் சித்தத்தை யல்லாது**
**முத்தியெனக் காணார் முறை.**

மெத்த எழும் சித்த விருத்தியையே அல்லாது பெத்தம் எனக் காணாத பேர் அறிஞர் எச்சம் அறச் செத்த விருத்தி உடைச் சித்தத்தை அல்லாது முத்தி எனக் காணார் முறை.

**பெத்தம்-பந்தம்; எச்சம்-மீதி; முறை-முடிவு.**

**(இன்னிசை வெண்பா)**

**383. மட்டுண்டாற் போன்று மயங்கலுறு மம்மனமே
கட்டுண்டாற் போன்று கலங்கலுறுஞ் சீவான்மா
வெஃகி யெனைத்தும் வியவாது நின்றக்கால்
அஃதே பரமான்மா வாம்.**

மட்டு உண்டால் போன்று மயங்கல் உறும் அம்மனமே கட்டு உண்டால் போன்று கலங்கல் உறும் சீவ ஆன்மா வெஃகி எனைத்தும் வியவாது நின்றக்கால் அஃதே பரம ஆன்மா ஆம்.

**மட்டு-மது அல்லது எல்லை; வெஃகி-விரும்பி; எனைத்தும்-எதையும்; வியவாது-ஆச்சரியப்படாமல்.**

மதுவுண்டு மயங்கினாற்போல மதி மருண்டு தடுமாறும் மலின மனமே கன்ம பந்தத்தா லுண்மையிற் கட்டுப்பட்டாற் போல அறிவு கலங்கியலமரும் சீவான்மாவாம். விடயங்களைச் சுட்டறிவாற் சற்றும் விரும்பி மகிழாது தன்னிலைக் கண்ணே நழுவலறத் தரித்து நின்றால் அவ்விசுத்த மனமே அவிசேடவறிவாய்த் தெளிந்து விளங்கும் பரமான்மாவாம்.

## 69. ஆன்மவிசாரத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**384. நீயா ரவனா ரெனப்புறத்து நீளமனம்
போயே வினாவுமப் போக்கொழிந்தே - ஓயாது
தானாவ லாகத் தனைக்குறித்துத் தன்னகத்து
நானா ரெனக்கேட்கை நன்று.**

நீ யார் அவன் ஆர் எனப் புறத்து நீள மனம் போயே வினாவும் அப் போக்கு ஒழிந்தே ஓயாது தான் ஆவலாகத் தனைக்குறித்துத் தன் அகத்து நான் ஆர் எனக் கேட்கை நன்று.

**நீள-நெடுக.**

ஓரெல்லையின்றிப் புறம் போய்க் கொண்டே மனமானது 'நீயா' ரென்றும், 'அவனா' ரென்றும் வீணில் விசாரிக்கு மவ்வழக்க மொழிந்து, தன்னகத்துத் திரும்பித் தன்னையே விடயமாகப்பற்றி இடைவிடாது' நானா' ரென்றாவலாகத் தன்னையே தான் விசாரித்தல் ஒருவர்க் குறுதி பயப்பதாம்.

**385. நானா ரெனத்தன் னடுவூ டுருவுநோக்
கானாது கூர்த்த வறிவாலே - நானானென்
றுண்மைப் பொருளோங்க வூனகந்தை யற்றொழிந்தால்
விண்மை விகற்ப மறும்.**

நான் ஆர் எனத் தன் நடு ஊடுருவு நோக்கு ஆனாது கூர்த்த அறிவாலே நான் நான் என்று உண்மைப் பொருள் ஓங்க ஊன் அகந்தை அற்று ஒழிந்தால் விண்மை விகற்பம் அறும்.

**ஆனாது-நீங்காது; விண்மை-ஆகாயத்தின் நீலநிறம்; விகற்பம்-வேறுபாடு.**

நானாரென்ற விசாரத்தால் பல திரிசியங்களை நீக்கி தேஹாத்ம புத்தியும் குன்றிய விடத்து ''நான் நான்'' என்ற சொரூபவுணர்வு தானாகவே தழைக்கும். அவ்வாறு அகந்தை அழிய விகற்பம் அறும்.

## 386. கேட்குந்தா னாரெனுமக் கேள்வியாற் கேடுறுவ
## கேட்கப் படுந்துவிதக் கேள்வியெலாம் - கேட்குந்தா
## னாரெனுமக் கேள்விபிர மாத்திரமாய்க் காரவிச்சை
## யாரனியத் தோற்ற மடும்.

கேட்கும் தான் ஆர் எனும் அக் கேள்வியால் கேடு உறுவ கேட்கப் படும் துவிதக் கேள்வி எலாம் கேட்கும் தான் ஆர் எனும் அக் கேள்வி பிரம்மாஸ்திரமாய்க் கார் அவிச்சை ஆர் அனியத் தோற்றம் அடும்.

**கார் அவிச்சை ஆர்-அஞ்ஞான இருளிற் காணப்படுகின்ற; அடும்-அழிக்கும்.**

கேள்வி கேட்போன் யாரெனும் விசாரத்தால், கேள்விகள் உற்பத்தி ஸ்தானத்திலேயே அழிவனவாம். கேட்கும் தான் யாரெனும் விசாரமே அவித்தையாகின்ற அன்னியத்தோற்றத்தை அழிவிக்கும்.

## 387. கள்ளப் புலம்புறத்துக் காண்போனா ரென்றுசாஅய்த்
## துள்ளு மகந்தைத் துடுக்கறத்தான் - உள்ளத்து
## நீடியமெய்ஞ் ஞானபர நிட்டையுற லேயுயிர்க்கு
## வீடியல் வாய்க்கும் விதம்.

கள்ளப் புலம் புறத்துக் காண்போன் ஆர் என்று உசாஅய்த் துள்ளும் அகந்தைத் துடுக்கு அறத் தான் உள்ளத்து நீடிய மெய்ஞ் ஞான பர நிட்டை உறலே உயிர்க்கு வீடு இயல் வாய்க்கும் விதம்.

## (குறள் வெண்பா)

## 388. நானா ரெனத்தன்மெய் நாடுமுயிர் நானறுமெய்
## யானவான் மாவா வறும்.

நான் ஆர் எனத் தன் மெய் நாடும் உயிர் நான் அறு மெய் ஆன ஆன்மாவா அறும்.

**அறும்-அறுதியுறும், முடிவுறும்.**

நான் யாரென அப்போலியுயிர் தனதுண்மையை உள்ளாழ்ந்து விசாரிக்க நான் என்ற நாமரூப போதமழிந்து அஃது எல்லையற்ற ஆன்மாவாகவே முடியும்.

## (நேரிசை வெண்பா)

**389. மதியைவெளிச் செல்லாது மாற்றித்தன் மூல**
**இதயமெனு மான்மா விடத்தே - சததமுற**
**யானெனும்பா ழெண்ண மெழவொட்டா தூன்றலே**
**ஆன்ம விசாரத் தடைவு.**

மதியை வெளிச் செல்லாது மாற்றித் தன் மூல இதயம் எனும் ஆன்மா இடத்தே சததம் உற யான் எனும் பாழ் எண்ணம் எழ ஒட்டாது ஊன்றலே ஆன்ம விசாரத்து அடைவு.

**சததம்-எப்போதும்.**

**390. உள்ளத் துணர்வா யொளிரும் பரம்பொருளை**
**மெள்ளத் தனித்திருந்து மேவாமற் - பொள்ள**
**வெளித்தேடி யெங்கும் விசாரித்தல் கீழ்நீர்க்**
**குளித்தானைத் தீத்துரீஇ யற்று.**

உள்ளத்து உணர்வாய் ஒளிரும் பரம்பொருளை மெள்ளத் தனித்து இருந்து மேவாமல் பொள்ள வெளித்தேடி எங்கும் விசாரித்தல் கீழ் நீர்க் குளித்தானைத் தீத்துரீஇ அற்று.

**மேவாமல் - அடையாமல்; பொள்ள-ஆரவாரித்து; கீழ் நீர்க்குளித்தானை-நீரில் மூழ்கியவனை; தீத்துரீஇ-தீப்பந்தம் கொண்டு தேடுதல்.**

**391. பஞ்சகோ சத்துட் படிந்துளதம் மான்மாவை**
**நெஞ்சத் தலம்புக்கு நேர்படார் - விஞ்சையா**
**நூன்முயலுங் கேள்விச்சீர் நூலுசா வல்லான்மற்**
**றான்ம விசாரமோ வன்று.**

பஞ்ச கோசத்துள் படிந்து உள தம் ஆன்மாவை நெஞ்சத் தலம் புக்கு நேர்படார் விஞ்சைஆம் நூல் முயலும் கேள்விச் சீர் நூல் உசா அல்லால் மற்று ஆன்ம விசாரமோ அன்று.

**நேர்படுதல்-சாக்ஷாத்கரித்தல்; விஞ்சை-வித்தை; நூல் உசா-சாஸ்திரக் கல்வி கேள்விகளால் செய்யும் புத்தக விசாரம்.**

**392. நெஞ்சி லுயிரை நிறுவும் மனோலயத்தாற்**
**சஞ்சலந்தீர்ந் துண்டான சாந்தியிலே - அஞ்சுணர்வொன்**
**றான வகத்தூ டறிவாலே கூர்த்தாராய்ந்**
**தூனமில்சச் சித்தை யுணர்.**

நெஞ்சில் உயிரை நிறுவும் மனோலயத்தால் சஞ்சலம் தீர்ந்து உண்டான சாந்தியிலே அஞ்சு உணர்வு ஒன்று ஆன அகத்து ஊடு அறிவாலே கூர்த்து ஆராய்ந்து ஊனம் இல் சத் சித்தை உணர்.

**நிறுவும்-நிறுத்தும்; அஞ்சுணர்வு-ஐம்புலவுணர்வு; கூர்த்து-கூர்ந்து.**

**393. மிக்கஞா னான்ம விசாரமாஞ் செந்நெறிவாய்ப்**
**புக்கார் வழிமாறிப் போதலிலை - அர்க்கனென**
**நேரிதா மந்த நெறியேதன் னேர்மையைத்தற்**
**சாரு மவர்க்குணர்த்துந் தான்.**

மிக்க ஞான ஆன்ம விசாரமாம் செம் நெறிவாய்ப் புக்கார் வழி மாறிப் போதல் இலை அர்க்கன் என நேரிது ஆம் அந்த நெறியே தன் நேர்மையைத் தன் சாரும் அவர்க்கு உணர்த்தும் தான்.

**செந்நெறி-கோடாத நேர்வழி; நேரிதாம்-நேர்மார்க்கமாகும்; தான்-தானே.**

நானாரென்னும் ஞான விசாரமாஞ் சிறந்த செந்நெறிவாய்ச் சேர்ந்தார் நெறிதவறி மயங்கிப் போதலென்றுமில்லை. ஏனெனில் நேர்மை யுடைத்தாமந்நெறியே தன்னை யடைந்தார்க்குத் தன்னேர்மையைக் கதிரவனொளி போலக் காண்பித்துவிடும்.

**வி-ரை:-** கன்மம், பத்தி, யோகம் முதலிய ஏனை நெறிகளின் இயல்வனவாங் கொள்கைகள் ஒன்றுக்கொன் றுறழுங்கால் தான் சற்றுக் கோடுதலாகவும், ஆன்ம வத்துவின் அத்துவித மாட்சியால், அதன் விசாரமட்டும் அவ்வாறின்றி அவ்வொரே பொருளைக் குறிக் கொண் டொழுகுஞ் செம்மை யுடைமையால், அதனைச் செந்நெறி யெனவும், அவ்வேனை நெறிகள் யாவும் தம்முள் ஒருவனெத்துணைதான் முன்னேற்றமடையினும், முடிவில் க்ஷணிகமாக வாவது விசாரத்தை விளைத்தே அதன் வாயிலாய் அவனைத் தங்குறியை யடைவித்தலால், அவற்றினும் அதற்குள்ள விசேடந்தோன்ற அதனை மிக்க நெறி யெனவுங் கூறினார். செம்மை-நேர்மை, நடுவு நிலைமை; செந்நெறி-கோடாத நேர்வழி; மயக்கத்துக் கேதுவாய்க் கிளைபிரியாத ஒரேவழி. ஆன்மாவை அர்க்கனாகவும், ஆன்ம விசாரத்தை அர்க்கனொளியாகவுங் கொள்க. அர்க்கனென்றுணர்த்து மெனக் கூட்டாது அர்க்கனென நேரிதா நெறியென உள்ளவாறே கூட்டி, அர்க்கன் பக்ஷ பாதமின்றிச் சாக்ஷி மாத்திரமாய்ப் பார்ப்பனர் வீதியிலும் பஞ்சமர் சேரியிலும் ஒப்ப வெறித்தல் போல, யான் பிறனென்னும் இருவேறின்றி அனைத்துயிரகத்தும் ஆற்று மான்மபாவனையால் நடுநிலையிற் கோடாது நடக்குநெறியென்றுரைப்பினு மமையும். கோடி கொடுப்பினுங் கோடாச் சமநிலை யமன் பாலியைந்ததும் அவன்றான் அவ்வர்க்கன் புதல்வனாய் அமைந்ததாற் போலும்.

செந்நெல்லா லாய செழுமுளை மற்றுமச்
செந்நெல்லே யாகி விளைதலா - லந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர
மகனறிவு தந்தை யறிவு. - நாலடியார்.

**394. சாவசா வேயாய தன்மையா லச்சங்கூர்
சாவைக் கடக்கத் தலைப்பட்டார்க் - கோவா
தசாவொழிக்க வேண்டு மவசியத்தா லான்ம
விசாரணைக்கு வேண்டா விதி.**

சாவு அசாவே ஆய தன்மையால் அச்சம் கூர் சாவைக் கடக்கத் தலைப்பட்டார்க்கு ஓவாது அசா ஒழிக்க வேண்டும் அவசியத்தால் ஆன்ம விசாரணைக்கு வேண்டா விதி.

**அசா-மறதி, பிரமாதம்; ஓவாது-இடைவிடாது; விதி-நியமம்.**

உண்மையிற் பிரமாதமே ஒருவற்கு மரணமாந் தன்மையால் எவரு மச்சமடைதற் கேதுவாகிய மரணத்தை மாற்றி அமுதத்துவ மடைய முயறலுற்றார்க்கு, அம்மரணத்தின் சொரூபமாம் பிரமாதத்தை, அதுதா னுய்தற்கு ஒருகண மென்கிலு மவகாசங் கொடாது இடைவிடா தொழிக்க வேண்டு மவசியத்தால், அதனை மாற்று மமுத சொரூபமா மான்மாவை யறிந்தடை தற்காற்று ஞான விசாரத்துக்கு அதனை இன்னின்ன காலத்திற்றா னியற்ற வேண்டும் என்னும் விதியின்றாம்.

**வி-ரை:-** அசா-தன்னிலையினின்று ஒருவனை நழுவச்செய்யும் மறதி. தம்மறிவாற்றல்களா லெத்துணை யரும்பெருஞ் செயல்களை இவ்வுலகி லியற்றினோரும் மரணத்தை நினைந்ததும் மதிகுலைந்து மனநடுங்கக் காண்டலால் அச்சங்கூர் சாவெனப்பட்டது. தலைப்படல்-யாதாமோ ரெடுத்த காரியத்தின் கண்ணே அதுதான் முற்றுப் பெறுமளவும் அதுவே கண்ணுங் கருத்துமாய் இடைவிடாது முனைந்து நிற்றல். விதி-நியமம்.

**395. பொழுதிடமுன் னாகப் புலப்படுப வெல்லாம்
பழுதுபடா வந்தப் பரத்தை - ஒழிய
இசையாமை யாலவற்றுள் யாதொன்று மான்ம
விசாரத்துக் காகா விலக்கு.**

பொழுது இடம் முன் ஆகப் புலப்படுப எல்லாம் பழுது படா அந்தப் பரத்தை ஒழிய இசையாமையால் அவற்றுள் யாது ஒன்றும் ஆன்ம விசாரத்துக்கு ஆகா விலக்கு.

காலதேச முதலாகக் காணப்படுவன வெல்லாம் பழுதற விளங்கும் பரமான்ம சொரூபமாம் அத்துவிதச் செம்பொருளைவிட்டு அதற்கயலாகச் சற்றும் வழங்கலாகாமையால் அவற்றுள் யாதொன்றும் அவ்வான்ம சொரூபத்தையறிய வேண்டிச் செய்யும் ஞான விசாரத்துக்கு ஆகாதென நூல்களால் விலக்கப்பட்டதன்றாம்.

**396. பயிற்சி வயத்தாற் பராமுகமாந் தன்னை
அயர்ச்சியற நானாரென் றாயும் - முயற்சியாம்
ஆன்மவிசா ரத்தா லகமுகமாக் குஞ்செயலே
தான்மலைதே வாசுரயுத் தம்.**

பயிற்சி வயத்தால் பராமுகம் ஆம் தன்னை அயர்ச்சி அற நான் ஆர் என்று ஆயும் முயற்சியாம் ஆன்ம விசாரத்தால் அகமுகம் ஆக்கும் செயலே தான் மலை தேவ அசுர யுத்தம்.

**பராமுகம் ஆம்-இதர பொருள்களை நாடும்; அயர்ச்சி-களைப்பினாலுண்டாகும் தளர்ச்சி; மலைதல்-சண்டையிடல்.**

**397. நினைவெழுந்தோ றந்த நினைவைநிறை வேற்றத்**
**தினையளவுஞ் சிந்தை செயாதே - அனைய**
**நினைவுதா னார்க்கு நிகழ்ந்ததென முன்னம்**
**தனைவிசா ரித்த றகும்.**

நினைவு எழுந்தோறு அந்த நினைவை நிறைவேற்றத் தினை அளவும் சிந்தை செயாதே அனைய நினைவுதான் ஆர்க்கு நிகழ்ந்தது என முன்னம் தனை விசாரித்தல் தகும்.

**398. எனக்கன்றோ தோன்றிற்றிவ் வெண்ணமினி நானார்**
**எனத்தன்னு ளாழ்ந்துவிசா ரிக்க - மனதும்**
**தனது பிறப்பிடம்போய்த் தாழு மெழுந்த**
**நினைவுமே நீங்கி விடும்.**

எனக்கு அன்றோ தோன்றிற்று இவ் எண்ணம் இனி நான் ஆர் எனத் தன்னுள் ஆழ்ந்து விசாரிக்க மனதும் தனது பிறப்பிடம் போய்த் தாழும் எழுந்த நினைவுமே நீங்கி விடும்.

**399. பரிசிதுவா நாளும் பயிலப் பயிலத்**
**துரிசறலாற் சித்தமிகத் தூய்தாய்த் - தருமுசாத்**
**தொட்டவுட னவ்விதயந் தோயுமா றவ்வளவு**
**மெத்தவெளி தாகி விடும்.**

பரிசு இதுவா நாளும் பயிலப் பயிலத் துரிசு அறலால் சித்தம் மிகத் தூய்து ஆய்த் தரும் உசாத் தொட்ட உடன் அவ் இதயம் தோயுமாறு அவ்வளவு மெத்த எளிது ஆகி விடும்.

**பரிசு இதுவா-இவ்விதமாக; துரிசு-குற்றம், அழுக்கு; தரும் உசாத் தொட்டவுடன்-விசாரம் ஆரம்பித்த உடனேயே.**

**400. தழலுற்ற கானத் தவிப்பாற்றா துய்தற்**
**கெழலுற்ற செந்துக்க ளென்றே - அழியும்**
**வளரான்ம சிந்தை வலியாற்றா துள்ளம்**
**கிளர்வா தனையனைத்துங் கெட்டு.**

தழல் உற்ற கானத் தவிப்பு ஆற்றாது உய்தற்கு எழலுற்ற செந்துக்கள் என்றே அழியும் வளர் ஆன்ம சிந்தை வலி ஆற்றாது உள்ளம் கிளர் வாதனை அனைத்தும் கெட்டு.

**தழல் உற்ற-தீப்பிடித்த; கானம்-காடு; தவிப்பு-வெப்பம்; செந்துக்கள்-பிராணிகள்; என்றே-போல; கிளர்-மூண்டெழுந்த.**

**401. யானா ரெனக்கருது மெண்ணம் பிறவாய
நானா நினைவு நசிப்பித்துத் - தானும்
சவஞ்சுடுத லுற்றநெடுந் தண்டம்போற் பின்னர்
அவிந்து முழுமோன மாம்.**

யான் ஆர் எனக் கருதும் எண்ணம் பிற ஆய நானா நினைவு நசிப்பித்துத் தானும் சவம் சுடுதல் உற்ற நெடும் தண்டம் போல் பின்னர் அவிந்து முழு மோனம் ஆம்.

**பிற ஆய-பிறவாகிய.**

**402. அளவில்பே ரின்ப வறிவொளியாந் தன்னைக்
களவுகொண்ட மோகக் கருத்துத் - தெளிவுபட
நானாரென் றாய நசித்தலாற் றன்சொருப
வானாக வைகுமதன் மாண்பு.**

அளவு இல் பேர் இன்ப அறிவு ஒளி ஆம் தன்னைக் களவு கொண்ட மோகக் கருத்துத் தெளிவுபட நான் ஆர் என்று ஆய நசித்தலால் தன் சொருப வான் ஆக வைகும் அதன் மாண்பு.

**ஆய-ஆராய; வைகும்-விளங்கும்.**

**403. அங்கிசுடப் பெற்ற வயப்பிண்ட மவ்வாற்றால்
அங்கிப் பிழம்பா வவிர்வதுபோற் - றுங்கமுறும்
ஆன்மவிசா ராங்கிசுடப் பெற்றவழுக் காருயிரவ்
வான்ம சொரூபமே யாம்.**

அங்கி சுடப் பெற்ற அயப் பிண்டம் அவ் ஆற்றால் அங்கிப் பிழம்பா அவிர்வது போல் துங்கம் உறும் ஆன்ம விசார அங்கி சுடப் பெற்ற அழுக்கு ஆர் உயிர் அவ் ஆன்ம சொரூபமே ஆம்.

**அவிர்வது-விளங்குவது; துங்கம்-பரிசுத்தம்; அழுக்கு ஆர் உயிர்-மும்மலக் குற்றம் உடைய ஜீவன்.**

**404. அலக்கண்கூர் மோகிநா னாரெனவுள் ளாராய்ந்
திலக்கமா வுண்மை யிசைவாற் - கலக்கங்
கரத்தலாய் ஞானங் கதிர்த்தலான் மோனஞ்
சுரத்தலே சாந்த சுகம்.**

அலக்கண் கூர் மோகி நான் ஆர் என உள் ஆராய்ந்து இலக்கமா உண்மை இசைவால் கலக்கம் கரத்தல் ஆய் ஞானம் கதிர்த்தலால் மோனம் சுரத்தலே சாந்த சுகம்.

**அலக்கண்கூர்-துக்கம் மிகுந்த; இலக்கம்-குறிப்பொருள், லக்ஷியமாகக் கொள்ளப்பட்ட பொருள்; இசைவால்-அறியப்படுவதால்; கரத்தல்-மறைதல்; கதிர்த்தல்-விளங்குதல்; சுரத்தல்—பெருகுதல்.**

## 405. அல்லாப் புழத்தலுயி ரான்ம சொரூபவுண்மை
## கல்லாத மோகக் கலக்கமே - அல்லாப்
## புழக்குந்தா னாரென் றுசாவுறுமெய்ஞ் ஞானப்
## பழக்கமகத் தென்றும் பழகு.

அல்லாப்பு உழத்தல் உயிர் ஆன்ம சொரூப உண்மை கல்லாத மோகக் கலக்கமே அல்லாப்பு உழக்கும் தான் ஆர் என்று உசா உறும் மெய்ஞ் ஞானப் பழக்கம் அகத்து என்றும் பழகு.

**அல்லாப்பு உழத்தல்-துன்பம் அனுபவித்தல்.**

## 406. அசாவாது நாளு மடைவாக வாற்றும்
## உசாவாய வேதி யுறவாற் - பசாசவுயிர்
## சுத்தசிவ மாகத் துலங்கும் பசாசியல்பாம்
## சித்த மலக்களிம்பு தீர்ந்து.

அசாவாது நாளும் அடைவு ஆக ஆற்றும் உசா ஆய வேதி உறவால் பசாச உயிர் சுத்தசிவம் ஆகத் துலங்கும் பசாசு இயல்பு ஆம் சித்த மலக் களிம்பு தீர்ந்து.

**அசாவாது-மறவாது; அடைவாக-முறையாக; வேதி-பரிசவேதி, தங்கமாக மாற்றும் மருந்து; உறவால்-தொடுவதால், கூட்டுறவால்; பசாசு-பிசாசு.**

தளர்ச்சியடையாது நாடோறும் முறையாகச் செய்யும் ஆன்ம விசாரமாகிய பரிசவேதியின் சம்பந்தத்தால், பேய்போலு மகந்தை வடிவாம் ஜீவன் அப்பேய்த் தன்மையாஞ் சித்தமல மென்னுங் களிம்பு தீர்ந்து அறிவின் சுத்தமாஞ் சிவ சொரூபமாகச் சுடரும்.

**வி-ரை:-** உசா-ஆராய்ச்சி, விசாரம்; வேதித்தலால் வேதி, வேதித்தல்-பேதித்தல், மாற்றுதல். உசாவை வேதியாகவும் சித்த மலத்தைக் களிம்பாகவும் உருவகஞ் செய்ததற்கேற்ப உயிரைச் செம்பாகவும் சிவத்தைப் பொன்னாகவுங் கூறாமையால் இச்செய்யுள் ஏகதேச உருவகவணி. உண்மையில் தனக்கென் றோருருவமின்றாயும் உருப்பற்றி யுண்டாதல், உருப்பற்றி நிற்றல், உருப்பற்றி யுண்டு மிகவோங்கல், உருவிட்டுருப்பற்றல் தேடினா லோட்டம் பிடித்தல் (உள்ளது நாற்பது) என்னு மின்னோ ரன்ன செயல்களால் பிசாசம் அகந்தைக் குவமமவாகு பெயர். ஈண்டுச் சித்தமலமென்றது ஆணவ மலத்தை, முற்கூறியவாறு பிசாசியல் போடு கூடியது அதுவே யாதலால்- ஆணவமலந்தீர்தல் கூறவே, செம்புருவ உயிர்க்களிம்பு முற்றக் கழன்று செம்பொன்மயச்சிவமாதற்கு ஏனையிரண்டு மலங்களும் உடன்கழிதல் கூற வேண்டாதாயிற்று, என்னை ? அதன் ஆக்கவழிவுகளே அவற்றுக்கு மாக்க வழிவுகளாதலா லென்க.

மற்றை யிரண்டு மலமுமொருங் காணவமாம்
பற்றையே பற்றிப் படர்வனவாம் - பற்றாகும்
அவ்வா ணவந்தா னழிந்ததே லவ்விரண்டும்
எவ்வாறு முய்த லிலை.

(குருவாசகக்கோவை 733)

என இந்நூலுட் பிறாண்டுங் கூறுதல் காண்க.

**407. தேவ குமாரனாஞ் சீவன் சொரூபமறந்**
**தாவவென் றேங்கி யழுங்குந்தான் - யாவனென்றுள்**
**ஆர்வமொடாய்ந் தார்ந்தாலவ் வான்ம பிதாவொடுதான்**
**தேர்வனவ னொன்றாஞ் சிறப்பு.**

தேவ குமாரன் ஆம் சீவன் சொரூபம் மறந்து ஆவ என்று ஏங்கி அழுங்கும் தான் யாவன் என்று உள் ஆர்வமொடு ஆய்ந்து ஆர்ந்தால் அவ் ஆன்ம பிதாவொடு தான் தேர்வன் அவன் ஒன்று ஆம் சிறப்பு.

**ஆவ-ஐயோ, அந்தோ; அழுங்கும்-வருந்தும்; தேர்வன்-அறிந்து கொள்வான்.**

## 70. மெய்த்தவத்திறன்

**408. எவ்வுயிருக் குள்ளு மியல்பாக வென்றென்றும்**
**செவ்வியமெய்ஞ் ஞானத் திருவருட்சீர் - ஒவ்வியதோர்ந்**
**தாற்ற வநுபவித்தற் கன்றி யதைப்புதிதாத்**
**தோற்றுவித்தற் கன்று தவம்.**

எவ் உயிருக்கு உள்ளும் இயல்பாக என்றென்றும் செவ்விய மெய்ஞ் ஞானத் திரு அருள் சீர் ஒவ்வியது ஓர்ந்து ஆற்ற அநுபவித்தற்கு அன்றி அதைப் புதிதாத் தோற்றுவித்தற்கு அன்று தவம்.

**ஒவ்வியது-ஒத்து இருப்பது; ஆற்ற-பூரணமாக.**

தவத்தினால் ஞானம் புதிதாகத் தோற்றுவிக்கப்படுவது அன்றென்றார். அவ்வாறெனின், அது அநாதியின்றி சிருட்டியுள் உட்படுவதால் அந்தமுறும். அது அநாதியும் உயிர்க்குயிரின் இயல்புமாம். பிரதிபந்தங்களை நீக்கி அதை அனுபவிக்க இயல்வதே தவச்செயலாம்.

**409. மத்தவகங் கார மனத்தைப் பொறிகளோ**
**டொத்துழலா துள்ளத் தொடுக்கியே - சுத்த**
**சிவத்திலொன் றாகச் செறித்தலா முண்மைத்**
**தவத்திறனென் பார்மெய்த் தவர்.**

மத்த அகங்கார மனத்தைப் பொறிகளோடு ஒத்து உழலாது உள்ளத்து ஒடுக்கியே சுத்த சிவத்தில் ஒன்று ஆகச் செறித்தல் ஆம் உண்மைத் தவத்திறன் என்பார் மெய்த் தவர்.

**உழலாது-தொழிற்படாது; செறித்தல்-இருக்கவைத்தல்; தவர்-தவசிகள்.**

**410. துன்று மயல்விகற்பத் தோற்றமெலாந் தன்மயமா
வென்றுவிளங் கான்ம விருத்தியொழுக் - கென்றும்
அவிச்சின்ன மாதலே யாயுங்கா லான்ற
தவச்சின்ன மாகுந் தனித்து.**

துன்று மயல் விகற்பத் தோற்றம் எலாம் தன் மயமா வென்று விளங்கு ஆன்ம விருத்தி ஒழுக்கு என்றும் அவிச்சின்னம் ஆதலே ஆயுங்கால் ஆன்ற தவச் சின்னம் ஆகும் தனித்து.

**துன்று மயல்-மயல் சேர்ந்த; விகற்பம்-வேறாக; ஒழுக்கு-தாரை;
அவிச்சின்னம்-ஊெவுபடாதது; ஆன்ற-சிறந்த; தனித்து-எல்லாவற்றிலும் சிறந்து.**

**411. இன்பப் பெருவாரி யெங்கும் பரந்திருக்கத்
துன்பக் கொடுங்கனல்வாய்த் தோய்ந்தழுங்கல் - என்ப
கடமையாச் செய்தவத்தைக் காதலித்துச் செய்யா
மடமையா லாய மயல்.**

இன்பப் பெருவாரி எங்கும் பரந்து இருக்கத் துன்பக் கொடும் கனல்வாய்த் தோய்ந்து அழுங்கல் என்ப கடமையாச் செய்தவத்தைக் காதலித்துச் செய்யா மடமையால் ஆய மயல்.

**கனல் வாய்-கனலில்; என்ப-என்பதாகும்.**

**(குறள் வெண்பா)**

**412. சிற்பரமாத் துன்று சிவானுபவ மோனமே
தற்பரமா முண்மைத் தவம்.**

சித் பரமாத் துன்று சிவானுபவ மோனமே தத்பரமாம் உண்மைத் தவம்.

**தற்பரம்-பரப்பிரம்ம சொரூபம்.**

**(இன்னிசை வெண்பா)**

**413. பாய விசும்பிற் பறைநெறியு நீர்வாழ்வ
போய நெறியும் புலப்படா வாறுபோல்
ஆன்மாவை நோக்கி யடைந்தோர்தாஞ் சென்றநெறி
தானும் புலப்பட லின்று.**

பாய விசும்பில் பறை நெறியும் நீர் வாழ்வ போய நெறியும் புலப்படாவாறு போல் ஆன்மாவை நோக்கி அடைந்தோர் தாம் சென்ற நெறி தானும் புலப்படல் இன்று.

**பாய-பரந்த; பறை நெறி-பறவைகள் சென்ற வழி; நீர் வாழ்வ-நீரில் வாழும் மீன் முதலியவை; போய-போன.**

பரந்த விசும்பின்கட் பறவைகள் பறந்த வழியும், நீரின் கண் நீர்வாழுயிர்கள் நிகழ்ந்த நெறியும் காணப் படாத வாறு போன்று, யானாரென வுண்முகமாய்த் தன்னை விசாரித்து ஆன்ம சாக்ஷாத்கார மடைந்த அறிஞர் ஆசரித்த மார்க்கமும் அடிச்சுவடு படாமையா லறிபடுத லின்றாம்.

**வி-ரை:-** யாதுஞ் சுவடு படாம லையாறடைகின்ற போது (அப்பர் தேவாரம்). இம்மேற்கோளில் ஐயாறு; மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னு மைம்புலத் தாறுகளும் உட்சென் றொடுங்கும் உள்ளத்தலம் என்பது தத்துவப் பொருளாம்.

## (நேரிசை வெண்பா)

**414. உயிர்ச்சேட்டை பொன்று முடையான்றாட் பத்தி**
**மயச்சேர்க்கை சித்தாந்த மார்க்கம் - உயிர்ப்போதம்**
**நட்டமா மான்மபர ஞானசொரூ பானந்த**
**நிட்டைவே தாந்த நெறி.**

உயிர்ச் சேட்டை பொன்றும் உடையான் தாள் பத்தி மயச் சேர்க்கை சித்தாந்த மார்க்கம் உயிர்ப் போதம் நட்டம் ஆம் ஆன்மபர ஞான சொரூப ஆனந்த நிட்டை வேதாந்த நெறி.

**பொன்றும்-அழியும்.**

ஜீவச்செயல் அடியோடழிதற்கேதுவாகப் பரமேசுவரன் பாதத்தைப் பற்றி நிகழும் பத்திவடிவமான கலப்பு சித்தாந்த முறையும், அந்த ஜீவபோதம் நானாரென்னு மான்ம விசாரத்தால் நட்டமாதற்கேதுவாக, ஞானானந்தமாய் விளங்கும் தன்னுண்மையாம் பர சொரூபத்தில் பயிலும் நிட்டை வடிவமான கலப்பு வேதாந்த முறையுமாம்.

**வி-ரை:-** ஜீவச் செயல்-கர்த்தத்துவம்; ஜீவபோதம் -அகங்காரம் ஆகிய விரண்டு மொன்றே. அதனழிவே அறிஞராற்றவேண்டுஞ் செயலாம். அது எவ்வாற்றாலேனு மாகுக. ஆதலான், மேலெழுந்த வாரியாக நோக்குவார்க்கு முறைகளிற் சிறிது பேதங்காணப் படுவது போலத் தோன்றினும், அவற்றா லகந்தை யழிந்தடையும் பயனா மனுபவத்திற் சற்றும் பேதமின்மையால், அவையிரண்டுமே ஆன்றோர்க் குடன்பாடா மென்க. ‘உடையவ’ னாமிறைவன் ‘அடிமைக’ ளாமுயிர்க ளகத்தில் அவற்றினான்ம சொரூப மாகவே விளங்கலால், உடையவன் றாட்பத்தியும், ஆன்ம சொரூப நிட்டையும் உண்மையில் ஒத்துப் போதல், சமயாபிமான மற, நடுநிலைக்கண் நின்று உய்த்துணர வல்லார்க்குத் தெள்ளிதிற் புலனாம்.

உயிர்க்குயிரா யொளிரும் இறையியல்பே ஆன்ம சொரூபமாம். முன்னை யுயிர், ஆராய்ச்சியிற் பொருளன்றா யழிந்துபடு மகங்கார வடிவிற்றாதலாற் பின்னை யுயிரே எவர்க்கு முண்மை வடிவாம். அநாதியாய்த் தொடர்ந்த வவிச்சையான் முதலுயிராகத் தம்மை மோகிக்கும் மக்களுள் ஒருசாரார் அனைத்துத் துன்பங்கட்கு மடியான அவ்வகங்காரம் அழிதற் பொருட்டு அவ்வான்ம சொரூபத்தையே உயிர்க்குயிரா முடையோனாக வழிபடலாம்.

இருக்கு மியற்கையா லீசசீ வர்க
ளொருபொரு ளேயாவ ருந்தீபற
வுபாதி யுணர்வேவே றுந்தீபற

(உபதேச உந்தியார் - 24)

உயிர்ச்சேட்டை பொன்றல் - இறைபணி நிற்றல்;
உயிர்ப் போத நட்டம் - தன்னிழப்பு.

## 415. பகுத்தறிவு தன்னாற் பரமோர்ந் தபரத்
## தகத்துறவு பூண்ட வடைவால் - அகத்தறவே
## யானோ டெனதற் றியங்கலே மெய்ஞ்ஞான
## வானாடர் வாழ்க்கை வழி.

பகுத்தறிவு தன்னால் பரம் ஓர்ந்து அபரத்து அகத்துறவு பூண்ட அடைவால் அகத்து அறவே யானோடு எனது அற்று இயங்கலே மெய்ஞ்ஞான வான் நாடர் வாழ்க்கை வழி.

**இயங்கல்-இருத்தல்; நாடர்-நாட்டவர்; மெய்ஞ்ஞான வான் நாடர்-ஞானியர்.**

விவேகத்தாற் பராபர மிரண்டும் பகுத்தறிந்து முறையே அவற்றி னுறவுந் துறவும் விசார விராகங்களா லுளத்துட் பூண்ட பூட்கையால் யானென தென்னு மிருவகைச் செருக்கும் உள்ளத் தறவே யொழிந்தொழுகலே மெய்ஞ்ஞான வானுலகில் வாழ விரும்புவோர் மேற்கொள்ள வேண்டிய வாழ்க்கை முறையாம்.

**வி-ரை:-** பூட்கை-கொள்கை.
''யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்'' (குறள்)

## 416. சிரமத்திற் பட்டுழலுஞ் சீவன் சிவத்தோ
## டிரமித்தற் கேற்றநெறி கேளாய் - பிரமத்திற்
## சிப்பியிடை வெள்ளிபோற் சீவேச் சுரசகங்கள்
## கற்பிதமா மென்றே கழி.

சிரமத்தில் பட்டு உழலும் சீவன் சிவத்தோடு இரமித்தற்கு ஏற்ற நெறி கேளாய் பிரமத்தில் சிப்பியிடை வெள்ளிபோல் சீவ ஈச்வர சகங்கள் கற்பிதம் ஆம் என்றே கழி.

**கழி-நீக்கு.**

# 71. அறிவாராய்ச்சித்திறன்

**417. அறிவெனும்பொற் கோயி லகத்தே விசுத்த
அறிவுருவ மாக வரனை - அறிவால்
அறியாநிற் கின்றார்மெய் யாராதிக் கின்றார்
அறிவே பரமார்த்த மாம்.**

அறிவு எனும் பொன் கோயில் அகத்தே விசுத்த அறிவு உருவமாக அரனை அறிவால் அறியா நிற்கின்றார் மெய் ஆராதிக்கின்றார் அறிவே பரமார்த்தம் ஆம்.

**அறியா நிற்கின்றார்-அறிகின்றவர்; மெய்-உண்மையில்.**

**418. அறிவை யறிவா லறிவதே யுண்மை
நிறைவறிந்த ஞான நிவப்பாம் - அறிவா
லறிவறியுங் காறவ் வறிவுக் கமைதி
யிறையளவு மில்லை யறி.**

அறிவை அறிவால் அறிவதே உண்மை நிறைவு அறிந்த ஞான நிவப்பு ஆம் அறிவால் அறிவு அறியுங் காறு அவ் அறிவுக்கு அமைதி இறை அளவும் இல்லை அறி.

**நிவப்பு-உயர்வு; அறியுங்காறு-அறியும்வரை; இறை அளவு-கொஞ்சங்கூட.**

அறிவை அறிவால் அறிவதென்பது, அறியப்படுபொருளும் அறிவெனவும், ஒன்றை யொன்றாக அறியும் மனத்தை அறிவதும் அறிவெனவும் சலனமற அறிதல். அவ்வாறு அறிந்தபின் ஞானமொன்றே எஞ்சி நிற்பதாம். அதுவரையில் அறிவுக்குச் சிறிதேனு மமைதியில்லை என்றார்; அது சதா சலனமுடன் கூடிய மனவடிவமாகவே தோற்றலின்.

**419. பொன்னணிகள் போலப் புலப்பொருள்கள் பற்பலவாம்
என்னினுமப் பொன்னறிவோ வேகமாம் - பொன்றான்
சிறப்பாய சுட்டறிவிற் றீர்ந்தொளிருஞ் சித்தத்
திறப்பாய வெற்றறிவே தேர்.**

பொன் அணிகள் போலப் புலப் பொருள்கள் பற்பல ஆம் என்னினும் பொன் அறிவோ ஏகம் ஆம் பொன் தான் சிறப்பு ஆய சுட்டு அறிவில் தீர்ந்து ஒளிரும் சித்தத்து இறப்பு ஆய வெற்று அறிவே தேர்.

**சிறப்பு ஆய-விசேடமாகிற; தீர்ந்து-நீங்கி; தேர்-அறிக.**

உண்மையில் சின்மாத்திரமாய், ஆயின் ஜடம் போன்று புலங்கட்கு விடயமாம் சராசரப் பொருள்கள் யாவும் பொன்னணிகள் போல் அவற்றின் நாமரூப விசேடத்தாற் பற்பலவாகத் தோற்றுவன வாமேனும் அவ்வணிகளினுண்மையாம் பொன் போன்று அப்பொருள்களினுண்மையா மறிவும் அதன் நிருவிசேடத்தன்மையா லொன்றேயாம்; ஆதலின்,

பொன்போலிரண்டற விளங்கு மறிவு வடிவா மான்ம சொரூபம், இதயக்கிரந்தி இற்றுத் திறந்ததால் விசேடமாம் சுட்டறிவினின்று விலகி உண்மை மாத்திரமாமியல்பின் விளங்கும் சுத்தவறிவேயாம்.

**வி-ரை:-** பொன்னறிவோ வேகமா மெனப் பின்னர்க் கூறப்படுவது கொண்டு, புலப் பொருள்கள் சின்மாத்திரமென்பது முன்னர்ப் பெறப்பட்டது. மனம் ஆறாம் புலனாதலின் ஈண்டுப் புலன்கள் அம்மனத்தையு மகப்படுத்துநின்றது. சித்தம்-இதயக்கிரந்தி; சுத்த வறிவு-திரிபுடிபேதமறத்திகழு மகண்டவறிவு; அவ்வறிவை விசேடித்து நின்ற வெறுமை-நாமரூபச்சுட்டு விசேடங்களின் நீக்கம்.

**420. காணறிவாந் தன்னைவிட்டுக் காண்புலமே மெய்போலப்**
**பேணறிவே பொய்மாயப் பேதைமைகாண் - வேணதெலாங்**
**கற்றிடினுந் தன்சொருபக் காட்சியிலக் கற்பனைச்சுட்**
**டற்றிடலே யுண்மை யறிவு.**

காண் அறிவு ஆம் தன்னை விட்டுக் காண் புலமே மெய்போலப் பேண் அறிவே பொய்மாயப் பேதைமை காண் வேணது எலாம் கற்றிடினும் தன் சொருபக் காட்சியில் அக்கற்பனைச் சுட்டு அற்றிடலே உண்மை அறிவு.

**காணறிவு-ஆன்ம அறிவு; புலமே-புலனறிவு; பேண்-கருதுகின்ற; பேணறிவு-ஜீவ போதம்; வேணது-வேண்டிய பல்கலைகள்; கற்பனைச்சுட்டு-முன்னிலையை அறியும் மன அறிவு.**

**420 a ஞானமொன் றேயுண்மை நானுவாய்க் காண்கின்ற**
**ஞானமன்றி யின்றாமஞ் ஞானந்தான் - ஞானமாந்**
**தன்னையன்றி யின்றணிக டாம்பலவும் பொய்மெய்யாம்**
**பொன்னையன்றி யுண்டோ புகல். - பகவான்**

ஞானம் ஒன்றே உண்மை நானாவாய்க் காண்கின்ற ஞானம் அன்றி இன்று ஆம் அஞ்ஞானம் தான் ஞானம் ஆம் தன்னை அன்றி இன்று அணிகள் தாம் பலவும் பொய் மெய் ஆம் பொன்னை அன்றி உண்டோ புகல்.

**421. சுத்தவறி வுண்மைத் துலக்கமொன் றேயுளதாம்**
**மெய்த்திறமே போலதன்கண் மேவலுறும் - மற்றை**
**அறிவனைத்தும் போலி யகக்கற் பிதக்கா**
**ரறிவவற்றை நம்பலிழுக் காம்.**

சுத்த அறிவு உண்மைத் துலக்கம் ஒன்றே உளது ஆம் மெய்த்திறமே போல் அதன்கண் மேவல் உறும் மற்றை அறிவு அனைத்தும் போலி அகக் கற்பிதக் கார் அறிவு அவற்றை நம்பல் இழுக்கு ஆம்.

**மேவல் உறும் - உண்டாகியிருக்கும் ; கார் அறிவு-அஞ்ஞானம்.**

**422. ஏனையறி வெல்லா மிளிவரல்சே ரிட்டறிவே**
**மோனவுணர் வேமெய்யா முற்றறிவு - ஞான**
**சொரூபமா மான்மாவிற் சுட்டியல்பல் பேத**
**மரோபமே; மெய்யன் றறி.**

ஏனை அறிவு எல்லாம் இளிவரல் சேர் இட்டு அறிவே மோன உணர்வே மெய் ஆம் முற்று அறிவு ஞான சொரூபம் ஆம் ஆன்மாவில் சுட்டு இயல் பல் பேதம் அரோபமே மெய் அன்று அறி.

**இளிவரல்-இழிவு; இட்டறிவு-சிற்றறிவு; அரோபம்-ஆரோபம்.**

**423. சொத்தை யுடலகந்தைச் சுட்டறிவு மோரறிவா**
**நத்துவரோ மெய்ஞ்ஞான நாட்டமுளோர் - சுத்த**
**அறிவை யறிவ தறிவாவ தன்றிப்**
**பிறிதை யறிவதெலாம் பேது.**

சொத்தை உடல் அகந்தைச் சுட்டு அறிவும் ஓர் அறிவா நத்துவரோ மெய்ஞ்ஞான நாட்டம் உளோர் சுத்த அறிவை அறிவது அறிவு ஆவது அன்றிப் பிறிதை அறிவது எலாம் பேது.

**நத்துவரோ - கருதுவார்களோ; சுத்த அறிவை அறியும் அறிவு- இருக்கிறேன் என்று விளங்கும் தன்னுணர்வு; பிறிதை-மற்றதை; பேது-பேதைமை.**

**424. அறியலா காதபல வற்புதநுட் பந்தான்**
**அறிவனா மேனு மவற்றை - அறியும்**
**அறிவை யறியு மளவுமவ னுண்மை**
**அறிவனோ வாகா னறி.**

அறியல் ஆகாத பல அற்புத நுட்பம் தான் அறிவன் ஆமேனும் அவற்றை அறியும் அறிவை அறியும் அளவும் அவன் உண்மை அறிவனோ ஆகான் அறி.

**அறியல் ஆகாத -அறிதற்கு அரிதான; அறியும் அளவும்-அறியும்வரை.**

**425. வெறிகொண்டாற் போன்று விரையு மனமே**
**பிறிதொன்றி னின்றும் பிறவா - அறிவொன்றே**
**அல்லாமல் வேறுண்டோ வாய சராசரங்கள்**
**எல்லாமே தோற்றற் கிடம்.**

வெறி கொண்டால் போன்று விரையும் மனமே பிறிது ஒன்றின் நின்றும் பிறவா அறிவு ஒன்றே அல்லாமல் வேறு உண்டோ ஆய சர அசரங்கள் எல்லாமே தோற்றற்கு இடம்.

**பிறிது-மற்றது.**

**426. எதற்கெடுத்தா லும்மறிவை யேயிடனென் றோதும்**
**அதற்கடுத்த ஞாய மறியின் - உதிக்கும்**
**அனைத்துக்கு மான்ற நிலைக்களனா மந்தத்**
**தனக்கு நிலைக்களனுந் தான்.**

எதற்கு எடுத்தாலும் அறிவையே இடன் என்று ஓதும் அதற்கு அடுத்த ஞாயம் அறியின் உதிக்கும் அனைத்துக்கும் ஆன்ற நிலைக்களன் ஆம் அந்தத் தனக்கு நிலைக்களனும் தான்.

**இடன்-இடம்; அதற்கடுத்த-அதற்குப் பொருத்தமான; ஞாயம்-காரணம்; ஆன்ற-சிறந்த; நிலைக்களம்-ஆதாரம்.**

**427. அசத்தாஞ் சடத்துக்கே யாலம்ப மாக**
**விசுத்தசச் சித்தொன்று வேண்டும் - அசுத்தமாம்**
**சித்த மயலேசச் சித்தாய தான்பிறிதோர்**
**சித்தை யவாவுந் திறம்.**

அசத்து ஆம் சடத்துக்கே ஆலம்பம் ஆக விசுத்த சத் சித் ஒன்று வேண்டும் அசுத்தம் ஆம் சித்த மயலே சத் சித்து ஆய தான் பிறிது ஓர் சித்தை அவாவும் திறம்.

**ஆலம்பம்-பற்றுக்கோடு; அவாவும்-தேடும்; திறம்-தன்மை.**

**428. அன்னியங்கள் போற்றா னசத்தன்றி யெக்காலும்**
**தன்னியல்பு சத்தாமத் தன்மையால் - மன்னி**
**நிகழுமறி வுக்கு நிலைக்களனுந் தானே**
**திகழவ் வறிவென்ற றேர்.**

அன்னியங்கள் போல் தான் அசத்து அன்றி எக்காலும் தன் இயல்பு சத்து ஆம் அத் தன்மையால் மன்னி நிகழும் அறிவுக்கு நிலைக்களனும் தானே திகழ் அவ் அறிவு என்றல் தேர்.

**மன்னி-நிலையுற்று.**

**429. அவ்வறிவா மெய்யேநீ யாயிருக்க வவ்வறிவால்**
**அவ்வறிவே நீயா வமையாமல் - அவ்வறிவாம்**
**உன்னின் றெழுந்த வுலகியலை யோர்ந்தழிதல்**
**என்னென் றுரைப்பே னியான்.**

அவ் அறிவு ஆம் மெய்யே நீ ஆய் இருக்க அவ் அறிவால் அவ் அறிவே நீயா அமையாமல் அவ் அறிவு ஆம் உன் நின்று எழுந்த உலகியலை ஓர்ந்து அழிதல் என் என்று உரைப்பேன் யான்.

**430. இயல்சொருப வுண்மை யினைத்தெனவுய்த் தோரா
ரயல்வடிவா மோகித் தழிவார் - மயல்படா
வேகசச் சித்தா வியல்வதன்றி மற்றனைத்துஞ்
சாகசமா மாயைத் தரம்.**

இயல் சொருப உண்மை இனைத்து என உய்த்து ஓரார் அயல் வடிவா மோகித்து அழிவார் மயல்படா ஏக சத் சித்தா இயல்வது அன்றி மற்று அனைத்தும் சாகச மா மாயைத் தரம்.

**உய்த்து ஓரார்-ஆராய்ந்து அறியாதவர்கள்; சாகசம்-பாசாங்கு; தரம்-தன்மை.**

**(இன்னிசை வெண்பா)**

**431. உணரப் படூஉம்பொருட்க ணூற்றொழிய யாவர்க்
குணர்வு தனிலேயுஞ் சற்றுமிலை யந்த
மனித்த வுருச்சமைந்த மண்ணீட்டை ஞானம்
நுனித்துணர்த்த வல்லதோ நூல்.**

உணரப்படூஉம் பொருட்கண் ஊற்று ஒழிய யாவர்க்கு உணர்வு தனிலேயும் சற்றும் இலை அந்த மனித்த உருச் சமைந்த மண் ஈட்டை ஞானம் நுனித்து உணர்த்த வல்லதோ நூல்.

**ஊற்று ஒழிய-பெருகிப் பாய்ந்து செல்வதைத் தவிர; மண்ணீட்டை-மண் குவியலை.**

**(நேரிசை வெண்பா)**

**432. அறிவேநீ யாக வமைந்துளதா லன்றோ
அறியாநின் றாயிவ் வகிலம் - அறிவாம்
குறிநிற்கின் ஞான குருவதுவே யாக
அறிவிக்கு முண்மை யறி.**

அறிவே நீ ஆக அமைந்து உளதால் அன்றோ அறியா நின்றாய் இவ் அகிலம் அறிவு ஆம் குறி நிற்கின் ஞான குரு அதுவே ஆக அறிவிக்கும் உண்மை அறி.

**அறியா நின்றாய் - அறிகின்றாய்.**

அறிவுருவே யாக நீ தானமைந்துளதா லன்றோ இவ்வகிலமு நீ யறிகின்றாய். ஆதலால் அறிவாங் குறிக்கண் அசைவற நிற்பாயேல், அறிவறியாமையுமற்ற அவ்வறிவே ஞானகுருவா யமைந்து உண்மை மாத்திரமாங் கடவுளை உனக் குள்ளபடி உணர்த்தும்.

**வி-ரை:-** அறிவாங்குறிநிற்றல் - அயலை யறியாமலும், தன்னை மறவாமலும் சைதன்யத்தில் ஊன்றி நிற்றல். அந்நிலையா மறிவு, கனவு, நனவிரண்டிலும், கற்பனையா முலகைக் காண்பானாய்ச் சுட்டிப்பயின்று வந்த பழக்கத்தால், கற்பனை கடந்த கடவுளும், அங்கே அறிவுக்கு விடயமாய் அயலே காண்பது

என்றடைந்த மயக்கத்தை மாற்றி, உண்மைக் கடவுளை யொழிந்து தானிலன் என்னு முண்மையை உள்ளத் துரம்பட வுணர்த்தலால், ஞான குருவதுவேயாக வறிவிக்கு முண்மை எனப்பட்டது. இருந் தொளிர்தல் மாத்திரமாந் தன்னியல்பை மறந்து, கர்த்தத்துவங் கொண்டு காண்பானாய்த் தன்னைக் கருதிய மோகமே ஒருவன் ஜடப் பொருள் போலக் கடவுளையு மெதிரிட்டுக் காண்டல் வேண்டுமெனக் கலங்கிக் கருத்தழிவதன் காரணமாம். சுட்டலொழிந்து அறிவு மாத்திரமாய் நிற்கின், ஆன்ம சொரூபமே உண்மையிற் கடவுளாதல் விளங்கப் பெற்று நிரந்தரமான சித்த சாந்தி யுண்டாகும் என்றறிக.

தீயேன் மடவே னருள்செய் யெனயான்
நீயே யறிவா நிகழா விடினஃ
தேயே மடனீ யெனனந் தெரிவை
வாய்தே ரறிவா வுனையென் றனனே.

- ஸ்ரீ ரமண சந்நிதிமுறை.

### 433. ஓர்த்துணரத் தக்கதுதன் னுண்மையே யுள்ளத்திற்
### கூர்த்தறிய வேண்டுங் குறிக்கொண்டு - வேர்த்தழுங்குஞ்
### சித்தக் கலக்கமறத் தெள்ளிதா மோனஞ்சேர்
### புத்திக்கே தோன்றும் புலம்.

ஓர்த்து உணரத் தக்கது தன் உண்மையே உள்ளத்தில் கூர்த்து அறிய வேண்டும் குறிக் கொண்டு வேர்த்து அழுங்கும் சித்தக் கலக்கம் அறத் தெள்ளிதாம் மோனம் சேர் புத்திக்கே தோன்றும் புலம்.

**ஓர்த்து-ஆராய்ந்து; கூர்த்து-கூர்மையாக, நுட்பமாக; வேர்த்து அழுங்கும்-உழன்று திணறும்; தெள்ளிது-தெளிவான.**

### 434. ஞானத் தொகைசுத்த ஞானமாந் தன்சொருப
### மோனத் தறவே முடிவனகாண் - ஏனைநிலை
### யாவும்பே ரின்ப வியற்பரமாந் தன்னிலையின்
### மேவுஞ்சிற் சத்திவிலா சம்.

ஞானத் தொகை சுத்த ஞானம் ஆம் தன் சொருப மோனத்து அறவே முடிவன காண் ஏனை நிலை யாவும் பேர் இன்ப இயல் பரம் ஆம் தன் நிலையில் மேவும் சித் சத்தி விலாசம்.

**ஞானத் தொகை - பிற எல்லாவித ஞானங்களின் கூட்டமும்; மேவும்-பொருந்தும்.**

### 435. அயலா மவற்றை யறியப்போ காமெய்
### இயல்பா மறிவே யிதயம் - செயல்போம்
### அறிவுக்குத் தன்மெய் யவிர்தலா லத்தற்
### குறிநிற்கு மஃதே குலா.

அயல் ஆம் அவற்றை அறியப்போகா மெய் இயல்பு ஆம் அறிவே இதயம் செயல் போம் அறிவுக்குத் தன் மெய் அவிர்தலால் அத் தன் குறி நிற்கும் அஃதே குலா.

**செயல்போம்-(அறியும்) கிரியை நீங்கிய; அவிர்தலால்-விளங்குதலால்; தன் குறி-தன்னாட்டம்.**

அயலாம் புலவிடயங்களை யறிதலுற்று, யானென்றெழுந்து புறம் போகாது இருப்பு மாத்திரமா யியல்வதாமறிவே இதயமாம். சுட்டலற்றுச் சும்மா விருக்கு மறிவுக்குத் தன்னுண்மை தானே விளங்கலால், அவ்வறிவாமிதயமே யிலக்காகப் பற்றி அதன்கண் அசைவற ஊன்றலே உண்மை விளக்கமாம்.

**வி-ரை:-** போகா வறிவெனப் பெயரெச்சமாக வுரைப்பினு மமையும். இதயமென்றது ஆன்மசொரூபத்தை. விதம்பட்டு முளந்தொறு மவிசேட வுணர்வாகி யிதம் படுதலா லிதய மென்ப ரிறை தன்னை என ஆன்றோருங் கூறினார். ஆன்ம நிட்டையே ஆன்ம ஞானம் என்பதாம்.

''உள்ளதல துள்ளவுணர் வுள்ளதோ வுள்ளபொரு
ளுள்ளலற வுள்ளத்தே யுள்ளதால் - உள்ளமெனு
முள்ளபொரு ளுள்ளலெவ னுள்ளத்தே யுள்ளபடி
யுள்ளதே யுள்ள லுணர்''. (உள்ளது நாற்பது)

அறிவுக்குத் தன்மெய்யவிர்தல் அவைதா மொன்றி னொன்றயலாகாமையா லென்க.

## 436. அறிவா மெலாமவ் வறிவளவே யாயவ்
## வறிவாய தன்னி லடங்கச் - செறிவால்
## விகற்பமறக் கெட்டு விளங்குறுதன் மெய்யே
## யகற்பமா முத்தி யறி.

அறிவு ஆம் எலாம் அவ் அறிவு அளவே ஆய் அவ் அறிவு ஆய தன்னில் அடங்கச் செறிவால் விகற்பம் அறக் கெட்டு விளங்கு உறு தன் மெய்யே அகற்பம் ஆம் முத்தி அறி.

**செறிவால்-செறிவினால், நிஷ்டையால்; விகற்பம்-வேற்றுமை; அகற்பம்-சமானமில்லாத.**

## 437. உண்மையொன் றன்றி யுபயமல்லாத் தன்மையால்
## உண்மை யுணர்வுமற்றொன் றோர்த்தலன்று - கண்மயலாஞ்
## சித்தக் கலக்கமறச் சித்தோப சாந்திசே
## ரத்தகவே யுண்மை யறிவு.

உண்மை ஒன்று அன்றி உபயம் அல்லாத் தன்மையால் உண்மை உணர்வு மற்று ஒன்று ஓர்த்தல் அன்று கண் மயல் ஆம் சித்தக் கலக்கம் அறச் சித்த உபசாந்தி சேர் அத்தகவே உண்மை அறிவு.

**உபயம்-இரண்டு; கண் மயலாம்-மயக்கப் பார்வையான.**

**438. அறிவே யசங்க மறிவே யமலம்**
**அறிவே கடவு ளணுக்கம் - மறவா**
**அறிவே யபய மறிவே யமுதம்**
**அறிவே யனைத்து மறி.**

அறிவே அசங்கம் அறிவே அமலம் அறிவே கடவுள் அணுக்கம் மறவா அறிவே அபயம் அறிவே அமுதம் அறிவே அனைத்தும் அறி.

**அணுக்கம்-அடைதல்.**

**(கலி விருத்தம்)**

**439. அறிவின் பரந்த வகலமு நிகளமும்**
**அறிவி னடிமுடி யாழமு முயரமும்**
**அறிவுறல் சாந்தி யடைவதா மன்றிமற்**
**றறிவுநிலை காண்ட லமரர்க்கு மரிதே.**

அறிவின் பரந்த அகலமும் நிகளமும் அறிவின் அடி முடி ஆழமும் உயரமும் அறிவு உறல் சாந்தி அடைவதாம் அன்றி மற்று அறிவுநிலை காண்டல் அமரர்க்கும் அரிதே.

**நிகளம்-நீளம்;அறிவு உறல்-தெரிந்து கொள்ளல்.**

அகலம், நிகளம், ஆழம், உயரம் - இவ் வளவுச் சொற்களை யெல்லாம் தாண்டி நிற்பது அறிவாதலின், அஃதை அளவிட இயலாது. அறிவை அறிதலென்பது கேவல அறிவில் மனோநாச முறலே. அஃதன்றி அறிவுநிலை முற்றும் அறித லென்பது கடவுளர்க்கும் அரிதே.

**440. அறிவைத் தவிரமற் றகிலமு மில்லை**
**அறிவைத் தவிரமற் றாருயி ரில்லை**
**அறிவைத் தவிரமற் றருட்பர மில்லை**
**அறிவைத் தெரிவே பரமார்த்த மாமே.**

அறிவைத் தவிர மற்று அகிலமும் இல்லை அறிவைத் தவிர மற்று ஆர் உயிர் இல்லை அறிவைத் தவிர மற்று அருள் பரம் இல்லை அறிவைத் தெரிவே பரமார்த்தம் ஆமே.

சொரூபம், அறிவு என்பன ஒரு பொருட் சொற்கள். என்னை? கண்டமும் நானாவுமான நினைவுகளனைத்தும் அறிவாய் முடிதலின். சுழுத்தி இருளையும் அறிவே அறிதலின், ''நான் நன்கு துயின்றனன்'' என்ற ஞான முதிப்பதாம். ஜீவன், உலகென வேறுபடுவ தெல்லாம் தனிநிற்பனவின்றி அறிவின் தொழிலே.

# 72. நிர்வாணத்திறன்

### (நேரிசை வெண்பா)

**441. சற்றுங் கவற்சியறச் சட்டை கழற்றலுடைப்**
**புற்றரவு போலும் புணர்ப்பினாற் - பற்றும்**
**அழற்சிசேர் மோகவடி வாம்பஞ்ச கோசக்**
**கழற்சியே யாற்றல் கடன்.**

சற்றும் கவற்சி அறச் சட்டை கழற்றல் உடைப் புற்று அரவு போலும் புணர்ப்பினால் பற்றும் அழற்சி சேர் மோக வடிவு ஆம் பஞ்ச கோசக் கழற்சியே ஆற்றல் கடன்.

**கவற்சி-இடர்ப்பாடு; கழற்றலுடை-கழற்றுகின்ற; அழற்சி-தகிக்கின்ற, பொசுக்குகின்ற.**

**442. ஞானவா னாமான்ம நாதனருட் பேறாய**
**மோனவா னந்த முழுதெய்த - மானம்**
**தருகோச மைந்துந் தணத்தலே சீவ**
**நிருவாண மென்னு நிலை.**

ஞான வான் ஆம் ஆன்ம நாதன் அருட்பேறு ஆய மோன ஆனந்தம் முழுது எய்த மானம் தரு கோசம் ஐந்தும் தணத்தலே சீவ நிருவாணம் என்னும் நிலை.

**மானம்-பற்று, ஆசை; தணத்தல்-விடுதல்.**

# 73. ஆன்மவடைவுத்திறன்

**443. ஏய்சகசூன் யத்துமச ரீரியா யெஞ்சியொளிர்**
**ஆசகச மாந்தன் னநுபவத்தாற் - கோச**
**உருவவகங் காரமற வோய்தலே யான்ம**
**சொருபவடை வென்று துணி.**

ஏய் சக சூன்யத்தும் அசரீரியா எஞ்சி ஒளிர் ஆ சகசம் ஆம் தன் அநுபவத்தால் கோச உருவ அகங்காரம் அற ஓய்தலே ஆன்ம சொருப அடைவு என்று துணி.

**ஏய்-ஏய்ந்த, காணப்படுகின்ற; சக-உலகம்; ஆசகசம்-சகஜம்; துணி-தீர்மானிக்க.**

நனவு கனவுகளில் தோன்றும் உடலுலகுகள் தோன்றாதொழியுந் துயிலின்கண்ணும் அசரீரியாகத் தான் மிஞ்சி, ''யானில்லா தொழிந்தேனல்லேன்'' என விழித்ததுங் கூறுமாறு அப்பொழுது தனதுண்மை விளங்கப் பெறுகின்ற விசித்திர வியல்பான தன்னநுபவத்தால், கோச வடிவான அகங்காரம் பொன்றக் கெடுதலே அதனாதார வுண்மையான ஆன்ம சொரூப வடைவாம்.

**444. பொய்க்கனாப் பொன்றநனாப் புக்காங் ககந்தையழிந்
தர்க்கநான் மெய்யா யவிர்தலாற் - றக்கஞா
னான்மவிசா ரத்தா லகந்தை யழிவதே
ஆன்மவடை வாமென் றறி.**

பொய்க் கனாப் பொன்ற நனாப் புக்கு ஆங்கு அகந்தை அழிந்து அர்க்கநான் மெய் ஆய் அவிர்தலால் தக்க ஞான ஆன்ம விசாரத்தால் அகந்தை அழிவதே ஆன்ம அடைவு ஆம் என்று அறி.

**பொய்க்கனா-ஜாக்ரம்; பொன்ற-அழிய; நனா-ஞான விழிப்பு; புக்கு-புகுந்து; ஆங்கு-அதுபோல; அர்க்க நான்-சூரியனைப் போல ஸ்வயம் பிரகாசமான (நான்) ஆன்மா; அவிர்தல்-விளங்குதல்.**

பொய்க் கன வழிதலும் மெய்ந்நனவடைவது போன்று ஜீவ போதங் கெடுதலும் சிவ போத சொரூபமாமான்ம சூரியன் உண்மையா யொளிர்தலால், 'நானா' ரென விசாரிக்கும் ஏற்புடை ஞானவிசாரத்தால் அத்தடையாஞ் சீவபோத மழியப்பெறுதலே ஆன்ம சாக்ஷாத்கார வடைவாம்.

**445. பொய்யுலகு தன்னிற் பொருந்திக் கிடப்பினுமே
ஐயுணர்வு நீங்கி யறத்தெளிந்த - மெய்யுணர்வால்
யானென தென்னு மிரண்டு மழிவதே
தானதுவா நிற்குந் தரம்.**

பொய் உலகு தன்னில் பொருந்திக் கிடப்பினுமே ஐ உணர்வு நீங்கி அறத் தெளிந்த மெய் உணர்வால் யான் எனது என்னும் இரண்டும் அழிவதே தான் அதுவா நிற்கும் தரம்.

**ஐ உணர்வு-ஐம்புல அறிவாகிய அகந்தை உணர்வு.**

**446. சால நுனித்துணரத் தக்கதாய்த் தம்மகத்து
மூலமா முண்மை முயங்கலாற் - றூல
வுலக்கைக் கழுந்தா முணர்வோரா லந்த
விலக்கை யடைத லரிது.**

சால நுனித்து உணரத் தக்கதாய்த் தம் அகத்து மூலம் ஆம் உண்மை முயங்கலால் தூல உலக்கைக் கழுந்து ஆம் உணர்வோரால் அந்த இலக்கை அடைதல் அரிது.

**சால நுனித்து-மிகவும் நுட்பமாய்; முயங்கலால் - விளங்குவதால்; உலக்கைக் கழுந்து-உலக்கையின் தடித்த நுனி; இலக்கை-லக்ஷியத்தை.**

மிக நுட்பமாய் உணரத்தக்கதாய் அகத்தின் மூலமாய் உண்மை யிருத்தலால், தூல வடிவங்களில் ஈடுபெற்ற மாசுடை மனத்தினரால் அவ்வுண்மை அறியப்படுவ தன்று. காற்றினால் சலன முள்ள தீபத்தால் நுண் பொருளைக் காணமாட்டாதது போலென்பது 'விசார சங்கிரக'த்தின் உவமை.

## 74. திடவறிவுத்திறன்

**447. மோன முழுமுதற்கண் முன்னலெழா வாற்றானும்
ஆனவிட மெண்ணமட்டா மாற்றானும் - ஏனையிடம்
தன்மை யெழுந்தபின்பே தாமெழூஉ மாற்றானும்
தன்மையே யாதி யிடம்.**

மோன முழு முதல்கண் முன்னல் எழா ஆற்றானும் ஆன இடம் எண்ணம் மட்டு ஆம் ஆற்றானும் ஏனை இடம் தன்மை எழுந்த பின்பே தாம் எழூஉம் ஆற்றானும் தன்மையே ஆதி இடம்.

**முன்னல் - எண்ணுதல்; ஆன இடம்-இடமானது; மட்டு-மாத்திரம்; ஏனை இடம்-முன்னிலை, படர்க்கை.**

**448. யானென் றுடற்கணெழல் யாதோ வதேமனமாம்
யானென்னு மவ்வெண்ண மிவ்வுடல்வாய்த் - தானெழன்முன்
பெவ்விடமென் றாயி னிதயத்தே சேருமதால்
அவ்விடநின் றேமனமுண் டாம்.**

யான் என்று உடல் கண் எழல் யாதோ அதே மனம் ஆம் யான் என்னும் அவ் எண்ணம் இவ் உடல் வாய்த் தான் எழல் முன்பு எவ் இடம் என்று ஆயின் இதயத்தே சேரும் அதால் அவ் இடம் நின்றே மனம் உண்டு ஆம்.

**உடற்கண், உடல் வாய்-உடலில்; முன்பு-முதலில்; உண்டாம்-உற்பத்தியாகிறது.**

**(கலி விருத்தம்)**

**449. உள்ளலல தில்லையுயி ரோடிறை யுலோகம்
உள்ளலெவை யின்கணு முழப்பதக மாகும்
உள்ளலெவை கட்குமுத லுற்றவக மாமவ்
வுள்ளலெழ லுற்றவிட முள்ளமென லாமே.**

உள்ளல் அலது இல்லை உயிரோடு இறை உலோகம் உள்ளல் எவையின்கணும் உழப்பது அகம் ஆகும் உள்ளல் எவைகட்கும் முதல் உற்ற அகம் ஆம் அவ் உள்ளல் எழல் உற்ற இடம் உள்ளம் எனல் ஆமே.

**உழப்பது - விரவியிருப்பது.**

**(நேரிசை வெண்பா)**

**450. திடமாக வுட்செறிந்தார் தம்மையே யல்லால்
இடமாக மற்றெதையு மோரார் - படமா
இருந்தொளிர்மெய் யாந்தம் மிடத்துமற் றெல்லாம்
பொருந்தவிடந் தந்தொளிர்விப் பார்.**

திடம் ஆக உள் செறிந்தார் தம்மையே அல்லால் இடம் ஆக மற்று எதையும் ஓரார் படமா இருந்து ஒளிர் மெய்யாம் தம் இடத்து மற்று எல்லாம் பொருந்த இடம் தந்து ஒளிர்விப்பார்.

**செறிந்தார்-அடர்ந்து (உள்ளத்தில்) இருப்பவர்கள்.**

## 75. சுகநுகர்ச்சித்திறன்

### 451. எவ்வளவிற் றாக விதயத்தே யாழ்வார்மற்
### றவ்வளவிற் றாக வநுபவிப்பார் - செவ்வி
### விரூபமா நின்று விளங்குமகண் டான்ம
### சொரூபமாத் துன்னு சுகம்.

எவ்வளவிற்று ஆக இதயத்தே ஆழ்வார் மற்று அவ்வளவிற்று ஆக அநுபவிப்பார் செவ்வி விரூபமா நின்று விளங்கும் அகண்ட ஆன்ம சொரூபமாத் துன்னு சுகம்.

**செவ்வி-காட்சி, தோற்றம்; விரூபம்-வேறுபாடான வடிவம்.**

சொரூப சுகம் இதயத்தில் ஆழுமளவில் தோன்றும். சுட்டுணர்வு கெட்டவள வெனினும்பொருந்துவதாம். விடய போகங்களை யடையுங் காலத்தும் அக்கணம் இதயத்தில் மனம் ஆழ்வதொன்றாலே சுகம் தோற்றுவதென்றார் பகவான். நிழலை விட்டு நீங்கா விவேகிபோல், மனம் சுட்டுணர் வின்றி இதயத்தில் தங்கத்தங்க சொரூபம் தானே யொளிரும்.

### 452. இதயத்தி லுன்னையினி தேற்பித்து விட்டால்
### உதயமா முண்மை யுணர்ச்சி - அதன்பின்
### சதோதயமெய்ஞ் ஞானமார்த் தாண்டனா வாழ்வாய்
### சதாசிவசாந் தாநுபவஞ் சார்ந்து.

இதயத்தில் உன்னை இனிது ஏற்பித்து விட்டால் உதயம் ஆம் உண்மை உணர்ச்சி அதன் பின் சதோதய மெய்ஞ்ஞான மார்த்தாண்டனா வாழ்வாய் சதாசிவ சாந்த அநுபவம் சார்ந்து.

**ஏற்பித்துவிட்டால்-நிலைபெற்றுநின்றால்.**

இதயத்தில் ஆன்மசொரூபமாயிருந்தொளிரும் இறைவன் திருவடிக்கண், யானாரென்னும் விசாரத்தால் உன்னையே பலியாய் மனமகிழ்ந்தடைவித்து விடின், ஆங்கே அவனருளால் உனக்குண்மை யுணர்ச்சி யுதயமாம்; அதன்பின் மனக்கவலை மாறி மங்களகரமான உபசாந்தவடிவா மான்மாநுபவம் அனவரதமடைந்து எப்பொழுது முதயமாய் இடைவிடா தெறிக்கும் அவ்வான்மவஸ்துவா மெய்ஞ்ஞான சூரியனேயாய் நீ வாழ்வாய்.

**வி-ரை:-** உன்னை யென்றது யானென்னுந் தேகாத்ம புத்தியா மகந்தையை யெனவறிக.

### 453. எண்ணியாங் கெண்ணநிறை வேறுமனந் தன்மூலம்
### நண்ணியான் மானந்த மேநண்ணும் - மண்ணில்
### அனிச்சைக்கே டிச்சைப்பே றான்மநிலை மூர்ச்சை
### இனிச்சதுயிற் கும்பொருந்து மீது.

எண்ணி ஆங்கு எண்ணம் நிறைவேறும் மனம் தன் மூலம் நண்ணி ஆன்ம ஆனந்தமே நண்ணும் மண்ணில் அனிச்சைக் கேடு இச்சைப் பேறு ஆன்மநிலை மூர்ச்சை இனிச்ச துயிற்கும் பொருந்தும் ஈது.

**அனிச்சைக் கேடு-விரும்பாதவற்றிற்குக் கேடுண்டாதல்;**
**இச்சைப்பேறு-விரும்பியவற்றை அடைதல்; இனிச்ச-இனிமையான.**

### 454. சித்தசங் கோசச் சிறுமைசேர் புன்மதியின்
### மத்தவகங் காரமயல் வாழ்விலே - சித்தமொன்
### றுள்ளலற் றுள்ளதோ ரொட்பங்கூ றுண்மைமகிழ்
### வுள்ளவர் யாரே யுரை.

சித்த சங்கோசச் சிறுமை சேர் புன் மதியின் மத்த அகங்காரமயல் வாழ்விலே சித்தம் ஒன்று உள்ளல் அற்று உள்ளது ஓர் ஒட்பம் கூர் உண்மை மகிழ்வு உள்ளவர் யாரே உரை.

**சங்கோசம்-சுருங்குதல்; ஒன்று உள்ளல் அற்று-ஒரு எண்ணமும் எண்ணாமல்;**
**ஒட்பம்-பிரகாசம், தெளிவு.**

சித்த சங்கோசம் சேர்ந்த புன்மதியான அகங்கார வாழ்வில் யார்தாம் உண்மை மகிழ்வுள்ளவர் என வியந்தார். எவ்வளவு போகங்கள் பெறினும் சமுசாரி நினைவற்ற நிலையை அறிகில னாதலின், எவனுக்கும் துயர் நீங்கிய வாழ்வில்லை. அழுக்காறு என்பது ஞானி யொருவன் நிலைக்கே உரித்தாம்.

## 76. உறக்கத்திறன்

### 455. வேற்றுப் பொருளொன்றும் மேவா விழுத்துயில்வாய்
### ஆற்றப்பே ரின்ப மநுபவித்தோர் - போற்றா
### துறுதியென வெண்ணி யுறுதுயர்க்குக் கந்தாப்
### பிறிதை யவாவுறல் பேது.

வேற்றுப் பொருள் ஒன்றும் மேவா விழுத் துயில் வாய் ஆற்றப் பேர் இன்பம் அநுபவித்தோர் போற்றாது உறுதி என எண்ணி உறு துயர்க்குக் கந்தாப் பிறிதை அவா உறல் பேது.

**மேவா-இல்லாத; விழுத்துயில்-ஆழ்ந்த நித்திரை; ஆற்ற-மிகுதியாக; கந்து**
**ஆக-பற்றுக்கோடாக; பேது-பைத்தியக்காரத்தனம்.**

**456. உறக்கமொடு மூர்ச்சை யொழிந்தபிற வற்றின்
திறத்துமறி யாமைநனி சேர்தல் - வெறித்த
அகந்தையறி வுற்ற வயல்விடய மாட்டே
திகழ்ந்திடுமான் மாவினன்று தேர்.**

உறக்கமொடு மூர்ச்சை ஒழிந்த பிறவற்றின் திறத்தும் அறியாமை நனி சேர்தல் வெறித்த அகந்தை அறிவு உற்ற அயல் விடயம் மாட்டே திகழ்ந்திடும் ஆன்மாவின் அன்று தேர்.

**பிறவற்றின் திறத்து-பிறவற்றில்; நனி-அதிகமாக; வெறித்த-அடங்காது அலைகின்ற; அயல் விடய மாட்டே-அயல் விஷயத்தில் தான்.**

**457. உறக்கமொரு கோசமா வோதல் விழிப்பைப்
பிறக்கமெனுந் தன்மறதிப் பேதே - சிறக்குமொரு
மெய்த்திறமா மந்த விழிப்பெனல்போ னாலுறக்கம்
அத்துவிதக் கேவலமெய் யாம்.**

உறக்கம் ஒரு கோசமா ஓதல் விழிப்பைப் பிறக்கம் எனும் தன் மறதிப் பேதே சிறக்கும் ஒரு மெய்த்திறம் ஆம் அந்த விழிப்பு எனல் போனால் உறக்கம் அத்துவிதக் கேவல மெய் ஆம்.

**ஓதல்-சொல்லுதல்; பிறக்கம்-ஒளி, விளக்கம்; போனால்-நீங்கினால்.**

**458. காண்பதின் றாயிற்றுக் கண்டுயில்கா லென்றெண்ணி
மாண்பழிந்து சிந்தை மயங்கறான் - காண்பவனான்
என்றெண்ணி முன்னை யிரண்டவத்தைக் கண்ணுந்தான்
கன்றியவாங் காரக் கரு.**

காண்பது இன்று ஆயிற்றுக் கண் துயில்கால் என்று எண்ணி மாண்பு அழிந்து சிந்தை மயங்கல் தான் காண்பவன் நான் என்று எண்ணி முன்னை இரண்டு அவத்தைக் கண்ணும் தான் கன்றிய ஆங்காரக் கரு.

**இன்று-இல்லாமல்; துயில்கால்-தூங்கும்போது; மயங்கல் தான்-மயங்குதல்; அவத்தைக்கண்ணும்-அவஸ்தைகளிலும்; கன்றிய-முதிர்ந்த, சீர்கெட்ட.**

**459. அடியாய மூட வகந்தை யழிவாற்
புடியாய மூன்றும் புலம்ப - முடிவாய்ச்
சகலமற வேதான் சதோதயமாஞ் சுத்தப்
பகலே சிவராத் திரி.**

அடி ஆய மூட அகந்தை அழிவால் புடி ஆய மூன்றும் புலம்ப முடிவாய்ச் சகலம் அறவே தான் சதோதயம் ஆம் சுத்தப் பகலே சிவ ராத்திரி.

**அடி ஆய-மூலமான; புடியாய மூன்று-முப்புடி; புலம்ப-அழிய.**

**460. கனாநனாக் கட்குத்தான் காரணமா நின்ற
அனாதிமல வாதனைபோ யற்றால் - இனாத
கதிபடரக் கூட்டும்பாழ்ங் கண்ணுறக்க மூடம்
அதீததுரி யாவத்தை யாம்.**

கனா நனாக்கட்குத் தான் காரணமா நின்ற அனாதி மல வாதனை போய் அற்றால் இனாத கதி படரக் கூட்டும் பாழ்ங் கண் உறக்க மூடம் அதீத துரிய அவத்தை ஆம்.

**இனாத-கொடிய; பாழ்-சூன்யம்; கண் உறக்க மூடம்-மூடத் தூக்கம்.**

**461. இன்பமயங் கோசமா யேய்தல் விழிப்புநிலைக்
கன்பமர்விஞ் ஞானமயற் காதலால் - மொய்ம்புறுமவ்
விஞ்ஞான கோசமறின் மிஞ்சும்பே ரின்பமயம்
அஞ்ஞான கோசவியல் பற்று.**

இன்ப மயம் கோசமாய் ஏய்தல் விழிப்பு நிலைக்கு அன்பு அமர் விஞ்ஞான மயல் காதலால் மொய்ம்பு உறும் அவ் விஞ்ஞான கோசம் அறின் மிஞ்சும் பேர் இன்பமயம் அஞ்ஞான கோச இயல்பு அற்று.

**ஏய்தல் -இருத்தல், விளங்கல்; அமர்-உள்ள; மொய்ம்பு-வலிமை.**

ஆனந்த மயமாம் அருந்துயில் நிலை, ''அப்பொழுது ஒன்று முணரேன்'' என அறியாமைபாற் படல், என்று மோரியல்பாய் இருந்தொளிர்பவனே தானாகும் தன்னுண்மை யநுபவத்தை யோர்த்துணராது, 'விழித்தவனே நா' னெனமயங்கி அவ்விழிப்பு நிலையை விரும்புற்ற விஞ்ஞான மயற்கே யாதலால், திண்மைமிக்க விழிப்பு நிலையினுற்ற அறியாமை யான அவ்விஞ்ஞான கோசம், விழித்தவன் தான் அன்றென விசாரவாளாற் சேதமாகவே, அதனோடு அதன் மறு தலையான அருந்துயில் நிலையும் அதனறியாமை உடனொழிந்து இன்பமய மாத்திரமாய் எஞ்சி யொளிரும்.

**462. உறக்கங் கவர்வரைதன் னுண்மை யுணர்ச்சிப்
பிறக்கங் கலங்காமை பெற்றால் - மறக்கமாம்
மைத்துயில்வந் தென்னை மயக்கிற்றே யென்றுள்ளம்
எய்த்தலுற வேண்டா விடைந்து.**

உறக்கம் கவர் வரை தன் உண்மை உணர்ச்சிப் பிறக்கம் கலங்காமை பெற்றால் மறக்கம் ஆம் மைத் துயில் வந்து என்னை மயக்கிற்றே என்று உள்ளம் எய்த்தல் உற வேண்டா இடைந்து.

**பிறக்கம் - விளக்கம்; மறக்கம்-மறதி; எய்த்தல்-வருந்துதல்; இடைந்து-சோர்வுற்று.**

## 77. மெய்ப்பொருட்டிறன்

**463. காணா விடத்துளதாய்க் காணுங்கா லில்லாத**
**மாணா மனத்தின் மயற்பாம்பு - காணாது**
**பொன்றுங்கா லஃ்து புதையுநிச போதத்தாம்**
**பொன்றுங்கா ணுண்மைப் பொருள்.**

காணா இடத்து உளதாய்க் காணுங்கால் இல்லாத மாண் ஆம் மனத்தின் மயல் பாம்பு காணாது பொன்றுங்கால் அஃ்து புதையும் நிச போதத் தாம்பு ஒன்றும் காண் உண்மைப் பொருள்.

**மாண் ஆம்-மகா விசித்திரமான; மயல்-அஞ்ஞானம்; பொன்றுங்கால்-மறையும் போது; புதையும்-புதைகின்ற; ஒன்றும்-ஒன்றாகிவிடும்.**

**464. எவ்விழைவு மின்றி யியங்கு மியல்பினாற்**
**செவ்விய சிந்தைச் செறிவிலே - எவ்வித**
**பேதமு மின்றிப் பிறங்குபே ரானந்த**
**போதமே யுண்மைப் பொருள்.**

எவ் விழைவும் இன்றி இயங்கும் இயல்பினால் செவ்விய சிந்தைச் செறிவிலே எவ்வித பேதமும் இன்றிப் பிறங்கு பேர் ஆனந்த போதமே உண்மைப் பொருள்.

**விழைவு-விருப்பம்; சிந்தை-அறிவு.**

**465. என்றென்று மொன்றாக வெங்கெங்கு மொன்றாகத்**
**தொன்றுதொட் டொன்றே தொடர்தலால் - என்றுமெங்கும்**
**கற்பனைக ளாகக் கழிவனகாண் தன்னுருவாத்**
**தப்பருமவ் வொன்றைத் தவிர்த்து.**

என்று என்றும் ஒன்றாக எங்கு எங்கும் ஒன்றாகத் தொன்று தொட்டு ஒன்றே தொடர்தலால் என்றும் எங்கும் கற்பனைகளாகக் கழிவன காண் தன் உருவாத் தப்பு அரும் அவ் ஒன்றைத் தவிர்த்து.

**தப்பரும்-தவறாத.**

## 78. கர்த்தவியக்கழற்சித்திறன்

**466. கர்த்தவிய புத்தி கழன்றோர்க்கே யுள்ளூறச்**
**சுத்தவுப சாந்த சுகந்துலங்கும் - மத்தவுணர்**
**வாமதுவே யெல்லா வனர்த்தமுந்தான் மேல்விளைப்ப**
**தாமொருதீ வித்தாக லான்.**

கர்த்தவிய புத்தி கழன்றோர்க்கே உள்ஊறச் சுத்த உபசாந்த சுகம் துலங்கும் மத்த உணர்வு ஆம் அதுவே எல்லா அனர்த்தமும் தான் மேல் விளைப்பதாம் ஒரு தீ வித்து ஆகலான்.

**கர்த்தவிய புத்தி-கர்த்ருத்வ புத்தி; உள்ளூற-உள்ளத்தில்; மத்த உணர்வு-அகங்கார உணர்வு; ஆகலான்-ஆன காரணத்தினால்.**

## 467. கயக்கமறா தேய்ந்தசங் கற்பவிகற் பங்கள்
## செயற்குரிய வாகச் செயாதே - உயிர்க்குயிராம்
## ஈசனரு ளெவ்வா றியக்குமவ் வாறியங்கல்
## பூசனையி னுண்மைப் புலன்.

கயக்கம் அறாது ஏய்ந்த சங்கற்ப விகற்பங்கள் செயற்கு உரிய ஆகச் செயாதே உயிர்க்கு உயிர் ஆம் ஈசன் அருள் எவ்வாறு இயக்கும் அவ்வாறு இயங்கல் பூசனையின் உண்மைப் புலன்.

**கயக்கம்-கவலை; அறாது-நீங்காமல்; ஏய்ந்த-உள்ள; புலன்-நிலைமை.**

ஓயாதுளக்கவல் பொருந்திய சங்கற்ப விகற்பங்களைச் செய்யத் தகுந்தனவாக வீணிற் செய்து கொண்டிராமல், உயிர்க்குயிரா மிறைவன் திருவருள் எவ்வாறு நடத்துமோ அவ்வாறே தானும் நடத்தல் அவ்விறை வழிபாட்டின் உண்மையிரகசியமாம்.

## 468. தன்பிடிபோய்த் தஞ்சமெனத் தான்றொழுதே தானையுரி
## மொய்ம்புடைய தூர்த்தர் முடங்கிவிழ - அம்புவியில்
## மாயனா ரின்னருளால் மானத் துகில்வளர
## லாயினாள் பத்தினி யாள்.

தன் பிடி போய்த் தஞ்சம் எனத் தான் தொழுதே தானை உரி மொய்ம்பு உடைய தூர்த்தர் முடங்கி விழ அம் புவியில் மாயனார் இன் அருளால் மானத் துகில் வளரல் ஆயினாள் பத்தினியாள்.

**தானை-புடவை; தூர்த்தர் - தீய நடத்தையுடைய கௌரவர்கள்; அம்புவியில்-உலகில்; மாயனார்-ஸ்ரீ கிருஷ்ணன்; துகில்-உடை.**

துரோபதை துகிலுரியப்பட்ட இடர்க்காலத்தில் கிஞ்சித்தும் தன் வலிமையின்றிச் சரணடைந்த பிரபத்தியால், அக்கணமே மானம் காக்கப் பெற்றுத் துகில் வளர, தேவரும் போற்றத் திகழ்ந்தாள். அவள் தன் வலி நம்பிய மட்டும் அருள் வெளிப் படவில்லை.

இதையே பிள்ளைப்பெருமா ளையங்கார்

''மெய்த்தவளச் சங்கெடுத்தான்
மேகலை விட்டங் கைதலை
வைத்தவளச் சங்கெடுத்தான் வாழ்வு''

என இனிதில் விளக்கினார்.

## 469. சேயை நிகர்த்துறுதி தேறாதே சிற்சத்தித்
## தாயைமுன் னிட்டிறைவன் றாளடைந்தோர் - மாயைக்
## கறைபடு தேகோகங் காரச் செயன்மாய்ந்
## திறைபணி நிற்ற லியைபு.

சேயை நிகர்த்து உறுதி தேறாதே சித் சத்தித் தாயை முன்னிட்டு இறைவன் தாள் அடைந்தோர் மாயைக் கறை படு தேக அகங்காரச் செயல் மாய்ந்து இறைபணி நிற்றல் இயைபு.

அறியாச் சிசு தாயை முன்னிட்டுத் தாதையைத் சார்ந்தாற் போலத் தாமும் தமக்குறுதி பயப்ப தின்னதென்றோராது பராசத்தியை முன்னிட்டுப் பரமன் பாதம் பற்றினோர், மாயைக் கறை பொருந்திய தேகான்ம புத்தியாற் சேர்ந்த கர்த்தத்துவங் கெட்டு இறை பணிநிற்றல் இயல்பாம்.

## 470. இன்றைக் குனக்குப் படியளந்த வீசன்மற்
## றென்றைக்கு மாங்கே யினிதளப்பான் - பின்றைக்கு
## நாளைக் கெனுஞ்சிந்தை நண்ணாது பாரமவன்
## றாளுக்கே யாகச் சரி.

இன்றைக்கு உனக்குப் படி அளந்த ஈசன் மற்று என்றைக்கும் ஆங்கே இனிது அளப்பான் பின்றைக்கு நாளைக்கு எனும் சிந்தை நண்ணாது பாரம் அவன் தாளுக்கே ஆகச் சரி.

**பின்றைக்கு-பிற்காலத்திற்கு; சரி-நடப்பாயாக.**

உலக வியவகாரங்கள் சாதகனால் ஒழிக்க இயலா. அரண்புகினும், மனோ பந்தங்கள் வலிந்தணைந்தே தீரும். ஆதலால் சரணமாகிய பிரபத்தியே மனக்கவலை மாற்றும் மருந்து. இன்று படியளக்கும் ஈசனருள் இன்றேபோல் என்றென்றும் நம்மைவிட்டகலாதெனத் திடச்சித்தங் கொண்டு, நாளை நினைவை யறவே ஒழித்து காலாதீதமான மனச் சாந்தியைப் பெறல் வேண்டும்.

## 471. சிவன்கருவி யாகநான் சேர்கென்று செம்மைத்
## தவங்கருது யோகநிட்டை தானும் - நிவந்தநிலை
## ஆன விறைபணியா மான்ம சமர்ப்பணத்துக்
## கூன மெனவே யுணர்.

சிவன் கருவியாக நான் சேர்க என்று செம்மைத் தவம் கருது யோக நிட்டை தானும் நிவந்த நிலை ஆன இறைபணி ஆம் ஆன்ம சமர்ப்பணத்துக்கு ஊனம் எனவே உணர்.

**நிவந்த-உயர்ந்த; ஊனம்-ஊறுபாடு, கேடு விளைப்பது.**

''உலகை யுய்வித்தலில் சிவன் கருவியாக நான் சேர்வேனாக'' எனச் சிந்தித்துச் செய்யும் செம்மைத் தவமாகிய யோக நிட்டை தானும், உயர்ந்த நிலையான இறைபணி நிற்ற லென்னும் ஆன்ம சமர்ப்பணத்துக்கு ஊறுபாடு விளைப்பதாம்.

**வி-ரை:-** அத்தவயோக நிட்டை தன்னியல்பில் செம்மை யுடைத்தாயினும் அதனை யாற்றுவான் காமியக் கருத்தால் அச்செம்மை கெடுமெனக் காட்டவே, ஊனமுறு மத்தவத்தைச் செம்மைத்தவமென வேண்டாது விசேடித்தார்.

## 472. ஆளா வொழிந்ததா னாளென்னு மந்நினைப்பும்
மூளா தகந்தையற மோனமாய் - வாளாதான்
சும்மா விருக்கை சொரூபநிட்டை யாகவிளங்
கம்மா வறிவே யறிவு.

ஆளா ஒழிந்த தான் ஆள் என்னும் அந்நினைப்பும் மூளாது அகந்தை அற மோனமாய் வாளா தான் சும்மா இருக்கை சொரூபநிட்டையாக விளங்கு அம் மா அறிவே அறிவு.

**மூளாது-உண்டாகாது.**

## 473. இதயத்தே யீச னிதயமாய் நின்று
விதிவழியே யாவுஞ்செய் விப்பான் - அதனால்
நழுவாது நம்மிடத்து நாமொன்றி நின்றால்
வழுவா தெலாநடக்க வற்று.

இதயத்தே ஈசன் இதயமாய் நின்று விதி வழியே யாவும் செய்விப்பான் அதனால் நழுவாது நம் இடத்து நாம் ஒன்றி நின்றால் வழுவாது எலாம் நடக்க அற்று.

**வழுவாது-முட்டுப்பாடு இன்றி; நடக்க அற்று-நடப்பனவாம்.**

இறைவன், ஒவ்வொருவருள்ளத்தும் உள்ளமாயுற்று அவ்வவர்க்கான வெல்லாம் முன்பே யமைந்த முறைப்படி தன்சந்நிதி மாத்திரத்தால் மௌனமாய்ச் செய்விப்பான். ஆதலால் நாமும் நம்முதித்த விடமான வுள்ளத்துள் அவன் சொரூபமான அவ்வுள்ளத்தோ டொன்றி நிலை தவறாது நிச்சிந்தையாய் நின்றால், அவ்வாறே நமக்காக வேண்டுவனவும் முட்டுப்பாடின்றி முடியவல்லனவாம்.

**வி-ரை:-** இறைவனுக்கு உள்ளமெனும் பெயரும், அது தானுண்டாய காரணமும்.

> ''உள்ளபொரு ளுள்ளலற வுள்ளத்தே யுள்ளதா
> லுள்ளமெனு முள்ளபொருள்''

என்னும் உள்ளது நாற்பதன் மங்கலப் பாசுரத்தா லுணர்க. எலா நடக்க வற்றென்பது பன்மை யொருமை மயக்கம்.

## 474. மரம்வைத் தவன்தண்ணீர் வார்ப்பா னெனுமவ்
வுரமுடையோ ருள்ளங் கவலார் - மரமுலரப்
பார்ப்பா னெனினப் பரிதாபக் காட்சியுமப்
பார்ப்பான் றனக்கே பரம்.

மரம் வைத்தவன் தண்ணீர் வார்ப்பான் எனும் அவ் உரம் உடையோர் உள்ளம் கவலார் மரம் உலரப் பார்ப்பான் எனின் அப் பரிதாபக் காட்சியும் அப் பார்ப்பான் தனக்கே பரம்.

**கவலார்-கவலைப்பட மாட்டார்; பரம்-பாரம்.**

''மரம் வைத்தவன் தண்ணீர் வார்ப்பான்'' என்ற பாமரச் சொல்லின் நுட்பத்தையறிந்தவர் அந்த மனவுறுதியினால் என்றும் உள்ளத்தில் எது வரினும் துயருறார். மரம் உலர்ந்து நிற்பதும் அவன் திருவுள்ளமாயின் அந்தப் பரிதாபக் காட்சியின் பொறுப்பையும் அவனிடமே யொப்புவித்து நெஞ்சத்தில் துயர் நீங்கவேண்டுமென்றார். இது பிரபத்தியின் நிகழ்கணமே மனச்சாந்தியுறும் அரியவுண்மையை விளக்குவது.

### 475. ஈசனே மூலமா யாவைக்கு மேய்தலால்
### ஈசனுக் கர்ப்பிக்கு மெல்லாமே – ஈசனாம்
### மூலத்தி னின்று முளைத்த வுலகுயிராம்
### ஆலமர முற்றுக்கு மாம்.

ஈசனே மூலமா யாவைக்கும் ஏய்தலால் ஈசனுக்கு அர்ப்பிக்கும் எல்லாமே ஈசன் ஆம் மூலத்தின் நின்று முளைத்த உலகு உயிர் ஆம் ஆலமரம் முற்றுக்கும் ஆம்.

**மூலம்-வேர்.**

எவற்றுக்கு மிறைவனே மூலமா யிருத்தலால் அவனுக்களிக்கு மனைத்தும் மூலமாமவனிடத் தினின்றெழுந்த அவ்வுலகுயிர்த் தொகை யாலமர முற்றுக்குமே ஒக்கப்பயன் படுவனவாம்.

**வி-ரை:-** பின்னிரண்டிடத்தும் ஈசனென்னும் பெயர், அவனென்னுஞ் சுட்டு மாத்திரையாய் நின்றது. அர்ப்பணத்தைத் தண்ணீராகக் கொள்க.

## 79. நைஷ்கர்மியசித்தித்திறன்

### 476. இயற்றினுங் கன்ம மியற்றா விடினும்
### இயற்றும் வினைமுதனா னென்னும் – மயற்றகைசேர்
### ஜீவவகங் காரமறச் செத்தொழிகை நிட்கன்ம
### மாவதாஞ் சித்தி யறி.

இயற்றினும் கன்மம் இயற்றாவிடினும் இயற்றும் வினை முதல் நான் என்னும் மயல்தகை சேர் ஜீவ அகங்காரம் அறச் செத்து ஒழிகை நிட்கன்மம் ஆவது ஆம் சித்தி அறி.

கன்மம் இயற்றிடினும், இயற்றாவிடினும் அகங்காரமறஜீவபோதம் ஒழிந்து நிற்றலே நிட்காமிய நிட்கன்மமாவதன்றி கேவலம் தொழிலின்றி நிற்றலால் பந்தமறுவது அன்று என்றார். இயற்றுபவன் யார் என்ற இடையறா விசாரத்தால் ஜீவபோத வகங்காரம் அழிவதாம்.

## 80. ஆன்மசமர்ப்பணத்திறன்

### (வேறு)

**477. தம்மை யிறைக்கார் சமர்ப்பணஞ் செய்வரோ**
**இம்மையே தன்னை யிறைவ னவர்க்களிப்பான்**
**தம்மை யிழந்த ததாகார போதரே**
**செம்மைசேர் சுத்த சிவாநுபவந் தாந்திளைப்பார்.**

தம்மை இறைக்கு ஆர் சமர்ப்பணம் செய்வரோ இம்மையே தன்னை இறைவன் அவர்க்கு அளிப்பான் தம்மை இழந்த தத் ஆகார போதரே செம்மை சேர் சுத்த சிவாநுபவம் தாம் திளைப்பார்.

**இம்மையே-இங்கேயே.**

''எல்லாமற என்னை இழந்த நலம்'' (கந்தரனுபூதி) என்பது ஞான முதிர்ச்சி. அஃது உடல், பொருள், ஆவி, ஜீவபோதமிவற்றை இறைவனுக்கு அர்ப்பணம் செய்தல். ''எனதாவி உடல் பொருளு மவுனியாய் வந்து கையேற்று நமதென்ற வன்றே'' என்றார் தாயுமானவரும். அந்த க்ஷணமே இறையருளால் சிவ போதம் கைவரப் பெறுவராதலின் ''இம்மையே'' என்று வற்புறுத்தினார்.

இந்தக் கைம்மாற்றை ''தந்ததுன்றன்னைக் கொண்ட தென்றன்னைச் சங்கரா, யார் கொலோ சதுரர் ?'' என மணி வாசகர் மிக அருமையாய்க் குறித்தலைக் காண்க. இஃது பரபத்தியும் ஞானமும் ஒருங்கே நிகழப் பெறும் அரியவுண்மையை வலியுறுத்தும்.

### (நேரிசை வெண்பா)

**478. பொருவிலா வீசனடிப் புந்திவலி யாற்றன்**
**உருவா மகந்தையுணர் வோய்வாற் - றிருவடியிற்**
**றன்னிழப்பாஞ் சீவ சமர்ப்பணமே காணுங்காற்**
**பன்னுழைப்பாம் பத்திப் பயன்.**

பொரு இலா ஈசன் அடிப் புந்தி வலியால் தன் உரு ஆம் அகந்தை உணர்வு ஓய்வால் திரு அடியில் தன் இழப்பு ஆம் சீவ சமர்ப்பணமே காணும்கால் பன் உழைப்பு ஆம் பத்திப் பயன்.

**பொருவிலா-தடைபடாத; புந்திவலி-தியான வலிவு; பன்-பல.**

**479. எல்லாமா நின்ற விறைவற் கயலாக**
**நில்லாத் தனித்தன்மை நீக்குக - பொல்லாச்**
**சலவகங்கா ரான்ம சமர்ப்பணமே சாந்தங்**
**குலவுபரா பத்திக் குறி.**

எல்லாமா நின்ற இறைவற்கு அயல் ஆக நில்லாத் தனித் தன்மை நீக்குக பொல்லாச் சல அகங்கார ஆன்ம சமர்ப்பணமே சாந்தம் குலவு பராபத்திக் குறி.

**சல-அலைவையுடைய.**

பரபத்தியின் லக்ஷணம் அகங்காரரூப ஜீவ சமர்ப்பணமே யாதலின் இறைக்கு அயலாகத் தான் தனி நிற்கும் போலி வலிமையை இழத்தலே பத்திக்குறி என்றார். ''தொந்த நோயை என்னாலெரிக்கவும் இங்கு நானார்'' என்பது அருணகிரியார் வாக்கு.

## 480. ஆண்டவற்கான் மாவை யளியென்ப ரவ்வான்மா ஆண்டவன தன்றியய லாரதோ - ஆண்டவன்பால் வஞ்சத்தாற் றான்கவர்ந்த மைக்கிரங்கி யாண்டவன்றாட் கஞ்சத்தேற் பித்தல் கடன்.

ஆண்டவற்கு ஆன்மாவை அளி என்பர் அவ் ஆன்மா ஆண்டவனது அன்றி அயலாரதோ ஆண்டவன் பால் வஞ்சத்தால் தான் கவர்ந்தமைக்கு இரங்கி ஆண்டவன் தாள் கஞ்சத்து ஏற்பித்தல் கடன்.

**கஞ்ச-தாமரை.**

ஆன்ம சொரூபமா மிறைவன்பால் அகங்கார வடிவாமுயிரை அர்ப்பணஞ் செய்யென்று அறிந்தோர் கூறுவர். அவ்வுயிர் ஏற்கெனவே அவ்விறைவனுடைமையன்றி வேறுயா ருரிமையோ? ஆதலால், இறைவன் தடத்தமாயிருத்தலி ''யானென் செயினும் என்னைக் கேட்பாரில'' ரென மூடமதி கொண்டு அவன்பாலதனைத் தான் கள்ளத்தாற் கவர்ந்து கொண்ட தன் பழி பாவச் செயலுக்கு இரங்கி வெட்கி இறைவன் மலரடிகளில் அபராத க்ஷாபனத் தோடதனை யேற்பித்தல் உணர்வுதித்த நேர்மை யுடையோன் கடனாம். தடத்த - உதாசீன; க்ஷாபனம் - மன்னிப்பு.

**வி-ரை:-** ஆண்டவனுக்கு ஆன்மாவை சமர்ப்பித்தல் வேண்டுமென்போர் பிரபத்தியின் நுட்பத்தை அறிந்தாரில்லை. அன்னிய சுதந்திர மிருந்தா லல்லவோ ஆன்மசமர்ப்பணம் ஓர் நோன்பாகும் ? என்றும் (ஜீவன்) ஈசன துடைமையே யாவதால், தான் சுதந்திர போதமாக இயங்கிய களவுக்கிரங்கி, இனி மீண்டும் நான் என்று எழாமல் ஆண்டவனிடம் (ஆன்மாவைத் திருப்பிச் செலுத்தலே கடனென்றார்) ஒடுங்கி யிருத்தலே கடமை என்றார்.

## 481. எனதுகருத் தாக வியலவொன் றில்லை நினதுதிரு வுள்ள நிகழ்க - எனவே திருவுளப் பாங்கு திளைப்பவன் சித்தம் வெருவுறக் காரண மின்று.

எனது கருத்து ஆக இயல ஒன்று இல்லை நினது திரு உள்ளம் நிகழ்க எனவே திரு உளப் பாங்கு திளைப்பவன் சித்தம் வெரு உறக் காரணம் இன்று.

**இயல-நடைபெற; வெருவுற-பயப்பட.**

என் கருத்தாக இயலவேது மின்மையால் திருவருள் பிரகாரம் எல்லாம் நிகழ்வதாக, என ஒப்புவித்த உள்ளத்தவன் எது நேரிடினும் வெருவுறக்காரண மில்லை யென்றார். இது பிரபத்தி விளக்கியதாம். அக்கணமே அமைதி உட்கொள்ளலால், பிரபத்தியே பிரபத்தியின் தனிப்பயனாம்.

**482. ஈச சொரூப மெனுமான்ம சிந்தையாம்**
**நேசமுறப் பெற்றதன் னெஞ்சின்கண் - வாசனையால்**
**ஏவியவே றெண்ண மிடம்பெறநல் காமையே**
**ஆவியையீ சற்களித்த லாம்.**

ஈச சொரூபம் எனும் ஆன்ம சிந்தை ஆம் நேசம் உறப் பெற்ற தன் நெஞ்சின்கண் வாசனையால் ஏவிய வேறு எண்ணம் இடம் பெற நல்காமையே ஆவியை ஈசற்கு அளித்தல் ஆம்.

**நல்காமை - கொடாதிருத்தல்.**

இறைவடிவா மான்ம சொரூபத்தை அன்போடனுசந்தானம் செய்யப் பெற்ற தன்னிதயத்தின்கண், பழவாசனையாற் சேரும் மற்றை நினைவொன்றும் உதித்தற் கிடங்கொடாமையே ஆவியை இறைவனுக்கீதலென்பதன் பொருளாம்.

**வி-ரை:-** ஈச சொரூபமென்பதனை ஆன்மாவுக்கு மட்டில் அடைமொழி யாக்குக.

**483. நின்னிட்ட மென்னிட்ட மென்னுமனப் பான்மையாற்**
**றன்னிட்ட முற்றத் தணத்தலே - முன்னிட்டு**
**நிற்குமூ லாவரண நீச வகந்தையறப்**
**பெற்ற சமர்ப்பணமாப் பேண்.**

நின் இட்டம் என் இட்டம் என்னும் மனப்பான்மையால் தன் இட்டம் முற்றத் தணத்தலே முன் இட்டு நிற்கும் மூல ஆவரண நீச அகந்தை அறப் பெற்ற சமர்ப்பணமாப் பேண்.

**தணத்தல்-விடுதல்; பேண்-அறிந்துகொள்.**

சமர்ப்பணமென்பது கடவுள் பிரார்த்தனையையுங் கடந்தது. எனதிஷ்டம், நின்னிஷ்டம் என்ற நினைவெல்லாம் அறவே யொழித்து அவ்வாறு கருதும் அகந்தையின் அழிவால் ஸ்வஸ்வரூபம் தழைக்கும் தானமே பேணத்தக்க சமர்ப்பணமாம்.

**484. தானந்த மில்லாச் சருவேசன் சொத்தையது**
**யானென்று மன்றி யெனதென்றும் - மானங்கொண்**
**டெண்ணியபி மானங்கொண் டிச்சித்த வச்சூதன்**
**உண்ணினையி னெங்கே யுளான்.**

தான் அந்தம் இல்லாச் சருவேசன் சொத்தை அது யான் என்றும் அன்றி எனது என்றும் மானம் கொண்டு எண்ணி அபிமானம் கொண்டு இச்சித்த அச்சூதன் உள் நினையின் எங்கே உளான்.

தனக்கோ ரெல்லையில்லாப் பரிபூரணனான யாவற்றுக்கு மிறைவனுடைமையாந் தன்னை, ஓரொருகால் அதுயானே யென்றும் மற்றொருகால் அது எனதே யென்றும் மோகத்தான் மானாபிமானங்கொண்டு முறையே அகங்கரித்தபிமானித்த அக்கள்வன் தானுதித்த விடமாந் தன்னுளம்புக்குத் தானாரெனத் தன்னுண்மையைச் சோதித்தால், அவன் யாண்டுள்ளான்.

**வி-ரை:-** சோதித்தால், இறைவனுக்கயல் யானென் றொருவன் இல்லவேயில்லை யெனக் காண்பனாதலின். உண்ணினையினெங்கே யுளான் என்றார்.

அந்தமிலாத ஈசன் சொத்தாகிய புலத் தோற்றங்களை உண்மையில் அவை பேரறிவில் அடைவாயிருக்க, நான் என்றும் என்னுடைய தென்றும் அபிமானித்த கள்வனாகிய அகங்கார ஜீவன், விசாரத்தில் அழிபவனாம்.

## 485. சேட்டையறச் சாமோ சிவசத்திக் கூணாகக் காட்டையா நிட்டையிலெக் காலகந்தை - வாட்டமறத் தான்மகிழ் சாந்தி தழைத்தலா லக்காலே யான்ம சமர்ப்பணம்மெய் யாம்.

சேட்டை அறச் சாமோ சிவ சத்திக்கு ஊண் ஆகக் காட்டை ஆம் நிட்டையில் எக்கால் அகந்தை வாட்டம் அறத் தான் மகிழ் சாந்தி தழைத்தலால் அக்காலே ஆன்ம சமர்ப்பணம் மெய் ஆம்.

**சாமோ-சாகுமோ, அழிவு பெறுமோ; காட்டை-காஷ்டம், விறகு, மரக்கட்டை; எக்கால்-எப்போது; அக்காலே-அப்போதே.**

எப்பொழுது சிவசத்திக்கு ஊணாகச் சேட்டையற அகந்தை நிட்டையிலழிவு பெறுமோ, அப்பொழுதே ஆன்ம சமர்ப்பணம் மெய்யாவதாம்; அக்கணமே சாந்தி தழைப்பதாம்.

## 486. பிள்ளையார் தன்னையே பிட்டந்த வெல்லத்தீம் பிள்ளையார்க் கர்ப்பிக்கும் பெட்பேயாம் - தெள்ளிதாம் ஆவிவடி வாக வமரிறைக்கு நாமுவந்தவ் வாவியையே நல்கு மது.

பிள்ளையார் தன்னையே பிட்டு அந்த வெல்லத் தீம் பிள்ளையார்க்கு அர்ப்பிக்கும் பெட்பே ஆம் தெள்ளிது ஆம் ஆவிவடிவு ஆக அமர் இறைக்கு நாம் உவந்து அவ் ஆவியையே நல்கும் அது.

**தீம்-தித்திப்பான; பெட்பு-தன்மை; தெள்ளிதாம்-தெளிந்த.**

என்றும் ஆன்ம சொரூபமாகவேயிருந்து விளங்கு மிறைவற்கு, அவ்வான்மாவை மோகத்தா லவனிடத்து நின்று முதலில் வேறாக்கிய நாம் உணர்வுதித்த பின்னர் உளமுவந்து அவற்கே யதனை ஆன்ம சமர்ப்பண மெனப் பெயரிட்டடைவிப்பது இனிய வெல்லத்தானியன்ற பிள்ளையார்க்கு அப்பிள்ளையாரையே ஒருபாற்பின்னமாக்கி அறிவறியாச் சிறார் அதனையமுதாகப் படைக்கு மடைவினதேயாம்.

**வி-ரை:-** முடிவான ஆன்ம சமர்ப்பணத்தினுண்மையே அன்னதாயின், ஏனைய பொருள்களை இறைவனுக் கேற்பித்தியற்றும் சாமானிய வழிபாடுகளைப்பற்றி யாமொன்றும் அதிகங் கூறவேண்டுவ தின்றாம். ஆன்ம சமர்ப்பணத்தா லாகும் பயனெல்லாம், யானென் றெழுதல் வடிவான ஆன்மாபகார தோஷத்தை அதற்குத் தானாளாகாமல் பரிகரிப்பதன்றி வேறின்றாம். ஆதலால், பூரணப் பொருளா மிறைவனை யன்றி அவனுக்கயலாக யாருமெதுவுமின்றாகலின், யானெனதென்னுஞ் செருக்குற் றெழாது சும்மா விருந்து சுடருமெய்ஞ் ஞான சொரூபநிலையாம் மோனமே, அரிதின் முயன்றும் அறிஞரா லாற்றத்தகும் உண்மை யுபாசனை யென்றுணரற் பாலதாம்.

**487. யாதோர் நிபந்தனையு மில்லாதே நும்மனத்தை
மாதோர்பா கன்பதத்தில் வைத்திடீர் - சூதோரும்
யானெனது மாய வெழில்சேர் பரசொருபம்
தானினிது வோங்குந் தழைத்து.**

யாதோர் நிபந்தனையும் இல்லாதே நும்மனத்தை மாது ஓர் பாகன் பதத்தில் வைத்திடீர் சூது ஓரும் யான் எனது மாய எழில் சேர் பரசொருபம் தான் இனிது ஓங்கும் தழைத்து.

**வைத்திடீர்-வையுங்கள்.**

## 81. பகைவர்மாட்டொழுகற்றிறன்

**488. எத்துணைதா னேதிலா ரின்னாரே யென்றாலும்
உத்தமர்தஞ் சிந்தை யுவர்ப்புற்றுச் - சற்றும்
வெறுக்கத் தகாது வெறுப்புவிருப் புப்போல்
ஒறுக்கப் படற்கே யுரித்து.**

எத்துணைதான் ஏதிலார் இன்னாரே என்றாலும் உத்தமர் தம் சிந்தை உவர்ப்பு உற்றுச் சற்றும் வெறுக்கத் தகாது வெறுப்பு விருப்புப் போல் ஒறுக்கப் படற்கே உரித்து.

**ஏதிலார்-பகைவர்; இன்னார்-கெட்டவர்; உவர்ப்பு உற்று-வெறுத்து; ஒறுக்கப்படற்கு-வெறுத்துத் தள்ளுவதற்கு; உரித்து-உரியது.**

**489. யானன் றெனத்தா னிகழ்வதையே தாமுமிக
ழாநின் றொழுகு மதனாலே - ஊனமில்பொற்
கொல்லற்குப் பட்டடையாங் கொள்கைத்தே கொல்வாற்குப்
பல்லாற்றாற் றூற்றும் பகை.**

யான் அன்று எனத் தான் இகழ்வதையே தாமும் இகழாநின்று ஒழுகும் அதனாலே ஊனம் இல் பொன் கொல்லற்குப் பட்டடை ஆம் கொள்கைத்தே கொல்வாற்குப் பல் ஆற்றால் தூற்றும் பகை.

**இகழா நின்று-இகழ்ந்து; ஊனம் இல்-நல்ல; பட்டடை-கொல்லன் காய்ச்சிய பொன்னை வைத்து அடிக்கும் அடிப்பீடம்; கொள்கைத்தே-அத்தன்மையதே; கொல்வாற்கு-அகந்தையைக் கொல்லும் சாதகனுக்கு; பல் ஆற்றால்-பலவிதமாக; பகை-பகைவர்கள்.**

**(குறள் வெண்பா)**

**490. அன்பால் வெறுப்பை யடர்க்கும்வல் லாண்மைசேர்
மொய்ம்பனே யுண்மை முனி.**

அன்பால் வெறுப்பை அடர்க்கும் வல் ஆண்மை சேர் மொய்ம்பனே உண்மை முனி.

**அடர்க்கும்-அழிக்கக் கூடிய; மொய்ம்பனே-வலிவுள்ளவனே.**

அன்பினால் வெறுப்பை அடர்க்கும் திறன் கொண்டவனே உண்மை முனி என்றார். ஒருக்காலும் துவேஷம் துவேஷத்தால் அழியப் பெறாது என்பது புத்தரின் போதனை. ஆன்மீக வாழ்வை மேவினவரும் சிலர் அடாது கண்டால் ஒறுத்தல் தங் கடனெனக் கருதி வெகுளி பூண்டு ஒழுகுபவ ராதலின், இதை வற்புறுத்தினாரென்க.

## 82. மிதவாழ்க்கைத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**491. ஆடம் பரவாழ்வை யாதரஞ்செய் யாதுசில
நீடுந் தனவந்தர் நீக்கினால் - வாடிப்
பரிதபித்துச் சோரும் பலசீவ கோடி
பெருமிதத்து வாழப் பெறும்.**

ஆடம்பர வாழ்வை ஆதரம் செய்யாது சில நீடும் தனவந்தர் நீக்கினால் வாடிப் பரிதபித்துச் சோரும் பல சீவ கோடி பெருமிதத்து வாழப் பெறும்.

**ஆதரம் செய்யாது-விரும்பாது.**

பெருந் தனவந்தரா யுள்ளோர் சிலர் ஆசை வையாதே தம்மாடம்பர வாழ்க்கையை யகற்றினால் வறுமைப் பிணியால் வாடிப் பரிதபித்து மாழ்கலுற்ற எண்ணிறந்த வுயிர்கள் அதனால் செழிப்போடு வாழலாகும்.

**வி-ரை:-** செழிப்பு-உயிர் வாழ்க்கைக் கின்றியமையாத் தேவைகளா முண்டியுடை முதலாயின இனிது நிரம்பப் பெறல்.

வாங்குங் கவளத் தோர்சிறிது வாய்தப்பிற்
றூங்குங் களிறோ துயருறா - ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமா
லாருங் கிளையோ டயின்று. - நீதிநெறி விளக்கம்

## 492. ஆண்டவருள் வள்ள லனைத்துயிர்க்கும் வேண்டுவன வேண்டுமள வானே விளைத்தலால் - ஈண்டுயிர்க்கு வேண்டளவின் மேற்புசித்தன் மீளிமையா லேனையவற் றூண்கவர்ந்துண் பாவ முணர்.

ஆண்ட அருள் வள்ளல் அனைத்து உயிர்க்கும் வேண்டுவன வேண்டும் அளவானே விளைத்தலால் ஈண்டு உயிர்க்கு வேண்டு அளவின் மேல் புசித்தல் மீளிமையால் ஏனை அவற்று ஊண் கவர்ந்து உண் பாவம் உணர்.

**வேண்டும் அளவானே-வேண்டிய அளவே; மீளிமை-வலிமை.**

அருளா லனைத்துயிர்களையும் ஆளும் வள்ளன்மை வாய்ந்த கடவுள் அவற்றுக்கு வேண்டுவனவற்றை அவ்வேண்டு மளவேயாக விளைத்தலால், ஒருவன் தானுயிர் வாழ்வதற்கின்றியமையாது வேண்டப் படுமளவின் மிக்குப் புசிப்பின் அது பிற எளிய வுயிர்களுக் குரிய வூணை வலாற்காரத்தாற்றான் கவர்ந்துண்டதாய் அம்மிகை யளவிற்றாக அவற்குப் பாவத்தை விளைப்பதாம்.

**வி-ரை:-** அளவானே விளைத்தல் - யாதுஞ்சிறிதும் வீணாதலாகா தென்னுங் கருத்தாலென்க. பேருண்டியின் மிகை அளவுக்குப் பாவம் வளர்தல் - அவ்வளவுக்குப் பிறவுயிர்களின் உணவு குறைந்து அதனாலவை வருந்த நேர்தலா லென்க. பல்வகைப் பொருள்களை-அவை யெல்லா வற்றுள்ளும் விசேடமாக வுணவுப் பொருள்களை - எத்துணைக் கெத்துணை யளவின் மிக்குத் தனக்கென வொருவன் சேமிக்கின்றான் அத்துணைக்கத்துணை அவன் பாவத்தையே சேமிக்கின்றானென ஆன்றோர் கருதற்கு ஞாயமிதுவாம்.

## 492 a ***ஒருநா ழிகைவயிறெற் கோய்வீயாய் நாளு மொருநா ழிகையுண்ப தோயா - யொருநாளு மென்னோ வறியா யிடும்பைகூ ரென்னுயிரே யுன்னோடு வாழ்த லரிது.***

***-பகவான்***

ஒரு நாழிகை வயிறு எற்கு ஓய்வு ஈயாய் நாளும் ஒரு நாழிகை உண்பது ஓயாய் ஒரு நாளும் என்னோ அறியாய் இடும்பை கூர் என் உயிரே உன்னோடு வாழ்தல் அரிது.

## 83. அமிததோடத்திறன்

### (கலி விருத்தம்)

**493. அமிததோ டத்தா லமுதமு நஞ்சாம்**
**அமிததோ டத்தா லவலம் பலவாம்**
**அமிததோ டத்தை யறிந்தவர் மற்றவ்**
**வமிததோ டத்தை யகற்றக் கடவரே.**

அமித தோடத்தால் அமுதமும் நஞ்சு ஆம் அமித தோடத்தால் அவலம் பல ஆம் அமித தோடத்தை அறிந்தவர் மற்று அவ் அமித தோடத்தை அகற்றக் கடவரே.

**அவலம்-கேடு.**

பகவத் கீதையில் அமிதமாகத் துயில்வோனும், அமிதமாகத் துயிலா தொழிவோனும், அமிதமாக உண்பவனும், அவ்வாறே உபவாசம் பயில் வோனும் யோகமடையார் என்பதை நோக்குக. இவைகளில் துயில் நீத்தலும் உபவாஸமும் உண்மையில் ஆத்மீக வாழ்வின் சகாயங்களாயினும் அமித தோடத்தால் பிரதிபந்தங்களாயின. பகவானும் உபவாஸத்தினும் மித சாத்வீக உணவையே துணையாகச் சிறப்பித்தார்.

## 84. பணிவுடைமைத்திறன்

### (நேரிசை வெண்பா)

**494. இறைஞ்சிநடக் கின்ற வியல்னைள வானே**
**நிறைஞ்சுவரு மாந்தர் நிலைமை - மறந்தும்**
**மலகுமகங் காரமெழா மாண்பே யிறைவற்**
**குலகடங்கத் தாழு முயர்வு.**

இறைஞ்சி நடக்கின்ற இயல்பின் அளவானே நிறைஞ்சு வரும் மாந்தர் நிலைமை மறந்தும் மலகும் அகங்காரம் எழா மாண்பே இறைவற்கு உலகு அடங்கத் தாழும் உயர்வு.

**இறைஞ்சி-தாழ்ந்து; நிறைஞ்சு-நிறைந்து; மலகும்-மயங்கும்.**

மக்கள் நிலைமை, அன்னார் பிறர்மாட்டுத் தாழ்ந்து நடக்குந் தன்மையளவானே மேம்பட்டு வரும்; யானென்னுஞ் செருக்கு மறந்துமெழாத வியல்பின் சிறப்பன்றோ, உலகு முற்றத் தன்னை வணங்கும் இறைவனுயர்ச்சிக்குக் காரணமாவது.

**வி-ரை:-** தானல்லாத வுடலை‘‘ நா’’ னென மயங்கலே அகங்காரமாதலால் மலகுமகங்கார மெனப்பட்டது. மலகுதல்-மயங்குதல். உலகு உயிர்த் தொகையின் மேனின்றது. உயர்வு அதன் காரணத்துக் காயிற்று.

## 495. தன்னிழப்பு முற்றச் சமையளவுந் தான்வணக்கம்
## அன்னியர்க்கு நல்கலினி தல்லாமே - உன்னதந்தான்
## நாடறிஞ னுக்கந் நமஸ்கார மன்னியர்பாற்
## கோடலோ வம்மா கொடிது.

தன் இழப்பு முற்றச் சமை அளவும் தான் வணக்கம் அன்னியர்க்கு நல்கல் இனிது அல்லாமே உன்னதம்தான் நாடு அறிஞனுக்கு அந் நமஸ்காரம் அன்னியர்பால் கோடலோ அம்மா கொடிது.

**சமைதல்-அமைதல்; நல்கல்-செய்தல்; அல்லாமே-அல்லாமல்; நாடு-நாடுகின்ற, விரும்புகின்ற; கோடல்-கொள்ளுதல்.**

தன்னிழப்பு நிரம்பப் பெற்றுத் தான் பிறரென்னும் பேதபுத்தி மறந்துந் தோன்றா தொழியுமளவும், தன்னினயலாக் காண்பாரை யெல்லாங் கடவுளுரு வாகக் கருதி அவர்க்குத் தன் வணக்கத்தை யேற்பித்தலே, உயர்வையே கருது முணர்வுடை யொருவனுக்குள் ளுவகை தருவதன்றி, அதற்கு மாறாக, அவரிடத்து நின்றுந் தான் வணக்கமடைய நேரின் அந்தோ! அஃதவனுக்குத் தவறாக் கிலேசமே யளிப்பதாம்.

**வி-ரை:-** தன்னிழப்புச் சமைதலென்னுங் காரணம் காரியத்தின் மேனின்றது. அன்னியர்க்கென உயர்திணை மேல் வைத்துக்கூறினாரேனும் ஏனை யுயிர்களுக்கு மது கொள்க. கண்டன வெலா மோன வுருவெளிய தாகவுங் கருதியஞ்சலி செய்குவாம் - தாயுமானவர். சாதகனான நல்லறிஞனுக்குத்தான் வணக்கமன்னியர்க்கு நல்கலினிதாதலும் நமக்கார மன்னியர்பால் கோடல் கொடிதாதலும் முறையே அவைதாம் தன்னிழப்புக்குத் துணை புரிதலாலும், சற்றும் பிரமாதத்துக்கிடந்தராது சதா சருவ ஜாக்கிரதையாயிருந்தா லொழியத் தானொழிக்க முயலு முடலகந்தையை யுரப்படுத்தலாலுமென்க. உன்னதம்-பிரம் மீபத நிலை, அது தான், தன்னிழப்பா மத்தியந்தாகங்கார நாசத்தாலுண்டாகுந் தன்னியல்பா மபேத திருஷ்டியா லடையப்படுவதாம்.

## 496. ஏவல்பூண் டாற்போன் றெவற்றையுந்தா னெக்காலும்
## ஆவலாய்த் தாழ்ந்தொழுகாற் றாலன்றே - யாவுலகும்
## ஏற்றமொடு நாளு மியற்றுமுயர் பூசனைகட்
## கேற்றவனா னானவ் விறை.

ஏவல் பூண்டால் போன்று எவற்றையும் தான் எக்காலும் ஆவலாய்த் தாழ்ந்து ஒழுகு ஆற்றால் அன்றே யா உலகும் ஏற்றமொடு நாளும் இயற்றும் உயர் பூசனைக்கு ஏற்றவன் ஆனான் அவ் இறை.

**அன்றே-அல்லவா; யா-எல்லா.**

அநாதியே தான் குற்றேவல் பூண்டாற் போன்று இறைவன் எவ்வுயிர்களையும் எப்பொழுதினு மெண்ணி மனமகிழ்வோடு வழிபட்டொழுகு மதனாலன்றோ, அவன் அநவரதமும் அனைத்துலகுயிர்களாலும் ஒருங்காற்றப்படும் சிறப்போடு கூடிய சீரிய வழிபாடுகளை அடைதற்குரியோ னாயினன்.

**வி-ரை:-** உலகென்பது இடவாகுபெயராய் அதன்கண் வதியுஞ் சேதனங்களான வுயிர்களை யுணர்த்தி நின்றது, இறைவற்குப் பூசனை யியற்றற்குரியன அவையேயாதலின்.

## 497. தன்னையெவைக் குள்ளுந் தரிசித் தெவைக்குந்தாழ்
## தன்னடியார்க் கேயுந்தான் றாழ்ந்தோனாய்த் - தன்னைவிட
## நொய்தற்ற தன்னியல்பா நொய்ம்மையுயர் வாலன்றே
## எய்திற் றிறைமை யிறைக்கு.

தன்னை எவைக்கு உள்ளும் தரிசித்து எவைக்கும் தாழ் தன் அடியார்க்கேயும் தான் தாழ்ந்தோனாய்த் தன்னைவிட நொய்து அற்ற தன் இயல்பு ஆம் நொய்ம்மை உயர்வால் அன்றே எய்திற்று இறைமை இறைக்கு.

**நொய்து-தாழ்மை.**

எப்பொருள்களின் கண்ணும் தன் சொரூபத்தையே தாங்காண்டலால், அவ்வெல்லாவற்றுக்கும் அடங்கி நடக்கும் தன்னடியார்க்குந் தான் தீனனாய் அவ்வாற்றால் தன்னினுந் தாழ்ந்த தொன்றிலதாகப் பெற்ற தன்னியல்பாந் தாழ்வின் பெருமையாலன்றோ ஈசனுக் கீசத்துவ மடைந்தது.

**வி-ரை:-** அகந்தை யற்றடங்கி நிற்றலே இறைமைப்பதம் பெறற்கேற்ற வழியென்பதாம்.

## 498. அணுவு மகத்துமொருங் காமனத்துக் கப்பால்
## அணைவதா லம்மெய் யதீதம் - உணர்வில்
## அணையு மகத்தினுமே யால மகத்தும்
## அணுவினுமே சிற்றணுவு மாம்.

அணுவும் மகத்தும் ஒருங்கு ஆம் மனத்துக்கு அப்பால் அணைவதால் அம் மெய் அதீதம் உணர்வில் அணையும் மகத்தினுமே ஆல மகத்தும் அணுவினுமே சிற்றணுவும் ஆம்.

**ஒருங்கு-ஒன்றாய்; அணைவதால்-இருப்பதால்; ஆல-பெரிய, அகண்ட.**

(இன்னிசை வெண்பா)

**499. வீர மிலாத்துரும்பு மேன்மிதப்ப வாழிவாய்ப்**
**பாரதர ளங்கீழ்ப் படிதலாற் - பாரகத்து**
**மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்**
**கீழல்லார் கீழல் லவர்.**

வீரம் இலாத் துரும்பு மேல் மிதப்ப ஆழிவாய்ப் பார தரளம் கீழ்ப் படிதலால் பார் அகத்து மேல் இருந்தும் மேல் அல்லார் மேல் அல்லர் கீழ் இருந்தும் கீழ் அல்லார் கீழ் அல்லவர்.

**வீரம்-வைரம்; பார-கனமான; தரளம்-முத்து.**

## 85. தக்கசெயற்றிறன்

(நேரிசை வெண்பா)

**500. அடுக்கத் தகுவதுஞா னான்ம விசாரம்;**
**மடுக்கத் தகுவதுதன் மாட்சி - விடுக்கத்**
**தகுவ தகந்தைமதி சஞ்சலங்கள் போகப்**
**புகுவதுதன் மூலப் புலம்.**

அடுக்கத் தகுவது ஞான ஆன்ம விசாரம் மடுக்கத் தகுவது தன் மாட்சி விடுக்கத் தகுவது அகந்தை மதி சஞ்சலங்கள் போகப் புகுவது தன் மூலப் புலம்.

**அடுக்கத் தகுவது-செய்யத் தகுவது; மடுக்க-அடைய; மூலப்புலம்-ஆன்ம அறிவு.**

**501. நண்ணக் கடவதுமெய்ஞ் ஞானமாஞ் சித்தத்தா**
**லெண்ணக் கடவ திறைகழலாம் - திண்ணமாச்**
**சாரக் கடவதுசற் சங்கமாஞ் சாந்தமா**
**மூரக் கடவ துளத்து.**

நண்ணக் கடவது மெய்ஞ் ஞானம் ஆம் சித்தத்தால் எண்ணக் கடவது இறைகழல் ஆம் திண்ணமாச் சாரக் கடவது சத் சங்கம் ஆம் சாந்தம் ஆம் ஊரக் கடவது உளத்து.

**ஊர-பொங்க, நிலவ.**

பொருள் வெளிப்படை. உளத்து ஊரக்கடவது சாந்த மென்றது அமைதியெனும் நிச்சலத்தின் பெருமையை விளக்குவது. எண்ணக் கடவது இறைகழ லென்பது, ''ஆனந்த வார்கழலே ஒப்பாக வொப்புவித்த உள்ளத்தா ருள்ளிருக்கும் அப்பாலைக் கப்பாலை'' என்று மணிவாசகர் கூறியவண்ணம், பிரபத்தியைக் குறிப்பது.

# இரண்டாவது

# தத்துவ அநுசந்தானவியல்

---

## 1. உபதேசமாட்சித்திறன்

### (நேரிசை வெண்பா)

**502. நிலைத்தே யுளமுடையா னீதவுரை யன்பர்**
**மலைத்தே கலங்கு மனம்புன் - புலத்தா**
**றொழுகோட்ட மோய்ந்துள் ளுறுகதிக்கு நல்ல**
**வழிகாட்டி யாக மதி.**

நிலைத்தே உளம் உடையான் நீத உரை அன்பர் மலைத்தே கலங்கும் மனம் புன் புலத்து ஆறு ஒழுகு ஓட்டம் ஓய்ந்து உள் உறு கதிக்கு நல்ல வழிகாட்டி ஆக மதி.

**நீதம்-நீதி; உள் உறு கதிக்கு-உள்ளம் அடையும் பேறுக்கு.**

**503. அவலோ கனவுரையா லன்பரகத் தான்ம**
**சிவரூப மாந்தே சிகன்றத் - துவமசியென்**
**றோயா துரைக்கு முபதேச சாரமுளத்**
**தாயா துதியா தறிவு.**

அவலோகன உரையால் அன்பர் அகத்து ஆன்ம சிவரூபம் ஆம் தேசிகன் தத்துவம் அசி என்று ஓயாது உரைக்கும் உபதேச சாரம் உளத்து ஆயாது உதியாது அறிவு.

**அவலோகனம்-பார்வை, கண்ணோக்கம்.**

அன்பரகத்தே ஆன்ம சொரூபமும் சிவசொரூபமும் ஒருங்கு தானேயாய் விளங்காநின்றே புறவிழிக்கு வேறுபோற் புலப்பட்டுலவும் ஞான தேசிகன், ''அது நீயாகின்றாய்'' எனத்தன் கண்ணோக்காங் கட்டுரையால் தற்சார்ந்தார்க் கிடைவிடாது கூறாது கூறும் உபதேசத்தின் சாரத்தை அநுபவமுறத் தம் முள்ளத்தே யோர்ந்துணராமல் ஒருவர்க்கும் மெய்யுணர்வு தோன்றாது.

## 504. தேவனா மான்மாசற் சீடர்க் குபதேசம்
## ஓவலறச் செய்யு முளவென்ப - நீவா
## துயிர்க்குயிராய் நானானென் றுள்ளத்தி னுள்ளே
## இயற்கையுணர் வாய வியல்பு.

தேவன் ஆம் ஆன்மா சத் சீடர்க்கு உபதேசம் ஓவல் அறச் செய்யும் உளவு என்ப நீவாது உயிர்க்கு உயிராய் நான் நான் என்று உள்ளத்தின் உள்ளே இயற்கை உணர்வு ஆய இயல்பு.

**ஓவல் அற-இடைவிடாமல்; நீவாது-கைவிடாது.**

உள்ளத்தினுள்ளே, ஒழியாதுயிர்க்குயிரா யுறைந்து இயற்கை யுணர்வுருவாய் 'நானா' னென்று விளங்குவதாகிய ஆன்ம சொரூபத்தின் சைதன்ய விளக்கத்தியல்பே அவ்வான்மாவாமிறைவன் பக்குவ வுயிர்களா முண்மைச் சீடர்க்குத் தானே குருவாகி ஏகாந்தத்தில் ஞானோபதேச மிடைவிடாது செய்வதாகக் கூறப்படுவதன் உட்பொருளாம்.

# 2. மகாவாக்கியத்திறன்

## 505. மடந்தவிரு மாறு வழங்குபல வார்த்தை
## அடர்ந்தமறை நான்க னகத்தும் - கடைந்த
## பரமார்த்த பாவம் பரசீ வயிக்க
## ஒருவார்த்தை மோன முணர்.

மடம் தவிருமாறு வழங்கு பல வார்த்தை அடர்ந்த மறை நான்கன் அகத்தும் கடைந்த பரமார்த்த பாவம் பர சீவ அயிக்க ஒரு வார்த்தை மோனம் உணர்.

**நான்கன்-நான்கின்; அயிக்க-ஐக்கிய.**

**506. வெம்பவசந் தாபத்தின் வீடுறமெய்ஞ் ஞானசுகச்
செம்பொருளை நாடுமதி தீவிரர்க்குத் - தொம்பதமாம்
சீவ சொரூபத்திற் செய்யுமுசா வொன்றானே
சேர்வதா முத்திச் சிறப்பு.**

வெம் பவ சந்தாபத்தின் வீடு உற மெய்ஞ்ஞான சுகச் செம்பொருளை நாடும் அதி தீவிரர்க்குத் த்வம் பதம் ஆம் சீவ சொரூபத்தில் செய்யும் உசா ஒன்றானே சேர்வது ஆம் முத்திச் சிறப்பு.

**உசா ஒன்றானே-விசாரம் ஒன்றினால்தான்.**

**507. அந்த வுசாவுக் கநுகூல மாமதியை
அந்தர் முகப்படுத்தற் காகவே - சிந்தை
ஒசியு மிதரர்க் குறுதற் பதத்தோ
டசிபதமுங் கூறிற் றறி.**

அந்த உசாவுக்கு அநுகூலமா மதியை அந்தர்முகப்படுத்தற்கு ஆகவே சிந்தை ஒசியும் இதரர்க்கு உறு தத் பதத்தோடு அசி பதமும் கூறிற்று அறி.

**ஒசியும்-தளரும்.**

**508. எதார்த்தமாத் தன்னு ளியற்றப் பெறுதொம்
பதார்த்தபரி சோதனையின் பாங்கே - பதார்த்தபரி
சோதனையா லேனையிரு சொற்களினார் நற்பொருடேர்
போதமெய்யாத் துய்க்கும் புலம்.**

எதார்த்தமாத் தன்னுள் இயற்றப்பெறு தொம் பத அர்த்த பரிசோதனையின் பாங்கே பதார்த்த பரிசோதனையால் ஏனை இரு சொற்களின் ஆர் நல் பொருள் தேர் போதம் மெய்யாத் துய்க்கும் புலம்.

**பாங்கு-தன்மை; போத மெய்-போதனையின் தத்துவம்; துய்க்கும்-அனுபவிக்கும்; புலம்-அறிவு.**

## 3. உபநிடமாட்சித்திறன்

**509. விஞ்ஞான மென்னும் வெறிபிடித்த வீணகந்தை
அஞ்ஞான மோரா வருளிறைவன் - மெய்ஞ்ஞான
வேதிகைமேற் போதுகழன் மேவு முபநிடப்பொற்
பாதுகையேற் பஃதே பணி.**

விஞ்ஞானம் என்னும் வெறி பிடித்த வீண் அகந்தை அஞ்ஞானம் ஓரா அருள் இறைவன் மெய்ஞ்ஞான வேதிகை மேல் போது கழல் மேவும் உபநிடப் பொன் பாதுகை ஏற்பு அஃதே பணி.

**ஓரா-அறியாத; வேதிகை-பீடம்; போது கழல்-பாத மலர்கள்.**

## 4. உபாசனைத்திறன்

**510. மாசு படுமசுப வாதனைதா மாய்தலுறத்**
**தேசுமலி ஞானந் திகழ்வரகத் - தீசன்**
**பரிசுத்த மாகவொளிர் பங்கயப்பூம் பாதம்**
**தரிசித்த பாக்கியவந் தர்.**

மாசுபடும் அசுப வாதனைதாம் மாய்தல் உறத் தேசு மலி ஞானம் திகழ்வர் அகத்து ஈசன் பரிசுத்தமாக ஒளிர் பங்கயப் பூம் பாதம் தரிசித்த பாக்கியவந்தர்.

**தேசு மலி-தேஜஸ் நிறைந்த.**

**511. ஆசுரசம் பத்தா லனர்த்தம் விளைவறிந்து**
**நீசுரசம் பத்தே நிகழ்த்தகத்து - மீசுரமாத்**
**தெய்வசம் பத்தொளிரச் செய்யு முபாசனையே**
**உய்திதர வல்ல துயிர்க்கு.**

ஆசுர சம்பத்தால் அனர்த்தம் விளைவு அறிந்து நீ சுர சம்பத்தே நிகழ்த்து அகத்து மீசுரமாத் தெய்வ சம்பத்து ஒளிரச் செய்யும் உபாசனையே உய்தி தர வல்லது உயிர்க்கு.

**நிகழ்த்து-செய்; மீசுரமா-அதிகமாக.**

அகத்து தெய்வசம்பத்தை யொளிரச் செய்யும் உபாசனையே உயிரை உய்ப்பிக்க வல்லதாம். அது உள் நிகழும் ஞானவிசார மாகும். வெளியில் சாதிக்கும் சம்பத்து யாவும் அசுரத் தன்மை யுடையனவாய், அனர்த்தங்களையே விளைவிப்பனவாம்.

**512. அத்துவித ஞான மரிதெனினு மெய்யன்பாம்**
**பத்தியரன் றாளிற் பதிந்துவிடின் - மித்தையறத்**
**தேற்றுமொளி யாமெய்த் திருவருளின் சார்பதுகொண்**
**டாற்றவெளி தாகு மது.**

அத்துவித ஞானம் அரிது எனினும் மெய் அன்பு ஆம் பத்தி அரன் தாளில் பதிந்துவிடின் மித்தை அறத் தேற்றும் ஒளி ஆம் மெய்த் திரு அருளின் சார்பு அது கொண்டு ஆற்ற எளிது ஆகும் அது.

**மித்தை-அறியாமை; தேற்றும்-தெளிவிக்கும்; சார்பு-உதவி, கூட்டுறவு.**

**513. ஈசன் கழலை யிதயத் துறுதிபெற
நேசமா யென்று நிறுத்தியே - பாசமால்
பாற்றலாம் பாற்றிப் பரஞான வுண்மையொளி
தேற்றலா முள்ளந் திறந்து.**

ஈசன் கழலை இதயத்து உறுதிபெற நேசமாய் என்றும் நிறுத்தியே பாசமால் பாற்றலாம் பாற்றிப் பரஞான உண்மை ஒளி தேற்றலாம் உள்ளம் திறந்து.

**பாசமால் பாற்றலாம்-மயக்கமாகிய பிணைப்பை நீக்கலாம்; தேற்றல் ஆம்-பெறுவது இயலும்.**

**514. ஜீவனது சென்னி சிவன்பதத்தோ டொன்றுபடில்
ஜீவன் சிவமயமே சேர்ந்தொளிர்வன் - தாவரமா
அற்ப வகந்தையழிந் தான்ம சொரூபமா
நிற்பதா லுண்மை நிலை.**

ஜீவனது சென்னி சிவன் பதத்தோடு ஒன்றுபடில் ஜீவன் சிவமயமே சேர்ந்து ஒளிர்வன் தாவரமா அற்ப அகந்தை அழிந்து ஆன்ம சொரூபமா நிற்பதால் உண்மை நிலை.

**சென்னி-தலை; தாவரமா-அசைவற்று.**

ஜீவன் சிவனோடடைவினால் சிவமயமாவான்; அத்தானத்தில் ஜீவனும் சிவனே; அற்ப அகந்தையின் அழிவினால், ஆன்ம சொரூபமாம் உண்மை நிலை நிற்றலால்.

**515. பூண்டவன்பொய்ப் பாசம் பொடுக்கென் றெறிந்துய்ய
மூண்டவன்பிற் சிந்தை முடுகியே - ஆண்டவன்பொற்
பாதவம் போருகத்தின் பாவனைநீ யெக்காலும்
போதவம்போ காது புரி.**

பூண்ட வன் பொய்ப் பாசம் பொடுக்கு என்று எறிந்து உய்ய மூண்ட அன்பில் சிந்தை முடுகியே ஆண்டவன் பொன் பாத அம்போருகத்தின் பாவனை நீ எக்காலும் போது அவம் போகாது புரி.

**பொடுக்கு என்று-சட்டென்று; முடுகியே-தீவிரமாகி; பாத அம்போருகம் - பாத தாமரை.**

உன்னைப் பசுவா யிறுகத் தளைந்த அஞ்ஞான பாசத்தை ஞான வாளால் வெடுக் கென்றறுத்து விடுதலை பெற்றுய்ய வேண்டுதியேல், கிளர்ந்த வன்போடு மனம் விரைந் தெழுந்து, குருவடிவாயாண்ட விறைவன் பொற்றாமரை போலுந் திருவடித் தியானமே வாணாள் வீணாள் போகாது நிரந்தரமாச் செய்தி.

**வி-ரை:-** ஞானமே உண்மையாதலால் அஞ்ஞானம் பொய்யென்பார் பொய்ப்பாச மென்றார். உள்ளது உளதேயாய்ப் பேரின்ப மயமாயென்று

மொளிர்ந்து கொண்டிருக்கவும், இல்லாததொன் றுள்ளதுபோ லிடையிற் றோன்றிப் பிறவித்துன்பங்கள் பலவற்றுக்கு மேதுவாய் அதனை மறைத்தலால், நூல்கள் விதிக்குங் கன்மம் பத்தி முதலிய சகல சாதனமும் அவ்வில்லதை யில்லதேயா யொழிக்கவே பயன்படுவனவா மென்னுமுண்மை இதனாலறியக் கிடக்கின்றது. தைலதாரை போலிடைவிடா தெண்ணினாலன்றித் தியானம் வலி பெறாமையால் பாவனை யெக்காலுஞ் செய்ய வேண்டு மென்பதாம். என்னை ?

விட்டுக் கருதலி னாறுநெய் வீழ்ச்சிபோல்
விட்டிடா துன்னலே யுந்தீபற
விசேடமா முன்னவே யுந்தீபற

(உபதேசவுந்தியார்)

## 516. நிட்டையிலே தானழுந்தி நின்றநெஞ்சி லன்றிமற்
றெட்டுவதன் றுண்மை யிறைவடிவு - பட்டியாச்
சுற்றுவதுஞ் சோர்ந்தே லயிப்பதும்விட் டோர்குறிமேற்
பற்றுவதா நெஞ்சைப் பயிற்று.

நிட்டையிலே தான் அழுந்தி நின்ற நெஞ்சில் அன்றி மற்று எட்டுவது அன்று உண்மை இறை வடிவு பட்டியாச் சுற்றுவதும் சோர்ந்தே லயிப்பதும் விட்டு ஓர் குறிமேல் பற்றுவதா நெஞ்சைப் பயிற்று.

**பட்டியா-ஒருபடித்தாய் நில்லாமல்; ஓர்குறி-இறைவன்; பயிற்று-பழக்கு.**

## 517. ஊனமா மோக வுணர்ச்சியாற் புன்புலஞ்சே
ரேனையபற் றெல்லா மிகந்தொழிமின் - மோன
மனந்தானே சுத்த மணிலிங்கம் போற்றி
லனந்தசுக நல்கு மது.

ஊனம் ஆம் மோக உணர்ச்சியால் புன் புலம் சேர் ஏனைய பற்று எல்லாம் இகந்து ஒழிமின் மோன மனம் தானே சுத்த மணி லிங்கம் போற்றில் அனந்த சுகம் நல்கும் அது.

**இகந்து ஒழிமின்-விட்டு ஒழிக்கவும்; மணிலிங்கம்-ஜோதிலிங்கம்.**

## 518. என்றுமே நன்னாளா மென்றுமே நற்கோளாம்
என்றுமே மிக்கசுப யோகமாம் - என்றுமே
மங்கலறு தெய்வ வழிபாட்டுக் கேற்றதாம்
பொங்குசுப வோரைப் பொழுது.

என்றுமே நல் நாள் ஆம் என்றுமே நல் கோள் ஆம் என்றுமே மிக்க சுப யோகம் ஆம் என்றுமே மங்கல் அறு தெய்வ வழிபாட்டுக்கு ஏற்றது ஆம் பொங்கு சுப ஓரைப் பொழுது.

**மங்கல் அறு-பூரண விளக்கமான; சுப ஓரை-நல்ல நேரம்.**

நாள், கோள், யோகம், ஓரை என்னு மெந்தக்கால விசேடமும் உண்மை விளக்கமாந் தெய்வவழிபாட்டுக் காக்க மளிக்கும் நன்னாளும் நற்கோளும் சுபயோகமும் சுபவோரையுமேயாம்.

**வி-ரை:-** நாள், கோள் முதலாங் காலபேத மெதுவும் மனத்தின் ஆட்சிக் குட்பட்ட உலகியற் செயல்களுக் கூறு செய இயலுமே தவிர மனத்தின் கற்பனை கடந்த **கடவுள் வழிபாட்டுக்குச் சற்றுந் தடைசெய்ய வல்லதன் றென்பதாம்.** சம்பந்தர் கோளறு பதிகமும், நாளென் செயும் வினைதா னென்செயும் என்றாற் போன்ற பிற சான்றோர் பாடல்களும் இவ்விடத்தாராய்ந்து, அவனருள்வழிப்பட்ட வடியராற்றும் அச்செயல்களுக்கேயும், அது தடை செய்ய மாட்டாதேல் அவற்றினீங்கிய அவன் வழிபாட்டுக்கிடையூறிழைத்தல் அதற்குச் சற்று மெளிதன் றெனவறிக.

## 519. விசுவாச மொன்றில் விளைவரிதால் யார்க்கும்
விசுவாச மொன்றில் விளையிற் - சிசுவாம்
விசுவாசந் தன்னை விதிராதே தெய்வப்
பசுவாகக் காக்க பரிந்து.

விசுவாசம் ஒன்றில் விளைவு அரிதால் யார்க்கும் விசுவாசம் ஒன்றில் விளையின் சிசு ஆம் விசுவாசம் தன்னை விதிராதே தெய்வப் பசுவாகக் காக்க பரிந்து.

> **விளைவு அரிதால் - உண்டாவது அரிதாகையால்; விதிராதே-நீக்காதே; தெய்வப் பசு-காமதேனு; பரிந்து-பிரியத்தோடு.**

எதிலும் விசுவாச மேற்படல் மிகவரிதாம்; அவ்வாறு அது ஏற்படின், அதை விட்டகலாது தெய்வத் தன்மை கொண்ட சிசுவாகப் பரிந்து காக்க என்றார். சந்தேக விபரீதங்கள் எழுவது யார்க்கும் இயல் பெனினும், அவை எல்லையற்றன வாதலின் சித்தோபசாந்தம் அவையுள்ளவரை வாய்த்தல் துர்லபம். ஞான குருவிடத்து விளையும் விசுவாசமொன்றே சமுசாரக் கடலைத் தாண்டிச் செலுத்தும் மரக்கலமாம்.

# 5. மௌனோபாசனைத்திறன்

## 520. இதயத் தவிசி லிறையை யிருத்தி
மதியொத் தொருதன் மயமாப் - பதிய
இடையறா வுண்மை யியல்பான பூஜை
நடைபெறல்காண் மோன நலன்.

இதயத் தவிசில் இறையை இருத்தி மதி ஒத்து ஒரு தன்மயமாப் பதிய இடையறா உண்மை இயல்பு ஆன பூஜை நடைபெறல் காண் மோன நலன்.

> **தவிசில்-சிம்மாதனத்தில்.**

**521. பற்றொன் றிலாதவருட் பற்றான சுத்தமே**
**மற்றொன் றிலாத்தன் மவுனபதம் - கற்றென்றுந்**
**தானதுவே யாகத் தலைப்பட் டொழுகலே**
**மானதமெய்ப் பூஜை மதி.**

பற்று ஒன்று இலாத அருள் பற்று ஆன சுத்தமே மற்று ஒன்று இலாத் தன் மவுன பதம் கற்று என்றும் தான் அதுவே ஆகத் தலைப்பட்டு ஒழுகலே மானத மெய்ப் பூஜை மதி.

## 6. வாதமயற்றிறன்

**522. ஊழொ டுறுமுயற்சி யொன்றினூங் கேனையது**
**தாழப் பெரிதேறத் தக்கதெனக் - காழாய**
**சொற்போர் தொடுக்குமவர் தோற்ற வொடுக்கநிலை**
**சற்றுமே தாமறியா தார்.**

ஊழொடு உறு முயற்சி ஒன்றின் ஊங்கு ஏனையது தாழப் பெரிது ஏறத் தக்கது எனக் காழ் ஆய சொல் போர் தொடுக்கும் அவர் தோற்ற ஒடுக்க நிலை சற்றுமே தாம் அறியாதார்.

**உறு முயற்சி-மதியால் செய்யப்படும் முயற்சி; ஊங்கு-பெரியது, சிறந்தது; பெரிதேறத் தக்கது-பெரியதானது; காழாய-வலுத்த.**

**523. உள்ள பொருளை யுசாவியுளத் துய்த்துணர்ந்து**
**தெள்ளிதா மோனநிலை சேராதே - துள்ளிமதக்**
**கண்டனமும் மண்டனமுங் கண்டோத்தி யாகமட்டில்**
**விண்டெழுவார் சில்லோர் வியர்த்து.**

உள்ள பொருளை உசாவி உளத்து உய்த்து உணர்ந்து தெள்ளிதாம் மோனநிலை சேராதே துள்ளி மதக் கண்டனமும் மண்டனமும் கண்ட உத்தி ஆக மட்டில் விண்டு எழுவார் சில்லோர் வியர்த்து.

**உய்த்துணர்ந்து-ஆராய்ந்தறிந்து; தெள்ளிதாம்-தெளிவான; கண்ட உத்தியாக-வாய்ச்சொல்லாக; விண்டு-சொல்லி; சில்லோர்-சிலர்; வியர்த்து-வீணாக.**

**524. தருக்க மதியாற் றலையடித்துக் கொண்டவ்**
**வருக்கனை யாரு மறியார் - தருக்கமே**
**யுண்மை விளக்க மொழிகற் பனையாகக்**
**கண்ணைச் சுழற்றுவது காண்.**

தருக்க மதியால் தலை அடித்துக் கொண்டு அவ் அருக்கனை யாரும் அறியார் தருக்கமே உண்மை விளக்கம் ஒழி கற்பனையாகக் கண்ணைச் சுழற்றுவது காண்.

**தலையடித்துக்கொண்டு-ஈடுபட்டுக்கொண்டு; அவ் அருக்கன்-ஆன்மா; விளக்கம் ஒழி-மறைக்கின்ற.**

தருக்கத்தின் இயல்பே உண்மையை மறைப்பதென்றார். தருக்க மதி யென்னும் படுகுழியில் வீழ்ந்தோர், தம் கேட்டைத் தாமே யறியார். அதுவே கற்பனை யாவதால், கண்ணைச் சுழற்றும் மாயையாகும்; **தருக்க புத்தியில் சொரூபம் மறைபடுவதாம்.**

### 525. சொற்கள் பொருளைத் துலக்கற்கு நேர்மாறாப்
### புற்கென் றதனைப் புதைப்பனவாம் - சொற்களாற்
### றான்புதையுஞ் செம்பொருளே தானாத் துலங்கவுளத்
### தோம்புதிசொற் சிந்தை யொருங்கு.

சொற்கள் பொருளைத் துலக்கற்கு நேர்மாறாப் புற்கு என்று அதனைப் புதைப்பன ஆம் சொற்களால் தான் புதையும் செம்பொருளே தானாத் துலங்க உளத்து ஓம்புதி சொல் சிந்தை ஒருங்கு.

**துலக்கற்கு-விளக்குவதற்கு; புற்கு-ஒளி மங்கி; ஓம்புதி-காப்பாற்று; ஒருங்கு-முழுவதும்.**

சொல்லானது மெய்ப்பொருளை வெளிப்படுத்தாது, நேர் மாறாக அதைப் புதைப்பதாம். தானே சத்தாதலின், தனக்கன்னியமான சொல்லும், நினைவின் தூலவடிவாகிய மித்தையே ஆதலின் சொல்லடங்கி உள் நாடும் நெறியே மேம்பாடென்றார்.

### 526. சத்தங் களுக்குந் தருக்கங் களுக்குநின்
### புத்தி தனையடிமை போக்காதே - சுத்தக்
### கருத்தா லகம்புக்குக் கற்பனைதீர்ந் துன்மெய்
### யுருத்தனையோர்ந் துண்மை யுணர்.

சத்தங்களுக்கும் தருக்கங்களுக்கும் நின் புத்திதனை அடிமை போக்காதே சுத்தக் கருத்தால் அகம் புக்குக் கற்பனை தீர்ந்து உன் மெய் உருத்தனை ஓர்ந்து உண்மை உணர்.

**உருத்தனை-உருவை, ஆன்ம சொரூபத்தை.**

வாக் ஜாலங்களுக்கும் ஜயாபஜயமான தோஷங்கள் நிறைந்த தருக்கங்களுக்கும் தன் புத்தியை அடிமை யாக்கினவன் ஒருக்காலும் மனச்சாந்தியும் ஆத்மாநுபவமும் பெறான். நமது மெய்யுரு கற்பனையைக் கடந்து நிற்பதால், மனச் சேஷ்டை யாவும் அடங்குவதே நம் குறியாம்.

## 7. அளவையவலத்திறன்

### 527. அளப்பா னளவை யளக்கப் படுவ
### அளத்தலா மிந்த வனைத்தும் - உளத்தே
### எதன்விளக் கத்தா லிலங்குபவோ சச்சித்
### ததனை யிலக்களவை யாது.

அளப்பான் அளவை அளக்கப்படுவ அளத்தல் ஆம் இந்த அனைத்தும் உளத்தே எதன் விளக்கத்தால் இலங்குபவோ சத் சித்து அதனை இலக்கு அளவை யாது.

**அளப்பான்-மதிப்பிடுபவன்; அளவை-மதிப்பு;**
**இலங்குபவோ-விளங்குகின்றனவோ; இலக்கு-விளக்குகின்ற.**

அளப்பான், அளவை, அளக்கப்படுபொருள், அளத்தல் இவையனைத்தும் உளத்தில் நிகழ்வன. நித்ய வஸ்துவின் தன்மையால் இவை தோற்றுவனவன்றி தாமாகவே இயங்கும் சக்தி பெற்றனவல்ல. ஆதலின், இவைகட்கு ஆதாரமாக விளங்கும் அந்த நித்யவஸ்துவை எவ்வாறு, எதைக்கொண்டு அளவிடுவது?

**528. அளப்பா னுளனா மளவே யளவை**
**அளப்பனவு மெய்போன் றடைதல் - அளப்பான்**
**தனைத்தரிசித் துள்ளதனி லற்றா லவனோ**
**டனைத்துநசித் தொக்க விழும்.**

அளப்பான் உளனாம் அளவே அளவை அளப்பனவும் மெய்போன்று அடைதல் அளப்பான் தனைத் தரிசித்து உள்ள தனில் அற்றால் அவனோடு அனைத்தும் நசித்து ஒக்க விழும்.

**உளனாம் அளவே-உள்ளவரையில் தான்; அற்றால்-அழிந்தால்.**

அகண்டான்ம சொரூபத்துக்கயலாகப் பிரமாதாவொருவன் யானெனத் தனித்துளதாகக் கருது மளவுமே பிரமாணப் பிரமேயங்களும் அவன் சுட்டறிவுக் குண்மைபோன் றெதிர்ப்படுதல். அவன்றான் புறம்போமறிவு உண்மடங்கி யானாரெனத் தன்னை நோக்கி, தனக்கென் றோருண்மை தனித்தின்மையின் ''யான்யா'' னென்றிதயத்தி லிடையறாதிருந் தொளிரும் தன் பரமார்த்த வுண்மையா மத்துவிதான்ம சொரூபத்தில் அதன்மயமா யற்றொழிந்தால், அந்நிலையே, அவனொடவையும் அறவே யுண்மையற்று முற்றவழிந்தொழியும்.

**வி-ரை:-** உண்மை யுணருங்கால் அளப்பானே அபத்தமாய் முடிதலால் அவனா லளக்கப்படுவனவும் அங்கே யபத்தமா மென்பது கருத்து. அபத்தம் - பொய். ஆன்மாவே உண்மை விழி யாதலால் உண்மையளவாம் அக்கண்கொண்டு தன்னையே கண்கூடாகக் கண்டமைகலாதான் ஜடவுடலைச் சார்ந்த கண் முதலான கோளகங்களும் மாயிகமா மனவுணர்வுமாகிய பிறவளவைகளைக் கொண்டு அயல்களை அவதியின்றி யளந்து கொண்டே போதல் விழலுக்கிறைத்தல் போன்று வீண் என்பதாம். மாயிகம் - உலகம்.

## 8. பரோக்கஞானத்திறன்

**529. மத்தமன வாதனைதா மாண்டவப ரோக்கான்ம**
**சுத்தஞா னத்தாற் றொலைவதலால் - மெய்த்தாபம்**
**கானலினீ ராலே கழியினுயிர்த் தாபமும்பொய்**
**ஆனபரோக் கத்தா லறும்.**

மத்த மன வாதனை தாம் மாண்ட அபரோக்க ஆன்ம சுத்த ஞானத்தால் தொலைவது அலால் மெய்த் தாபம் கானலின் நீராலே கழியின் உயிர்த் தாபமும் பொய் ஆன பரோக்கத்தால் அறும்.

**தொலைவதலால்-நீங்குமே அல்லால்; கழியின்-நீங்கினால்; உயிர்த்தாபம்-ஜீவர்களின் தவிப்பு (மோக்ஷ வேட்கை).**

**530. சுத்தபர மான்ம சொரூபாநு பூதியாம்**
**அத்துவித ஞானமப ரோக்கமாப் - பொய்த்த**
**பரோக்கவிசே டத்தாற் படைத்துமொழி ஞானம்**
**இராக்கதநல் லோரென்ற லேய்த்து.**

சுத்த பரமான்ம சொரூப அநுபூதி ஆம் அத்துவித ஞானம் அபரோக்கமாப் பொய்த்த பரோக்க விசேடத்தால் படைத்து மொழி ஞானம் இராக்கத நல்லோர் என்றல் ஏய்த்து.

**அபரோக்கமா-பிரத்யக்ஷமாயிருக்க; விசேடத்தால்-திறத்தால்; இராக்கத-ராக்ஷஸன்; ஏய்த்தல்-சமமாக ஒத்தல், பொருந்தச் சொல்லல்.**

**531. உள்ளமுறு முண்மை யுசாவி லுதிப்பதாம்**
**கள்ளமயல் போக்குங் கனஞானம் - தெள்ளுகலை**
**ஏட்டுச் சரக்குசா வின்னடிசிற் காகாத**
**ஏட்டுச் சுரைக்காயென் றெண்.**

உள்ளம் உறும் உண்மை உசாவில் உதிப்பது ஆம் கள்ள மயல் போக்கும் கன ஞானம் தெள்ளு கலை ஏட்டுச் சரக்கு உசா இன் அடிசிற்கு ஆகாத ஏட்டுச் சுரைக்காய் என்று எண்.

**தெள்ளு-தெளிந்த; அடிசில்-சமைக்கப்படுவது, உணவு.**

**532. ஓவியமுற் றோங்கெரியா லுண்டிசமைத் துண்டதனால்**
**ஆவிபசி யாறி யமையுமோ - மேவியகம்**
**ஓய்ஞானத் தல்லாற்றுன் போய்ந்தான்ம சாந்திசுகம்**
**வாய்ஞானத் தில்லை மதி.**

ஓவியம் உற்று ஓங்கு எரியால் உண்டி சமைத்து உண்டதனால் ஆவி பசி ஆறி அமையுமோ மேவி அகம் ஓய் ஞானத்து அல்லால் துன்பு ஓய்ந்து ஆன்ம சாந்தி சுகம் வாய் ஞானத்து இல்லை மதி.

**ஓவியம் உற்று-சித்திரத்திற் காணப்படும்; எரி-நெருப்பு; ஆவி-உயிர், ஜீவன்; அகம் ஓய்-அகங்காரம் ஓய்ந்து; அல்லால்-அல்லாமல்; வாய் ஞானத்து-பரோக்ஷ (வாசா) ஞானத்தில்.**

**533. மதியையொளிர் வித்தம் மதிக்குளொளிர் தெய்வப்**
**பதிசொருப மாகப் பயிலும் - இதயமுறு**
**போதத்தா லன்றிப் புரணபர மான்மசுகம்**
**வாதத்தா லென்றும் வராது.**

மதியை ஒளிர்வித்து அம் மதிக்குள் ஒளிர் தெய்வப் பதி சொருபம் ஆகப் பயிலும் இதயம் உறு போதத்தால் அன்றிப் புரண பரம ஆன்ம சுகம் வாதத்தால் என்றும் வராது.

**பயிலும்-விளங்கும்.**

## 9. ஏகசீவத்திறன்

**534. ஏகனே சீவ னெனக்கொண் டிதயத்துள்**
**ஊகமுள தீர னுறைத்திடுக - ஊகம்**
**மலராத மாந்தர் மனங்கொள்ளச் சீவர்**
**பலராவ ரென்னவுடன் பட்டு.**

ஏகனே சீவன் எனக் கொண்டு இதயத்து உள் ஊகம் உள தீரன் உறைத்திடுக ஊகம் மலராத மாந்தர் மனம் கொள்ளச் சீவர் பலர் ஆவர் என்ன உடன்பட்டு.

**ஊகம்-யூகம்; உறைத்திடுக-நிச்சயப்படுத்திக்கொள்க; என்ன-என்று சொல்லப்பட்டது; உடன்பட்டு-ஒத்துக்கொண்டு.**

**535. பிறந்தார்கள் யாரோ பிறப்புவலை பீறிச்**
**சிறந்தார்கள் யாரோ சிறக்க - அறிந்தீமின்**
**ஊனொன்றி நின்றா ரொழிந்தா ருளரேயோ**
**யானொன் றெழாஅ விடத்து.**

பிறந்தார்கள் யாரோ பிறப்பு வலை பீறிச் சிறந்தார்கள் யாரோ சிறக்க அறிந்து ஈமின் ஊன் ஒன்றி நின்றார் ஒழிந்தார் உளரேயோ யான் ஒன்று எழாஅ இடத்து.

**பீறி-கிழித்துக்கொண்டு; ஈமின்-பதில் கொடுங்கள்.**

## 10. அறிவறியாமைத்திறன்

**536. ஒன்றன்மே லொன்றை யுறுதியென மேன்மேலும்**
**சென்றோடி நாடுஞ் செகத்தீரே - ஒன்றாய**
**எப்பொருளை யாய்ந்தால்வே றெப்பொருளு மின்றாமோ**
**அப்பொருளை யாய்த லறிவு.**

ஒன்றன் மேல் ஒன்றை உறுதி என மேல்மேலும் சென்று ஓடி நாடும் செகத்தீரே ஒன்று ஆய எப்பொருளை ஆய்ந்தால் வேறு எப்பொருளும் இன்று ஆமோ அப்பொருளை ஆய்தல் அறிவு.

**நாடும்-விரும்பும், ஆராயும்; ஒன்றாய-ஒன்றாகிய.**

**537. நுட்பப் பொருளை நுனித்துணர வல்லார்க்குத்**
**திட்பப் பொருளுணர்வாற் சேர்பயனென் - கட்புலனால்**
**ஆயு மறிவி னழிவிலா வுட்புலனால்**
**ஆயு மறிவே தலை.**

நுட்பப் பொருளை நுனித்து உணர வல்லார்க்குத் திட்பப் பொருள் உணர்வால் சேர் பயன் என் கண் புலனால் ஆயும் அறிவின் அழிவு இலா உள் புலனால் ஆயும் அறிவே தலை.

**நுட்ப-சூக்ஷ்ம; நுனித்து-கூர்ந்து விசாரித்து; திட்ப-ஸ்தூல; அறிவின்-அறிவைவிட ; உள் புலனால்-உண்முக நோக்கால், ஆத்ம விசாரத்தால்; தலை-சிறந்தது.**

**538. ஆன்ம சொரூபத்தை யாற்றவுணர்ந் தன்னியத்தைச்**
**சூனியமாக் கையிகந்து சோர்தலே - ஞானமாம்**
**காலமொடு தேயங் கடந்தவுமற் றோர்கருத்தும்**
**சாலவுணர் வன்று சதுர்.**

ஆன்ம சொரூபத்தை ஆற்ற உணர்ந்து அன்னியத்தைச் சூனியமாகக் கை இகந்து சோர்தலே ஞானம் ஆம் காலமொடு தேயம் கடந்தவும் மற்று ஓர் கருத்தும் சால உணர்வு அன்று சதுர்.

**கை இகந்து சோர்தல்-கைவிட்டு ஒழித்தல்; தேயம்-தேசம்; சால-சிறந்த; சதுர்-சாமர்த்தியம் வாய்ந்தது, தக்கது.**

**539. சத்தி விலாசமெதுஞ் சத்தனா மான்மசொரூ**
**பத்தினும்வே றல்லாமெய்ப் பான்மையாற் - சித்துலகை**
**வேறுபோ லெண்ணி வெருளுமனப் பான்மையே**
**மாறுபா டாம்பொய்ம் மயல்.**

சத்தி விலாசம் எதும் சத்தன் ஆம் ஆன்ம சொரூபத்தினும் வேறு அல்லா மெய்ப் பான்மையால் சித்து உலகை வேறு போல் எண்ணி வெருளும் மனப் பான்மையே மாறுபாடு ஆம் பொய்ம் மயல்.

**எதும்-எதுவும்; சத்தன்-சிவன்; சித்து-அறிவு; வெருளும்-கலங்கும்; பொய்ம்மயல்-பொய்யான மாயை.**

சிச்சத்தி விலாசமாகக் காணப்படும் மாட்சியாதும் அச்சத்திக் குடையோனான சிவத்தினுண்மையாம் ஆன்ம சொரூபத்தினும் அன்னியமாக நிகழாத மெய்ப் பான்மையால், அறிவு மாத்திரமா முலகை அவ்வறிவே வடிவாகவுடைய ஆன்மாவாந் தனக்கயலாக நினைந்து கலங்கும் மனப்பான்மையே, தனக்குப் பகையாயூறு செய்யும் பொய்ம் மாயையாம்.

**540. உடலேநா னென்னு முணர்வே யொருவற்**
**கடல்சேரு மோக வவிச்சை - விடலருமெய்**
**ஆன்மசொரூ பத்தை யகன்றின்றஃ தென்னுமதே**
**தான்மருவு ஞானச் சதுர்.**

உடலே நான் என்னும் உணர்வே ஒருவற்கு அடல் சேரும் மோக அவிச்சை விடல் அரு மெய் ஆன்ம சொரூபத்தை அகன்று இன்று அஃது என்னும் அதே தான் மருவும் ஞானச் சதுர்.

**அடல்-எதிர்ப்பு, பகை; அவிச்சை-அவித்தை; விடல் அரு-விடமுடியாத; மருவும்-சேரும்.**

**541. அற்பமதி மாந்த ரபின்னாகா யத்தைவெறுங்**
**கற்பனையாற் பல்வகையாக் காண்டல்போற் - சொற்பால்**
**அநேகமாக் காண்ட லகண்டேகான் மாவை**
**விநோதமா மாயை விளைவு.**

அற்ப மதி மாந்தர் அபின்ன ஆகாயத்தை வெறும் கற்பனையால் பல்வகையாக் காண்டல் போல் சொல் பால் அநேகமாக் காண்டல் அகண்ட ஏக ஆன்மாவை விநோதம் ஆம் மாயை விளைவு.

**சொற்பால்-சொற்படுத்தி.**

**542. சூதலா வான்ம சொரூபமா மெய்யைப்பல்**
**பேதமாக் காண்டலே பேதைமையாம் - ஆதலால்**
**எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு.**

சூது அலா ஆன்ம சொரூபம் ஆம் மெய்யைப் பல் பேதமாக் காண்டலே பேதைமை ஆம் ஆதலால் எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு.

**சூது அலா-சூது அல்லாத.**

**543. பற்பலவாத் தோற்றும் பகிரண்ட மென்றாலும்**
**உட்பொருளா மெய்ப்பொருளோ வொன்றேகாண் - சுற்றும்**
**பெருங்குடஞ்சேர் செக்கின்கட் பெய்தபல வெள்ளுட்**
**பொருந்தியநல் லெண்ணெயே போன்று.**

பற்பலவாத் தோற்றும் பகிர் அண்டம் என்றாலும் உள் பொருள் ஆம் மெய்ப் பொருளோ ஒன்றே காண் சுற்றும் பெரும் குடம் சேர் செக்கின்கண் பெய்த பல எள் உள் பொருந்திய நல் எண்ணெயே போன்று.

**544. இரண்டறுதன் மெய்யோ டியைந்தவுப சாந்தம்
திரண்டவெறு முண்மைத் தெளிவால் - இரண்டுற்
றுணர்தலுண ராமையென வுண்மையிலொன் றின்றென்
றுணர்தலே யுண்மை யுணர்வு.**

இரண்டு அறு தன் மெய்யோடு இயைந்த உப சாந்தம் திரண்ட வெறும் உண்மைத் தெளிவால் இரண்டு உற்று உணர்தல் உணராமை என உண்மையில் ஒன்று இன்று என்று உணர்தலே உண்மை உணர்வு.

**இயைந்த உபசாந்தம்-கலந்த சாந்தி.**

**545. உன்னு முணர்வோ டுணராமை யென்றிரண்டு
துன்ன லயல்விடயச் சுட்டிடமே - தன்னியல்பால்
உற்றொளிரு மெய்யி லுறாமையா லன்னவிரண்
டற்றதுவே யுண்மை யறிவு.**

உன்னும் உணர்வோடு உணராமை என்று இரண்டு துன்னல் அயல் விடயச் சுட்டு இடமே தன் இயல்பால் உற்று ஒளிரும் மெய்யில் உறாமையால் அன்ன இரண்டு அற்றதுவே உண்மை அறிவு.

**உன்னும்-எண்ணுகின்ற; துன்னல்-இருத்தல்; சுட்டிடமே-எதிரிட்டறியும் அறிவின் (சுட்டறிவின்) இடத்தில் தான்; உற்று ஒளிரும்-இருந்து விளங்கும்; உறாமையால்-இல்லாததால்; அன்ன இரண்டும்-அவ்விரண்டும் (உணர்வதும் உணராமையும்).**

**546. தம்மை யறிகவெனச் சாற்றுவார் சிற்சிலவர்
தம்மை யறியாதார் தாமுளரோ - தம்மை
அறியாமை போலே யறிவுடைமை தானும்
அறியாமை யன்றோ வறை.**

தம்மை அறிக எனச் சாற்றுவார் சிற்சிலவர் தம்மை அறியாதார் தாம் உளரோ தம்மை அறியாமை போலே அறிவு உடைமை தானும் அறியாமை அன்றோ அறை.

**547. அறிவாக நின்றா லறியாமை யில்லை
அறியாமை பொய்;மெய் யறிவே - அறியி
லறியாமை யென்ப தறியாமை சுத்த
வறிவே சொரூப மறி.**

அறிவு ஆக நின்றால் அறியாமை இல்லை அறியாமை பொய்; மெய் அறிவே அறியில் அறியாமை என்பது அறியாமை சுத்த அறிவே சொரூபம் அறி.

**அறியில்-அறிந்தால்; அறிவே மெய் எனக் கூட்டுக.**

# 11. மருட்டிறன்

## 548. அன்னியத்தைத் தானறிவ தாநினைக்குங் காறுமே
## என்னியல்பை யானறியே னென்னுமயல் - தன்னியல்பின்
## நித்தாப ரோக்கத்தா னீங்கினா லந்நினைவு
## பொய்த்தொழியு மந்தப் புலம்பு.

அன்னியத்தைத் தான் அறிவதா நினைக்கும் காறுமே என் இயல்பை யான் அறியேன் என்னும் மயல் தன் இயல்பின் நித்த அபரோக்கத்தால் நீங்கினால் அந்நினைவு பொய்த்து ஒழியும் அந்தப் புலம்பு.

## 549. அன்னியமொன் றின்றி யனைத்துமே தானாகும்
## தன்னியல்பாம் பூன்றத் தலைப்பாட்டால் - என்னியல்பே
## தென்னத்தன் னுள்ளத் தியையா துணர்வுறூஉம்
## பின்னவுணர் வெல்லாம் பிழை.

அன்னியம் ஒன்று இன்றி அனைத்துமே தான் ஆகும் தன் இயல்பாம் பூன்றத் தலைப்பாட்டால் என் இயல்பு ஏது என்னத் தன் உள்ளத்து இயையாது உணர்வு உறூஉம் பின்ன உணர்வு எல்லாம் பிழை.

**பூன்றத் தலைப்பாடு-பரிபூரண ஐக்கியம்; என்ன-என்று விசாரித்து; இயையாது-நிட்டையுறாது.**

## 550. மனவெளியின் கண்ணம் மனக்கற் பனையாற்
## கனவெனவந் தெய்துவதோர் காட்சி - எனவே
## திடங்கொண்டு சுட்டறிவைச் செற்றுவிட யாசை
## மடங்கொன்று நிற்றலே மாண்பு.

மனவெளியின் கண் அம் மனக் கற்பனையால் கனவு என வந்து எய்துவது ஓர் காட்சி எனவே திடம் கொண்டு சுட்டு அறிவைச் செற்று விடய ஆசை மடம் கொன்று நிற்றலே மாண்பு.

**ஓர் காட்சி-இந்த நனவுக் காட்சி; செற்று-அழித்து.**

## 551. உள்ளமாஞ் செம்பொருளை யோர்த்துணராப் பேதையரே
## கள்ளமா யத்துட் கலங்குவார் - வெள்ளமா
## விஞ்சுபே ரின்ப வியன்பரந்தேர்ந் தொட்பங்கூர்
## விஞ்சையார் நெஞ்சமஞ் சார்.

உள்ளம் ஆம் செம்பொருளை ஓர்த்து உணராப் பேதையரே கள்ள மாயத்துள் கலங்குவார் வெள்ளமா விஞ்சு பேர் இன்ப வியன் பரம் தேர்ந்து ஒட்பம் கூர் விஞ்சையார் நெஞ்சம் அஞ்சார்.

**ஓர்த்து-ஆராய்ந்து; விஞ்சு-மிஞ்சும்; வியன்-ஆகாயம் போன்று; ஒட்பங்கூர்-அறிவொளி பெற்ற; விஞ்சையார்-ஞானியர்.**

ஞானமே சமுசாரபயத்துக்குற்ற மருந்தாகும். உள்ளமாம் சித்தை ஓர்ந்துணர்ந்தவர், கேவலம் அந்த ஞானத்தினால் அச்சம் தீர்ந்தவராவர். அத்து விதத்தில் அன்னிய மின்மையின், அச்சமின்மையாம். அவ்வாறு உணராத பேதையர் எவ்வகையேனும் கள்ள மாயத்துள் கலங்குபவராவர்.

**552. இருமையிலா வொன்றா விருந்தொளிரு மெய்யின்**
**ஒருமையுணர் வற்றுழலுன் மத்தர் - கருமைசேர்**
**மாலைக்கண் ணாலே மயங்கும்பல் பேதத்தர்**
**பாலைக்கண் ணீர்பலகாண் பார்.**

இருமை இலா ஒன்றா இருந்து ஒளிரும் மெய்யின் ஒருமை உணர்வு அற்று உழல் உன்மத்தர் கருமை சேர் மாலைக் கண்ணாலே மயங்கும் பல் பேதத்தர் பாலைக்கண் நீர் பல காண்பார்.

**மாலைக்கண்-காமாலைக்கண்; பல்பேதத்தர்-பலபேதங்களைக் காண்பவர்; பாலைக்கண்-பாலைவனத்தில்.**

துவித நோக்குடையோர் திரிபுடிகளால் பலவாறு அவலப்படுவது திண்ணம்.அது கண்ணின் குற்றமே யன்றி, காட்சி பிரிவில்லாததாம். காமாலை நோயில் வருந்து பவர் உலகை வண்ணம் மாறிக் காணலொத்து, அவர் பொய்த்துயரால் கண்ணீர் உகுப்பது திண்ணமென்றார்.

## 12. நனாக்கனாத்திறன்

**553. ஞானநாட் டத்தோர் நனாக்கனா நாடுங்கால்**
**ஊனத் தொருங்கொப்பா வோதுவார் - மான**
**நனாவுலகு தானு நழுவுவதே யன்றோ**
**கனாவுலகு போலக் கழன்று.**

ஞான நாட்டத்தோர் நனாக்கனா நாடுங்கால் ஊனத்து ஒருங்கு ஒப்பா ஓதுவார் மான நனா உலகு தானும் நழுவுவதே அன்றோ கனா உலகு போலக் கழன்று.

**ஞான நாட்டத்தோர்-அறிவுக்கண் உடையோர்; ஊனத்து-குறைபாட்டில்; ஒருங்கு-ஒரே மாதிரி; ஒப்பா-சமமாக.**

**554. கனவிற்றாஞ் செய்ததாக் கண்டவினை யாதும்**
**நனவிற்பற் றாதே நழுவும் - நனவெனும்புன்**
**ஜீவபோ தக்கலக்கிற் செய்ததுமாங் கேசொருப**
**தேவபோ தத்தொழியுந் தீர்ந்து.**

கனவில் தாம் செய்ததாக் கண்ட வினை யாதும் நனவில் பற்றாதே நழுவும் நனவு எனும் புன் ஜீவ போதக் கலக்கில் செய்ததும் ஆங்கே சொருப தேவ போதத்து ஒழியும் தீர்ந்து.

கனவில் புருடன் புரிந்த வினைகள் யாவும் நனவில் தொடராது தீரும். ஒருவன் கனவின் சம்பவங்களை நனவில் தன் பல்லுறவுகளுக்கு ஆதாரமாகக் கொண்டொழுகுவனேல் அஃது நகைப்புக் கிடனாம். அதுவே போல் நனவென்ற ஜீவ போதத்தில் புரிந்த வினைகள் யாவும் சொரூப ஞானத்தில் பற்றாது தீர்ந்தொழிவனவாம்.

## 555. கனாநனா வென்ப கலங்குற்ற சிந்தை
**தனாது படைப்பென்ப சான்றோர் - கனாநனா**
**என்னு மிரண்டிடத்து மெண்ணமொடு பேருருத்தாம்**
**துன்னலொருங் கென்றே துணி.**

கனா நனா என்ப கலங்கு உற்ற சிந்தை தனாது படைப்பு என்ப சான்றோர் கனா நனா என்னும் இரண்டு இடத்தும் எண்ணமொடு பேர் உருத்தாம் துன்னல் ஒருங்கு என்றே துணி.

## 556. அகந்தை விரிந்த தரைகுறையா மென்றால்
**முகந்தகனாத் தோற்ற முயங்கும் - அகந்தைதான்**
**முற்ற விரிந்தான் முயங்கு மவிச்சைசேர்**
**வுற்றநனாத் தோற்ற வுலகு.**

அகந்தை விரிந்தது அரைகுறை ஆம் என்றால் முகந்த கனாத் தோற்றம் முயங்கும் அகந்தைதான் முற்ற விரிந்தால் முயங்கும் அவிச்சை சேர்வுற்ற நனாத் தோற்ற உலகு.

**முகந்த-அடைந்த.**

## 557. நனவகத்துப் போலக் கனவகத்துஞ் சேர
**மனம்பிறிதோர் தேக மடுக்கும் - நனவுக்**
**கனுகுணமாங் கன்ம மழிவுற்று மற்றைக்**
**கனவணுகுங் கன்மமுற்றக் கால்.**

நனவு அகத்துப் போலக் கனவு அகத்தும் சேர மனம் பிறிது ஓர் தேகம் அடுக்கும் நனவுக்கு அனுகுணம் ஆம் கன்மம் அழிவு உற்று மற்றைக் கனவு அணுகும் கன்மம் உற்றக் கால்.

**நனவகத்து-நனவில்; கனவகத்து-கனவில்; சேர-ஒழுங்காக;**
**அடுக்கும்-எடுத்துக்கொள்ளும்; அனுகுணம்-ஏற்படக்காரணமாக உள்ளது;**
**உற்றக்கால்-வந்து அடையும்போது.**

**558. கனவுடலான் மாதைக் கலவிசெயக் கண்டோன்**
**நனவுடலின் விந்து நழுவல் - வினவிற்**
**கனவுடலி னின்று கருத்துத்தா னேனை**
**நனவுடலிற் பாயும் விசை.**

கனவு உடலால் மாதைக் கலவி செயக் கண்டோன் நனவு உடலின் விந்து நழுவல் வினவில் கனவு உடலினின்று கருத்துத்தான் ஏனை நனவு உடலில் பாயும் விசை.

**விசை-(அபிமான) வேகம்.**

**559. தோன்றுங் கனவுவெறுஞ் சிந்தைச் சுழற்சியெனில்**
**ஏன்றநனா வும்மவ் வியல்பிற்றே - ஏன்ற**
**நனவுண்மை யென்ன நடைபெறலக் காலே**
**கனவுண்மை தானு மது.**

தோன்றும் கனவு வெறும் சிந்தைச் சுழற்சி எனில் ஏன்ற நனாவும் அவ் இயல்பிற்றே ஏன்ற நனவு உண்மை என்ன நடைபெறல் அக்காலே கனவு உண்மை தானும் அது.

**அவ்வியல்பிற்றே-அவ்வியல்புடையதே; ஏன்ற-வந்தடைந்துள்ள; அக்காலே-அப்போது.**

**560. வினாவிடுகேள் விக்கு விடையிறுக்கு மாற்றாற்**
**கனாநொடியாத் தோன்றிக் கழிய - நனாநெடிதா**
**மன்னலாக் கூறுமறு மாற்ற மனமாயைத்**
**துன்னலாற் போந்தவினைச் சூது.**

வினாவிடு கேள்விக்கு விடை இறுக்கும் ஆற்றால் கனா நொடியாத் தோன்றிக் கழிய நனா நெடிதா மன்னலாக் கூறும் மறுமாற்றம் மனமாயைத் துன்னலால் போந்த வினைச் சூது.

**வினாவிடு-கேட்கின்ற; மன்னலா-இருப்பதாக; மறுமாற்றம்-பதில்; துன்னலால்-வந்ததால்; போந்த-உண்டான.**

**561. கற்பகா லத்தைக் கணப்பொழுதா வோர்கணத்தைக்**
**கற்பமாக் காட்டிக் கலக்குவதே - தப்பாம்**
**இருட்டுவளர் சூனியத்துள் யாவையுங்கற் பித்து**
**மருட்டலுறு மாயமன மாண்பு.**

கல்ப காலத்தைக் கணப் பொழுதா ஓர் கணத்தைக் கல்பமாக் காட்டிக் கலக்குவதே தப்பு ஆம் இருட்டு வளர் சூனியத்து உள் யாவையும் கற்பித்து மருட்டல் உறும் மாய மன மாண்பு.

**மருட்டல் உறும்-மயக்கும்; மனமாண்பு-மனச்சூது.**

**562. காரணமெய்ஞ் ஞானவொளிக் கண்ணான தன்சொருபப்**
**பூரணமே யென்றுமெண்ணும் புந்தியால் - காரணவுங்**
**கற்பனா பேதங் கலக்குமகங் காரமுறு**
**சொப்பனா வத்தை துரத்து.**

காரண மெய்ஞ்ஞான ஒளிக் கண்ணான தன் சொருபப் பூரணமே என்றும் எண்ணும் புந்தியால் கார் அணவும் கற்பனா பேதம் கலக்கும் அகங்காரம் உறு சொப்பன அவத்தை துரத்து.

**கார் அணவும்-அஞ்ஞானம் சேரும்; துரத்து-போக்கு, நீக்கு.**

**563. கனவுலகு காணுந்தற் காணாவஞ் ஞானம்**
**எனுமயலார் தன்னாய் விசைந்து - னைமாம்**
**மனோதர்ம மாய்ந்த மனமேமெய்ஞ் ஞான**
**கனோதயமா மீசனடிக் கண்.**

கனவு உலகு காணும் தன் காணா அஞ்ஞானம் எனும் மயல் ஆர் தன் ஆய்வு இசைந்து பினம் ஆம் மனோதர்மம் மாய்ந்த மனமே மெய்ஞ்ஞான கன உதயம் ஆம் ஈசன் அடிக் கண்.

**தன்-தன்னை; மயல் ஆர்-மயக்கம் பொருந்திய; தன் ஆய்வு-தன் இயல்பின் ஆராய்வு; இசைந்து-ஈடுபட்டு; னைமாம்-பின்னமாம்; கண்-ஞானம்.**

**564. சொப்பனமா யத்துட் சுழன்றுசுழன் றெய்த்துப்பின்**
**பொய்ப்படவவ் வெல்லாம் புலம்புறவே - மெய்ப்படமென்**
**பாயலிடை முன்னாட் படுத்தமக னாமசங்க**
**னாயுணர்வு தன்மெய் யறிவு.**

சொப்பன மாயத்துள் சுழன்று சுழன்று எய்த்துப் பின் பொய்ப்பட அவ் எல்லாம் புலம்பு உறவே மெய்ப்பட மென் பாயல் இடை முன் நாள் படுத்த மகன் ஆம் அசங்கன் ஆய் உணர்வு தன் மெய் அறிவு.

**எய்த்து-துன்புற்று; புலம்புறவே-கழியவே; மெய்ப்பட-உண்மையாகுமாறு; மென் பாயல் இடை-மென்மையான படுக்கையில்; உணர்வு-உணர்வடைதல்.**

தானன்றித் திரிபுடிகளின்மையெனவறிந்தால், அவையாவும் தனக்கன்னியமாய், கேவலம் மித்தையாய்க் கழன்று ஆதாரமின்றிப் புலம்புறுவனவென்றார். அத்திரிபுடிகளின் சங்கமின்றி மெய்ஞ்ஞானத்தில் சயனிக்கும் சுகரூபமான அறிவே உணர்வின் உண்மை.

**565. கனாவி லொருவன் கருத்தறவே மாழ்கி**
**இனாதவெம் பாலைவனத் தேங்கித் - தனாதுபதி**
**தேடியடைந் தாங்கே தெளிதல் சமுசாரத்**
**தூடுழன்று முத்தி யுறல்.**

கனாவில் ஒருவன் கருத்து அறவே மாழ்கி இனாத வெம் பாலைவனத்து ஏங்கித் தனாது பதி தேடி அடைந்து ஆங்கே தெளிதல் சமுசாரத்து ஊடு உழன்று முத்தி உறல்.

**கருத்து-புத்தி; மாழ்கி-மயங்கி; இனாத-பொல்லாத; வெம்-கொடிய; தனாதுபதி-தனது ஊர்; தெளிதல்-விழித்தல்; ஊடு-வழியே; உழன்று-வருந்தி; உறல்-அடைதல்.**

சமுசாரத்தி லுழன்று முத்தி பெறல், கனவிலொருவன் இனிக்காத கொடும் பாலை வனத்திலேங்கித் துயருற்று இறுதியில் தன்பதியைத் தேடிச் சுகமாய் அடைதலை யொக்கு மென்றார். முத்தியும் கற்பனையே. சொரூப மொன்றே யென்று முளதென்பது சூசனை.

**(9)** ***தன்னை மறந்து தனுவேதா னாவெண்ணி***
***யெண்ணில் பிறவி யெடுத்திறுதி - தன்னை***
***யுணர்ந்துதா னாத லுலகசஞ் சாரக்***
***கனவின் விழித்தலே காண். - பகவான்***

தன்னை மறந்து தனுவே தானா எண்ணி எண் இல் பிறவி எடுத்து இறுதி தன்னை உணர்ந்து தான் ஆதல் உலக சஞ்சாரக் கனவின் விழித்தலே காண்.

## 13. அவத்தாபேதத்திறன்

**566. மீதலமா நின்ற விசும்பை விடுத்திதர**
**பூதமெலா மெய்யாப் பொருந்துமேல் - ஏதமறும்**
**அத்துரீ யத்துக் கயலா நனாமுதன்மூன்**
**றொத்தேமெய் யாக வுறும்.**

மீ தலமா நின்ற விசும்பை விடுத்து இதர பூதம் எலாம் மெய்யாப் பொருந்துமேல் ஏதம் அறும் அத் துரீயத்துக்கு அயலா நனா முதல் மூன்று ஒத்தே மெய்யாக உறும்.

**மீதலமா நின்ற-அகன்ற இடமாக இருக்கின்ற; ஏதம்-குற்றம்; இதர பூதம்-மற்ற நான்கு (மண்,நீர்,நெருப்பு,காற்று)பூதங்கள்.**

**567. சுழுத்திமயல் பீறிச் சுடர்துரியந் தோய்ந்தங்**
**கழுத்தமுற நிற்கலா தார்க்கே - கொழுத்த**
**முதன்மூன் றவத்தை முயக்கமொடு நாலைந்**
**ததன்வேறு பாடு மறி.**

சுழுத்தி மயல் பீறிச் சுடர் துரியம் தோய்ந்து அங்கு அழுத்தம் உற நிற்கலாதார்க்கே கொழுத்த முதல் மூன்று அவத்தை முயக்கமொடு நாலு ஐந்து அதன் வேறுபாடும் அறி.

**பீறி-கிழித்துக்கொண்டு; அழுத்தம் உற-திடமாக; நிற்கலாதார்க்கே-நிற்கமுடியாதவர்களுக்கே; முயக்கம்-சம்பந்தம்.**

## 568. அவத்தையபி மானியுள னாங்காறு மேபல்
## அவத்தைபுல னாத லறிவாய் - பவித்த
## அவத்தையபி மானி யகத்தையாய்ந் தற்றால்
## அவத்தைவிகற் பங்க ளறும்.

அவத்தை அபிமானி உளன் ஆம் காறுமே பல் அவத்தை புலன் ஆதல் அறிவாய் பவித்த அவத்தை அபிமானி அகத்தை ஆய்ந்து அற்றால் அவத்தை விகற்பங்கள் அறும்.

**உளன் ஆம் காறுமே-உள்ள வரையிலே; பவித்த-உற்பவித்த.**

''அவத்தைகள் புலப்படக் காண்போன் நான்'' என அவற்றை யபிமானிக்குந் தானொருவன் பூரணப் பொருளுக்கயலாக உள்ளோனா யுணரு மளவுமே, அவத்தைகள் பலவும் அவனுக் கறிபடுதலாம். மோகத்தால் யானென்றெழுந்த அவ்வவத்தை யபிமானி ''யானா'' ரென வுண்முகப்பட்டு அவ்வகப்பொருளை யாராய்ந்து அவ்வாராய்ச்சியி லழிந்துபட்டால், அவனோடு அதுவரையில் அவன் கண்டுவந்த அவ்வவத்தா பேதங்களும் காணா துடனழியும்.

**வி-ரை:-** அவத்தை யபிமானி யென்றது அகங்காரத்தை. அவத்தை விகற்பங்கள் - ஜாக்கிர முதலிய மூன்றுமாம். அவற்றுக் காதாரமாய் அவையெல்லாவற்றோடுங் கலந்து அவற்றுக் கப்பாலுந் தனித்து நிற்கு மதீதமாகலின் துரீயம் அவத்தை விகற்பத்து ளகப்படுவதன்றாம்.

அகங்காரமழிந்த நிலையில், அது, ஏனை மூன்று மிறத்தலால் துரீயம் (நான்காவது) எனப்படுவதன்றாய் ஆன்ம சொரூபமாகவே யநுபவமாகு மென்றறிக.

> ''நனவு கனவுதுயி னாடுவார்க் கப்பா
> னனவு துயிற்றுரிய நாமத் - தெனுமத்
> துரிய மதேயுளதாற் றோன்றுமூன் றின்றாற்
> றுரிய வதீதந் துணி.''
>
> உள்ளது நாற்பது - அனுபந்தம்

## 569. பராபத்தி தன்னாற் பரசொரூ பத்திற்
## பராவத்தை யாட்சி படைத்தோன் - பராவத்தைக்
## கன்னியமா வேறோ ரவத்தை யிருப்பதாத்
## தன்னியல்பாற் றான்காண் கலான்.

பராபத்தி தன்னால் பர சொரூபத்தில் பராவத்தை ஆட்சி படைத்தோன் பராவத்தைக்கு அன்னியமா வேறு ஓர் அவத்தை இருப்பதாத் தன் இயல்பால் தான் காண்கலான்.

**பராவத்தை-மெய்ந்நிலையாகிய ஞான விழிப்பு; ஆட்சி-ஆதிக்கம்; காண்கலான்-காணமாட்டான்.**

தன்னிழப்பின் மூலமாகப் பராவத்தை யாட்சி படைத்தவன், சொரூபமாகவே தன்னியல்பை யறிவதால் பராவத்தைக்கு அன்னியமாக வேறோரவத்தை நிகழ்வதாகத் தான் காண்கிலன். துரியமும் அதீதமுமான சொரூபநிலையில் விழிப்பு, துயில், கனவென்ற அவத்தைகள் உண்மையில் சற்று மில.

## 14. இருவினைத்திறன்

**570. யானென் றொருவ னிருக்கின்ற தாவொருவன்**
**தானினையுங் காறுமத் தன்மையோன் - மான**
**அகந்தையாற் கன்மமிரண் டாற்றிப் பயனை**
**முகந்து நுகர்தன் முறை.**

யான் என்று ஒருவன் இருக்கின்றதா ஒருவன் தான் நினையும் காறும் அத் தன்மையோன் மான அகந்தையால் கன்மம் இரண்டு ஆற்றிப் பயனை முகந்து நுகர்தல் முறை.

**மான அகந்தையால்-தேகாபிமானமாகிய அகங்காரத்தால்; முகந்து நுகர்தல்-அடைந்து அனுபவித்தல்.**

சருவ பரிபூரணனா மிறைவனை விட்டு நான் எனத் தனிப்புருட னொருவன் உண்மையில் உள்ளதாகத் தேகான்ம புத்தியா மோகத்தா லொருபாமரன் கருதுமளவும் தன்மதியாலத் தனித்தன்மையோன் அகங்கார வடிவான அக்கர்த்தத்துவத்தால் மாறி மாறிச் சுபாசுப கன்மங்களிரண்டுஞ் செய்து சுகதுக்கங்களா மவற்றின் பயன்களையும் ஏற்றநுபவித்தல் இயைபேயாம்.

**571. அகந்தையெனும் பேயை யருங்காவ லாவைத்**
**துகந்தா னுயிருக் குடையோன் - முகந்தவினை**
**ஊட்டும் பயனெஞ்சா துண்டொழியுங் காறுடலை**
**நீட்டும் படிக்கு நினைந்து.**

அகந்தை எனும் பேயை அரும் காவலா வைத்து உகந்தான் உயிருக்கு உடையோன் முகந்த வினை ஊட்டும் பயன் எஞ்சாது உண்டு ஒழியுங் காறு உடலை நீட்டும் படிக்கு நினைந்து.

**வைத்து உகந்தான்-செய்துள்ளான்.**

**572. ஒருவன்முன் செய்த விருவினைக டாமே**
**மருவு மவனுலக வாழ்விற் - பெருகு**
**நலமொடுதீ தாயுமவை நல்குறுநட் போடு**
**வலியபகை யாயும் வரும்.**

ஒருவன் முன் செய்த இரு வினைகள் தாமே மருவும் அவன் உலக வாழ்வில் பெருகும் நலமொடு தீது ஆயும் அவை நல்கு உறும் நட்போடு வலிய பகை ஆயும் வரும்.

**மருவும்-அவன் எடுத்துக்கொண்டுள்ள; நலம்-சுகம்; தீது-துக்கம்.**

**573. செய்வினையா லெய்துபயன் செவ்விதேற் சாலுமென
எவ்வழியா லேனு மியற்றற்க - அவ்வழியும்
தீதாயிற் றீவினையே சேருநெறி தானுமிகத்
தூய்தாக வேண்டுந் துணி.**

செய் வினையால் எய்து பயன் செவ்விதேல் சாலும் என எவ்வழியாலேனும் இயற்றற்க அவ்வழியும் தீது ஆயில் தீ வினையே சேரும் நெறி தானும் மிகத் தூய்து ஆக வேண்டும் துணி.

**செவ்விதேல் சாலும்-நல்லதானால் போதும்; சேருநெறி-தான் எடுத்துக்கொள்ளும் வழி.**

செய்யும் வினையாற் சேரும் பயன் குற்றமற்றதாயிற் போதுமென வினை செய்வோன் அவ்வினையை எவ்வழியாலேனுஞ் செய்யா தொழிக. பயன் நன்றாய் வழிமட்டும் தீதாய விடத்தும் அவ்வினை தீவினையே; ஆதலால் முடிவாம் பயனே யன்றி அது சேரும் வழிதானும் சிறிதும் குற்றமற்ற தாகவேண்டும்.

**574. சித்தத் தமைதியொடு செம்மையாந் தூய்மையொடு
நத்தி நடப்பனவே நல்வினையாம் - சித்தத்
தடரும் பரபரப்போ டாசையழுக் கோடு
படர்பவெலாந் தீவினையின் பால்.**

சித்தத்து அமைதியொடு செம்மை ஆம் தூய்மையொடும் நத்தி நடப்பனவே நல் வினை ஆம் சித்தத்து அடரும் பரபரப்போடு ஆசை அழுக்கோடு படர்ப எலாம் தீ வினையின் பால்.

**நத்தி-விரும்பி; அடரும்-போராடும்; படர்ப-செய்யப் படுவன;
தீவினையின்பால்-தீவினையைச் சேர்ந்தவையே.**

## 15. இரட்டைமுப்புடித்திறன்

**575. இலகு மநான்ம விலக்கணமோ வென்னின்
மலகுமிரட் டைக்கிடனா மன்னும் - நிலையில்
புரட்டாய சிந்தைப் புலக்கற் பனையாம்
இரட்டையிலை யான்மா விடத்து.**

இலகும் அநான்ம இலக்கணமோ என்னில் மலகும் இரட்டைக்கு இடனா மன்னும் நிலையில் புரட்டு ஆய சிந்தைப் புலக்கற்பனை ஆம் இரட்டை இலை ஆன்மா இடத்து.

**புரட்டாய-திரிபு அடைந்த.**

**576. அறிபடுத லெல்லை யறுக்கப் படூஉம்
குறியா மிலக்கணங் கூடல் - குறியோ
அளவு படலா மதீதமா மான்மா
அளவு படாஅ தது.**

அறிபடுதல் எல்லை அறுக்கப்படூஉம் குறி ஆம் இலக்கணம் கூடல் குறியோ அளவு படல் ஆம் அதீதம் ஆம் ஆன்மா அளவு படாஅதது.

**எல்லை அறுக்கப் படூஉம்- வரையறுக்கப்படும்; அளவுபடல் ஆம்-அளவுக்கு உட்பட்டது ஆம்.**

**577. தன்னினிரண் டற்றொளிருந் தன்மையா லான்மாவுக்
கன்னியநாட் டந்தா னசங்கதமாம் - அன்னதாற்
காண்பானா ரென்னத்தற் கண்டக்கான் முப்புடிதாம்
சேண்பாயுஞ் சிந்தை திறந்து.**

தன்னின் இரண்டு அற்று ஒளிரும் தன்மையால் ஆன்மாவுக்கு அன்னிய நாட்டம்தான் அசங்கதம் ஆம் அன்னதால் காண்பான் ஆர் என்னத் தன் கண்டக்கால் முப்புடிதாம் சேண் பாயும் சிந்தை திறந்து.

**அசங்கதம்-பொருத்தமில்லாதது; அன்னதால்-ஆகையால்; தன் கண்டக்கால்-தன்னைப் பார்க்கும் பொழுது; சேண் பாயும்-தூரத்தில் அகன்றொழியும்; சிந்தை திறந்து-இதயக்கிரந்தி நீங்கி.**

தன்னினு மிரண்டாவதின்றித் தானே பூரணமா யொளிருந் தன்மையால் சுட்டறிவாம் பேதக்காட்சி ஆன்மாவுக் குண்மையிற் பொருந்தாதாம். உண்மை அற்றாகலின் பிறவற்றைச் சுட்டிக் காண்போனாக மயலாற்றன்னை மயங்கு மகங்காரவடிவாம் ஜீவன் அவ்வாறு காண்டலுறுந்தான் யாவன் எனத் தன்னுட்டானே விசாரித்து தன்னுண்மையை உள்ளவாறுணர்ந்தால் இதயக்கிரந்தி ஆங்கே விடுபட்டுத் திரிபுடி பேதமுந் தூரத்து அகன் றொழியும்.

**578. விளங்குவதாந் தன்சொருப விஞ்ஞான மொன்றே
யுளங்கொள்ள வேண்டுவதோ ருண்மை - களங்கமனக்
கற்பனையா வெள்ளிக் கழிந்தொழிக காண்புடிகள்
சொப்பனமே யாகத் துணிந்து.**

விளங்குவது ஆம் தன் சொருப விஞ்ஞானம் ஒன்றே உளம் கொள்ள வேண்டுவது ஓர் உண்மை களங்கமனக் கற்பனையா எள்ளிக் கழிந்து ஒழிக காண்புடிகள் சொப்பனமே ஆகத் துணிந்து.

**எள்ளி-இகழ்ந்து; காண் புடிகள்-காணப்படும் திரிபுடிகள்.**

**579. மன்னுசொரூ பாத்துவித மாட்சியால் வேறுகதி
தன்னைத் தவிர்த்தில்லாத் தன்மையால் - துன்னு
முபேயமுந் தானே யுபாயமுந் தானே
யபேதமாக் காண்க வவை.**

மன்னு சொரூப அத்துவித மாட்சியால் வேறு கதி தன்னைத் தவிர்த்து இல்லாத் தன்மையால் துன்னும் உபேயமும் தானே உபாயமும் தானே அபேதமாக் காண்க அவை.

**உபேயம்-அடையப்படும் நிலை.**

**580. ஏகசச் சித்தா மிறைபதத்திற் பேதங்காண்
மோகமனம் மூழ்கி முடிந்தொழியில் - மோகஞ்சேர்
பேத மனைத்தும் பிரம்ம சொரூபசற்
போதமய மாகப் புகும்.**

ஏக சத் சித்து ஆம் இறைபதத்தில் பேதம் காண் மோக மனம் மூழ்கி முடிந்து ஒழியில் மோகம் சேர் பேதம் அனைத்தும் பிரம்ம சொரூப சத் போத மயம் ஆகப் புகும்.

**ஒழியில்-ஒழிந்தால்.**

**(கலி விருத்தம்)**

**581. அறிவுபல வென்பரய லையறி வறிந்தார்
பிறிவுபடு பேதமயல் போ்தலறி யாரே
வெறிவிளையு மையுணர்வை மீட்குமறி வாலே
செறிவுபடு மெய்யறிவு தேறவய லின்றே.**

அறிவு பல என்பர் அயலை அறிவு அறிந்தார் பிறிவுபடு பேத மயல் போ்தல் அறியாரே வெறி விளையும் ஐ உணர்வை மீட்கும் அறிவாலே செறிவுபடு மெய் அறிவு தேற அயல் இன்றே.

**பிறிவுபடு-வேறுபடு; போ்தல்-நீங்குதல்; வெறிவிளையும்-ஆசையாதி வெறியுணர்வை உண்டாக்கும்; ஐ உணர்வு-ஐம்புல உணர்வு; செறிவுபடு-நிறைந்த, பூரண; தேற-அடையவே.**

# 16. விடயபோகத்திறன்

## (நேரிசை வெண்பா)

**582. அயிராணி தன்பா லடைமகவான் போகம்**
**மயர்சேர் சுணங்கன் மனைமாட் - டியல்பாகத்**
**தான்மருவு மஃதென்றான் றத்தியங்கா தர்வணன்முன்**
**ஆன்மபர மாநுபவ மார்ந்து.**

அயிராணி தன்பால் அடை மகவான் போகம் மயர் சேர் சுணங்கன் மனைமாட்டு இயல்பாகத் தான் மருவும் அஃது என்றான் தத்தியங்காதர்வணன் முன் ஆன்ம பரம அநுபவம் ஆர்ந்து.

**அயிராணி-இந்திராணி; மகவான்-இந்திரன்; சுணங்கன்-நாய்; மனை-மனைவி(பெண்நாய்); ஆர்ந்து-அடைந்து.**

இந்திரனை வைராக்கிய மடைவிக்க வெண்ணி அவனை முன்னிலைப்படுத்தி, அனைத்தினுஞ் சிறந்த ஆன்மசுகத்தைத் தான் முன்பே அனுபவித்து வருவதனால், அதனொடு நோக்க, அவன் றானிந்திராணியிடத் தரிதிற் றுய்ப்பதாகக் கருதும் பேரின்பம், மோக முற்ற சுணங்கன் தன் பிணவலிடத்து வருந்தா வியல்பி னெய்துஞ் சிற்றின்பம்போ லெளிமைத்தென உள்ளவாற்றாற் கூறினான் தத்தியங்காதர்வண முனிவன்.

**583. கல்லு முதரக் கடும்பசிக்குக் கஞ்சியொடு**
**புல்லரிசிக் கூழுமரும் போனகமாம் - தொல்லுலகில்**
**வேட்கும் விடயவியன் மேற்றன் றதனிடத்து**
**வேட்கையே யின்ப விளைவு.**

கல்லும் உதரக் கடும் பசிக்குக் கஞ்சியொடு புல் அரிசிக் கூழும் அரும் போனகம் ஆம் தொல் உலகில் வேட்கும் விடய இயல் மேற்று அன்று அதனிடத்து வேட்கையே இன்ப விளைவு.

**கல்லும் உதர-வயிற்றைக் கிள்ளுகின்ற; புல்-அற்பமான; போனகம்-சாப்பாடு; வேட்கும்-விரும்பும்; மேற்று அன்று-பொறுத்தது அல்ல.**

**584. உளதே யுணர்வவ் வுணர்வே மகிழ்வு**
**களவே யயலாற் களித்தல் - தெளிவாரும்**
**உண்மையாந் தன்னை யொழிகற் பனாவிடயத்**
**துண்மைமகிழ் வுண்டோ வுரை.**

உளதே உணர்வு அவ் உணர்வே மகிழ்வு களவே அயலால் களித்தல் தெளிவு ஆரும் உண்மை ஆம் தன்னை ஒழி கற்பனா விடயத்து உண்மை மகிழ்வு உண்டோ உரை.

**தெளிவாரும்-தெளிவுடன் கூடிய; ஒழி-தவிர்ந்த.**

**585. வறட்டெலும்பு கவ்வித்தன் வாய்நனிபுண் ணாகப்**
**பறட்டுப் பறட்டெனத்தன் பல்லாற் - கறித்துமகிழ்ந்**
**தென்புபோ லின்சுவைவே றின்றெனவப் புண்ணீராற்**
**புன்புலநாய் போற்றும் புகழ்ந்து.**

வறட்டு எலும்பு கவ்வித் தன் வாய் நனி புண் ஆகப் பறட்டுப் பறட்டு எனத் தன் பல்லால் கறித்து மகிழ்ந்து என்பு போல் இன் சுவை வேறு இன்று என அப் புண் நீரால் புன்புல நாய் போற்றும் புகழ்ந்து.

**நனி-அதிகமாக; கறித்து-கடித்து; என்பு-எலும்பு; புன்புல-அற்ப அறிவு படைத்த.**

**586. அறிவின்பங் கண்டிலா வாதர்புன் மாதர்**
**குறியின்ப மாதியாக் கூறும் - பிறிதின்பந்**
**தன்னை மதித்துத் தடுமாறிச் சாம்பொழுதும்**
**அந்நினைவா லேங்கியழி வார்.**

அறிவு இன்பம் கண்டிலா வாதர் புன் மாதர் குறி இன்பம் ஆதியாக் கூறும் பிறிது இன்பம் தன்னை மதித்துத் தடுமாறிச் சாம் பொழுதும் அந்நினைவால் ஏங்கி அழிவார்.

**வாதர்-வாதிப்பவர்கள்; சாம்பொழுதும்-சாகும்பொழுதும்.**

**587. கண்டு களிக்கக் கடவதா வுள்ளத்து**
**மண்டுபெரு வாழ்வை மறந்துபோய் - விண்ட**
**தினைத்துணையும் பற்றாச் சிறுவிடயத் தேனை**
**நினைத்துருகும் பேதையர் நெஞ்சு.**

கண்டு களிக்கக் கடவதா உள்ளத்து மண்டு பெரு வாழ்வை மறந்துபோய் விண்ட தினைத்துணையும் பற்றாச் சிறு விடயத் தேனை நினைத்து உருகும் பேதையர் நெஞ்சு.

**மண்டு-நிறைந்த; விண்ட தினைத்துணையும்-உடைந்த தினையளவும்;**
**பற்றா-சமமாகாத.**

பேதையர் நெஞ்சம், களிக்கக் கடவதான நிறைவாம் ஆன்மீக வாழ்வை மறந்து, சின்ன பின்னமாகிய விடய ருசிகளில் ஈடுபட்டு உருகும் மருளுடைத்தது.

**588. கொழுப்புநீ ரூற்றுக் குழியைக் குறுகி**
**விழுப்பமிலா நெஞ்சத்து வீணர் - பழிப்புறவே**
**பட்டுக் கிடப்பர் பரசிவபோ காம்புதியிற்**
**பெட்டுத் திளையார் பிரிந்து.**

கொழுப்பு நீர் ஊற்றுக் குழியைக் குறுகி விழுப்பம் இலா நெஞ்சத்து வீணர் பழிப்பு உறவே பட்டுக் கிடப்பர் பரசிவ போக அம்புதியில் பெட்டுத் திளையார் பிரிந்து.

**குறுகி-அடைந்து; விழுப்பம் இலா-கீழான; வீணர்-அற்பர்கள்; பெட்டு-பிரியப்பட்டு; திளையார்-திளைக்கமாட்டார்கள்.**

இஃது சிற்றின்ப பேரின்ப உருவகச் செய்யுளாம் . கொழுப்பு நீருற்ற குழியில் வீணர் பழிப்புறவே பட்டுக்கிடப்பர் அன்றி பரசிவ போகாம்புதியில் திளைத்துப் பிறவிப்பயனை எய்தார்.

## 589. எண்ணுக் கடங்காப்பே ரின்பச் செழுங்கனியை
## உண்ணுமுயர் நாட்டநனி யுற்றார்க்குக் - கண்ணிழந்த
## ஏமரா மாக்களே யெய்தக் கடவதாம்
## காமருசிற் றின்பங் கடை.

எண்ணுக்கு அடங்காப் பேர் இன்பச் செழும் கனியை உண்ணும் உயர் நாட்டம் நனி உற்றார்க்குக் கண் இழந்த ஏமரா மாக்களே எய்தக் கடவது ஆம் காமரு சிற்றின்பம் கடை.

**செழும் கனி-முற்றிப் பழுத்த சிறந்த கனி; நனி-அதிகமாக; கண்ணிழந்த-அறிவற்ற; ஏமரா-காப்பற்றப்படாத; காமரு-விருப்பமுள்ள.**

## 590. அன்னமே தானா வமைந்திருக்க வஃதறியா
## தன்னத்தைத் தான்புசிப்ப தாநினைந்தால் - அன்னமே
## தன்னைப் புசித்துத் தணியாப் பெரும்பசிக்குப்
## பின்னையுமா ளாக்கி விடும்.

அன்னமே தானா அமைந்து இருக்க அஃது அறியாது அன்னத்தைத் தான் புசிப்பதா நினைந்தால் அன்னமே தன்னைப் புசித்துத் தணியாப் பெரும் பசிக்குப் பின்னையும் ஆள் ஆக்கி விடும்.

**பின்னையும்-மேலும்.**

சத்தே உணவாகலின் புறத்தில் போகம் விழையும் பேதைமையை வற்புறுத்தினார். சத்தாகிய நாம் நமக்கன்னியமான விஷய போகங்களை (உணவை) விரும்பின், அவ்வுணவே நம் நிறைவை அழித்து நம்மை உண்டு, தீரா வேட்கையும் விளைவிக்கும் என்றார்.

## 591. உண்கின்ற தோறுமவ் வுண்டியே தம்முயிரை
## உண்கின்ற வுண்மை யுணராரே - மண்ணிற்
## புசிக்கப் படுவதாப் போகத்தை யெண்ணிப்
## பசித்துப்பின் பற்று பவர்.

உண்கின்ற தோறும் அவ் உண்டியே தம் உயிரை உண்கின்ற உண்மை உணராரே மண்ணில் புசிக்கப்படுவதாப் போகத்தை எண்ணிப் பசித்துப் பின்பற்றுபவர்.

**உண்டி-சாப்பாடு, போகப் பொருள்கள்; பசித்து-விருப்பம் ஓங்கி.**

**592. நிமிர்ந்தெழுத லன்றி நெருப்புநெய் யாலே**
**அமர்ந்துதணி வெய்தாத வாறே - சமைந்ததம்**
**காமங்கை கூடுங் களிப்பானே காமத்தீ**
**ஏமங் கொடுதணித லின்று.**

நிமிர்ந்து எழுதல் அன்றி நெருப்பு நெய்யாலே அமர்ந்து தணிவு எய்தாதவாறே சமைந்த தம் காமம் கை கூடும் களிப்பானே காமத் தீ ஏமம் கொடு தணிதல் இன்று.

**சமைந்த-விரும்பிய, திட்டமிட்ட; களிப்பானே-களிப்பாலே; ஏமம்-திருப்தி; கொடு-கொண்டு.**

**592. அமுதத் துவவாழ் வடைவா ரறிவுக்**
**a கெமதத் துவமறப்பா யேய்வால் - தமவியல்சே**
**ரஞ்சுமொருங் குற்றதோ ரவ்விடயம் பாழ்த்தகொடு**
**நஞ்சினு மிக்க நவை.**

அமுதத்துவ வாழ்வு அடைவார் அறிவுக்கு எம தத்துவ மறப்பு ஆய் ஏய்வால் தம இயல் சேர் அஞ்சும் ஒருங்கு உற்றது ஓர் அவ்விடயம் பாழ்த்த கொடு நஞ்சினும் மிக்க நவை.

**தம இயல்சேர்-தமோ குண வயமாகி.**

**593. தீண்டலா லொன்றோ செகுத்தலுயிர் தேருங்காற்**
**காண்டலான் மற்றுங் கருதலால் - மாண்டிடச்செய்**
**ஐவாய வேட்கை யராப்போல யாங்காணேம்**
**பைவாய பாம்பிற் பழுது.**

தீண்டலால் ஒன்றோ செகுத்தல் உயிர் தேருங்கால் காண்டலால் மற்றும் கருதலால் மாண்டிடச் செய் ஐவாய வேட்கை அராப்போல யாம் காணேம் பை வாய பாம்பில் பழுது.

**தீண்டலால்-கடிப்பதால்; ஒன்றோ-ஒன்று மட்டும் தானா; செகுத்தல்-இறத்தல்; தேருங்கால்-ஆராயுங்கால்; ஐவாய வேட்கை-ஐந்து புலன்களின் வழியாகச் செல்லும் வேட்கை; அரா-பாம்பு; காணேம்-காணவில்லை; பைவாய-விஷப்பையை வாயில் கொண்ட; பழுது-கொடிய.**

தானுயிர்களை மாய்ப்பது தன்னாலவை தீண்டப்படுதலான் மட்டுமோ? அன்றன்று! ஆராயுங்கால், தன்னாற் காணப்படுதலாலுங் கருதப் படுதலாலுங் கூட அவற்றை மாய்ப்பிக்கும் வேட்கைப் பாம்பு போல, அத்துணைத் தீங்கு பயப்பது, படத்தைத் தம்மிடத்தே கொண்ட ஜாதிப்பாம்புகளுள்ளும் யாமிது காறுங் கண்டிலேம்.

**வி-ரை:-** அராத் தீண்டிற் றென்றல் வழக்கு. தீண்டல், காண்டல் என்பன ஐம்புலச் செயல்களுக்கும் உபலக்கணம். ஐவாய வேட்கை-ஐம் பொறிகள் வாயிலாகப் படரும் வேட்கை. ஐவாய வென்னு மடை மொழியை அராவுக்குங்கூட்டி ஐந்தலைப் பாம் பெனவும் உரைத்துக் கொள்க. வேட்கை-ஆசை, காமம். பாம்பென்றால் படையும் நடுங்கும் என்பது பழமொழி. அதனிலு மாற்றக் கொடிது வேட்கை யெனவே, வேட்கை யென்னுந் தன்பெயர் செவிப்பட்டவளவானே, எத்துணை யறிவாற்றல் படைத்தோராலுஞ் சற்று மிடங் கொடாது நடுநடுங்கிக் கடிதற் குரியதென அவ்வேட்கையின் குற்றம் இதனாற் கூறப்பட்டது.

## 17. மனமாயைத்திறன்

**594. உண்மையிலே யில்லாப்பொய்*யொன்றுதா னுள்ளதுபோல்
வண்மைசே ரொட்பமதி மக்களையும் - திண்மையான்
முற்ற மயக்கி முறுவலிக்குந் தன்னுட்டன்
வெற்றியைத் தானே வியந்து.**

(*தானொன்றே யெனப் பிரிநிலை தேற்ற மிரண்டு மொருங்குபட நின்ற ஏகாரம் விகாரத்தாற் றொக்கது.)

உண்மையிலே இல்லாப் பொய் ஒன்று தான் உள்ளதுபோல் வண்மை சேர் ஒட்ப மதி மக்களையும் திண்மையால் முற்ற மயக்கி முறுவலிக்கும் தன்உள் தன் வெற்றியைத் தானே வியந்து.

**வண்மை சேர் ஒட்ப மதி-கூர்மை நிறைந்த மதி; திண்மையால்-வலிமையால்.**

மாயையின் தன்மை கூறினார். அது என்றும் இல்லாததை யுள்ளது போல் தோற்றுவித்து, மிக நுண்மதி மக்களையும் தனது வலிமையால் முற்றும் மயக்குவித்து, தானே தன் வெற்றியை வியந்து புன்முறுவலுறு மென்றார். இல்லாத பந்தத்தை உள்ளதாகப் பேணி அகங்கார ரூபஜீவராய் கேவல சைதன்யத்தினிருந்து பெயர்ந்தது போல் நாம் துயருறுவதிலும் மகத்தான ஆச்சரியமில்லை.

### (கலி விருத்தம்)

**595. உள்ளத் தொளியை யுணர்ந்த பொழுது
வெள்ளக் காரிருள் வெளியி லிருக்கிலென்
வெள்ளக் காரிருள் விளங்குமெய் யாமவ்
வுள்ளத் தொளியை யொளிக்கவொண் ணாதே.**

உள்ளத்து ஒளியை உணர்ந்த பொழுது வெள்ளக் கார் இருள் வெளியில் இருக்கில் என் வெள்ளக் கார் இருள் விளங்கும் மெய் ஆம் அவ் உள்ளத்து ஒளியை ஒளிக்க ஒண்ணாதே.

**வெள்ள-நிறைந்த.**

அகவொளியில் திளைக்குமிடத்துத் துன்பமில்லை. புறத்தே வெள்ளமாகிய காரிருள் மேவியிருப்பினும், அகவொளி யாழ்ந்த காலத்து, அக்காரிருளையும் மறைத்து ஒளியே தோன்றும். ஆன்மா அபயத்தானமும் பிரகாசத் தானமுமாம்.

### (நேரிசை வெண்பா)

**596. அங்காந் தகல்விசும்பை யாரவிழுங் கிக்கொதுகு
பின்கான்ற தென்றலின்மீப் பேதுடைத்தாம் - மங்கும்
அசச்சடமா மாயை யறிவொளியான் மாவை
வசப்படுமா கட்டியோ வல்.**

அங்காந்து அகல் விசும்பை ஆர விழுங்கிக் கொதுகு பின் கான்றது என்றலின் மீப் பேது உடைத்து ஆம் மங்கும் அசத் சடம் ஆம் மாயை அறிவு ஒளி ஆன்மாவை வசப்படுமா கட்டி ஒவல்.

**அங்காந்து-வாய் திறந்து; ஆர-முற்றும்; கொதுகு-கொசு; கான்றல்-உமிழ்தல், துப்புதல்; மீப்பேது-அதிகமான பைத்தியக்காரத்தனம்.**

**597. உள்ளதே பூன்ற வுணர்வா முளமென்றாற்
கள்ளமே யன்றோ கனமாயை - கள்ளமாம்
அந்தமன மாயை யராத்தீண்ட லாலென்ன
விந்தையுயிர் மாழ்கும் விதம்.**

உள்ளதே பூன்ற உணர்வு ஆம் உளம் என்றால் கள்ளமே அன்றோ கன மாயை கள்ளம் ஆம் அந்த மன மாயை அராத் தீண்டலால் என்ன விந்தை உயிர் மாழ்கும் விதம்.

## 18. பேதைமைத்திறன்

**598. தாமதுவா ஞானச் சதுரரைக்கண் டத்துவிதம்
ஆமதுவே லாற்றலச னாதியெவன் - ஓர்மென்
றுடலுணர்வோ ரான்ற வுணர்வுரைப்பார் போற்றம்
சடவுணர்வு சாற்றுவார் தாம்.**

தாம் அது ஆம் ஞானச் சதுரரைக் கண்டு அத்துவிதம் ஆம் அதுவேல் ஆற்றல் அசனாதி எவன் ஓர்ம் என்று உடல் உணர்வோர் ஆன்ற உணர்வு உரைப்பார் போல் தம் சட உணர்வு சாற்றுவார் தாம்.

**அது-பிரம்மம்; அதுவேல்-அதுவாகில்; ஆற்றல்-காரியங்களைச் செய்தல்; அசனாதி-சாப்பிடுவது முதலியவை; எவன்-எப்படி; ஓர்ம்-உணர்க; ஆன்ற-சிறந்த, மெய்யான; சட உணர்வு-ஜட (மடமை) உணர்வு.**

**599. கண்ணாலந் தானே கலவி யநுபவமா**
**எண்ணாநின் றோர்பேதை யின்புறுவாள் - உண்ணாடி**
**உய்த்துணர்த லில்லா ருளறுவாய் வேதாந்தம்**
**அத்துவித ஞானமென் பார்.**

கண்ணாலம் தானே கலவி அநுபவமா எண்ணாநின்று ஓர் பேதை இன்பு உறுவாள் உள் நாடி உய்த்து உணர்தல் இல்லார் உளறு வாய் வேதாந்தம் அத்துவித ஞானம் என்பார்.

**கண்ணாலம்-திருமணம்; எண்ணா நின்று-எண்ணி; பேதை-சிறுமி; வாய் வேதாந்தம்-புத்தக ஞானம்.**

**600. சாத்திரத்தா லான்மபர தத்துவங்கேட் டான்றமதி**
**மாத்திரத்தாற் றம்மை மதித்தோராய் - ஓர்த்ததமைச்**
**சோதனைசெய் தோய்ந்துசுகந் தோயாதம் மோனியரைச்**
**சோதனைசெய் பேதைமையென் சொல்.**

சாத்திரத்தால் ஆன்ம பரதத்துவம் கேட்டு ஆன்ற மதி மாத்திரத்தால் தம்மை மதித்தோராய் ஓர்த்த தமைச் சோதனை செய்து ஓய்ந்து சுகம் தோயாது அம் மோனியரைச் சோதனை செய் பேதைமை என் சொல்.

**601. தம்மை யறியுந் தரமுமே யில்லாதார்**
**அம்மையோ டும்மை யமைதிகளைச் - சும்மையாய்ப்**
**பாவித் தறிதல் பசுங்குழவி தன்னிழலைத்**
**தாவிப் பிடிக்குந் தகைத்து.**

தம்மை அறியும் தரமுமே இல்லாதார் அம்மையோடு உம்மை அமைதிகளைச் சும்மையாய்ப் பாவித்து அறிதல் பசும் குழவி தன் நிழலைத் தாவிப் பிடிக்கும் தகைத்து.

**அம்மை-மறுபிறவி; உம்மை-முற்பிறப்பு.**

**602. நடுநாளே தந்நிலையை நாடறியா தாற்றத்**
**தடுமாறும் புந்தியார் தாமே - முடியோ**
**டடிநாளுந் தங்க ளவத்தைகளை யெண்ணி**
**நெடிதாக நிண்ணயிப் பார்.**

நடு நாளே தம் நிலையை நாட அறியாது ஆற்றத் தடுமாறும் புந்தியார் தாமே முடியோடு அடி நாளும் தங்கள் அவத்தைகளை எண்ணி நெடிது ஆக நிண்ணயிப்பார்.

**நடுநாள்-தற்காலம்; முடியோடு-வருங்காலத்துடன்; அடிநாள்-இறந்த காலம்.**

நடுநின்ற நிகழ்ச்சியா மிஞ்ஞான்று தமக்குளதாகின்ற உண்மை நிலையை முதற்கண் உள்ளபடியே ஆராயவறியாது ஆற்றத் தடுமாறும் அறிவாளரே, அதனைப்பற்றி நிற்பவா மிறந்த காலத்து மெதிர் காலத்தும் தமக்குளதான, உளதாகும் நிலை வேறுபாடுகளைப் பெரிது மாராய்ந்து முடிவு செய்யப் புகுவர்.

**வி-ரை:-** தம் முண்மை நிலையை ஒருகாலுரம்பட வோர்ந் துணர்ந்தோர்,

''நாமன்றி நாளேது நாடேது நாடுங்கால்
நாமுடம்பேல் நாணாட்டு ணாம்படுவம் - நாமுடம்போ
நாமின்றன் றென்றுமொன்று நாடிங்கங் கெங்குமொன்றால்
நாமுண்டு நாணாடி னாம்.''

என்றாங்கு, அவத்தை யபிமானியா மகந்தை யழிந்து கால தேசாதீதமாய் எக்காலத்தும் எத்தேசத்து மொருபடித்தாய் நிகழ்கின்ற பூரண நிலையிற் றம்மைக்கண்டு தரித்தலின், இறப்பெதிர்வுகளைப்பற்றிய தந்நிலைகளைக் குறித்து அன்னா ரெண்ண மிடார் என்பதாம். அடிநாள் முடிநாள் என்பன முற்பிறப்புப் பிற்பிறப்புக்களையும் உட்கொண்டு நின்றன.

**603. இன்றுநா மெவ்வா றிருக்கின்றோ மென்றுணர**
**நன்றுதாஞ் சற்று நயக்கலார் - பொன்றுவதன்**
**பின்னும் பிறந்ததன் முன்னுமுள தம்முண்மை**
**உன்னியுழல் வாருணர்வென் னோ.**

இன்று நாம் எவ்வாறு இருக்கின்றோம் என்று உணர நன்று தாம் சற்றும் நயக்கலார் பொன்றுவதன் பின்னும் பிறந்ததன் முன்னும் உள தம் உண்மை உன்னி உழல்வார் உணர்வு என்னோ.

**நயக்கலார்-விரும்பாதவர்கள்.**

**603 a** ***பிறந்தநா ளேதோ பெருவிழாச் செய்வீர்***
***பிறந்ததெவ ணாமென்று பேணிப் - பிறந்திறத்த***
***லின்றென்று மொன்றா யிலகுபொரு ளிற்பிறந்த***
***வன்றே பிறந்தநா ளாம்.***

***-பகவான்***

பிறந்த நாள் ஏதோ பெரு விழாச் செய்வீர் பிறந்தது எவண் நாம் என்று பேணிப் பிறந்து இறத்தல் இன்று என்றும் ஒன்றாய் இலகு பொருளில் பிறந்த அன்றே பிறந்த நாள் ஆம்.

**603 b** ***பிறந்தநா ளேனும் பிறப்புக் கழாது***
***பிறந்தநா ளுற்சவமே பேணல் - இறந்த***
***பிணத்திற் கலங்கரிக்கும் பெட்பென்றே தன்னை***
***யுணர்ந்தொடுங்கல் தானே யுணர்வு.***

***-பகவான்***

பிறந்த நாள் ஏனும் பிறப்புக்கு அழாது பிறந்த நாள் உற்சவமே பேணல் இறந்த பிணத்திற்கு அலங்கரிக்கும் பெட்பு என்றே தன்னை உணர்ந்து ஒடுங்கல் தானே உணர்வு.

**603 நாமன்றி நாளேது நாநம்மை நாடாது**
**c நாமுடலென் றெண்ணினமை நாளுண்ணு - நாமுடம்போ**
**நாமின்று சென்றவரு நாளென்று மொன்றத*னா***
***னா*முண்டு நாளுண்ட நாம். - பகவான்**

நாம் அன்றி நாள் ஏது நாம் நம்மை நாடாது நாம் உடல் என்று எண்ணில் நமை நாள் உண்ணும் நாம் உடம்போ நாம் இன்று சென்ற வரு நாள் என்றும் ஒன்று அதனால் நாம் உண்டு நாள் உண்ட நாம்.

**604. சிவன்சேர்வ தாலே தெளிவதோ சித்தத்**
**தவன்சேர்வ தத்தெளிவி னாலோ - அவலஞ்செய்**
**பேதமறு மொன்றையிரு வேறாகப் பேதுறுவார்க்**
**கோதமறு மாற்றமில் லோம்.**

சிவன் சேர்வதாலே தெளிவதோ சித்தத்து அவன் சேர்வது அத் தெளிவினாலோ அவலம் செய் பேதம் அறும் ஒன்றை இரு வேறு ஆகப் பேது உறுவார்க்கு ஓத மறு மாற்றம் இல்லோம்.

**அவலம்-கேடு; பேதுறுவார்-மயங்குவார்.**

சிவனருளின்றிச் சித்தம் தெளிவுறாது; எனின், சிவனோடு ஐக்கியமே ஞானநிலை. ஆயின், சித்தம் தெளிவுறலின்றிச் சிவனோடடைவு சித்திக்காது. ஆதலின் இருநிலைகளும் சாத்திய மன்றெனப் பேதுறுவார், அபின்னமான வொன்றையே சிவன் ஜீவனெனப் பிரித்து மனக்கலக்கம் எய்துவராவர். அஃதை எவ்வாறு மாற்றுவது? என்றார்.

## 19. அபக்குவத்திறன்

**605. ஐம்புலத்தை யாற்ற வடர்த்தொழுகு மவ்வினத்தோ**
**டென்பொருட்டுக் கூடியொருங் கேய்கின்றார் - புன்புலத்துக்**
**கெண்பதத்தா லேங்கி யிளகிக் கரைந்தொழுகும்**
**பண்படா வுள்ளத் தவர்.**

ஐம்புலத்தை ஆற்ற அடர்த்து ஒழுகும் அவ் இனத்தோடு என் பொருட்டுக் கூடி ஒருங்கு ஏய்கின்றார் புன் புலத்துக்கு எண் பதத்தால் ஏங்கி இளகிக் கரைந்து ஒழுகும் பண்படா உள்ளத்தவர்.

**அடர்த்து ஒழுகும்-அடக்கி அழித்துப் பழகும்.**

இது பக்குவரும் அபக்குவரும் ஒருங்கே சேரும் தன்மையை வியந்தது. ஐம்புல விடயங்களுக்குக் கரைந்தொழுகும் பண்படாத உள்ளத்தவர், எதன்பொருட்டுப் புலன்களை அடர்த் தொழுகும் தவ இனத்தாருடன் ஒருங்கு செல்கின்ற னரென்றார்; அவரவர் மனநோக்கின் வேறுபாட்டை வியந்து.

## 20. பிரமாதத்திறன்

**606. அற்புதமா யுள்ளசிற் றம்பலமாந் தந்நிலையில்**
**உற்பவமாய்ச் சீவித் தொடுங்குகனாக் - கற்பிதரே**
**தந்த மிருவினையாற் றாக்குண் டுழல்கின்ற**
**இந்த விவகா ரிகள்.**

அற்புதமாய் உள்ள சித் அம்பலமாம் தம் நிலையில் உற்பவமாய்ச் சீவித்து ஒடுங்கு கனாக் கற்பிதரே தம் தம் இரு வினையால் தாக்குண்டு உழல்கின்ற இந்த விவகாரிகள்.

**விவகாரி-சீவன்; கனாக்கற்பிதர்-சொப்பனக்கற்பிதர்;**

**607. அச்சமறு மான்மநிலை தன்னி னகன்றன்றோ**
**துச்சவுயி ராய்ப்பிறவித் துன்புற்றார் - உச்சந்**
**தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்**
**நிலையி னிழிந்தக் கடை.**

அச்சம் அறும் ஆன்மநிலை தன்னின் அகன்று அன்றோ துச்ச உயிராய்ப் பிறவித் துன்பு உற்றார் உச்சம் தலையின் இழிந்த மயிர் அனையர் மாந்தர் நிலையின் இழிந்தக் கடை.

**இழிந்த-நீங்கிய.**

பிரம்ம சொரூபமா மக்கள், இரண்டற்றமையா லச்சமற்ற பேரின்பமயமாந் தம்முண்மை நிலையினின்று பிரமாதத்தாற் பிரிந்ததனாலன்றோ அற்பவுயிரா யறிவு கலங்கிப்பிறவித்துன்பத்துக் குள்ளாயினார். மேன்மக்கள் தம்மியல்பா முயர் நிலை யினின்று தமக்கடாத வொழுக்கத்தாற் சரிந்த விடத்து, தன் பிறப்பிடமா முச்சந்தலையினின்று பெயர்ந்து விழுந்த மயிர் போலத் தம்மாண் பிழந்து வருந்துவ ரென்பதாம்.

**வி-ரை:-** நிலையிற் பிரியாது நின்ற வழிப் பேணப்படுதலும் பிரிந்து வீழ்ந்த வழி யிழிக்கப்படுதலும் உவமையா லுணரப்படும். 'நிலையிற் பிரியேல்'- ஔவை. பிரமாதமே பிறவித்துன்பத்துக் கேது வென்பதாம். பிரமாதம்-மறதி, நழுவல்.

**608. மலையிலக்கா நின்ற மகிமைசா லான்ம**
**நிலையினைக்கண் டந்நிலைக்கே நில்லா - தலைவதுதான்**
**தன்னைத் தவிர்ந்தோரைத் தானெண்ணி மூலமாம்**
**தன்னை மறந்த தகைத்து.**

மலை இலக்கா நின்ற மகிமை சால் ஆன்ம நிலையினைக் கண்டு அந்நிலைக்கே நில்லாது அலைவது தான் *தன்னைத் தவிர்ந்தோரைத் தான் எண்ணி மூலம் ஆம் தன்னை மறந்த தகைத்து.

**சால்-பொருந்திய; எண்ணி-கணக்கிட்டு; மறந்த-விட்டுவிட்ட.**

* தசமன் கதை நினைவுறுத்தப் படுகிறது.

## 609. எண்ண முதிக்கு மிதயத்தே தான்றானா
## நண்ணு சிவப்பொருளை நானாரென் - றுண்ணுணுகி
## யோர்ந்தொடுங்கித் தானதுவா வொன்றலன்றித் தன்சொருபம்
## பேர்ந்தொழிதல் புத்திப் பிழை.

எண்ணம் உதிக்கும் இதயத்தே தான் தானா நண்ணு சிவப்பொருளை நான் ஆர் என்று உள் நுணுகி ஓர்ந்து ஒடுங்கித் தான் அதுவா ஒன்றல் அன்றித் தன் சொருபம் பேர்ந்து ஒழிதல் புந்திப் பிழை.

**இதயத்தே-இடத்தில்; நண்ணு-விளங்குகின்ற; பேர்ந்து-பெயர்ந்து.**

## 610. மோனையா யுள்ள முழுமுதலாய்த் தாமிருந்தால்
## ஏனையார் தம்மா லிழிவடைதல் - ஏனோ
## தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
## நிலையி னிழிந்தக் கடை.

மோனையாய் உள்ள முழு முதலாய்த் தாம் இருந்தால் ஏனையார் தம்மால் இழிவு அடைதல் ஏனோ தலையின் இழிந்த மயிர் அனையர் மாந்தர் நிலையின் இழிந்தக் கடை.

**மோனையாய்-முதன்மையாய்; ஏனையார் தம்மால்-பிறரால்.**

## 611. மயல்கொண்ட வாற்றான் மனோமயத்தை நம்பி
## இயலுண்மை யாக வெதிர்ந்தே - வியன்முதலாம்
## சுத்தஞா னான்ம சொரூபத்தைச் சோர்ந்தானுன்
## மத்தனா கின்றான் மதி.

மயல் கொண்ட ஆற்றால் மனோமயத்தை நம்பி இயல் உண்மை ஆக எதிர்ந்தே வியன் முதல் ஆம் சுத்த ஞான ஆன்ம சொரூபத்தைச் சோர்ந்தான் உன்மத்தன் ஆகின்றான் மதி.

**இயல்-விளங்குகின்ற; எதிர்ந்தே-எதிர்ப்பட்டு; வியன்-ஆச்சரியகரமான; உன்மத்தன்-பைத்தியக்காரன்.**

மயல் கொள்ளலால் மனோமயவுலகத்தை நம்பி எதிர்வதை உண்மையாகப் பாவித்துச் சுத்த ஞானான்ம சொரூபத்தினின்றும் சோர்வோன், உன்மத்தனாகின்றான்.

**612. பின்னையெவை சாரினும் பேரினும் பேதுபட்டுத்**
**தன்னையிமை யாது சதாவுணர்க - என்னை**
**அறிவாய தன்னை யயர்த்தபிர மாதஞ்**
**சிறிதேனும் பீழை பெரிது.**

பின்னை எவை சாரினும் பேரினும் பேது பட்டுத் தன்னை இமையாது சதா உணர்க என்னை அறிவு ஆய தன்னை அயர்த்த பிரமாதம் சிறிதேனும் பீழை பெரிது.

**சாரினும்-வந்து சேர்ந்தாலும்; பேரினும்-பெயர்ந்து (நழுவிப்) போனாலும்; பேதுபட்டு-பேதைமைப்பட்டு; இமையாது-விடாது; என்னை-ஆச்சரியக்குறி; அயர்த்த-நழுவிய; பீழை-கேடு.**

முப்புடிகளுள் எவை புணர்ந்தாலும் பிரிந்தாலும் அதுபற்றிக் கலக்கமுறாமல், எப்பொழுதும் தன்னிலையிலேயே விழித்துணர்தலே அறிவு சமாதியாம். அதுவே முத்தி. எவ்வாறெனின், அறிவாகிய தன்னை மறந்து அறிபடுபொருளுள்ளதென எள்ளளவும் அயர்ந்தால், அந்த நழுவலே பெரும் பீடையாம்; துளி விஷம் சேரினும் உணவு பெருங்கேடுறுதல் போல்.

## 21. சம்சாரத்திறன்

**613. நினைப்புமறப் பாநிகழு நீச மனமே**
**ஜனிப்புமரிப் பாயசமு சாரம் - நினைப்புமறப்**
**பாமுயிர்ப்புச் செத்த வகமே ஜனிப்புமரிப்**
**பாமயர்ப்பில் சுத்தமுத்தி யாம்.**

நினைப்பு மறப்பா நிகழும் நீச மனமே ஜனிப்பு மரிப்பு ஆய சமுசாரம் நினைப்பு மறப்பு ஆம் உயிர்ப்புச் செத்த அகமே ஜனிப்பு மரிப்பு ஆம் அயர்ப்பு இல் சுத்த முத்தி ஆம்.

**உயிர்ப்பு-சேஷ்டை; அயர்ப்பு-பிரமாதம்.**

நினைப்பும் மறப்பும் தொழிலாகக் கொண்ட பந்தமனமே சமுசாரமாம். நினைப்பும் மறப்பும் நீங்கிடில் மனம் சொரூபத்தினின்றும் வேறுபடாது, அசலமாய் முத்தியநுபவமாக விளங்குகின்றது. இதனால் மனம் இறத்தலென்பது நினைவு மறதி வடிவமாகிய அதன் அசுத்த நிலை நீங்கி, சொரூபத்தையே பிரதிபிம்பித்தலென்பது தெளிவாயிற்று.

**614. உண்மையள வாவொளிர்தன் னுண்மையைவிட் டூனுடலாய்**
**விண்மையே போன்ற விடயத்தைக் - கண்மயலாய்க்**
**கண்டு கலங்கலே காரவிச்சை துன்றுமனம்**
**மண்டுசமு சார மயல்.**

உண்மை அளவா ஒளிர் தன் உண்மையை விட்டு ஊன் உடல் ஆய் விண்மையே போன்ற விடயத்தைக் கண் மயல் ஆய்க் கண்டு கலங்கலே கார் அவிச்சை துன்று மனம் மண்டு சமுசார மயல்.

**கண் மயலாய்-தோஷ திருஷ்டியாய்.**

### 615. உண்மையிலே தானலதின் றேனுமுட லேதானா
### உண்மயலா லெண்ணு முயக்கமே - திண்மையாம்
### அத்துவிதா னந்த வமுதத் துவங்கழன்று
### செத்துப் பிறக்குந் திறம்.

உண்மையிலே தான் அலது இன்றேனும் உடலே தானா உள் மயலால் எண்ணும் முயக்கமே திண்மை ஆம் அத்துவித ஆனந்த அமுதத்துவம் கழன்று செத்துப் பிறக்கும் திறம்.

**தான் அலது இன்றேனும்-தன்னைத் தவிர வேறு ஒன்றும் இல்லையாயினும்; முயக்கமே-மயக்கமே.**

### 616. சமுசார மென்பதுதஞ் சித்தமே யந்தச்
### சமுசார மற்றுச் சரிப்போர் - சமுசாரந்
### தன்னி லுடல்வினையாற் சாரினுமெய்ஞ் ஞானவெளி
### தன்னி லுலாவுகின் றார்.

சமுசாரம் என்பது தம் சித்தமே அந்தச் சமுசாரம் அற்றுச் சரிப்போர் சமுசாரம் தன்னில் உடல் வினையால் சாரினும் மெய்ஞ்ஞான வெளி தன்னில் உலாவு கின்றார்.

**சரிப்போர்-இருப்பவர்கள்.**

சித்தமே சம்சாரமாதலின் மனமிறக்கப்பெற்ற ஞானிக்கு உண்மையில் பந்தமில்லை. பூர்வ வினையென்பதும் அவனுக்குக் கற்பனையே யாதலின் தேகம் கூடப்பெற்று பிறர் திருஷ்டியில் அவன் பந்தனாகக் காணப்படினும், நிஜமாக அகண்ட சிதம்பரத்தில் உலாவுகின்றான்.

## 22. பிரதிபந்தத்திறன்

### 617. இடியேறு போற்பல் லிடையூறு செம்மா
### ணடியாரை யாற்ற வடர்த்தல் - ஒடியா
### நிலைநிறுத்தற் கன்றியந் நின்மலர்தந் நெஞ்சை
### உலைவுறுத்தற் கன்றென் றுணர்.

இடி ஏறு போல் பல் இடையூறு செம்மாண் அடியாரை ஆற்ற அடர்த்தல் ஒடியா நிலை நிறுத்தற்கு அன்றி அந் நின்மலர் தம் நெஞ்சை உலைவு உறுத்தற்கு அன்று என்று உணர்.

**இடியேறுபோல்-இடிபோன்ற; ஆற்ற அடர்த்தல்-மிகுதியாய் வந்து வருத்துதல்; ஒடியா-ஒடியாமல், தளர்வுறாமல்; உலைவுறுத்தல்-துன்புறுத்தல்.**

## 618. மேதகுதன் னெஞ்சம் விதிராதே யூழாற்சேர்
## நோதகவு முற்றுந்தா னோன்றிடுக - நீதவுயிர்க்
## குய்வைத் தரவஃ துளத்தை யுரம்பெறுத்தும்
## தெய்வத் திருவருளாத் தேர்ந்து.

மேதகு தன் நெஞ்சம் விதிராதே ஊழால் சேர் நோதகவு முற்றும் தான் நோன்றிடுக நீத உயிர்க்கு உய்வைத் தர அஃது உளத்தை உரம் பெறுத்தும் தெய்வத் திரு அருளாத் தேர்ந்து.

**மேதகு-பக்குவத்தால் மேன்மையுற்ற; விதிராதே-பரபரப்பு அடையாதே; நோதகவு-துன்பம்; நோன்றிடுக-சகித்துக்கொள்க; நீத-தகுதியான; பெறுத்தும்-பெறவைக்கும்; தேர்ந்து-தெரிந்துகொண்டு.**

## 619. கடைவா லலதுசுரங் கத்துமணி சோபை
## படையாத வந்தப் பரிசே - தடையாய
## சோதனையா லன்றிச் சுடரா தொருவன்செய்
## சாதனையா முண்மைத் தவம்.

கடைவால் அலது சுரங்கத்து மணி சோபை படையாத அந்தப் பரிசே தடை ஆய சோதனையால் அன்றிச் சுடராது ஒருவன் செய் சாதனை ஆம் உண்மைத் தவம்.

**படையாத-அடையாத.**

## 620. உருள்பெருந்தேர் வீதிவழி யோடிநிலை சேர
## அரியவச் சாணியே யன்றி - இருமருங்கும்
## சென்றுமடுக் காதுதடை செய்ம்முட்டுக் கட்டையுந்தான்
## இன்றி யமையாத தே.

உருள் பெரும் தேர் வீதி வழி ஓடி நிலை சேர அரிய அச்சாணியே அன்றி இரு மருங்கும் சென்று மடுக்காது தடை செய்ம் முட்டுக்கட்டையும் தான் இன்றி அமையாததே.

**உருள்-உருண்டு செல்லும்; மருங்கும்-பக்கத்திலும்; மடுக்காது-மோதாது.**

உருண்டோடும் பெருந்தேர் வீதி வழியே ஒழுங்குபெற வோடி இருப்பிடமெய்த வேண்டின், அது தானிரண்டட்டமுந் தாறுமாறாகப் பாய்ந்து மடுக்காமல் அதன் கதியைத் தடை செய்தலான் முட்டுக்கட்டை, அத்தேரோட்டத்துக் கத்தியாவசியமான அச்சாணி போலத் தானுமின்றி யமையாததாம். அதுபோல் சாதகன் வாழ்வில் பிரதிபந்தங்களும் உரன் பெரும் பொருட்டு ஈசனருளால் அமைவனவாம்.

**வி-ரை:-** அவ்வளவு பெருந்தேர் அச்சிற்றாணியின்றித் தன்னிடத்திற் புடை பெயரவும் மாட்டாமையால் அரிய வச்சாணி யென்றார்.

''உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து'' -குறள்.

இது பிறிது மொழிதல்.

''யோகம் பயிலு மிளவலுக்கிங் கென்ன வலுவல்'' எனத்தன் முன்னோன் றடுத்த தடையன்றோ, பள்ளியிற் பயின்று வந்த பதினாறாட்டை வாலிபனை உலக முழுதும் ஒருங்கு போற்றும் பகவான் ரமணனாக்கியது. ஆயின், ஒரு நற்செயல், ஒருவனாற்றுந் தடையே பற்றுக்கோடாய் வளர்ந்து முடிவில் நன்மை பயப்பது அத்தடை யாற்றுவான் நன்னோக்குடையனாய வழித்தான் என்ற நியமம் என்றுமில்லை. அத்தடைப்பட்டான் தவப்பயனால், கெட்ட நோக்கொடு பட்ட தடையும் நன்மை பயப்பதும், தடையாற்றுவான் நன்னோக் குடையனாய வழியும் அவன் குறிப்பொடு படாது அதற்கு நேர்மாறுபட்டு யாரு மெதிர் பார்க்க முடியாத வேறொரு விசேட நன்மை விளைவதும் ஒரோ வழியுண்டு. பின்னதற்கு முன்னுரைத்த முனி ரமணோபாக்கியானம் தக்க சான்றாம். உபமானம் என்றும் ஒரு புடையே யுறுதலால், உபமேயத்துள் உரையிற் கோடலா லிவ் வேறு பாடெல்லா மேற்றறக்கண் இழுக்கொன்று மின் றென்க.

## 23. மாயாவிசித்திரத்திறன்

### 621. ஒன்றே பலவாக வுற்பவியா துற்பவித்து
### நன்றோடு தீது நயந்தாற்போற் - றொன்றாதி
### இன்றளவு மென்றுநா லேழ்பிறப்பு மெய்திமுத்தி
### வென்றடைவ தென்ன வியப்பு.

ஒன்றே பலவாக உற்பவியாது உற்பவித்து நன்றோடு தீதும் நயந்தால் போல் தொன்று ஆதி இன்று அளவும் என்றும் நால் ஏழ் பிறப்பும் எய்தி முத்தி வென்று அடைவது என்ன வியப்பு.

**நயந்தாற்போல்-அடைந்தாற் போல்.**

### 622. தானதுவா யென்றுந் தனித்திருந்தே தானதனை
### ஏனையது போலே யிசைந்திடுதற் - கானமுறை
### மேற்கொண் டுழைக்கு மிறைபோலே காணுங்கால்
### ஏற்குமிறும் பூதொன் றிலை.

தான் அதுவா என்றும் தனித்து இருந்தே தான் அதனை ஏனையது போலே இசைந்திடுதற்கு ஆன முறை மேற்கொண்டு உழைக்கும் மிறை போலே காணுங்கால் ஏற்கும் இறும்பூது ஒன்று இலை.

**ஏனையது போலே-அன்னியம் போலவும்; இசைந்திடுதற்கு-அடைவதற்கு; மிறை-வருத்தம்; இறும்பூது-ஆச்சரியம்.**

## 24. புகழ்ச்சிநவைத்திறன்

**623. பரமாய தன்னைவெறும் பாழுடல மாகப்
பிரமாத மாற்றும் பிழையால் - உரன்மேற்கொண்
டாற்ற வெறுத்தக்க தன்றி யறிஞராற்
போற்றத் தகாது புகழ்.**

பரம் ஆய தன்னை வெறும் பாழ் உடலம் ஆகப் பிரமாதம் ஆற்றும் பிழையால் உரன் மேற்கொண்டு ஆற்ற வெறுத்தக்கது அன்றி அறிஞரால் போற்றத் தகாது புகழ்.

**உரன் மேற்கொண்டு-வலிமையுடன்; வெறுத்தக்கது-வெறுக்கத்தக்கது.**

**624. யாவனே தன்னை யிலக்கும் பிறர்சுட்டுக்
காவலா லன்னோனவ் வாயிலாற் - காவலறக்
கொன்னேதா னேற்படுத்திக் கொள்கின்றான் மேற்கொண்ட
தன்சா தனைக்குத் தடை.**

யாவனே தன்னை இலக்கும் பிறர் சுட்டுக்கு ஆவலால் அன்னோன் அவ் வாயிலால் காவல் அறக் கொன்னே தான் ஏற்படுத்திக் கொள்கின்றான் மேற்கொண்ட தன் சாதனைக்குத் தடை.

**இலக்கும்-பிரகடனப்படுத்திக் கொள்வானோ; கொன்னே-வீணே.**

யாவனொருவன் கீர்த்தி முதலிய விழைதலால், பிறர் சுட்டுக் காவலாய் அவர் சுட்டில் விளங்க முயற்சிக்கிறானோ அவன் காவலிழந்து தன் சாதனைக்குத் தடையைத்தானே ஏற்படுத்திக் கொள்கின்றானென்றார். **இதனால் அநாமதேய வாழ்வு சாதகர்க்கு மிகவும் வேண்டப்படுவதென்பது புலன்.**

## 25. ஆணவநவைத்திறன்

**(கலி விருத்தம்)**

**625. ஆணவ மாமவ் வருநர காட்சி
பேண வொணாத பெரும்பிழை யாகும்
காண வொணாவக் கலிபுரு டன்முகம்
வீணர்க ளன்றி வெறாதவர் யாரே.**

ஆணவம் ஆம் அவ் அரு நரகு ஆட்சி பேண ஒணாத பெரும்பிழை ஆகும் காண ஒணா அக் கலி புருடன் முகம் வீணர்கள் அன்றி வெறாதவர் யாரே.

**வெறாதவர்-வெறுக்காதவர்.**

**(நேரிசை வெண்பா)**

**626. நிட்டா பரர்முன் னிமிர்ந்துதா முட்கார்ந்து**
**கொட்டாவி விட்டுங் குறோட்டைவிட்டுங் - கெட்ட**
**அனந்தலையாள் கின்ற வடாப்பயிற்சி யிந்த**
**நனந்தலைஞா லத்தோர் நவை.**

நிட்டாபரர் முன் நிமிர்ந்து தாம் உட்கார்ந்து கொட்டாவி விட்டும் குறோட்டை விட்டும் கெட்ட அனந்தலை ஆள்கின்ற அடாப் பயிற்சி இந்த நனந்தலை ஞாலத்தோர் நவை.

**அனந்தலை ஆள்கின்ற-தூங்குகின்ற; அடாப்பயிற்சி-கூடா ஒழுக்கம்; நனந்தலை ஞாலம்-இடம் அகன்ற பூமி; நவை-குறைபாடு.**

முத்தர்முன் வந்துசேரும் உலகத்தவரின் தோடத்தைக் குறிக்கின்றார். முத்தர் சாந்நித்யம் அரிதரிதாதலின் அந்நிலையில், தன்னிழப்பைப்பெற ஏங்காமல் அஞ்ஞான விருளாகிய துயிலில் ஆழ்பவர், தம்மைத்தாமே கொல்பவ ராகின்றார். மனம் கூர்மையாகவும் தெளிவாகவும் இருத்தலின்றிக் கொட்டாவி, குறட்டை மேவல் தாமசத்தின் சேட்டைகளாம்.

## 26. துக்கோற்பத்தித்திறன்

**627. இன்பமய மாந்தன் னியல்வேறாய்த் தான்பிறவித்**
**துன்பவெயி லாலே துடிப்பதெலாம் - வம்பால்**
**அறிவு தொழிற்பட் டலமருமா மோக**
**வெறிசே ரகந்தை விளைவு.**

இன்பமயம் ஆம் தன் இயல் வேறாய்த் தான் பிறவித் துன்ப வெயிலாலே துடிப்பது எலாம் வம்பால் அறிவு தொழிற்பட்டு அலமரும் மா மோக வெறி சேர் அகந்தை விளைவு.

**628. ஆசுரசம் பத்துக் கடிப்படைதே கத்தோடு**
**காசுறுசம் பந்தவகங் காரமே - பாச**
**மமதையுற வாற்கொழுக்கு மாயவகங் காரர்**
**அமைதியுற லம்மா வரிது.**

ஆசுர சம்பத்துக்கு அடிப்படை தேகத்தோடு காசு உறு சம்பந்த அகங்காரமே பாச மமதை உறவால் கொழுக்கும் மாய அகங்காரர் அமைதி உறல் அம்மா அரிது.

**காசு உறு-குற்றமுள்ள.**

# 27. ஜீவபோதத்திறன்

**629. வேனில்வா யோடி வெதும்புவதுந் தண்ணிழல்வாய்த்
தானெய்தி வெப்பந் தணிவதும்போல் - ஈனவுயிர்
இவ்வுலகத் தோடி யிளைப்பதுமீண் டுண்ணாடி
அவ்விதயத் தாறுவது மாம்.**

வேனில்வாய் ஓடி வெதும்புவதும் தண் நிழல்வாய்த் தான் எய்தி வெப்பம் தணிவதும் போல் ஈன உயிர் இவ் உலகத்து ஓடி இளைப்பதும் மீண்டு உள் நாடி அவ் இதயத்து ஆறுவதும் ஆம்.

**630. வேனிலெறி யுண்ட விவேகி நிழல்விட்டு
வேனிலுற மீளா விதம்போல - வேனில்
உலகடுமுத் தாபமுழந் தோரு முளம்விட்
டுலகடைய மீள வொணாது.**

வேனில் எறி உண்ட விவேகி நிழல் விட்டு வேனில் உற மீளா விதம் போல வேனில் உலகு அடும் முத்தாபம் உழந்தோரும் உளம்விட்டு உலகு அடைய மீள ஒணாது.

**மீளா-திரும்பாத: அடும்-வருத்துகின்ற.**

**631. உண்மைப் பொருளி னுதித்த வுடலுயிரவ்
வுண்மைப் பொருளி னொடுங்களவும் - திண்ணமாய்
எத்தடைக்கு நில்லா திருவிசும்பிற் சேர்பறவைக்
கித்தரைக்க ணன்றிநிலை யின்று.**

உண்மைப் பொருளின் உதித்த உடல் உயிர் அவ் உண்மைப் பொருளின் ஒடுங்கு அளவும் திண்ணமாய் எத்தடைக்கும் நில்லாது இரு விசும்பில் சேர் பறவைக்கு இத்தரைக்கண் அன்றி நிலை இன்று.

**இரு-அகன்ற.**

**632. வந்த வழியே மறித்துயிர்மூ லம்புக்காற்
சொந்த சொரூபமுறத் தோய்தலாற் - புந்திக்கச்
சொச்சொருபா னந்தந் துளங்கி விளங்கவே
நிச்சலமா நிற்கு நிலை.**

வந்த வழியே மறித்து உயிர் மூலம் புக்கால் சொந்த சொரூபம் உறத் தோய்தலால் புந்திக்கு அச் சொச்சொருப ஆனந்தம் துளங்கி விளங்கவே நிச்சலமா நிற்கும் நிலை.

**மறித்து-திரும்பி.**

**633. தெய்வத் திருவருளைச் சிந்தியா தேசிந்தித்**
**துய்வதன்றி நானென் றுருத்தெழுந்து - செய்வதெவன்**
**நானெனுமப் பேயகந்தை நாட்டமற நாடியகந்**
**தானதுவா மோனந் தரி.**

தெய்வத் திரு அருளைச் சிந்தியாதே சிந்தித்து உய்வது அன்றி நான் என்று உருத்து எழுந்து செய்வது எவன் நான் எனும் அப் பேய் அகந்தை நாட்டம் அற நாடி அகம் தான் அது ஆம் மோனம் தரி.

**உருத்து-உருக்கொண்டு.**

## 28. ஜீவவசத்தத்திறன்

**634. இருள்சே ருலகத் திறைவனது சுத்த**
**வருளொளியா லன்றித்தம் மாலே - மருள்சே**
**ரிருளின் கணுமொளியா யேய்ந்தமெய்ஞ் ஞானப்**
**பொருளின்பந் துய்த்த லரிது.**

இருள் சேர் உலகத்து இறைவனது சுத்த அருள் ஒளியால் அன்றித் தம்மாலே மருள் சேர் இருளின்கணும் ஒளியாய் ஏய்ந்த மெய்ஞ்ஞானப் பொருள் இன்பம் துய்த்தல் அரிது.

**இருளின் கணும்-இருளிலும்; ஏய்ந்த-விளங்குகின்ற.**

அருளின்றி சொரூப தரிசன மில்லை யென்றார். ‘‘அருளும் வேணுமே’’ யென்பது ஸ்ரீ பகவான் வாக்கு. தம் வலிமையால் ஞானம் சித்திக்குமென நினைப்போர், அருள் வலியில் சரண்புகு மட்டும் ஞானம் பெறார்.

## 29. திருசியவுண்மைத்திறன்

**635. காணு முலகுதனைக் காண்பானைக் கண்டெள்ளி**
**நாணத்தன் னுள்ளே நகைப்பதாம் - காணுமதற்**
**கின்றியமை யாத்தன் னியல்புண்மை காணான்மெய்**
**யென்றதனைக் காணு மிடத்து.**

காணும் உலகு தனைக் காண்பானைக் கண்டு எள்ளி நாணத் தன் உள்ளே நகைப்பதாம் காணும் அதற்கு இன்றி அமையாத் தன் இயல்பு உண்மை காணான் மெய் என்று அதனைக் காணும் இடத்து.

தானன்றி உலகமின்மையின் தன்னை மறந்து, அன்னிய மாகவும் தன்னின்றும் வேறுபட்ட சத்தாகவும் உலகைக் காணும் அஞ்ஞானியை அவ்வுலகே பரிகசிப்ப தென்றார். இதனால் தனதுண்மை அறியாமல் உலகுண்மை ஆராய்வது மூடமென்பது உட்கருத்து.

**636. ஒளியினுக் குள்ளே யுறும்பொருள்க ளன்றி**
**வெளியிலுள சற்றும் விளங்கா - உளத்து**
**நினைப்புமறப் பாக நிகழறிவுட் பட்டே**
**யனைத்து மறிபடுப வாம்.**

ஒளியினுக்கு உள்ளே உறும் பொருள்கள் அன்றி வெளியில் உள சற்றும் விளங்கா உளத்து நினைப்பு மறப்பு ஆக நிகழ் அறிவு உட்பட்டே அனைத்தும் அறிபடுப ஆம்.

அறிவாகிய வொளியின் தோற்றமாகவே அறிபடுபொருள்கள் உள. அவ்வொளியின்றித் தோற்ற மின்மையால். உள், வெளி யென்பது உண்மையில் நிலைக்காமல் பொய்யான தேகத்தைப் பற்றிய சொற்களே. வெளிப் பொருள்கள் யாவும் மனத்தின் உட்கிடையாகிய அறிவின்றி அறியப்படா.

**637. எதிர்வதனால் யாதொன் றிருக்கின்ற தென்னு**
**மதுவமைவ தன்றி யதன்மேற் - கதுவுபுலன்**
**தோற்றுமதே யுள்ளவதன் சொந்த சொரூபமாத்**
**தேற்ற மமையாது தேர்.**

எதிர்வதனால் யாது ஒன்று இருக்கின்றது என்னும் அது அமைவது அன்றி அதன்மேல் கதுவு புலன் தோற்றும் அதே உள்ள அதன் சொந்த சொரூபமாத் தேற்றம் அமையாது தேர்.

**எதிர்வதனால்-எதிர்ப்படுவதனால்; கதுவு-பற்றுகின்ற; தேற்றம்-முடிவு.**

அநுபவங்கள் எதிர்வதும் சொரூபத்திலேயே நிகழ்வன. ஐம் புலன்களால் அறியப் படுவ தெல்லாம் அறிவின் உருவே யாதலால், புலத் தோற்றம் சொரூப மின்றி அமையாது. இந்நூலாசிரியரும் பிறவிடத்தில்,'' பாசாடவியாகப் பார்த்த வெலாம் - பேசாத மெய்ஞ்ஞான மோன வெளியன்றி வேறில்லை'' (பாடல் 1240) என இவ்வுண்மையை அருமையாக விளக்கினார்.

**638. நோக்காலே சுட்டி யெதனையுநீ நோக்காது**
**நோக்காலந் நோக்கையே நோக்குவையேல் - நோக்கமாந்**
**தன்மாத் திரமாத் தழைப்பதனா லெல்லாம்பின்**
**னுன்மாத மாஞ்சுட் டுணர்வு.**

நோக்காலே சுட்டி எதனையும் நீ நோக்காது நோக்கால் அந் நோக்கையே நோக்குவையேல் நோக்கம் ஆம் தன் மாத்திரமாத் தழைப்பதனால் எல்லாம் பின் உன்மாதம் ஆம் சுட்டு உணர்வு.

**உன்மாதம்-வெறி.**

சுட்டுணர் வொழிதலே ஞானமென்றார். தாயுமானவரும் ''தம்மறிவின் சுட்டாலே யாமோ?'' என்பது காண்க. எதனையும் சுட்டி நோக்காமல், காணும்

கண்ணாகிய தன்னிடத்தே மனதைப் பதித்தலால், மெல்ல மெல்ல சொரூப ஞானம் தழைத்தோங்கும். அந்நிலை கண்டவர்க்கு விடய ஞானமெல்லாம் கேவலம் பித்தலாட்டமே.

**639. காண்பவனுங் காண்பொருளும் வெவ்வேறு சத்தையேற்
காண்பதொரு காலுங் கடவதன்றாம் - காண்ப
தியல்வதா லன்ன விரண்டுமே காணிற்
பயிலு மொரேசத்தை பார்.**

காண்பவனும் காண் பொருளும் வெவ்வேறு சத்தையேல் காண்பது ஒரு காலும் கடவது அன்று ஆம் காண்பது இயல்வதால் அன்ன இரண்டுமே காணில் பயிலும் ஒரே சத்தை பார்.

**பயிலும்-இருக்கின்ற.**

காண்பவனும் காணப்படுபொருளும் (த்ருச்யம்) வேறு வேறு சத்தாகில், காட்சி என்பதே இயலாததாம். காட்சி இயல்வதால், அவ்விரண்டையும் ஒரே சத்தாக அறிதல் வேண்டும். இதனால் சொரூபத்தினின்றும் வேறுபட்ட காண் பொருளோ, காட்சியோ உண்மையில் இல்லை யென்றறியவும்.

## 30. சுட்டுணர்வுத்திறன்

**640. சும்மா விருக்கத் துலங்கும்பே ரின்பத்துக்
கம்மாதா னாற்ற வலைந்திடுதல் - செம்மாப்பப்
போக்குவர வில்லாப் பொருளாகத் தன்னையாய்ந்
தூக்கமிகு மின்ப முறற்கு.**

சும்மா இருக்கத் துலங்கும் பேர் இன்பத்துக்கு அம்மா தான் ஆற்ற அலைந்திடுதல் செம்மாப்பப் போக்கு வரவு இல்லாப் பொருளாகத் தன்னை ஆய்ந்து ஊக்கம் மிகும் இன்பம் உறற்கு.

**அம்மா-ஆச்சரியச்சொல்; ஆற்ற-மிகவும்; செம்மாப்ப-பெருமிதத்தோடு.**

**641. தானேதா னாகச் சமைந்திருக்க வன்னியம்போற்
றானே தனைத்தேடிச் சார்ந்திடுதல் - தானேதில்
அன்னியம்போற் றோன்றிடினு மத்தா னனனியமென்
றுன்னியுணர் வோய்ந்து விடற்கு.**

தானே தான் ஆகச் சமைந்து இருக்க அன்னியம் போல் தானே தனைத் தேடிச் சார்ந்திடுதல் தான் ஏது இல் அன்னியம் போல் தோன்றிடினும் அத்தான் அனனியம் என்று உன்னி உணர்வு ஓய்ந்து விடற்கு.

**தேடிச் சார்ந்திடுதல்-தேடுதல்; ஏதில்-ஹேது இல்-சம்பந்தமற்ற;
அத்தான்-அந்தத்தான்; உணர்வு-அன்னிய உணர்வு; விடற்கு-விடுவதற்கு.**

## 642. தன்னையே யல்லால்வே றாகாத தத்துவத்தைத்
## தன்னிலே வேறாகத் தானினைந்து - தன்னுஞற்றால்
## உற்றிடுவான் வேண்டி யுழைத்திடுதல் தன்னிழலைப்
## பற்றிடுவா னோடிவிட் டற்று.

தன்னையே அல்லால் வேறு ஆகாத தத்துவத்தைத் தன்னிலே வேறு ஆகத் தான் நினைந்து தன் உஞற்றால் உற்றிடுவான் வேண்டி உழைத்திடுதல் தன் நிழலைப் பற்றிடுவான் ஓடிவிட்டு அற்று.

**தன்னிலே-தன்னினும்; உஞற்றால்-சாதனையால்; உற்றிடுவான்-அடைவதற்காக; பற்றிடுவான்-பற்றுவதற்கு; ஓடிவிட்டு-ஓடுதல்; அற்று-அதைப் போன்றது.**

## 643. உள்ளதாந் தானே யுணர்வொளியா யுள்ளத்துட்
## டெள்ளென் றகமாத் தெரிதலாற் - கள்ளமிலாக்
## கண்ணாமச் செம்பொருளே கண்கூடாங் கட்புலத்து
## நண்ணும் விடயமன்று நாடு.

உள்ளது ஆம் தானே உணர்வு ஒளியாய் உள்ளத்து உள் தெள் என்று அகமாத் தெரிதலால் கள்ளம் இலாக் கண் ஆம் அச் செம்பொருளே கண்கூடு ஆம் கண் புலத்து நண்ணும் விடயம் அன்று நாடு.

**கள்ளம்-பொய்; கண் கூடு ஆம்-பிரத்யக்ஷமாம்; நாடு-தெரிந்துகொள்.**

''உன்னை ஓலமிட்டலறி யுலகெலாந் தேடியும் காணேன்'' என்பது மணிவாசகர் வாக்கு. நாம் பலவற்றைக் காணலால் மெய்ப் பொருளும் அவ்வாறே வெளியிற் புலனாமென நாடிப் பேதுறுகிறோம். உண்மையில் அஃதே நம்முயிர்க்குயிராய் தோஷமற்ற கண்ணாவதால், அகக்காட்சியில் உள்ளம் தோய்ந்து அதைக்கண்டு மகிழல் வேண்டும்.

## 644. நீக்கமற நெஞ்சகத்தே நின்றொளிர்சச் சித்துருவைச்
## சூக்கமா நோக்கித் துலங்காதோர் - தாக்குமதி
## மோகவகங் கார முனைப்பான சுட்டறிவால்
## மாழ்கலுற்றார் மாயா மயத்து.

நீக்கம் அற நெஞ்சு அகத்தே நின்று ஒளிர் சத் சித்து உருவைச் சூக்கமா நோக்கித் துலங்காதோர் தாக்கும் அதி மோக அகங்கார முனைப்பு ஆன சுட்டு அறிவால் மாழ்கல் உற்றார் மாயா மயத்து.

**துலங்காதோர்-விளங்கிக்கொள்ளாதவர்கள்; மாழ்கலுற்றார் - மயங்கலுற்றார்; மாயா மயத்து-நிறைந்த மாயையில்.**

## 31. சுட்டறுத்தற்றிறன்

### 645. தன்மெய் யறியநூல் சாற்றுவதன் றாற்பரியம்
### அன்னியச்சுட் டாம்பொய் யறிவறலாம் - என்னை
### இருக்கின்றேன் யானென் றியார்க்குமே தன்மெய்
### யருக்கன்றான் போலவிர்த லால்.

தன் மெய் அறிய நூல் சாற்றுவதன் தாத்பரியம் அன்னியச் சுட்டு ஆம் பொய் அறிவு அறல் ஆம் என்னை இருக்கின்றேன் யான் என்று யார்க்குமே தன் மெய் அருக்கன் தான் போல் அவிர்தலால்.

**அருக்கன்-சூரியன்; அவிர்தலால்-விளங்குவதால்.**

தன் சொரூபத்தை யுணரும் பொருட்டு வேதாந்த போதனை புரிதலின் தாத்பரியம் அன்னியச் சுட்டாகிய பொய்யறிவு அறலே. ஏனெனின், யான் இருக்கின்றேன் என்ற மெய்யுணர்வு என்று முள்ளதால் பொய்ச்சுட் டற்றவிடத்துத் தானே தழைக்கு மென அறிக.

### 646. சுட்டறிவு நோக்கத் துலங்கா வருள்விளக்கம்
### சுட்டறிவு கெட்டாற் றுலங்குவதாம் - பெட்டுமிக
### யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
### றானோக்கி மெல்ல நகும்.

சுட்டு அறிவு நோக்கத் துலங்கா அருள் விளக்கம் சுட்டு அறிவு கெட்டால் துலங்குவது ஆம் பெட்டு மிக யான் நோக்குங்காலை நிலன் நோக்கும் நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்.

**பெட்டு-பெண் (தலைவி); நிலன்-நிலத்தை.**

### 647. அதனைநோக் காதே யிதனைநோக் காதே
### யெதனையுநீ நோக்கா திருப்பின் - மதன்சே
### ரிருப்புநோக் காலே யெலையில்சிதா காசப்
### பரப்புநோக் காம்பொருளா வாய்.

அதனை நோக்காதே இதனை நோக்காதே எதனையும் நீ நோக்காது இருப்பின் மதன் சேர் இருப்பு நோக்காலே எலை இல் சிதாகாசப் பரப்பு நோக்கு ஆம் பொருள் ஆவாய்.

**நோக்காதே–நோக்காமல்; மதன்-வலிமை; எலை இல்-எல்லையில்லாத.**

இஃது ''சும்மாவிருத்தல்'' என்ற ஞான லக்ஷணத்தைக் கூறுகிறது. அதுவே சுட்டுணர் வொழிதல் என்றலுமாம். பொருளையோ அல்லது அது இது என்னும் பொருளல்லவற்றையோ எதையும் சுட்டா தொழியின், வலிமைபெற்ற ஞான உணர்வினாலே வரம்பின்றி விளங்கும் சிதாகாசப் பெருவெளியாவாய்.

ஓராமலே யொருகால் உன்னாமல் உள்ளொளியைப்
பாராமல் உள்ளபடி பார்த்திருந்தால் - வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளம்
தத்திக் கரைபுரண்டு தான்.

-தாயுமானவர்.

சும்மா விருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே.

- கந்தரனுபூதி.

**648. ஆர்வமொடு தன்னையடிக் கர்ப்பணஞ்செய் தால்வெளியாம்**
**தேவனரு ளாலே தெரிவதலாற் - சீவ**
**மதியூக்கங் கொண்டு மதித்துணர லாகா**
**அதிசூக் குமமெய் யறி.**

ஆர்வமொடு தன்னை அடிக்கு அர்ப்பணம் செய்தால் வெளி ஆம் தேவன் அருளாலே தெரிவது அலால் சீவ மதி ஊக்கம் கொண்டு மதித்து உணரல் ஆகா அதி சூக்குமம் மெய் அறி.

**அடிக்கு-ஈசனடிக்கு.**

**649. கலையனைத்துங் கேள்வியொடு கற்றுணர்ந்துங் கேட்டும்**
**நிலையெனைத்துந் தேராது நேடி - அலையன்மின்**
**அற்பே வடிவா வமர்ந்த பொருண்மயமாய்**
**நிற்பே பரம நிலை.**

கலை அனைத்தும் கேள்வியொடு கற்று உணர்ந்தும் கேட்டும் நிலை எனைத்தும் தேராது நேடி அலையன்மின் அற்பே வடிவா அமர்ந்த பொருள் மயமாய் நிற்பே பரம நிலை.

**நிலை-நிஷ்டை; எனைத்தும்-எதுவும்; நேடி-தேடி; அலையன்மின்-அலையாதீர்கள்; அற்பே-அன்பே; நிற்பே-நிற்பதே.**

## 32. அன்புண்மைத்திறன்

**650. ஏழா வதுருசியா வெண்ணுவார் மற்றெதற்கும்**
**தாழாத வார்வருசி தாமுணரார் - ஊழானே**
**பேதருசி யாய பிறருசிக்குப் பெட்பளிக்கும்**
**ஆதிருசி யாகுமவ் வன்பு.**

ஏழாவது ருசியா எண்ணுவார் மற்று எதற்கும் தாழாத ஆர்வ ருசி தாம் உணரார் ஊழானே பேத ருசியாய பிற ருசிக்குப் பெட்பு அளிக்கும் ஆதி ருசி ஆகும் அவ் அன்பு.

**தாழாத-இன்றியமையாத; ஊழானே-தொன்றுதொட்டு; பேத-வெவ்வேறான; பெட்பு-விருப்பம்.**

**651. நன்சுவையே ழென்ன நவில்வார் நவிலருமன்
பின்சுவைதாந் தேறாத வேழையார் - நன்சுவையாம்
அன்புருசி நன்கறிந்தோ மாதலினவ் வொன்றேதான்
இன்பருசி யென்போ மியாம்.**

நன் சுவை ஏழு என்ன நவில்வார் நவில் அரும் அன்பின் சுவை தாம் தேறாத ஏழையார் நன் சுவை ஆம் அன்பு ருசி நன்கு அறிந்தோம் ஆதலின் அவ் ஒன்றேதான் இன்ப ருசி என்போம் யாம்.

**ஏழையார் - மந்த மதியுள்ளவர்.**

**652. அன்புண்மை தன்னை யறிந்தாலே வாழ்வினது
மொய்ம்புடைய சிக்கன் முடிச்சவிழும் - அன்னைது
மேதகவு சேர்ந்தாலே வீடுபெற வெய்தியதாம்
ஓதுசம யத்தி னுளம்.**

அன்பு உண்மை தன்னை அறிந்தாலே வாழ்வினது மொய்ம்பு உடைய சிக்கல் முடிச்சு அவிழும் அன்பினது மேதகவு சேர்ந்தாலே வீடுபெற எய்தியது ஆம் ஓது சமயத்தின் உளம்.

**மொய்ம்புடைய-வலிய; மேதகவு-மேன்மை; சமயம்-மதம்; உளம்-உட்கிடக்கை.**

**653. தெள்ளியமெய்ஞ் ஞானத் திருவினர்ச்சேர் வார்மெய்யன்
புள்ளங் கொளவேண்டு முண்மையே - விள்ளுவதாம்
கையுறையோ டன்றிவெறுங் கையொடுகா ணற்கவென
மெய்யுறுசான் றோர்சொல் விதி.**

தெள்ளிய மெய்ஞ் ஞானத் திருவினர்ச் சேர்வார் மெய் அன்பு உள்ளம் கொள வேண்டும் உண்மையே விள்ளுவது ஆம் கை உறையோடு அன்றி வெறும் கையொடு காணற்க என மெய் உறு சான்றோர் சொல் விதி.

**ஞானத் திருவினர்-ஞானச்செல்வர்கள்; விள்ளுவது-சொல்லுவது;
கையுறை-காணிக்கை; காணற்க-காணாதே; மெய் உறு-சத்தியத்தை அடைந்த.**

''காணிக்கை யேதாகிலுங் கைக் கொண்டன்றி வெறுங் கையொடு போய்க் காணற்க'' வென உண்மை யுணர்ந்த பெரியாரைப் பற்றிச் சொன்ன விதி, தெளிந்த அம்மெய்ஞ் ஞானச் செல்வரை அன்னாரருள் வேண்டிச் சார்வோர், அன்னாரிடத்து மெய்யான காதலைத் தம்முளநிறையக் கொள்ளவேண்டுவதா முண்மையையே குறித்துக் கூறுவதாம்.

**வி-ரை:-** ஏனைய காணிக்கைகள் என்றும் எவர்க்கும் இயையா வாகலானும், இயைந்த விடத்தும் மெய்யன்பிலாவழி அவைதாம் பயனிலவாகலானும், ஏனையவை யாவும் இலவாயினும், அவ்வொன்று மட்டும் உளதாயின் அதன் பெருக்கமே, இல்லாதொழிந்த அவற்றின் குறைகளை யெல்லாம் இனிது நிரப்பி

விடுதலானும் பிறவற்றினும் அதற்குள்ள சிறப்பு இதனாலுணர்த்திய வாறாயிற்று. மெய்யன்புடையார் தம்மாலியன்ற காணிக்கைகளைக் கைக் கொண்டன்றிப் பெரியார்பாற் சேரா‌ராகலின் அதுதான் நூல்களா லெடுத்துக்கூற வேண்டுவதொன்றன்றாம். கடவுளர் முதலிய ஏனையார் திறத்தும் இஃதொக்கும். கையுறை-கையின்கணுறுவதெனக் காணிக்கைக்குக் காரணப்பெயர். சான்றோர் - கல்வியறிவொழுக்கங்களா னிறைந்தோர்.

**654. அன்பை யடக்கலா லொன்றோ விபரீத**
**வம்பினா லத்தை வழங்கலாற் - றுன்பம்**
**எனப்படுவ யாவற்றா லேயுமுயிர் பற்றித்**
**தினப்படுவ தாகுஞ் செறுத்து.**

அன்பை அடக்கலால் ஒன்றோ விபரீத வம்பினால் அத்தை வழங்கலால் துன்பம் எனப்படுவ யாவற்றாலேயும் உயிர் பற்றித் தினப்படுவது ஆகும் செறுத்து.

**அத்தை-அதை; வழங்கலால்-வழங்குவதால்; யாவற்றாலேயும்-எல்லாவிதமான; தினப்படுவது-தின்னப்படுகின்றன; செறுத்து-கொன்று.**

**655. அன்பையே காண்பதா யன்பையே கேட்பதாய்**
**அன்பையே தானுற் றறிவதாய் - இன்பமாம்**
**அன்பையே யுண்பதா யன்பையே மோப்பதாம்**
**அன்பேயான் மாநு பவம்.**

அன்பையே காண்பதாய் அன்பையே கேட்பதாய் அன்பையே தான் உற்று அறிவதாய் இன்பம் ஆம் அன்பையே உண்பதாய் அன்பையே மோப்பது ஆம் அன்பே ஆன்மாநுபவம்.

**உற்று-தொட்டுணர்வதும்.**

மனத்தா லநுபவித்தறிதல் மாத்திரமன்றி மற்றையைம் புலன்களாலுங்கூட எங்கும் என்றும் இன்பமயமா மன்பையே கண்டுங் கேட்டும் உண்டுமுயிர்த்தும் உற்று மறிவதாம் அவ்வன்பே யான்மா நுபவமாம்.

**வி-ரை:-** ஆன்மாநுபவமாமேகரசவியல்பு இனைத்தென அன்பின் மேல் வைத்துக் கூறியது இவ்வெண்பா. சொரூபமாயெல்லாந் துலங்கக் காண்டலால் எவற்றின் பாலுமியல்பா யெழும் அதிபாவன ஆன்ம நேயமா மன்பு, புலவிடயம் பற்றிப் புந்தியிற் றோன்றும் மாய நேயமா மதக்களிப் பினின்று முற்றிலும் வேறுபட்டது. பத்தியெனவும் பிரேமை யெனவும் படும் இவ்வன்பின் பாற்பட்ட பரவச நிலையே அன்பரகத்தைப் பரவசமாக்கும் மணிவாசகர் தம் மாண்புடை யநுபவமாய் அண்டப்பகுதியா லறியப்படுவதாம்.

## 33. சகளத்திறன்

**656. உண்மை தனக்கோ ருருவிலையென் றோதுவார்**
**உண்மை யதனை யுணராதார் - விண்மெய்யா**
**முண்மைதனை யுள்ளபடி யோர்ந்துணர்ந்த நிட்டனுரு**
**வுண்மையுரு வென்றே யுணர்.**

உண்மை தனக்கு ஓர் உருவு இலை என்று ஓதுவார் உண்மை அதனை உணராதார் விண் மெய் ஆம் உண்மைதனை உள்ளபடி ஓர்ந்து உணர்ந்த நிட்டன் உரு உண்மை உரு என்றே உணர்.

**நிட்டன்-ஞானி.**

உண்மைக்கு உருவில்லை யென்பதை மறுக்கிறார். என்னை ? உண்மையை யுள்ளபடி யறிந்தமர்ந்த சகஜ நிட்டன், அவ்வுண்மையினின்றும் வேறு படானாதலின், அவனே உண்மையின் உருவாம். 'ஞானியே ஆத்மா' என்ற வாக்கின் பொருளிது.

**657. உருவவகங் கார மொழிந்தமனத் தோர்க்கே**
**அருவவழி பாடியல்வ தாகும் - மருவும்**
**உருவவகங் காரமனத் தோர்வழிபா டெல்லாம்**
**உருவவழி பாடே யுணர்.**

உருவ அகங்காரம் ஒழிந்த மனத்தோர்க்கே அருவ வழிபாடு இயல்வது ஆகும் மருவும் உருவ அகங்கார மனத்தோர் வழிபாடு எல்லாம் உருவ வழிபாடே உணர்.

**658. நினையா நினைவாலே நிட்களமா முண்மை**
**தனையாரா தித்தலே சால்பாம் - முனைவன்**
**அகளவழி பாட்டுக் கருகதையில் லாக்காற்**
**சகளவழி பாடே தகும்.**

நினையா நினைவாலே நிட்களம் ஆம் உண்மை தனை ஆராதித்தலே சால்பு ஆம் முனைவன் அகள வழிபாட்டுக்கு அருகதை இல்லாக்கால் சகள வழிபாடே தகும்.

**சால்பாம்-சிறந்ததாகும்; முனைவன்-இறைவனுடைய;**
**இல்லாக்கால்-இல்லாவிட்டால்.**

**659. இயற்கையொளி யாந்தம் மிருக்கையுணர் வின்றி**
**மயக்கவினைப் பட்டுழலு மாந்தர் - நயக்குறுதம்**
**மூர்த்தி யுபாசனையான் மோகமொழிந் தான்மபர**
**மார்த்த மடைவா ரறி.**

இயற்கை ஒளியாம் தம் இருக்கை உணர்வு இன்றி மயக்க வினைப்பட்டு உழலும் மாந்தர் நயக்கு உறு தம் மூர்த்தி உபாசனையால் மோகம் ஒழிந்து ஆன்ம பரமார்த்தம் அடைவார் அறி.

**இயற்கை ஒளி-சுபாவமான ஆன்மப் பிரஜ்ஞை; நயக்குறு-விரும்பிச் செய்கின்ற.**

இயற்கை முறையால் ஆன்ம நிட்டையாஞ் சொரூபத் தியானத்தில் சும்மா விருக்க வறியாமல், அவிச்சை வசப்பட்டலமரும் மக்கள் மூர்த்தியுபாசனையாஞ் செயற்கை முறையால் அவிச்சையகன்று, முடிந்த பொருளாமான்ம சொரூபத்தையே மீண்டடைவர்.

## 660. அகத்தும் புறத்து மரன்சகள பூசை
## நிகழ்த்துசிவ நேயமுறு நெஞ்சே - மிகுத்துணர்வாய்
## எல்லா விடத்து மிறைவ னிருப்புமறப்
## பில்லா வுணர்வோ டியற்று.

அகத்தும் புறத்தும் அரன் சகள பூசை நிகழ்த்து சிவநேயம் உறு நெஞ்சே மிகுத்து உணர்வாய் எல்லா இடத்தும் இறைவன் இருப்பு மறப்பு இல்லா உணர்வோடு இயற்று.

**நேயம்-பக்தி; மிகுத்து உணர்வாய்-அறிவாய் நிறைந்து.**

## 661. சிவயோகி தன்னையுபா சித்தொழுக நாளும்
## பவரோக மாயம் பறக்கும் - அவதானம்
## ஒன்றேயா யுள்ளத் துசாவுதித்து வெற்றுணர்வாய்
## நின்றேயான் மாவி னிலைத்து.

சிவயோகி தன்னை உபாசித்து ஒழுக நாளும் பவ ரோக மாயம் பறக்கும் அவதானம் ஒன்றே ஆய் உள்ளத்து உசா உதித்து வெற்று உணர்வாய் நின்றே ஆன்மாவில் நிலைத்து.

**சிவயோகி தன்னை-சிவயோகியை; அவதானம்-கவனம்.**

## 662. இறைவனடிக் குண்மையா மேகாந்த நேயம்
## குறைவறநிற் கஃது கொடாதேல் - மறையின்
## இழைத்தவிதி கோடா தியற்றுமநுட் டானத்
## துழைப்புமுழு தும்பா ழுணர்.

இறைவன் அடிக்கு உண்மை ஆம் ஏகாந்த நேயம் குறைவு அற நிற்கு அஃது கொடாதேல் மறையின் இழைத்த விதி கோடாது இயற்றும் அநுட்டானத்து உழைப்பு முழுதும் பாழ் உணர்.

**நிற்கு-உனக்கு; அஃது-அநுஷ்டானம்; இழைத்த விதி கோடாது-கூறப்பட்ட விதிக்கு மாறுபடாமல்.**

**663. அல்லாவை நாளு மடிதொழுவா ரின்பஞ்சேர்
எல்லா நலனுமொருங் கெய்துவார் - பொல்லாப்
பழிபாவத் தாலே பரிதபிக்குஞ் சிந்தைத்
தழல்வாழ் வுபசமனஞ் சார்ந்து.**

அல்லாவை நாளும் அடி தொழுவார் இன்பம் சேர் எல்லா நலனும் ஒருங்கு எய்துவார் பொல்லாப் பழி பாவத்தாலே பரிதபிக்கும் சிந்தைத் தழல் வாழ்வு உபசமனம் சார்ந்து.

**ஒருங்கு-ஒருசேர.**

**664. மறுமையோ டிம்மை மறந்திடையூ றெல்லாம்
பொறுமையொடு சாலப் பொறுத்து - வறுமை
எதுவரினுஞ் சற்று மிளகாது நெஞ்சம்
பதியருளின் பாங்கே பயில்.**

மறுமையோடு இம்மை மறந்து இடையூறு எல்லாம் பொறுமையொடு சாலப் பொறுத்து வறுமை எதுவரினும் சற்றும் இளகாது நெஞ்சம் பதி அருளின் பாங்கே பயில்.

**சால-மிகவும்; பாங்கே பயில்-வழியே நட.**

**665. குலவுமரன் பாதங் குறிக்கொண்டு வாழும்
தலைமைதரு சாது சனத்தோர்க் - குலக
அரங்கத் தழுக்காற்றுக் காளா தலின்மிக்
கிரங்கற்கா ளாகை யினிது.**

குலவும் அரன் பாதம் குறிக்கொண்டு வாழும் தலைமை தரு சாது சனத்தோர்க்கு உலக அரங்கத்து அழுக்காற்றுக்கு ஆளாதலின் மிக்கு இரங்கற்கு ஆளாகை இனிது.

**அழுக்காறு-பொறாமை; இரங்கற்கு-இரக்கப்படுவதற்கு; ஆள் ஆகை-ஆளாதல்.**

## 34. பஞ்சகிருத்தியத்திறன்

**666. இட்டமா யீச னியற்றுஞ் செயலைந்தும்
சட்டமா யொவ்வோர் சராசரத்தும் - திட்டமாய்
ஒவ்வோர் கணமு மொழியாது நாணாளும்
செவ்வே நடக்குமெனத் தேர்.**

இட்டமாய் ஈசன் இயற்றும் செயல் ஐந்தும் சட்டமாய் ஒவ்வோர் சராசரத்தும் திட்டமாய் ஒவ்வோர் கணமும் ஒழியாது நாள் நாளும் செவ்வே நடக்கும் எனத் தேர்.

**667. ஒவ்வோ ரணுவு மொழிந்தவுட னுக்குடன்மற்**
**றொவ்வோ ரணுப்புதிதா யுண்டாமால் - இவ்வா**
**றிடைவிடா தேய்தலால் யாவுமவை யேயா**
**நடைபெறுதல் போல்வனவா நாடு.**

ஒவ்வோர் அணுவும் ஒழிந்த உடனுக்கு உடன் மற்று ஒவ்வோர் அணுப் புதிதாய் உண்டாமால் இவ்வாறு இடைவிடாது ஏய்தலால் யாவும் அவையேயா நடைபெறுதல் போல்வனவாம் நாடு.

**உண்டாம்-உண்டாகும்; ஏய்தலால்-நடைபெறுவதால்;**
**அவையேயா-அவைகளேயாக, தாமாகவே.**

## 35. ஜீவேசுவரசெயற்றிறன்

**668. ஜீவச் செயல்கள் சிவச்செயலென் றொப்புங்காற்**
**சீவன்வே றாமோ சிவத்தினின் - றாவனேற்**
**சீவச் செயலுஞ் சிவச்செயலன் றாவொழிந்து**
**சீவன் சுதந்தரனாந் தேர்.**

ஜீவச் செயல்கள் சிவச் செயல் என்று ஒப்புங்கால் சீவன் வேறு ஆமோ சிவத்தினின்று ஆவனேல் சீவச் செயலும் சிவச் செயல் அன்றா ஒழிந்து சீவன் சுதந்தரன் ஆம் தேர்.

**ஆவனேல் - வேறு ஆவன் என்றால்; அன்றா ஒழிந்து-இல்லாமல் போனால்.**

இஃது மிக நுட்பமாம். ஜீவனது செயல்களெல்லாம் சிவன் செயலென்று ஒப்புக் கொண்ட விடத்து, ஜீவன் வேறு சிவன் வேறல்ல. அம்மட்டில் ஜீவன் தன் செயலற்றுச் சிவனாகிய சுதந்தரனாகின்றான். ஆயின் இவ்வாறு ஒப்புவிப்பது ஆணவத்தோடு உடன் படுவதல்ல; அகந்தை முற்றும் அழிதலே. ‘‘எல்லாம் சிவன் செயல்’’ எனத் தம்மகங்கார இயல்பினராக ஒழுகுபவர் ஒப்புவித்தவரல்லர்.

## 36. ஜீவேசுவரசிட்டித்திறன்

**669. தேவனது சிட்டிபந் திப்பதன்று ஜீவமனோ**
**பாவனையாஞ் சிட்டியே பந்தமாம் - நாவலோ**
**செத்தமகன் றந்தைமகிழ் சேர வுயிர்த்தமகற்**
**கத்தனழல் சான்றா மதற்கு.**

தேவனது சிட்டி பந்திப்பது அன்று ஜீவ மனோ பாவனையாம் சிட்டியே பந்தம் ஆம் நாவலோ செத்த மகன் தந்தை மகிழ் சேர உயிர்த்த மகற்கு அத்தன் அழல் சான்று ஆம் அதற்கு.

**நாவலோ-அந்தோ! (துக்கக் குறிப்பு); உயிர்த்த-உயிரோடுள்ள; அத்தன்-தந்தை; அழல்-அழுதல்.**

**670. போதகுரு தன்னைப் புலப்படுத்தி வாதனையாம்**
**ஏதமறு ஞானநிட்டைக் கேதுவாம் - ஆதலால்**
**நீடுமரன் சிட்டி நிகழ்ச்சிமுறை முத்திபெறக்**
**கூடுமநு கூலங் குறி.**

போத குரு தன்னைப் புலப்படுத்தி வாதனை ஆம் ஏதம் அறு ஞான நிட்டைக்கு ஏது ஆம் ஆதலால் நீடும் அரன் சிட்டி நிகழ்ச்சி முறை முத்தி பெறக் கூடும் அநுகூலம் குறி.

**கூடும்-கூட்டிவைக்கும்**

## 37. நேதிசெயற்றிறன்

**671. ஊன வுடல முயிர்பொறிக ளுள்ளம்விஞ்**
**ஞானமகங் காரமுமே நானல்லேன் - ஆன**
**செயல்விடயந் தீர்ந்து செறிவா தனைசேர்**
**மயல்வடிவு மல்லேனான் மற்று.**

ஊன உடலம் உயிர் பொறிகள் உள்ளம் விஞ்ஞானம் அகங்காரமுமே நான் அல்லேன் ஆன செயல் விடயம் தீர்ந்து செறி வாதனை சேர் மயல் வடிவும் அல்லேன் நான் மற்று.

**விஞ்ஞானம்-புத்தி; செயல்-தொழில்; விடயம்-பொருள்; மயல் வடிவம்-அஞ்ஞான வடிவு.**

**672. மெய்யாய வென்னோடு மேவாக்கா லிவ்வனைத்தும்**
**பொய்யாகப் போந்து புலம்பலால் - மெய்க்கயலாய்**
**உள்ளவுணர் வொன்றுமிலா வுண்மையாற் பொய்ம்மடமென்**
**றெள்ளுமிவை யாவுமலேன் யான்.**

மெய் ஆய என்னோடு மேவாக்கால் இவ் அனைத்தும் பொய் ஆகப் போந்து புலம்பலால் மெய்க்கு அயலாய் உள்ள உணர்வு ஒன்றும் இலா உண்மையால் பொய்ம்மடம் என்று எள்ளும் இவை யாவும் அலேன் யான்.

**மேவாக்கால்-சேராவிட்டால்; போந்து-போய்; புலம்பலால்-கெடுவதால்; மடம்-ஜடம்.**

**673. அவற்றையக மாகவபி மானித்த வாதித்**
**தவற்றைவிவே கத்தாற் றடிந்து - கவற்றுலக**
**ஊன முராத்துனைத்தேர்த் தாகத் தனித்தொளிர்மெய்ஞ்**
**ஞான சொரூபமே நான்.**

அவற்றை அகம் ஆக அபிமானித்த ஆதித் தவற்றை விவேகத்தால் தடிந்து கவற்று உலக ஊனம் உராத்துனைத்தேர்த்து ஆகத் தனித்து ஒளிர் மெய்ஞ் ஞான சொரூபமே நான்.

**தடிந்து-அகற்றி; கவற்று-ஏமாற்றுகின்ற; ஊனம்-ஸ்தூலமான உடல்; உராத்துனைத் தேர்த்து ஆக-கானல்நீராகவே பொய்யாய்ப் போனபின்.**

**(குறள் வெண்பா)**

**674. எவ்வெது வெவ்வா றியங்கினு நீபிரிந்**
**தவ்வதன் சான்றா யமர்.**

எவ் எது எவ்வாறு இயங்கினும் நீ பிரிந்து அவ் அதன் சான்று ஆய் அமர்.

எவ்வாறு திரிபுடிகள் கூடினும், நீங்கினும், எவ்விதத்தி லவை இயங்கினும் நீ அவைகளை அறியும் அறிவாக சாக்ஷி மாத்திரத்தில் என்றும் அமர்வாய் என்றார்.

## 38. நிருவாதனைத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**675. வேளைக்கு வேளையெனல் விட்டு நிரந்தரமா**
**நீளச் செயுமான்ம நிட்டையால் - மூளை**
**யுழித்தரா தூர்வா தனையுரோ மத்தை**
**மழித்தலே முண்டன மாண்பு.**

வேளைக்கு வேளை எனல் விட்டு நிரந்தரமா நீளச் செயும் ஆன்ம நிட்டையால் மூளை உழித் தராது ஊர் வாதனை உரோமத்தை மழித்தலே முண்டன மாண்பு.

**மூளை உழித்தராது-மூளை வழியே முளைக்க இடந்தராது; ஊர் - (எண்ணங்களால்)வளர்ந்து வருகின்ற.**

**676. உள்ளங்கா லுள்ளே யுறத்தைத் துடற்றுங்கூர்**
**முள்ளின் பகைகீண்ட முட்போல - உள்ளத்**
**தசுத்த நினைவை யகழ்ந்ததற்பின் பந்த**
**விசுத்த நினைவும் மிகை.**

உள்ளங்கால் உள்ளே உறத் தைத்து உடற்றும் கூர் முள்ளின் பகை கீண்ட முள் போல உள்ளத்து அசுத்த நினைவை அகழ்ந்ததன் பின்பு அந்த விசுத்த நினைவும் மிகை.

**உள்ளே உறத் தைத்து-ஆழப் பதிந்து தைத்து; உடற்றும் - துன்புறுத்தும்; கீண்ட-நீக்க, எடுக்க; மிகை-அதிகம், அனாவசியம்.**

**677. குலவுசுப வாதனையாற் கூடுமநு கூலம்
மலவசுப வாதனைமாய் மட்டே - மலியும்
இருவா தனையு மிறந்தபரி சுத்த
நிருவா தனையே நிலை.**

குலவு சுப வாதனையால் கூடும் அநுகூலம் மல அசுப வாதனை மாய் மட்டே மலியும் இரு வாதனையும் இறந்த பரிசுத்த நிருவாதனையே நிலை.

**மாய் மட்டே-அழியும் வரையிலே; மலியும்-நிரம்பிய.**

## 39. உபவாசவுண்மைத்திறன்

**678. நள்ளாமே போக நசையாதுந் தன்மனத்தால்
விள்ளாமே யான்மநிட்டை மேவலே - தெள்ளியோர்
உண்ணா விரத வுபவாசத் துண்மையெனக்
கண்ணாநின் றாசரிப்பர் காண்.**

நள்ளாமே போக நசை யாதும் தன் மனத்தால் விள்ளாமே ஆன்மநிட்டை மேவலே தெள்ளியோர் உண்ணா விரத உபவாசத்து உண்மை எனக் கண்ணா நின்று ஆசரிப்பர் காண்.

**நள்ளாமே - விரும்பாமலே; விள்ளாமே-விடாமல்; மேவலே-இருப்பதே; தெள்ளியோர்-நற்புத்தியுடையோர்; கண்ணா நின்று-கண்ணைப்போல் கருதி.**

## 40. ஆகாரநியமத்திறன்

**679. ஆதிகுண மேம்படலா லான்மவிசா ரத்துக்கு
நீதமா முண்டி நெடுந்துணையாம் - ஆதலால்
ஏனோ கலங்கித்தா மேங்க லுணாநியமம்
தானேயுஞ் சாலுந் தகைத்து.**

ஆதி குணம் மேம்படலால் ஆன்ம விசாரத்துக்கு நீதம் ஆம் உண்டி நெடும் துணை ஆம் ஆதலால் ஏனோ கலங்கித் தாம் ஏங்கல் உணா நியமம் தானேயும் சாலும் தகைத்து.

**ஆதிகுணம்-சத்வகுணம்; நீதம் ஆம் உண்டி-மித சாத்வீக ஆகாரம்; உணாநியமம்-உணவின் நியமம், மித சாத்வீக ஆகாரம்; தானேயும்-அதேயும்; சாலும்-போதும்; தகைத்து-தன்மை உடையது.**

ஆன்ம விசாரம் பயில்வோர் அம்மெய்த்தவத்துக்குற்ற பல்வகை நியமங்களுள் எவற்றைக் கொள்வ தெனத் தெரியாது கலங்கித் தாமேங்குத லெவன்? அதற்கின்றியமையாத சத்துவ குணந்தான் முறையா முணவாற் றலையெடுத்த லால் அதுவே அந்நெறியிற் பெரிதுந் துணை புரிவதாம்; ஆதலால், உணவு நியம மொன்றுமே அன்னார்க்குப் போதியதாகும் தன்மையுடைத்து.

**வி-ரை:-** ஏனை நியமங்க ளெல்லாவற்றிலுந் தலைசிறந்து விளங்குவது ஆகார நியம மென்பதாம்.

## 41. தூய்தன்மைத்திறன்

### 680. உறுத்த வுறுத்தமல வூனுடற்குத் தூய்மை
### மறித்துமறித் தும்மலமே வாய்தல் - குறித்து
### வெறுத்துடல வேட்கையற வீடற்கே நூல்வற்
### புறுத்துவது தூய்மை யுடற்கு.

உறுத்த உறுத்த மல ஊன் உடற்குத் தூய்மை மறித்தும் மறித்தும் மலமே வாய்தல் குறித்து வெறுத்து உடல வேட்கை அற வீடற்கே நூல் வற்புறுத்துவது தூய்மை உடற்கு.

> **உறுத்த உறுத்த-செய்யச்செய்ய; மறித்தும் மறித்தும்-மீண்டும் மீண்டும்; வாய்தல்-உண்டாதல்; வீடற்கே-விடற்கே.**

மலபிண்டமான மாமிச வுடலுக்கு (ப்பல்வகை ஸௌசங்களாலும்) தூய்மை செய்யச் செய்ய மீட்டு மீட்டும் (நவத்துவாரங்களாலும்) மலமே பொருந்தலைக் கவனித்து, உடலைவெறுத்து அதன் மேலிருந்த ஆசை அறவொழிதற் பொருட்டே உடலுக்குத் தூய்மையை நூல் வற்புறுத்துவதாம்.

### 681. மாதொருத்தி தன்னை மணக்கெனலப் புன்போக
### மீதருத்தி விட்டொழிகை மேற்றன்றோ - வேதம்
### சொலான்மகத்தை யேத்துவிதி சொர்க்காதி போகம்
### எலாமுவர்த்தற் கன்றோ வியம்பு.

மாது ஒருத்தி தன்னை மணக்க எனல் அப் புன் போகம் மீது அருத்தி விட்டு ஒழிகை மேற்று அன்றோ வேதம் சொலால் மகத்தை ஏத்து விதி சொர்க்க ஆதி போகம் எலாம் உவர்த்தற்கு அன்றோ இயம்பு.

> **அருத்தி-ஆசை; மேற்று அன்றோ-மேற்கொண்டு அல்லவா; ஏத்து-சிறப்பித்து; உவர்த்தற்கு-வெறுத்தற்கு.**

வேதம் (புருஷனொருவன்) மாதொருத்தியை மணந்து மனையறம் நடத்துகென விதித்தல், அவ்வற்ப (விஷய) போகத்தின் மேலாசை அவனுக்கு விட்டொழிதலை உத்தேசமாகக் கொண்டதன்றோ ? (அவ்வாறே, பின்னும் அவ்) வேதம் பல சுருதிகளாலும் வேள்வியை மேம்படக் கூறி விதித்தல் சொர்க்காதி போகங்களெல்லாம் வெறுத்து விடுதற்கன்றோ ?

**வி-ரை:-** வேதம் இருவழியும் கூட்டப்பட்டது. உடற்றூய்மை, இல்லற வொழுக்கம், வேள்விச்செயல் முதலிய வேத விதிகள் **குடஜிஹ்வா** ஞாயம் பற்றிக் கூறியன வாகக் கொள்ளத் தக்கன வென்பதாம்.

**குறிப்பு :** ஒருதாய் தன் குழந்தைக்கு நாவில் வெல்லம் பற்றிய விரலைத் தடவிக் கசப்பான மருந்தில் தித்திக்கு மென்னும் புத்தியை யுண்டுபண்ணிக் கசப்பு மருந்தைச் செலுத்தி விடுகின்றாள். இது சாஸ்திரத்தில் குடஜிஹ்வா நியாயமெனப்படும். (குடம்-வெல்லம்; ஜிஹ்வா-நாக்கு)

தினமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே
தீம்பண்ட மெதிர்காட்டிக்
கனம ருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற
கருணைநற் றாய்போல
மனைய றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று
மலர்ந்தவா சகஞ்சொல்லும்
நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகளந்த
நிண்ணயந் தெரியாரே.

கள்ளு மூனுநீ விரும்பினான் மகங்கள்செய்
காமத்தின் மனதானால்
கொள்ளும் பெண்டொடு கலவிசெய் யெனிலிவன்
குறையெலாந் தொடானன்றே
தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சகலமுந்
தவிர்வதே கருத்தாகும்
விள்ளு மிவ்விதி யென்னெனிற் பூருவ
நியமமாம் விதியன்றே.

மதுவி றைச்சிக ளுண்ணென்ற சுருதிபின்
மணந்துபா ரெனல்பாராய்
மிதுன விச்சையும் புத்திரோற் பத்தியால்
விரும்பென்ற விதிபாராய்
இதையும் விட்டொழி யதிநயிட் டிகவன்னிக்
கிகழ்ச்சியற் றதும்பாராய்
அதைய றிந்துகன் மங்களா சையொழிந்
தானந்த மடைவாயே.

– 73, 75, 76

சந்நேகந் தெளிதற் படலம், கைவல்ய நவநீதம்.

## 682. தூய வுணவையெலாந் தோய்ந்த சிறுபொழுதிற் நீயமல மாகச் செயுந்தேகம் - ஆயபாழ் ஊத்தைமலந் தாமா வுவப்பார் மலந்தின்னும் பாழ்த்த விலங்குதனிற் பாழ்.

தூய உணவை எலாம் தோய்ந்த சிறு பொழுதில் தீய மலம் ஆகச் செயும் தேகம் ஆய பாழ் ஊத்தை மலம் தாமா உவப்பார் மலம் தின்னும் பாழ்த்த விலங்குதனில் பாழ்.

**(குறள் வெண்பா)**

(10) ***தின்றமல மாக்குமல தேகோகர் பவ்வீதின்***
***பன்றியினுங் கேடாப் பகர்.***

***- பகவான்***

தின்று அமலம் ஆக்கும் மல தேகோகர் பவ்வீ தின் பன்றியினுங் கேடாப் பகர்.

**பவ்வீ - மலம்.**

## 42. நிட்காமியத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**683. கோரிக்கை முன்னிட்டுக் கொண்டிறையைக் கும்பிடலக்**
**கோரிக்கை தன்னையே கும்பிடலாம் - கோரிக்கை**
**எண்ணமற மாய்வதுமுன் னின்றியமை யாதுசிவ**
**வண்ணமுற வெண்ணு மனத்து.**

கோரிக்கை முன்னிட்டுக்கொண்டு இறையைக் கும்பிடல் அக் கோரிக்கை தன்னையே கும்பிடலாம் கோரிக்கை எண்ணம் அற மாய்வது முன் இன்றி அமையாது சிவ வண்ணம் உற எண்ணும் மனத்து.

**684. உயிர்க்குறுதி யாற்று முயர்தவத்தைச் சற்றும்**
**மயக்கிறுதி யாக்கவிட மாட்டார் - மயக்கமர**
**வாழ்வுக்குக் காமியஞ்செய் வார்செயல்செம் மாமணியைக்**
**கூழுக்கு மாறல் குறி.**

உயிர்க்கு உறுதி ஆற்றும் உயர் தவத்தைச் சற்றும் மயக்கு இறுதி ஆக்க விடமாட்டார் மயக்கு அமர வாழ்வுக்குக் காமியம் செய்வார் செயல் செம் மாமணியைக் கூழுக்கு மாறல் குறி.

**மாறல்-பண்டமாற்றாக்குதல்.**

## 43. கரணதண்டத்திறன்

**685. உள்ளும் புறமு முளவாங் கரணங்கள்**
**அல்லும் பகலு மடங்கினால் - விள்ளும்**
**சொலப்படுத லாகாத் துரிய நிலைக்கே**
**புலப்படுத லாகும் பொருள்.**

உள்ளும் புறமும் உளஆம் கரணங்கள் அல்லும் பகலும் அடங்கினால் விள்ளும் சொலப்படுதல் ஆகாத் துரிய நிலைக்கே புலப்படுதல் ஆகும் பொருள்.

**விள்ளும்-விளங்கும்; புலப்படுதல் ஆகும்-பிரகாசிக்கும்.**

அகத்தும் புறத்தும் முறையே யமைந்த மனாதி நான்கும் கண்ணாதியைந்தும் அல்லும் பகலுஞ் சேட்டை யடங்கி இயல்பா யமையின், இனைத் தெனக் கூறலாகாத் துரிய நிலைக்கண் மாத்திரமே துலங்கும் மெய்ப் பொருளா மான்ம சொரூபம், அந்நிலையே அதீதமாய், ஒழிந்த வவத்தைகளின் கண்ணும் ஒக்க விளங்கும்.

**வி-ரை:-** எப்பொழுதுமே எல்லாக்கரணங்களும் இயல்பாயடங்கியிருத்தல் அகந்தை யடங்கின் மாத்திரமே யமையப்பெறு மென்றறிக. ''தன்னையலா தன்னிய மொன்று மறியா ரவர் நிலைமை யின்னதென்றுன்ன லெவன்'' (உள்ளது நாற்பது 31) என்றான்றோர் கூறலால் சொலப்படுத லாகாத் துரியநிலை என்றார்.

**(கலி விருத்தம்)**

**686. ஓட்டை யடைத்துள் ளுணர்வுதேக் காது**
**பூட்டை யுடைத்துப் பொறிவழிப் போக்கல்**
**கோட்டை யிடித்துக் குளநீரைப் போக்கி**
**நாட்டை யழிக்கு நவைச்செய லாமே.**

ஓட்டை அடைத்து உள் உணர்வு தேக்காது பூட்டை உடைத்துப் பொறி வழிப் போக்கல் கோட்டை இடித்துக் குள நீரைப் போக்கி நாட்டை அழிக்கும் நவைச் செயல் ஆமே.

**ஓட்டை-ஓட்டத்தை; தேக்காது-நிறுத்தாமல்; நவை-பிழை, தவறு.**

உணர்வை உள்ளே தேக்குதலே ஞானமாம். அஃதன்றி உணர்வைப் பொறிவழிச் செலுத்தி வளம்பெற விரும்புதல் குளநீரைத் தேக்காது அரணை யிடித்து வயலழிக்கும் அஞ்ஞானச் செயலையொக்கும்.

**687. பேதித்துத் தம்முட் பிணங்கிய மாலயன்**
**வாதித்து வாளா மதிதடு மாறிச்**
**சோதித்தம் பத்தைச் சோதித்து மாழ்கிய**
**வாதிக் கதையதை யறிவிப்ப தாமே.**

பேதித்துத் தம்முள் பிணங்கிய மால் அயன் வாதித்து வாளா மதி தடுமாறிச் சோதித் தம்பத்தைச் சோதித்து மாழ்கிய ஆதிக் கதை அதை அறிவிப்பது ஆமே.

**பேதித்து-மாறுபட்டு.**

இது அருணாசல தத்துவமாம். மாலும் அயனும் அடிமுடி காண வியலாது ''அது'' வென்ற பொருள் கொண்ட சோதியைச் சோதிப்பவராய்த் தம்முள் பிணங்கி முடிவின்றித் தேடியுழன்ற கதையின் விளக்கமிது.

## 44. கரணஜயத்திறன்

### (நேரிசை வெண்பா)

**688. பூத வுடலகந்தை பொன்றலா லவ்வுடன்மேற்**
**பூதங்க ளாலே பொருந்துபவாம் - ஏதங்கள்**
**உள்ளதன்மேற் கொள்ளா துதாசீன மாயவற்றைத்**
**தள்ளுதலே பூத சயம்.**

பூத உடல் அகந்தை பொன்றலால் அவ் உடல் மேல் பூதங்களாலே பொருந்துப ஆம் ஏதங்கள் உள்ள தன்மேல் கொள்ளாது உதாசீனமாய் அவற்றைத் தள்ளுதலே பூத சயம்.

**பொன்றல்-அழிதல்; ஏதங்கள்-குற்றங்கள்; சயம்-வெற்றி கொள்வது, ஜயம்.**

**689. சித்தநா னென்றுழலுஞ் சிந்தைபோய்ச் சேர்விகற்ப**
**புத்திமா றாட்டமறப் பொன்றலாற் - பெத்தமொடு**
**முத்தியுணர் வற்று முயங்குதிட ஞானான்ம**
**சித்தியுறல் சித்த செயம்.**

சித்தம் நான் என்று உழலும் சிந்தை போய்ச் சேர் விகற்ப புத்தி மாறாட்டம் அறப் பொன்றலால் பெத்தமொடு முத்தி உணர்வு அற்று முயங்கு திட ஞான ஆன்ம சித்தி உறல் சித்த செயம்.

**பெத்தம்-பந்தம்; முயங்கு-செறிந்த, அடர்ந்த, வலிய.**

## 45. ஆதனத்திறன்

**690. மீதலமெய்ஞ் ஞான விசும்பாய தன்னையே**
**ஆதனமாச் சார்ந்த தகிலமெனும் - போதம்**
**நலியா துரம்பெறலே நல்லசமா திக்குச்**
**சலியாத் திரவா தனம்.**

மீதல மெய்ஞ்ஞான விசும்பு ஆய தன்னையே ஆதனமாச் சார்ந்தது அகிலம் எனும் போதம் நலியாது உரம் பெறலே நல்ல சமாதிக்குச் சலியாத் திர ஆதனம்.

**மீதலம்-சிறந்த இடம்; திர ஆதனம்-ஸ்திர ஆசனம்.**

## 46. யோகவலித்திறன்

**691. துள்ளு மகந்தைமனச் சுட்டுணர்வின் சேட்டையறக்**
**கள்ளப் புலன்காண் கருத்தடங்கி - உள்ளத்**
**தொளிய லொளியை யொலிய லொலியைத்**
**தெளியலே யோகத் திறன்.**

துள்ளும் அகந்தை மனச் சுட்டு உணர்வின் சேட்டை அறக் கள்ளப் புலன் காண் கருத்து அடங்கி உள்ளத்து ஒளி அல் ஒளியை ஒலி அல் ஒலியைத் தெளியலே யோகத் திறன்.

**ஒளியல் ஒளியை-ஒளி அல்லாத ஒளியை; ஒலியல் ஒலியை-ஒலி அல்லாத ஒலியை.**

**692. முன்னேதான் செய்த முயற்சியே பக்குவத்தாற்**
**பின்னேதா னூழுருவாப் பேர்தலால் - முன்னதனை**
**ஆற்றியதன் னாலே யரிதுமுயன் றவ்வூழை**
**மாற்றலுமா மென்றே மதி.**

முன்னே தான் செய்த முயற்சியே பக்குவத்தால் பின்னே தான் ஊழ் உருவாப் பேர்தலால் முன் அதனை ஆற்றிய தன்னாலே அரிது முயன்று அவ் ஊழை மாற்றலும் ஆம் என்றே மதி.

**பேர்தலால்-மாறுவதால்; தன்னாலே அரிது முயன்று-தானே பாடுபட்டு.**

**693. எந்தநற் றீவினைக ளின்பமொடு துன்பமாம்**
**தந்தம் பயனைத் தருகினுமே - சொந்த**
**சொருபமாஞ் செம்பொருளைத் தோய்ந்தமனத் தாலவ்**
**விருவினையின் கொற்றமுநீ யெற்று.**

எந்த நல் தீ வினைகள் இன்பமொடு துன்பம் ஆம் தம் தம் பயனைத் தருகினுமே சொந்த சொருபம் ஆம் செம்பொருளைத் தோய்ந்த மனத்தால் அவ் இருவினையின் கொற்றமும் நீ எற்று.

**கொற்றம்-கொட்டம், அட்டகாசம்; எற்று-வெற்றிகொள்.**

**694. உலகியலின் கண்ணு முழைப்னைது வெற்றி**
**குலவுஞ் சிரத்தையின்றிக் கூடா - அலகில்**
**பரத்தையொன்று மட்டும் பயிற்சியிலோர் காலுஞ்**
**சிரத்தைகுன்ற லாகாது தேர்.**

உலகியலின் கண்ணும் உழைப்பினது வெற்றி குலவும் சிரத்தை இன்றிக் கூடா அலகு இல் பரத்தை ஒன்றும் மட்டும் பயிற்சியில் ஓர் காலும் சிரத்தை குன்றல் ஆகாது தேர்.

**அலகு இல்-எல்லையற்ற; ஒன்றும் மட்டும்-அடையும் வரை.**

உலகியல் எவ்வாறெனின் எத்திசையிலும் சிரத்தை, தவமின்றி வெற்றி கைகூடுவதில்லை. இன்றோ, முன்போ புரிந்த தவமெனக்கொள்க; இவ்வுண்மை எச்சிறுகலையிலும் துறையிலும் காணலாம். அவ்வாறே சாதகனும் தன்முயற்சிக்கு மேல்நின்ற பரம்பொருளைக் கூடுமட்டும் ஆன்ம சாதனையில் சிரத்தையைக் கைநழுவவிடக்கூடாது.

## 695. எனைத்தானு முன்பாவம் யான்பாவி யென்ன
## எனைத்தானு மெண்ணித்தா னேங்கா - தனைத்தானும்
## ஊக்கமொடு சொச்சொருபத் துண்மூழ்கு வார்விரைவிற்
## றேக்குவா ரின்பந் திளைத்து.

எனைத்தானும் முன் பாவம் யான் பாவி என்ன எனைத்தானும் எண்ணித் தான் ஏங்காது அனைத்தானும் ஊக்கமொடு சொச்சொருபத்து உள் மூழ்குவார் விரைவில் தேக்குவார் இன்பம் திளைத்து.

**எனைத்தானும்-எவ் அளவினதாயினும்; அனைத்தானும் - அப்படிப்பட்ட தான்; தேக்குவார்-அடைவார்.**

பழம் பிறப்பிற் பாவம் எவ்வளவு பெரிதாயினும் தானதனைக்குறித்து 'யான் பாவி' யென்றெண்ணிச் சற்று மிரங்காது, அவ்வாறு பாவியாகக் கருதப்படு 'நானா' ரென நாடு முகத்தால் முழுவூக்கமோடும் ஆன்ம சொரூபத்துள் மூழ்குவார் அப்பாவ மனைத்தும் ஒருங்கேயகன்று விரைவிற் பேரின்பக் கடலாடித் திளைப்பர்.

**வி-ரை:-** எனைத்தானு மென்பது முதலடியில் மிகப்பெருமையையும், இரண்டாமடியில் அறச் சிறுமையையும் குறித்து நின்றது.

## 696. ஈசனருட் பூட்கையா லெம்முயல்வு மின்றியே
## மாசறுமார்ச் சால மரபினாற் - பாசமற
## இம்மையிலே ஞானசித்தி யெய்தினோர் மர்க்கடம்போ
## லம்மையிலே யாட்செய் தவர்.

ஈசன் அருள் பூட்கையால் எம்முயல்வும் இன்றியே மாசு அறு மார்ச்சால மரபினால் பாசம் அற இம்மையிலே ஞான சித்தி எய்தினோர் மர்க்கடம் போல் அம்மையிலே ஆள் செய்தவர்.

**அருள் பூட்கையால்-அருள் வலிமையால்; அம்மை-முன் பிறப்பு; ஆள் செய்தவர்-பக்தி செய்தவர்கள்.**

முயற்சி கடந்த நெறி ஈசனருளால் அமைவது பிரபத்தியேயாதலின், மார்ச்சால வகையாகிய அந்நெறியைச் சிறப்பித்தார். அவ்வாறு பாசம் விட்டொழிய, இப்பிறப்பிலே ஞான சித்தி யெய்தினோர், முற்பிறவியில் மர்க்கடம் போல் ஆண்டவனைப் பற்றி அடிமை செய்தவரேயாம்.

**697. தடைபடா தெங்குந் தழைத்தவிரு வானத்**
**தடைபடாச் சிற்றம் பலத்தை - இடைவிடா**
**தெண்ணுறுவார்க் கூழ்வினையின் றெட்டுணையு மென்றதே**
**விண்ணுறுவார்க் கில்லை விதி.**

தடைபடாது எங்கும் தழைத்த இரு வானத்து அடைபடாச் சிற்றம்பலத்தை இடைவிடாது எண் உறுவார்க்கு ஊழ்வினை இன்று எள் துணையும் என்றதே விண் உறுவார்க்கு இல்லை விதி.

**இரு-பெரிய; விண்ணுறுவார்க்கு-ஆன்மாகாச சொரூபஞானம் அடைவோர்க்கு.**

**698. மாறாம லூன மனத்தை மறுகலுறச்**
**சூறா வளியாய்ச் சுழற்றுமூழ் - தேறும்**
**விசுத்தவெளி யாக விளங்கு மனத்தை**
**அசைக்கவல தாகா தறி.**

மாறாமல் ஊன மனத்தை மறுகல் உறச் சூறாவளியாய்ச் சுழற்றும் ஊழ் தேறும் விசுத்த வெளியாக விளங்கும் மனத்தை அசைக்க வலது ஆகாது அறி.

**மாறாமல்-தவறாமல்; மறுகல்-சுழலுதல், அலைதல்; தேறும்-தேற்றமுறும்; வலது-வலிமையுள்ளது.**

தேகான்ம பாவத்தாலே சங்கோச மடைந்த மனத்தை விடாது கலங்கச் சூறைக்காற்றாய்ச் சுழல்விக்கு மூழ்வினை, ஆன்ம விசாரத்தா லவ்வாணவ மலங்கெட்டுத் தெளிந்த மெய்ஞ்ஞான வெளியாக விளங்கும் நிருபாதிக மனத்தைச் சற்றும் சலிப்பிக்க வல்லதன்றாம்.

**வி-ரை:-** வெளியாக விளங்கும் மனம் பூரணமாதலிற் கலக்க மின்றா மென்க.

**699. கன்மக் கடலடிக்கே யாழ்த்துங்கர்த் தத்துவமாம்**
**துன்மதியைச் சுட்டெரிக்குஞ் சூழ்ச்சிதான் - தன்மயமாய்த்**
**துன்னகண்டா கார சொரூபத் தியானமலா**
**தென்னகண்டாய் நெஞ்சே யியம்பு.**

கன்மக் கடல் அடிக்கே ஆழ்த்தும் கர்த்தத்துவம் ஆம் துன் மதியைச் சுட்டு எரிக்கும் சூழ்ச்சி தான் தன்மயமாய்த் துன் அகண்டாகார சொரூபத் தியானம் அலாது என்ன கண்டாய் நெஞ்சே இயம்பு.

**துன்-பொருந்தும்.**

ஆருயிரை வினைக்கடலில் வீழ்த்தி அதனடிக்கண்ணே யாழ்த்துகின்ற பொல்லாக் கர்த்தத்துவ புத்தியைச் சாம்பலாய்ச் சுட்டெரிக்கு முபாயந்தான் ஆன்ம சொரூபமாயவிரும் பிரம்மாகார விருத்திவடிவ தியானமன்றி வேறியாதறிந்- தனை? ஏதேனு மறிந்ததுண்டேற் கருத்தே ! அதனை யெனக்கு விளங்கக் கூறுதி.

**வி-ரை:-** ஆருயிரை மேலெழுந்து கரையேற வொட்டாது வினைக்கடலின் மேன்மேலுமாழ்த்தி வீடுபேற்றுக்குத் தடைசெய்தலாற் கர்த்தத்துவமாந் துன்மதி யென்றார். கர்த்தத்துவம் - கர்த்தாவாந் தன்மை; கர்த்தா-வினை முதல். அகண்டம்-கண்டமற்றது. அகண்டாகார விருத்தி வடிவமான ஞானாங்கி, **இருந்தொளிர்தலே தன்னியல்பன்றி வினையாற்றுத லன்றென்னு முண்மையை** ஆருயிர்க்கு விளங்கவுணர்த்தி, கர்த்தத்துவ புத்தியை உருப்படா தொழியக் காட்டமாய்ச் சுட்டெரித்தலால் அவ்விருத்திப் பயிற்சியன்றிக் கர்த்தத்துவங் கெடுக்கத் தக்கதோருபாயம் வேறில்லை என்பதாம்.

## 47. உயிரொருக்கத்திறன்

**700. இருத்த லிலகுத லின்பாத னாமம்**
**உருமயமாத் தோற்று முலகின் - உருநாமம்**
**தீரவிடல் ரேசகஞ்சற் சிற்சுகத்தைத் தேர்தனிலை**
**பூரகங் கும்பகமாப் புல்.**

இருத்தல் இலகுதல் இன்பு ஆதல் நாமம் உரு மயமாத் தோற்றும் உலகின் உரு நாமம் தீர விடல் ரேசகம் சத் சித் சுகத்தைத் தேர்தல் நிலை பூரகம் கும்பகமாப் புல்.

**நிலை-நிலைத்திருத்தல்; புல்-இவ்வாறு கண்டடைக.**

இருத்தல், விளங்கல், இனிதாதல், பெயர், வடிவம் என்னு மைந்தன் மயமாய்ப் புலப்படு முலகின் கூறுகளா மவற்றுள் பின்னை யிரண்டனையும் வெளியே யொழிய விடல் ரேசகமும், முன்னை மூன்றனையும் உள்ளத்துட் கொண்டுணர்தல் பூரகமும், உணர்ந்தாங் கூன்றி நிற்றல் கும்பகமுமாம்.

**வி-ரை:-** இருத்தல் முதலிய கூறுகள் ஐந்தனுள் உலகின் சிறப்பியல்பு உரு நாம மிரண்டுமே யாதலால், அவற்றைத் தீரவிடல் ரேசகமும், கானலினீர் போல அவற்றைக் கற்பனையாய்க் கழிக்கவே அதன்கண் எஞ்சிநின்ற இருத்தல், இலகுதல், இன்பாதல் என்னும் ஏனைமூன்று கூறுகளும் அதன் உண்மையா மான்ம சொரூபத்தின் சிறப்பியல் பாதலால் அவற்றைத் தேர்தலும், தேர்ந்தாங்கு நிற்றலும் முறையே பூரக, கும்பகங்களாகவும் ஓதப்பட்டன. உலகவாசனையை யொழித்து உள்ளத்தி லான்ம சொரூபத்தை யறிந்து தரித்தலே பிராணாயாமத்தின் கருத்தென்பதாம். இருத்தலிலகுதலின்பாதல் மூன்றும் சொல்லால் வேறாதலன்றிப் பொருளா லொன்றேயாதலான் சற்சிற்சுகத்தை என ஒருமையாற் கூறப்பட்டது. இக்கருத்து 979 ஆம் பாடலில் இந்நூலிற் பிறிதோரிடத்து வருதல் காண்க.

**(இன்னிசை வெண்பா)**

**701. ஆகமக மன்றென் றறவிடலே ரேசகமற்**
**றூகமொடு நானாரென் றுட்செறிவே பூரகமற்**
**றேகமாய் நானதுவென் றேய்தலே கும்பகமென்**
**றாக வுயிரொருக்க மாம்.**

ஆகம் அகம் அன்று என்று அற விடலே ரேசகம் மற்று ஊகமொடு நான் ஆர் என்று உள் செறிவே பூரகம் மற்று ஏகமாய் நான் அது என்று ஏய்தலே கும்பகம் என்று ஆக உயிர் ஒருக்கம் ஆம்.

**ஆகம்-உடம்பு; ஊகம்-யூகம்; ஏய்தலே-இருத்தலே; உயிர் ஒருக்கம்-பிராணனை அடக்குதல் (பிராணாயாமம்).**

**(நேரிசை வெண்பா)**

**702. மனோமயனாத் தன்னை மயங்கித் திரிவோன்**
**கனாமயலாங் காட்சி கடிந்து - தனாஅ**
**துயிர்நிலைக்கே புக்கவ் வுயிராய் நிலைப்பே**
**உயிரொருக்க வுண்மை யுணர்.**

மனோமயன் ஆகத் தன்னை மயங்கித் திரிவோன் கனா மயல் ஆம் காட்சி கடிந்து தனாஅது உயிர் நிலைக்கே புக்கு அவ் உயிராய் நிலைப்பே உயிர் ஒருக்க உண்மை உணர்.

**கடிந்து-நீங்கி; தனாஅது-தனது; புக்கு-புகுந்து; நிலைப்பே-நிலைத்திருப்பதே.**

## 48. கன்மரகசியத்திறன்

**(11)** ***வினையும் விபத்தி வியோகமஞ் ஞானம்***
***இனையவையார்க் கென்றாய்ந் திடலே - வினைபத்தி***
***யோகமுணர் வாய்ந்திடநா னின்றியவை யென்றுமில்தா***
***னாகமன லேயுண்மை யாம்.***

***- பகவான்***

வினையும் விபத்தி வியோகம் அஞ்ஞானம் இனையவை யார்க்கு என்று ஆய்ந்திடலே வினை பத்தி யோகம் உணர்வு ஆய்ந்திட நான் இன்றி அவை என்றும் இல் தான் ஆக மனலே உண்மை ஆம்.

**மனலே-நிலைத்திருப்பதே.**

**703. கன்மமியற் றத்தொடங்குங் கத்தனா னாரென்னத்**
**தன்மெயறி வேகன்ம தத்துவமாம் - கன்மமுதல்**
**ஆந்தன்னை யாய்ந்தறிந்தற் றாலன்றிக் கன்மமுடி**
**வார்ந்தவுப சாந்த மரிது.**

கன்மம் இயற்றத் தொடங்கும் கத்தன் நான் ஆர் என்னத் தன் மெய் அறிவே கன்ம தத்துவம் ஆம் கன்ம முதல் ஆம் தன்னை ஆய்ந்து அறிந்து அற்றால் அன்றிக் கன்ம முடிவு ஆர்ந்த உபசாந்தம் அரிது.

**ஆர்ந்த-கூடிய.**

**704. கத்தனாந் தன்னுண்மை கண்டோனே கன்மவிதி**
**அத்தனையு மொன்றொழியா தாற்றினோன் - நித்தமுஞ்செய்**
**கன்மாநுட் டானக் கடுந்தவத்தாற் காண்பயன்பே**
**ரின்பவுப சாந்தமலா தென்.**

கத்தன் ஆம் தன் உண்மை கண்டோனே கன்ம விதி அத்தனையும் ஒன்று ஒழியாது ஆற்றினோன் நித்தமும் செய் கன்ம அநுட்டானக் கடும் தவத்தால் காண் பயன் பேர் இன்ப உபசாந்தம் அலாது என்.

**அலாது-இல்லாமல்; என்-என்ன.**

**(கலி விருத்தம்)**

**705. விகலமுறா வத்துவித மெய்ஞ்ஞான மொன்றே**
**சகலமாந் தன்மா சரணை களுக்கும்**
**புகலிடமா நின்று பொலிவதான் ஞானி**
**அகிலதன் மங்களு மனுட்டித்தோ னாமே.**

விகலம் உறா அத்துவித மெய்ஞ்ஞானம் ஒன்றே சகலம் ஆம் தன்ம ஆசரணைகளுக்கும் புகல் இடமா நின்று பொலிவதால் ஞானி அகில தன்மங்களும் அனுட்டித்தோன் ஆமே.

**விகலம்-மாற்றம்; தன்ம ஆசரணை-தர்மங்களின் கடைப்பிடிப்பு.**

அத்துவித ஞானமொன்றே எல்லா தர்மங்களுக்கும் அபயபீடமாய் விளங்குவதால், அந்நிலைதனில் ஆழ்ந்த ஞானி தர்மங்கள் யாவையும் செவ்வையாய் அனுட்டித்தவனாம். ஆத்மாவில் ஸ்திரம் பெறுதலிலும் மேலான தர்ம மில்லை. அவ்வாறு நிச்சல அறிவு கொண்டவனின் வினை யெல்லாம் கடவுள் செயலுமாம்.

# 49. ஜபத்திறன்

### (குறள் வெண்பா)

**(12) *ஞானத்து ணானாருந் தானமுறார் வாக்பரையார்
தானந்தேர் தல்சபத்திற் சால்பு.***

***-பகவான்***

ஞானத்து உள் நான் ஆரும் தானம் உறார் வாக்பரை ஆர் தானம் தேர்தல் சபத்தில் சால்பு.

### (நேரிசை வெண்பா)

**706. யானென் றெழுமிடமே தென்னத்தந் நுண்ணறிவாம்
மோனத்தா லுண்மூழ்க மாட்டாதார் - மானதத்தாற்
பண்ணுஞ் செபத்திற் பராவாக்கு யாண்டிருந்து
நண்ணுமென் றாய்த னலம்.**

யான் என்று எழும் இடம் ஏது என்னத் தம் நுண் அறிவு ஆம் மோனத்தால் உள் மூழ்க மாட்டாதார் மானதத்தால் பண்ணும் செபத்தில் பராவாக்கு யாண்டு இருந்து நண்ணும் என்று ஆய்தல் நலம்.

**707. நீயே செபவடிவா நிற்றலா லுன்னியல்பை
நீயா ரெனவினவி நிச்சயித்தால் - ஏயே
முயற்சியுற லின்றி முனைந்தசெப முள்ளத்
தயர்ச்சியற மேவு மறி.**

நீயே செப வடிவா நிற்றலால் உன் இயல்பை நீ யார் என வினவி நிச்சயித்தால் ஏயே முயற்சி உறல் இன்றி முனைந்த செபம் உள்ளத்து அயர்ச்சி அற மேவும் அறி.

**ஏயே-என்ன விந்தை; முனைந்த செபம்-முன்பு முயற்சியோடு செய்த ஜபம்; அயர்ச்சி அற-இடையீடு இல்லாமல்.**

நீயே ஜபவடிவாய் நிற்றலால், நீயாரென வுண்முகமாய் விசாரித்து உன்னியல்பை யுள்ளபடி யுரம்பட வுணர்ந்தால், நீமுன் அரிதின் முயன்று செய்யும் அந்த ஜபம் ஏயே! என்ன விந்தை! இனி அம்முயலுறாமையே உள்ளத்துள் நழுவலற்றுத் தானே நடைபெறுவதாம்.

**வி-ரை:-** தன்னிலை யடைந்தவுடன் கர்த்தத்துவங்கெடலான் முயற்சியறவும், எந்த ஜபமும் தன்னுண்மை வடிவாமுன் சொந்த சொரூபமா யிதயத் தேய்ந்து 'நான் நான்' எனத் தன்னியல்பா யிடைவிடாது நிகழ்வதால் இவ்வாறு கூறினார். இறைவன் றிருப்பெயர் எண்ணிறந்தவற்றுள் யான் என்பதே எவர்க்கும்

பொதுவாய் முதன்மை பெறுவதாம். யாரென்றவுடன், யாவருமொருவரென, இயல்பாய் ‘நான்’ என்னுமாறு இதயந்தோறு மீசன் ஆன்ம சொரூபமாய் அமர்தலே, அப்பெயர் அவன் பெயராதற்கும், உலகொடுபட்ட எந்தப் பெயர் வடிவும் ‘நா’ னென்னும் போதமெழுந்த பின்பே தோன்றல் அது முதன்மை பெறுதற்குங் காரணமாம்.

**(இன்னிசை வெண்பா)**

**708. விடயங்கத் தாவில் விளியுங்கா றான்ம**
**திடவுண்மை யிற்றெனத்தான் றேருங்கா றந்த**
**இறைநா னிறைநா னெனவாளா வாயாற்**
**பறைதலா லென்னோ பயன்.**

விடயம் கத்தாவில் விளியுங்காறு ஆன்ம திட உண்மை இற்று எனத் தான் தேருங்காறு அந்த இறை நான் இறை நான் என வாளா வாயால் பறைதலால் என்னோ பயன்.

**விளியுங்காறு-அழியும் வரை; இற்று-இப்படிப்பட்டது;**
**தேருங்காறு-தேரும்வரையிலும்; வாளா-சும்மா; பறைதலால்-சொல்லுவதால்.**

**(நேரிசை வெண்பா)**

**709. யானே பரமென் றியம்பித் திரியாமல்**
**தானே பரமாத் தரித்திடுக - தானதுவாய்**
**நிற்றலா லன்றி நெடுங்குரலாற் பற்பலகாற்**
**சொற்றதனாற் போமோ துயர்.**

யானே பரம் என்று இயம்பித் திரியாமல் தானே பரமாத் தரித்திடுக தான் அதுவாய் நிற்றலால் அன்றி நெடுங்குரலால் பற்பலகால் சொற்றதனால் போமோ துயர்.

**சொற்றதனால்-சொன்னதனால்.**

**710. அருந்தலா லன்றி யரும்பிணிகள் சற்றும்**
**மருந்துநா மத்தாலே மாயா - பொருந்து**
**சிவோக முதற்பல் செபத்தாலே மட்டும்**
**தவாதே பிறவித் தளை.**

அருந்துதலால் அன்றி அரும்பிணிகள் சற்றும் மருந்து நாமத்தாலே மாயா பொருந்து சிவோகம் முதல் பல் செபத்தாலே மட்டும் தவாதே பிறவித் தளை.

**மாயா-மாயாது; தவாது-நீங்காது.**

## 50. மெய்க்கோயிற்றிறன்

**711. சீவன் றனக்குஞ் செகத்துக்கு மீசனே**
**கோவிலா குந்திறங் கூர்த்தறியான் - ஆவரண**
**மேன்றதொரு கோவி லெடுத்திறையைத் தான்குறுக்கி**
**யான்றவழி பாடுசெய் வான்.**

சீவன் தனக்கும் செகத்துக்கும் ஈசனே கோவில் ஆகும் திறம் கூர்த்து அறியான் ஆவரணம் ஏன்றது ஒரு கோவில் எடுத்து இறையைத் தான் குறுக்கி ஆன்ற வழிபாடு செய்வான்.

**கூர்த்து-நுட்பமாய்; ஆவரணம் ஏன்றது-மறைப்புப் பொருந்தியது; ஆன்ற-மிகச்சிறந்த.**

ஈசனே தனக்கும் உலகிற்கும் கோவிலாதலால், அஃதொன்றை அறிவதே சாலும். கோவிலெடுத்து அங்கு இறைநாடி வழிபாடுபுரிதல் இவ்வுண்மையறியா அபக்குவமென்க. ‘‘பொன்னெடும் கோயிலாப் புகுந்தென் என்பெலா முருக்கி’’ யென்றார் மணிவாசகர்.

## 51. திருநாமத்திறன்

**712. உள்ளமெனு மெய்ப்பொருடா னுள்ளத்தி னின்றுணர்வாய்**
**மெள்ளவெளி வந்து விரியுங்கால் - உள்ளபொருட்**
**கானவபி தானம்பல் லாயிரத்து ளாயுங்கால்**
***நா*னென்ப தேமுதலா நாடு.**

உள்ளம் எனும் மெய்ப் பொருள் தான் உள்ளத்தில் நின்று உணர்வு ஆய் மெள்ள வெளி வந்து விரியுங்கால் உள்ள பொருட்கு ஆன அபிதானம் பல் ஆயிரத்துள் ஆயும்கால் நான் என்பதே முதல் ஆம் நாடு.

**அபிதானம்-பெயர்.**

**713. முதன்மை யுறுபெயரா முன்சொனவவ் யானோ**
**டதன்மெய்ப் பொருள்விளக்க மாக - நிதநான்**
**இருக்கின்றே னென்ன வியைதலா லந்த**
***இருக்கின்றே* னென்பெயரு மாம்.**

முதன்மை உறு பெயரா முன் சொன அவ் யானோடு அதன் மெய்ப்பொருள் விளக்கம் ஆக நிதம் நான் இருக்கின்றேன் என்ன இயைதலால் அந்த இருக்கின்றேன் என் பெயரும் ஆம்.

**என்ன இயைதலால்-என்று இருப்பதால்.**

இறைவன்றிருப்பெயர் எண்ணிறந்தவற்றுள் முதன்மை பெறுவதாக முன்சொன்ன 'யான்' என்னும் பெயரோடு அதன் பொருளா முண்மை விளக்கமாக ஒவ்வொருவருள்ளத்தும் அநவரதம் 'யான் இருக்கின்றேன்' என்ன அவரவர்க்கு மான்மாநுபவமா யியைதலால் அத்தகைய 'இருக்கின்றேன்' என்னும் பெயரும் ஆங்கே முதன்மை பெறுவதாம்.

**வி-ரை:-** 'யான்' என்னும்பெயர் இயைதலென்னுஞ் சொல்லடியாகப் பிறந்து இருக்கின்றேன் எனப்பொருள் படுவதாமோவென ஈண்டுத் தத்துவ விசாரத் தோடு கூடிய மொழிநூல் வல்லார் நிதானித்து நுனித்து ஆராய்தற்குரியதாம்.

## 714. இந்தப்பேர் போலா யிரக்கணக்காம் பல்பெயருள்
## எந்தப்பே ரும்முண்மை யேற்புடைத்தாய்ச் - சிந்தை
## கழிய வுளஞ்சேர் கடவுட்கு மெய்ம்மை
## அழகு பெறவமைந்த தன்று.

இந்தப் பேர் போல் ஆயிரக்கணக்கு ஆம் பல்பெயருள் எந்தப் பேரும் உண்மை ஏற்பு உடைத்தாய்ச் சிந்தை கழிய உளம் சேர் கடவுட்கு மெய்ம்மை அழகு பெற அமைந்தது அன்று.

**ஏற்புடைத்தாய்-தகுதிவாய்ந்ததாக.**

உள்ளலற்று உண்மை மாத்திரமா மான்ம சொரூபமாய் 'யான்யா' னென்றிதயத்தின்க ணுறையுங் கடவுட்குப் பல்வேறு சமயங்களிலும் பாஷைகளிலும் படிக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கான திருப்பெயர்களுள் 'இருக்கின்றே' னென்னும் இந்தப் பெயர் போல் வேறெந்தப் பெயரும் உண்மையில் அவ்வளவு பொருந்த முடைத்தாய் உண்மையழகு பெற வமைந்த தன்றாம்.

**வி-ரை:-** ஹீப்ரு மொழியில் இறைவனுக்கு வழங்கும் 'ஜெஹோவா' என்னும் பெயர் இப்பொருள்படுவதாம். ஏற்புடைத்தா யமைந்த தன்றென வியையும். ஏற்புடைத் தாயுளஞ்சேர் கடவுட் கெனக் கூட்டினு மிழுக்கின்றாம்.

## 715. அகமுகநாட் டத்தோர்க் கறிபடும்யா வற்றும்
## *அகமக*மென் றாண்டான் பெயரே - அகந்தையழி
## வானவித யாகாயத் தார்ந்து முழங்குமே
## மோனபரா வாக்காய் முனைந்து.

அகமுக நாட்டத்தோர்க்கு அறிபடும் யாவற்றும் அகம் அகம் என்று ஆண்டான் பெயரே அகந்தை அழிவு ஆன இதய ஆகாயத்து ஆர்ந்து முழங்குமே மோன பரா வாக்காய் முனைந்து.

**716. நானா னெனவகத்து நாட்டமா யப்பேரை
ஆனா தநுசந்தித் தாலுமே - ஊனார்
கருவகந்தை மாயக் கருத்துதிக்கு மூலத்
தொருவனைக்கொண் டுய்த்து விடும்.**

நான் நான் என அகத்து நாட்டமாய் அப்பேரை ஆனாது அநுசந்தித்தாலுமே ஊன் ஆர் கரு அகந்தை மாயக் கருத்து உதிக்கும் மூலத்து ஒருவனைக் கொண்டு உய்த்து விடும்.

**ஆனாது-நீங்காது; ஊன் ஆர் கரு அகந்தை-தேக சம்பந்தத்தையே மூலமாகக் கொண்ட அகந்தை; மாய-போலியான அல்லது மாயக்கூடிய.**

**717. நானென் றுரைக்கு நவிற்சிக்கு நேர்பொருளாம்
ஊனுயிர்தான் றோன்றி யொடுங்கலால் - ஊனுயிருக்
கார்ந்தவதிட் டானமா மான்மாவே யாயுங்காற்
றீர்ந்தபொரு ளாகத் தெளி.**

நான் என்று உரைக்கும் நவிற்சிக்கு நேர் பொருள் ஆம் ஊன் உயிர் தான் தோன்றி ஒடுங்கலால் ஊன் உயிருக்கு ஆர்ந்த அதிட்டானம் ஆம் ஆன்மாவே ஆயுங்கால் தீர்ந்த பொருள் ஆகத் தெளி.

**நவிற்சிக்கு-சொல்லுக்கு.**

## 52. பத்திமைத்திறன்

**718. சொற்பதமாந் தொம்பொருளாய்ச் சூனியமாந் தன்னையொளிர்
தற்பதமா நின்ற சதாசிவமாம் - சிற்பதத்தே
ஆனவுப சாந்த வசிபதத்தான் மாய்க்கும்பு
மானே சிறந்தபத்தி மான்.**

சொல் பதம் ஆம் தொம் பொருளாய்ச் சூனியம் ஆம் தன்னை ஒளிர் தத் பதமா நின்ற சதாசிவம் ஆம் சித் பதத்தே ஆன உபசாந்த அசி பதத்தால் மாய்க்கும் புமானே சிறந்த பத்திமான்.

**புமான்-புருஷன்.**

**719. நீர்க்குமிழி போன்ற நினைவுருவா மத்தன்னை
ஓர்த்துணர லாகா வுபசாந்த - நீர்க்கடல்வாய்
யானா போலி யியலழிய மாய்க்கும்பு
மானே சிறந்தபத்தி மான்.**

நீர்க்குமிழி போன்ற நினைவு உரு ஆம் அத்தன்னை ஓர்த்து உணரல் ஆகா உபசாந்த நீர்க்கடல்வாய் யான் ஆய போலி இயல் அழிய மாய்க்கும் புமானே சிறந்த பத்திமான்.

**ஓர்த்து-ஆராய்ந்து.**

**720. பத்தியா லுற்ற பரிபாக சித்தத்தாற்
பத்திரச மாற்றப் பருகினோர் - புத்தமுதாம்
பத்தியே பத்திப் பயனாக வோங்குபர
பத்தியே காதலிப் பார்.**

பத்தியால் உற்ற பரிபாக சித்தத்தால் பத்தி ரசம் ஆற்றப் பருகினோர் புத்து அமுது ஆம் பத்தியே பத்திப் பயனாக ஓங்கு பர பத்தியே காதலிப்பார்.

பத்தி மார்க்கத்தின் பரிபாக மனத்தால், பத்தி ரசத்தைத் தம் மனமார வுண்டவர், அதையே புத்தமுதமாக, அன்னிய பலன்களாகிய சித்தி, லௌகீக ஆசாபூர்த்தி, இவைகளின் நினைவு எள்ளளவு மின்றி, பரபத்தியையே காதல் செய்வர்.

**721. முனைத்த வகந்தைதீர் மோனமே முத்தி;
அனர்த்த வயர்ப்பே விபத்தி - மனத்தா
லவிபத்த மாக வடங்கித்தா னொன்றல்
சிவபத்தி யுண்மை தெளி.**

முனைத்த அகந்தை தீர் மோனமே முத்தி அனர்த்த அயர்ப்பே விபத்தி மனத்தால் அவிபத்தம் ஆக அடங்கித் தான் ஒன்றல் சிவபத்தி உண்மை தெளி.

## 53. பத்திஞானவபேதத்திறன்

**722. பரபத்தி ஞானம் பரிசோதிக் குங்காற்
சொருபத்தி லொன்றாத் துலங்கும் - இருவிதத்து
ளொன்றுமற் றொன்றுக் குபாயமே யாமெனலவ்
வொன்றன்மெய் யோராமை யாம்.**

பரபத்தி ஞானம் பரிசோதிக்குங்கால் சொருபத்தில் ஒன்றாத் துலங்கும் இருவிதத்துள் ஒன்று மற்றொன்றுக்கு உபாயமே ஆம் எனல் அவ் ஒன்றன் மெய் ஓராமை ஆம்.

பரபத்தி, ஞானம் இவ்விரண்டும் சமநிலையில் சொரூபத்தை உணர்த்துவன. உண்மையில் பரபத்திநிலை பூரண ஞானத்தினின்றும் வேறுபட்டதன்று. இவற்றுள் ஒன்று மற்றொன்றை அடையுமுபாயமாகக் கருதுதல், அவைகளின் மெய்ந்நிலையை ஆராயாத குற்றமே. என்னை? பரபத்தியின் நிலை தன்னிழப்பேயாதலின், அது ஞான சொரூபமே.

> ''பாவ பலத்தினாற் பாவனா தீதசற்
> பாவத் திருத்தலே யுந்தீபற
> பரபத்தி தத்துவ முந்தீபற'' - உபதேசவுந்தியார்.

என்றார் ஸ்ரீ பகவான்.

**723. அறிந்தாரு மந்த வதிகாரம் பற்றிச்
சிறந்ததா வொன்றைத்தாந் தேர்தல் - சிறந்ததா
வொன்றுபற்றிச் சென்றார்மற் றொன்றுநத்தித் தாம்பயின்ற
வொன்றையெற்றிப் போகாமை யோர்.**

அறிந்தாரும் அந்த அதிகாரம் பற்றிச் சிறந்ததா ஒன்றைத் தாம் தேர்தல் சிறந்ததா ஒன்று பற்றிச் சென்றார் மற்றொன்று நத்தித் தாம் பயின்ற ஒன்றை எற்றிப் போகாமை ஓர்.

## 54. பத்திவிசாரத்திறன்

**724. உயிர்க்குயிரா நிற்குந்தன் னுண்மையா மீசன்
பயக்குந் திருவருளின் பாங்கே - நயக்குமெய்ஞ்
ஞான விசார நடைகடைபோ யுள்ளநிலை
ஆன சமாதி யடைவு.**

உயிர்க்கு உயிரா நிற்கும் தன் உண்மை ஆம் ஈசன் பயக்கும் திரு அருளின் பாங்கே நயக்கும் மெய்ஞ் ஞான விசார நடை கடைபோய் உள்ளநிலை ஆன சமாதி அடைவு.

**725. உள்ளே யிருக்கு முடையா னருள்வலத்தால்
உள்ளே யிழுத்தா லொழியத்தம் - கள்ளமனச்
சேட்டைவலத் தாலுளத்துட் சேர்ந்தமைதிச் சால்பெய்த
மாட்டுநரார் போக்கை மறித்து.**

உள்ளே இருக்கும் உடையான் அருள் வலத்தால் உள்ளே இழுத்தால் ஒழியத் தம் கள்ள மனச் சேட்டை வலத்தால் உளத்துள் சேர்ந்து அமைதிச் சால்பு எய்த மாட்டுநர் ஆர் போக்கை மறித்து.

**மாட்டுநர் ஆர்-வல்லவர்கள் யார்; மறித்து-தடுத்து.**

**726. குருவருளா லல்லாமற் கூடற் கரிதாம்
இருநா லுருவத் திறைவன் - திருவருடான்
வித்தையிலும் வாராது வேறெதிலும் வாராது
பத்தியினாற் றானே வரும்.**

குரு அருளால் அல்லாமல் கூடற்கு அரிது ஆம் இரு நால் உருவத்து இறைவன் திரு அருள் தான் வித்தையிலும் வாராது வேறு எதிலும் வாராது பத்தியினால் தானே வரும்.

**இருநால் உருவத்து-அஷ்டமூர்த்தியாகிய.**

**727. களைகணா மீசன் கனவருட்சீர் தன்பால்**
**விளைவுவிளை யாமையுள்ள வேண்டா - தளையின்**
**விடுதலைதான் வேண்டி விசாரத்திற் சிந்தை**
**கடுகியதே சாலுங் கரி.**

களைகண் ஆம் ஈசன் கன அருள் சீர் தன்பால் விளைவு விளையாமை உள்ள வேண்டா தளையின் விடுதலை தான் வேண்டி விசாரத்தில் சிந்தை கடுகியதே சாலும் கரி.

**களைகண்-பற்றுக்கோடு; உள்ள வேண்டா-எண்ண வேண்டாம்; தளை-பந்தம்; கடுகியதே-மும்முரமாயிருப்பதே; கரி-சான்று.**

**728. இறைவன் றிருவருளும் யானாரென் றாய்ந்துள்**
**உறையுங் கருவி யுசாவும் - பறையுங்கால்**
**ஒன்றுக்கொன் றுற்ற வுதவிகளா யான்மபரத்**
**தொன்றுநிலை யுய்ப்ப வொருங்கு.**

இறைவன் திரு அருளும் யான் ஆர் என்று ஆய்ந்து உள் உறையும் கருவி உசாவும் பறையுங்கால் ஒன்றுக்கு ஒன்று உற்ற உதவிகளாய் ஆன்மபரத்து ஒன்றும் நிலை உய்ப்ப ஒருங்கு.

**729. மெய்ப்பொருளே யுள்ளத்து விண்டாலல் லாதுலகச்**
**சொப்பனமா மாயை தொலையாது - சொப்பனநோக்**
**குள்ளதா னாரென் றுசாவு முபாசனையே**
**விள்ளுமா றாற்றும் விதம்.**

மெய்ப்பொருளே உள்ளத்து விண்டால் அல்லாது உலகச் சொப்பனமாம் மாயை தொலையாது சொப்பனநோக்கு உள்ள தான் ஆர் என்று உசாவும் உபாசனையே விள்ளுமாறு ஆற்றும் விதம்.

**730. தனாது சொரூபத்தைத் தானநுசந் தித்தல்**
**மனாதிகளுக் கெட்டா மகேசன் - றனாது**
**பராபத்தி யென்ப பகருமிரு வோரும்**
**சொரூபத்தி லொன்றாத லால்.**

தனாது சொரூபத்தைத் தான் அநுசந்தித்தல் மன ஆதிகளுக்கு எட்டா மகேசன் தனாது பராபத்தி என்ப பகரும் இருவோரும் சொரூபத்தில் ஒன்று ஆதலால்.

**731. அறிவுநெறி யன்புநெறி யான விரண்டு**
**முறவுநெறி யாக வுணர்க - பிறிவிலா**
**வவ்விரண்டு ளொன்றினின் றொன்றை யகற்றாம**
**லொவ்வவொருங் குள்ளத் தொழுகு.**

அறிவுநெறி அன்புநெறி ஆன இரண்டும் உறவு நெறி ஆக உணர்க பிறிவு இலா அவ் இரண்டுள் ஒன்றினின்று ஒன்றை அகற்றாமல் ஒவ்வ ஒருங்கு உள்ளத்து ஒழுகு.

**பிறிவு இலா-அன்னியமற்ற; ஒவ்வ-ஒத்து.**

**(குறள் வெண்பா)**

**(13) *ஆன்மாநு சந்தான மஃதுபர மீசபத்தி***
***ஆன்மாவா யீசனுள னால்.*** ***-பகவான்***

ஆன்ம அநுசந்தானம் அஃது பரம ஈச பத்தி ஆன்மாவாய் ஈசன் உளனால்.

**(நேரிசை வெண்பா)**

**732. தாணுவருள் வேட்டடையுந் தானா ரெனக்காணின்**
**ஆணவம்போ யாண்டா னருள்வெளியாம் - தாணுவாம்**
**அந்த வருள்வெளிக்கே யாணவம்போ யற்றதற்பின்**
**பெந்த மலத்தொடர்பு மின்று.**

தாணு அருள் வேட்டு அடையும் தான் ஆர் எனக் காணின் ஆணவம் போய் ஆண்டான் அருள் வெளி ஆம் தாணு ஆம் அந்த அருள்வெளிக்கே ஆணவம் போய் அற்றதன் பின்பு எந்த மலத் தொடர்பும் இன்று.

**தாணு-கடவுள்; வேட்டு-விரும்பி; அருள்வெளிக்கே-அருள்வெளியில்.**

**733. மற்றை யிரண்டு மலமுமொருங் காணவமாம்**
**பற்றையே பற்றிப் படர்வனவாம் - பற்றாகும்**
**அவ்வா ணவந்தா னழிந்ததே லவ்விரண்டும்**
**எவ்வாறு முய்த லிலை.**

மற்றை இரண்டு மலமும் ஒருங்கு ஆணவம் ஆம் பற்றையே பற்றிப் படர்வன ஆம் பற்று ஆகும் அவ் ஆணவம் தான் அழிந்ததேல் அவ் இரண்டும் எவ்வாறும் உய்தல் இலை.

**மற்றை இரண்டு-கன்மம், மாயை; அழிந்ததேல்-அழியுமேயானால்; இலை-இல்லை.**

மலம் மூன்றனுள், மற்றையிரண்டும் ஒருங்கே ஆணவமென்னு மகப்பற்றையே தமக்காதாரமாகக் கொண்டெழுவனவாம். ஆதலின் அவற்றுக்காதார மாகும் அவ்வாணவந்தா னழிந்தொழியின் அவ்விரண்டும் பின்ன ரெவ்வாற்றாலு முயிர்த்தலிலவாம்.

**வி-ரை:-** ஆணவம், மாயை, கன்மம் என்பன மும்மலமாம். தானல்லாத வுடம்பைத் தானென்றபிமானிக்கும் மோகம் அகப்பற்று; அறிவுமயமா யுண்மையிலகண்டமாய் நின்றவான்மாவை அணுவாய்ச் சுருக்கலால் அம்மோகம் ஆணவமெனப்படும்.

## 55. ஏகாக்கிரபத்தித்திறன்

**734. ஊசிக்காந் தம்வடக் கொன்றலென வீசனடி**
**நேசித் தொழுகுமொரே நெஞ்சத்தார் - பாசக்**
**கடலா முலகிற் கருத்துத் திகைத்துத்**
**தடுமாறு வாரலர் தாம்.**

ஊசிக் காந்தம் வடக்கு ஒன்றல் என ஈசன் அடி நேசித்து ஒழுகும் ஒரே நெஞ்சத்தார் பாசக் கடல் ஆம் உலகில் கருத்துத் திகைத்துத் தடுமாறுவார் அலர் தாம்.

**735. தாணுவைநெஞ் சத்தாற் றழுவியுல கிற்சரிப்போர்**
**தூணையிறு கப்பற்றிச் சுற்றுவோர் - மாணசல**
**ஆலம் பனத்தரவ ராணவரா காமையினால்**
**மாலம் புவியின் மடார்.**

தாணுவை நெஞ்சத்தால் தழுவி உலகில் சரிப்போர் தூணை இறுகப் பற்றிச் சுற்றுவோர் மாண் அசல ஆலம்பனத்தர் அவர் ஆணவர் ஆகாமையினால் மால் அம் புவியில் மடார்.

**ஆலம்பனம்-கடவுட் பிடிப்பு; மால்-மயக்கம்; மடார்-அகப்படமாட்டார்கள்**

**736. எவ்விவகா ரங்களினும் யாதொன் றியைந்துளதோ**
**செவ்வியவம் மாண்பொருளிற் சிந்தையுறிற் - செய்வனவாம்**
**அந்தவிவ காரம்பல் லாயிரத்தா லும்மன்னார்**
**சிந்தா குலமுறார் தேர்.**

எவ் விவகாரங்களினும் யாது ஒன்று இயைந்துளதோ செவ்விய அம் மாண் பொருளில் சிந்தை உறில் செய்வன ஆம் அந்த விவகாரம் பல் ஆயிரத்தாலும் அன்னார் சிந்தாகுலம் உறார் தேர்.

**இயைந்து-விரவி; உறில்-பொருந்தியிருக்குமானால்.**

செம்மையும் மாட்சியுமுடைய யாதொரு மெய்ப்பொருள் எல்லா விவகாரங்களினும் மணிகளிற் சரடென மருவி யுள்ளதோ அதன்கட் சிந்தையகலாது சேரின், பல்லாயிரக்கணக்கான விவகாரஞ் செய்யினும் அவற்றாலவன் அறவே மனக்கவலை யடைய மாட்டான்.

**வி-ரை:-** இலௌகீகம், வைதிக மென்னு மிருவகையுமடங்க எவ்விவகாரங்களினு மென்றார். செம்மை - திரிபின்றி என்று

மொருதன்மைத்தா யிருத்தல்; மாட்சி - சந்நிதான மாத்திரத்தா லாதித்தன்போல் எல்லாஞ் செய்வ தாதல்; அன்னான் சிந்தாகுல முறானாதல் அம்மெய்ப் பொருட்கண் மேவிய அவன் சிந்தையினின்று கர்த்தத்துவ மறவே கழிதலாலென்க. அத்தன்மையால் அத்தகையோன் எல்லாஞ் செய்தும் உண்மையில் ஒன்றுஞ் செய்யாதவன் என்பதாம்.

**737. துன்று மரிசித் தொகையுள்ளே சுற்றுமுற்றும்**
**சென்றுழல்வ தாமே திரிகையாற் - பொன்ற**
**அரைபட் டழிபவலா லச்சடிவிட் டேகா**
**அரைபடுப வாகா வறி.**

துன்றும் அரிசித் தொகையுள்ளே சுற்று முற்றும் சென்று உழல்வதாமே திரிகையால் பொன்ற அரைபட்டு அழிப அலால் அச்சு அடி விட்டு ஏகா அரை படுப ஆகா அறி.

**பொன்ற-பொடிபட.**

## 56. தியானவிசாரத்திறன்

**738. மெய்யுணர்வின் பாக விளங்கும் பரம்பொருளாச்**
**செய்யுமனோ பாவனையே சிந்தனையாம் - பொய்யாம்**
**மயல்வித்து மாள மனத்தையான் மாவிற்**
**பயில்வித்த லென்பவுசாப் பண்பு.**

மெய் உணர்வு இன்பு ஆக விளங்கும் பரம் பொருளாச் செய்யும் மனோ பாவனையே சிந்தனை ஆம் பொய் ஆம் மயல் வித்து மாள மனத்தை ஆன்மாவில் பயில்வித்தல் என்ப உசாப் பண்பு.

**மாள-அழிய.**

**739. எவ்வாற்றா லெவ்வெவ ரெண்ணினா ரவ்வவர்மற்**
**றவ்வாற்றாற் றன்னை யடைகின்றார் - எவ்வாற்று**
**மெண்ணமற்றுச் சும்மா வியல்சாந்த ரெய்துகின்றார்**
**வண்ணமில்சீர்க் கைவல் லியம்.**

எவ் ஆற்றால் எவ்எவர் எண்ணினார் அவ் அவர் மற்று அவ் ஆற்றால் தன்னை அடைகின்றார் எவ் ஆற்றும் எண்ணம் அற்றுச் சும்மா இயல் சாந்தர் எய்துகின்றார் வண்ணம் இல் சீர்க் கைவல்லியம்.

**இயல்-இருக்கின்ற; வண்ணம் இல்-நிர்க்குணமான; சீர்-சிறந்த.**

**740. அகந்தையாந் தன்னை யறவழித்த பின்பே
முகந்துகொள லாந்தன் முதலை - அகந்தையால்
யானதுவென் றெண்ணலெவன்? யானழிந்து தன்னகத்தே
மோனமாய் நிற்கை முறை.**

அகந்தை ஆம் தன்னை அற அழித்த பின்பே முகந்து கொளல் ஆம் தன் முதலை அகந்தையால் யான் அது என்று எண்ணல் எவன் யான் அழிந்து தன் அகத்தே மோனமாய் நிற்கை முறை.

**முகந்துகொளல்-அடைதல்.**

**741. அறிவா வொளிரு மரூப சிவத்தைப்
பொறியா லுணர்புன் புலம்போற் - குறியா
இனைத்தென் றிரங்கலகத் தியானா ரெனவே
தனைத்துருவி யோராத் தவறு.**

அறிவா ஒளிரும் அரூப சிவத்தைப் பொறியால் உணர் புன் புலம் போல் குறியா இனைத்து என்று இரங்கல் அகத்து யான் ஆர் எனவே தனைத் துருவி ஓராத் தவறு.

**குறியா-குறிப்பொருளாக; இரங்கல்-தீர்மானித்தல்; ஓரா-விசாரித்தறியாத.**

அறிவாகவே யொளிரும் சொரூபத்தைச் சின்னமாக்கிக் காண்போன் காணப்படு பொருள்களின் கூடுதல் பிரிதலால் பெருந்துன்ப மெய்துதல், காண்போன் யாரென உள்ளே துருவி ஆராயாத குற்றமே யென்றார்.

## 57. சொரூபத்தியானத்திறன்

**(குறள் வெண்பா)**

**742. அறிவாத் தனைநன் கனுசந்திக் கிற்போன்
செறிவா னகமாஞ் சிவத்து.**

அறிவாத் தனை நன்கு அனுசந்திக்கிற்போன் செறிவான் அகம் ஆம் சிவத்து.

**செறிவான்-நிலைபெறுவான்.**

தன்னை நன்கு அறிவு சொரூபமாகவே அனுசந்தானம் புரிந்து பயில்வோன், அகமாகிய சிவத்தில் திண்ணம் செறிவானென்றார். அறிவாயிருத்தல், தன் நாமரூப போதங்களை விடுத்து அவைகளையும் அறியும் கேவல அறிவாகத் தன்னை சதா அறிந்திருத்தலாம்.

# 58. ஆகாயத்தியானத்திறன்

### (நேரிசை வெண்பா)

**743. எய்த நினைந்த விரும்பெருமை யத்தனையும்
எய்த நினைந்தாங் கெளிதுறவே - எய்துவிக்கும்
ஆயப் படாத வருமைசா லவ்வகண்டா
காயத் தலத்தின் கருத்து.**

எய்த நினைந்த இரும் பெருமை அத்தனையும் எய்த நினைந்த ஆங்கு எளிது உறவே எய்துவிக்கும் ஆயப் படாத அருமை சால் அவ் அகண்ட ஆகாயத் தலத்தின் கருத்து.

**இரும்-பெரிய; அருமை சால்-அருமை பொருந்திய; கருத்து-அநுசந்தானம்.**

**744. காயத் தலத்தைக் கருதிப்பின் னவ்வகண்டா
காயக் கருத்துங் கழன்றோரே - காயம்
பிறவாப் பெருஞ்சிறப்புப் பெற்றாரா மற்றோர்
இறவாப் பிறக்கு மிழிபு.**

காயத் தலத்தைக் கருதிப் பின் அவ் அகண்ட ஆகாயக் கருத்தும் கழன்றோரே காயம் பிறவாப் பெரும் சிறப்புப் பெற்றார் ஆம் மற்றோர் இறவாப் பிறக்கும் இழிபு.

**காயத்தலம்-ஆகாயம்; காயம்-உடல்; இழிபு-கீழ்மை.**

**745. ஞான சொரூபான்ம நம்பனைப் பற்றியுளத்
தூனமறு நிட்டை யுறப்பயின்றே - தானறிவு
மத்த முறக்கலங்கி மாழ்கலமு துண்டொருவன்
செத்தொழித லேயாந் தெரி.**

ஞான சொரூப ஆன்ம நம்பனைப் பற்றி உளத்து ஊனம் அறு நிட்டை உறப் பயின்றே தான் அறிவு மத்தம் உறக் கலங்கி மாழ்கல் அமுது உண்டு ஒருவன் செத்து ஒழிதலே ஆம் தெரி.

**நம்பனை-கடவுளை.**

ஞான சொரூபமாகிய ஆத்மநாதனைப் பற்றி உளத்தே நிட்டை பயின்று, தன்னறிவு மாய்தலென்பது ஒருவன் அமுதத்தையுண்டு செத்தொழிவதை யொக்கும். பேரறிவில் தன்னறிவின் அழிவையஞ்சும் பேதைமையை வியந்தார்.

## 59. காலத்தியானத்திறன்

**746. செத்துப் பிறக்குஞ் சிறுமையறச் சாவாத**
**நித்தப் பெருமை நினைதிரேல் - எத்துணையும்**
**தோற்ற வொடுக்கத் துளக்கமிலாக் காலமதை**
**ஆற்ற நினைத லடைவு.**

செத்துப் பிறக்கும் சிறுமை அறச் சாவாத நித்தப் பெருமை நினைதிரேல் எத்துணையும் தோற்ற ஒடுக்கத் துளக்கம் இலாக் காலம் அதை ஆற்ற நினைதல் அடைவு.

**நினைதிரேல்-நினைவீர்களேயானால்; துளக்கம்-விருத்தி; ஆற்ற-பெரிதும்; அடைவு-செய்யத்தகுந்தது.**

**747. காலமே தாமாகக் கண்டந்தக் காட்சியையும்**
**ஏலவே விட்ட வியல்னைரே - ஞாலமேற்**
**சாவாமை பெற்ற சதுரர்மற் றெல்லோரும்**
**வீவாரவ் வாளின்கண் வீழ்ந்து.**

காலமே தாம் ஆகக் கண்டு அந்தக் காட்சியையும் ஏலவே விட்ட இயல்பினரே ஞாலம் மேல் சாவாமை பெற்ற சதுரர் மற்று எல்லோரும் வீவார் அவ்வாளின்கண் வீழ்ந்து.

**ஏலவே-பொருந்த, தீர; வீவார்-அழிவார்.**

**748. ஏலவே தந்நிலையி லெய்தினார் தம்மையலாற்**
**காலமென வோர்பொருளுங் காண்கிலார் - காலமென**
**முற்றுமொரு தத்துவத்தை மூன்றாக வோர்ந்திடுதல்**
**மற்றதனின் மேலு மிலர்.**

ஏலவே தம் நிலையில் எய்தினார் தம்மை அலால் காலம் என ஓர் பொருளும் காண்கிலார் காலம் என முற்றும் ஒரு தத்துவத்தை மூன்றாக ஓர்ந்திடுதல் மற்று அதனின் மேலும் இலர்.

**முற்றும்-சம்பூர்ணமான.**

## 60. நிதித்தியாசனத்திறன்

**749. ஓரா விடத்துளதா யோர்க்குமிடத் தில்லாத**
**பாராதி யாய பகிரண்டம் - ஓராதே**
**ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்**
**பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.**

ஓரா இடத்து உளதாய் ஓர்க்கும் இடத்து இல்லாத பார் ஆதி ஆய பகிர் அண்டம் ஓராதே ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப் பேர்த்து உள்ள வேண்டா பிறப்பு.

**ஓரா-ஆராயாத; ஓராதே-கவனிக்காது; ஒருதலையா-ஒருமுகமா; பேர்த்து-மாறி; உள்ள வேண்டா-நினைக்க வேண்டாம்.**

## 750. யாவ னெதனை யிடைவிடா தெண்ணுவான்
## ஆவனது வாகவத னாற்றலால் - ஆர்வமொடு
## சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
## சார்தரா சார்தரு நோய்.

யாவன் எதனை இடைவிடாது எண்ணுவான் ஆவன் அதுவாக அதன் ஆற்றலால் ஆர்வமொடு சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின் மற்று அழித்துச் சார்தரா சார்தரும் நோய்.

**சார்பு கெட-உலகப்பற்று நீங்க; ஒழுகின்-சாதனைசெய்தால்; மற்று-மீண்டும்; சார்தரா-சாரமாட்டா; சார்தரும்-பந்தத்தைத் தரும்.**

எவன் எதனை உணர்வுள்ளளவும் இடைவிடாது பாவித்து உள்ளத்தா லதனோ டொருமையுற வொழுகுவானோ அவன் அப்பயிற்சி வன்மையால் அதுவாகவே தோன்றுவன். ஆங்கே ஒருவன் எல்லாப் பொருட்குஞ்சார்பாய அச்செம் பொருளை யுணர்ந்து யானென தென்னு மிருவகைப்பற்று மற ஒழுக வல்லனாயின் அவனைச்சாரக் கடவனவாய் முன்னமைந்து நின்ற துன்பங்கள் அவ்வுணர்வொழுக்கங்களை யழித்துப்பின் சாரமாட்டா.

**வி-ரை:-** பயின்று வந்த பாவனா பலத்தால் உயிர் உடம்பினீங்குங் காலத்தும் அவ்வொருமைப்பாடு தன்னியல்பாகவே உள்ளத்துதித்தலால் ஆவனது வாகவதனாற்றலா லென்றார். உயிர் உடம்பினீங்குங் காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது அஃது அதுவாய்த் தோன்று மென்பது எல்லா ஆகமங்கட்குந்துணிபாகலின் வீடெய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற் கேதுவாய் பிறபாவனை கெடுதற் பொருட்டுக் கேவலப்பொருளையே பாவித்தல் வேண்டுதலான் அதனை முன்னே பயிறலாய இதனின் மிக்க வுபாயமில்லை யென்பதறிக.

விட்டுக் கருதலி னாறுநெய் வீழ்ச்சிபோல்
விட்டிடா துன்னலே யுந்தீபற
விசேடமா முன்னவே யுந்தீபற

(உபதேசவுந்தியார் - 7)

சார்பென்னு மிரண்டுந் தொழிலாகுபெயர். ஈண்டொழுக்க மென்றது சொரூப சமாதியை. சாரக்கடவனவாய் நின்ற துன்பங்களாவன: பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரான் அளவின்றி யீட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த வுடம்புகளான் அநுபவித்தனவும் பிறந்த வுடம்பான் முகந்து நின்றனவும் ஒழியப்பின்னு மநுபவிக்கக் கடவனவாய்க் கிடந்தன. அவை விளக்கின் முன்

இருள் போல் ஞானயோகங்களின் முன்னர்க்கெடுதலான், அழித்துச் சார்தரா என்றார். பிறப்பிற்குக் காரணமாகலான், நல்வினைப் பயனும் நோய் எனப்பட்டது.

## 751. நிறைந்தவுப சாந்தத்தெண் ணீர்மையே வேதம்
## அறைந்தமுடி வாந்தவப்பே றாகும் - செறிந்த
## அபரிமித நன்மை யடையினுஞ்சற் றேனும்
## சபலமுறு மாயிற் றவிர்.

நிறைந்த உபசாந்தத் தெள் நீர்மையே வேதம் அறைந்த முடிவு ஆம் தவப்பேறு ஆகும் செறிந்த அபரிமித நன்மை அடையினும் சற்றேனும் சபலம் உறுமாயில் தவிர்.

**தெள் நீர்மை-தெளிந்த ஞானம்; சபலம்-சஞ்சலம்.**

## 752. இன்றியமை யாதென்னு மெண்ணமுதிக் குங்காறும்
## துன்றி யொருவனொன்றைத் துய்த்தலாம் - கன்றி
## வரைந்துகொளு மெண்ண மனத்துதித்தா லாங்கே
## விரைந்துகை சோர விடல்.

இன்றி அமையாது என்னும் எண்ணம் உதிக்குங்காறும் துன்றி ஒருவன் ஒன்றைத் துய்த்தல் ஆம் கன்றி வரைந்துகொளும் எண்ணம் மனத்து உதித்தால் ஆங்கே விரைந்து கை சோர விடல்.

**துன்றி-நெருங்கி, பெற்று; துய்த்தல்-அனுபவித்தல்; கன்றி-நொந்து, வருந்தி; வரைந்து கொளல்-விலக்குதல்; கை சோரவிடல்-நீக்குதல்.**

## 753. அறப்பாலாம் பஃறிருப்பேற் றான்மட்டு மீசன்
## சிறப்பாந் திருவருடே றாதே - மறப்பால்
## அணவு மனக்கவலை யற்றவுப சாந்த
## உணர்வின் றெளிவா லொழிந்து.

அறப்பால் ஆம் பல் திருப் பேற்றால் மட்டும் ஈசன் சிறப்பு ஆம் திரு அருள் தேறாதே மறப்பால் அணவும் மனக்கவலை அற்ற உபசாந்த உணர்வின் தெளிவால் ஒழிந்து.

**அறப்பால் ஆம்-தர்மநெறியால் கிடைக்கின்ற; பஃறிருப்பேற்றால்-பல ஐசுவரிய அடைவால்; தேறாதே-தீர்மானிக்காதே; மறப்பால் அணவும்-பிரமாதத்தால் சேருகின்ற; ஒழிந்து-தவிர.**

## 754. எண்ணியவை யெண்ணியாங் கெய்தப் பெறுவிக்கும்
## திண்மைகெழு சங்கற்ப சித்தியினும் - உண்மையுணர்
## வூன்றுதலா லோர்நினைவு மூர்தலிலா வுள்ளமைதி
## சான்றநிலை தானே தலை.

எண்ணியவை எண்ணி ஆங்கு எய்தப் பெறுவிக்கும் திண்மை கெழு சங்கற்ப சித்தியினும் உண்மை உணர்வு ஊன்றுதலால் ஓர் நினைவும் ஊர்தல் இலா உள் அமைதி சான்ற நிலை தானே தலை.

**கெழு-நிறைந்த, பொருந்திய; ஊர்தல் இலா-உற்பத்தி ஆகாத; சான்ற-பொருந்திய.**

## 61. சாதனாந்தரத்திறன்

**755. வீணாள் படாது விசாரங் கடைப்பிடிப்பின்**
**வாணா ளுயிர்க்குமிக மாண்புடைத்தாம் - மாணா**
**வுடலுருநா னோய வுயர்ந்தபர போகக்**
**கடலெழுந்தன் னுள்ளே கதிர்த்து.**

வீண் நாள் படாது விசாரம் கடைப்பிடிப்பின் வாழ்நாள் உயிர்க்கு மிக மாண்பு உடைத்தாம் மாணா உடல் உரு நான் ஓய உயர்ந்த பரபோகக் கடல் எழும் தன் உள்ளே கதிர்த்து.

**மாணா-சிறப்பற்ற; கதிர்த்து-மிகுத்து.**

**756. மிக்க விசாரணையை விட்டான் மனமடக்கத்**
**தக்கபிற சாதனங்கள் சற்றுமிலை - மற்றவற்றால்**
**ஆளப் படினஃ தடங்கினாற் போன்றிருந்து**
**மீளக் கிளம்பி விடும்.**

மிக்க விசாரணையை விட்டால் மனம் அடக்கத் தக்க பிற சாதனங்கள் சற்றும் இலை மற்றவற்றால் ஆளப்படின் அஃது அடங்கினால் போன்று இருந்து மீளக் கிளம்பி விடும்.

**மிக்க-பலிதத்தில் மிகச்சிறந்த.**

**757. வளியடக்கத் தாலு மனமடங்கு மானால்**
**வளியடங்கி நிற்குமம் மட்டே - வளிதான்**
**கழல்வாய் மனமுங் கழன்றுபுறஞ் சுற்றும்**
**பழவா தனைவயப் பட்டு.**

வளி அடக்கத்தாலும் மனம் அடங்கும் ஆனால் வளி அடங்கி நிற்கும் அம்மட்டே வளிதான் கழல்வாய் மனமும் கழன்று புறம் சுற்றும் பழ வாதனை வயப்பட்டு.

**வளி-பிராணன்; கழல்வாய்-கிளம்பும்போது.**

## 62. விசாரசகாயத்திறன்

**758. காண்பானுங் காணப் படுபொருளுங் காட்சியுமாய்ச்
சேண்பாயுஞ் சிந்தைச் செயலொடுக்க - மாண்பாகும்
மார்க்கமா மந்த மனந்தான் றனைத்தன்னாற்
பார்க்கவே செய்யும் பரிசு.**

காண்பானும் காணப்படு பொருளும் காட்சியுமாய்ச் சேண்பாயும் சிந்தைச் செயல் ஒடுக்க மாண்பு ஆகும் மார்க்கம் ஆம் அந்த மனம் தான் தனைத் தன்னால் பார்க்கவே செய்யும் பரிசு.

**சேண்பாயும்-வெளியில் தொழிற்படும்; பரிசு-செயல், பழக்கம்.**

**759. தன்னிலே தானாத் தழைத்தொளிர்வ தாலுண்மை
தன்னையே தான்காணத் தக்கதாம் - தன்னுருவை
யுள்ளபடி யுள்ளத் துசாவற் குறுதுணையத்
தள்ளருமெய் யான்மவொளி தான்.**

தன்னிலே தானாத் தழைத்து ஒளிர்வதால் உண்மை தன்னையே தான் காணத் தக்கது ஆம் தன் உருவை உள்ளபடி உள்ளத்து உசாவற்கு உறுதுணை அத் தள்அரு மெய் ஆன்ம ஒளி தான்.

**ஒளிர்வதால்-விளங்குவதால்; தள்ளரு-தள்ளுவதற்குமுடியாத.**

உள்ளத்தில் உயிர்க்குயிராய்த் தழைத்துப் பிரகாசிப்பதால், அவ்வுண்மைப் பொருளே காணத்தக்கதாம். தான் யார் என்பதை யுள்ளபடி உணர அவ்வுள்ளொளியே யுறுதுணையாகும்.

**760. எண்ண மிரண்டற் கிடையிலே சித்தமுள
வண்ணமெவ் வண்ணமவ் வண்ணமே - நண்ணுபர
மார்த்த சொரூபமென் றாய்ந்தறிந் துள்ளத்து
நேர்த்திபெற நிற்கை நிலை.**

எண்ணம் இரண்டற்கு இடையிலே சித்தம் உள வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமே நண்ணு பரமார்த்த சொரூபம் என்று ஆய்ந்து அறிந்து உள்ளத்து நேர்த்திபெற நிற்கை நிலை.

**வண்ணம்-விதம்; நண்ணு-இருக்கின்ற; நேர்த்திபெற-தெளிவாக.**

**761. மண்டுசெபத் தோடு மகிழ்ச்சிதரு மூர்த்திநினை
வுண்டிநிய மத்தோ டொழிவறத்தாம் - கொண்டுபுரி
சாதனையாற் சிந்தையொரு தன்மைத்தாய்ப் பண்டையுள
வாதனைபோ யெய்தும் வலி.**

மண்டு செபத்தோடு மகிழ்ச்சிதரு மூர்த்தி நினைவு உண்டி நியமத்தோடு ஒழிவு அறத் தாம் கொண்டு புரி சாதனையால் சிந்தை ஒரு தன்மைத்தாய்ப் பண்டை உள வாதனை போய் எய்தும் வலி.

**மண்டு-நிறைந்த; ஒழிவற-இடைவிடாமல்; ஒருதன்மைத்தாய்-ஒருமுகப்பட்டதாய்; வலி-வலிமை.**

## 762. யானையெளி தேந்து மிருப்புத் தொடராற்கைக்
## கானசல னம்போகு மாறேபோல் - ஈன
## மலினமனத் துக்குருநா மத்தாலே மாயச்
## சலனந் தவிர்ந்தொழியுந் தான்.

யானை எளிது ஏந்தும் இருப்புத் தொடரால் கைக்கு ஆன சலனம் போகுமாறே போல் ஈன மலின மனத்துக்கு உரு நாமத்தாலே மாயச் சலனம் தவிர்ந்து ஒழியும் தான்.

**ஏந்தும்-பற்றிக்கொள்ளும்; இருப்புத்தொடர்-இரும்புச் சங்கிலி; உருநாமத்தாலே-மூர்த்தித்தியானம் நாமஜபம் ஆகியவற்றால்.**

## 763. இவ்வாறுள் ளேகாக் கிரவுரஞ்சேர் சிந்தைக்கே
## செவ்வே விசாரந்தான் சித்திக்கும் - ஒவ்வாத
## மிச்சைமன ஞான விசாரநெருப் புக்கீந்த
## பச்சை விறகின் பரிசு.

இவ்வாறு உள் ஏகாக்கிர உரம் சேர் சிந்தைக்கே செவ்வே விசாரம்தான் சித்திக்கும் ஒவ்வாத மிச்சை மனம் ஞான விசார நெருப்புக்கு ஈந்த பச்சை விறகின் பரிசு.

**செவ்வே-நன்றாக; ஒவ்வாத மிச்சை மனம்-தகுதியற்ற மற்ற மனம்; பரிசு-தன்மையது.**

## 764. வேட்கையான் மேன்மேல் விழுமம் விளைவறிந்தவ்
## வேட்கையற விட்ட விழுமியோர் - மேற்கொளுநே
## ரான்மவிசா ரத்தா லடைவரகத் தந்தமில்பே
## ரான்ம ரசாநு பவம்.

வேட்கையால் மேல்மேல் விழுமம் விளைவு அறிந்து அவ் வேட்கை அற விட்ட விழுமியோர் மேற்கொளும் நேர் ஆன்மவிசாரத்தால் அடைவர் அகத்து அந்தம் இல் பேர் ஆன்ம ரச அநுபவம்.

**விழுமம்-துன்பம்; விழுமியோர்-பெரியோர்.**

வேட்கையினால் மேலும் மேலும் விளையும் துன்பங்களை யறிந்து வேட்கையை யறவே யொழித்த பெரியோர், அப்பக்குவத்தால் ஆன்ம விசாரத்தை மேற்கொண்டு தாம் தம்முள் ஆன்ம ரசானுபவத்தை யடைவார். இதனால் வேட்கை யொழித்த பக்குவிக்கு ஆத்ம ஞானம் சமீபமெனப்பட்டது.

# 63. சாதனையெல்லைத்திறன்

**765. முப்புடியின் பேத முயங்களவுஞ் சாதனைதான்
எப்படியு மின்றி யமையாது - கற்பனையாம்
மோகவகங் கார முசியாமை முப்புடியால்
ஊகமுற லாகு முணர்.**

முப்புடியின் பேதம் முயங்கு அளவும் சாதனைதான் எப்படியும் இன்றி அமையாது கற்பனை ஆம் மோக அகங்காரம் முசியாமை முப்புடியால் ஊகம் உறல் ஆகும் உணர்.

**முயங்கு அளவும்-இருக்குமளவும்; முசியாமை-அழியாமை; ஊகம் உறல்-யூகித்தல்.**

**766. எதுவரையி லேனை யிரண்டுடலின் கண்ணும்
கதுவுபுடி மூவேறாக் காணும் - அதுவரையில்
காரணமா மோகவுடற் கட்டழிந்த தின்றெனவே
பேரலிலை மாயப் பிறப்பு.**

எதுவரையில் ஏனை இரண்டு உடலின் கண்ணும் கதுவு புடி மூ வேறு ஆகக் காணும் அது வரையில் காரணம் ஆம் மோக உடல் கட்டு அழிந்தது இன்று எனவே பேரல் இலை மாயப் பிறப்பு.

**ஏனை-மற்ற; இரண்டு உடல்-சூக்ஷ்ம, காரண உடல்; கதுவுபுடி-பற்றை உண்டாக்குகின்ற முப்புடி; பேரல்-விலகுதல்.**

எதுவரையில் காட்சியில் திரிபுடிகள் வேறுவேறாகத் தோன்றுகின்றனவோ, அதுவரையில் காரணமாகிய அவித்தையின் விளைவாகிய மாயப்பிறப்பு பெயர்ந்து இறுதியுற வில்லை யென அறியவும். ஞானத்தில் திரிபுடிகள் ஒன்று சேர்ந்து காட்சியில் கலப்பனவாம்.

**767. சாதனையா லவ்வகந்தை சாய்ந்தா லதன்பின்னர்
ஏதிலென யாது மெதிர்வதிலை - சூதுலாம்
அன்னியமா முன்ன மறிந்தவெலா மத்துவிதம்
பன்னியஞா னான்மசொரூ பம்.**

சாதனையால் அவ் அகந்தை சாய்ந்தால் அதன்பின்னர் ஏதில் என யாதும் எதிர்வது இலை சூது உலாம் அன்னியமா முன்னம் அறிந்த எலாம் அத்துவிதம் பன்னிய ஞான ஆன்ம சொரூபம்.

**ஏதில்-அன்னியம்; சூது உலாம்-வஞ்சமாய்த் தோன்றிய; பன்னிய-கூறிய.**

**768. உருவெளிய தாவுலகை யோர்வ ரகந்தைக்
கருவிளிய நின்றுண்மை கண்டோர் - பெருவெளியே
தாமாக நின்றிலகுந் தன்மையாற் றன்மயமே
தீர்மானஞ் சின்மாத் திரம்.**

உருவெளி அதா உலகை ஓர்வர் அகந்தைக் கரு விளிய நின்று உண்மை கண்டோர் பெரு வெளியே தாம் ஆக நின்று இலகும் தன்மையால் தன்மயமே தீர்மானம் சின் மாத்திரம்.

**உருவெளி - மாயத்தோற்றம்; கருவிளிய-வேர் அழிய.**

அகங்கார மடியோடழிய அதன் மூலத்தில் முனைந்து நின்று உண்மை யுணர்ந்தோர் புலனாமுலகை உருவெளித் தோற்றமே யாகக் காண்பர். ஆதலால், யாவற்றுக்கு மிடனாம்படி நுண்மையால் விசாலமா மெய்ஞ் ஞான வெளியே தம் வடிவாக நின்று அன்னார் விளங்குந் தன்மையால், அவ்வுலகு நிச்சயமாய் அறிவு மாத்திரமாவதன்றித் தன்மயமுமாம்.

## 64. நிட்டைவிவேகத்திறன்

**769. அனாமயமாத் தானொளிரு மான்மநிட்டை யொன்றே
அனான்மபந்த மெல்லா மறுக்கும் - தனாதியல்பாம்
மெய்யொடுபொய் வேறு படுக்கும் விவேகமோ
துய்யநிரா சைக்குத் துணை.**

அனாமயமாத் தான் ஒளிரும் ஆன்மநிட்டை ஒன்றே அனான்ம பந்தம் எல்லாம் அறுக்கும் தனாது இயல்பு ஆம் மெய்யொடு பொய் வேறு படுக்கும் விவேகமோ துய்ய நிராசைக்குத் துணை.

**அனாமயமா-கேடற்று; தனாது-தனது; வேறுபடுக்கும்-பிரித்துக்காட்டும்; துய்ய-தூய்மையான.**

### (கலி விருத்தம்)

**770. நீயெது வென்று நிகழ்ந்துழல் வாயோ
நீயது வல்லை நினைந்தறி கிற்கில்
நீயெது வென்றுநின் னெஞ்சினி லாழ்ந்தினி
நீயது வாக நிலைத்திடு நேரே.**

நீ எது என்று நிகழ்ந்து உழல்வாயோ நீ அது அல்லை நினைந்து அறிகிற்கில் நீ எது என்று நின் நெஞ்சினில் ஆழ்ந்து இனி நீ அது ஆக நிலைத்திடு நேரே.

**நிகழ்ந்து-எண்ணி, கருதி; நினைந்து-விசாரித்து; அறிகிற்கில்-அறிந்தால்; நேரே-சாக்ஷாத்.**

'அது வென்றா லெதுவென வொன்றடுக்கும் சங்கை யாதலினால் அதுவெனலும் அறவே விட்டு' என்றார் தாயுமானவர். எதை அறிந்தாலும், அஃது அறியப்படு பொருளாதலின் நாமல்ல. அதனால் தன்னுள்ளாழ்ந்து அதுவாக நாம் நிலைத்திருத்தலே, பிறிதொன்றை அறியாப் பேரறிவே, சொரூபமாம்.

**(நேரிசை வெண்பா)**

**771. கேவல வுண்மைக் கிடக்கையிலே யன்றிமற்**
**றியாவதன் கண்ணுநிலை யின்றெனவோர்ந் - தாவலறக்**
**கெட்டெவற்றின் கண்ணுமக் கேவலசச் சிற்பரத்தே**
**நிட்டுரமற் றார்கவுயிர் நெஞ்சு.**

கேவல உண்மைக் கிடக்கையிலே அன்றி மற்று யாவதன்கண்ணும் நிலை இன்று என ஓர்ந்து ஆவல் அறக் கெட்டு எவற்றின் கண்ணும் அக் கேவல சத் சித் பரத்தே நிட்டுரம் அற்று ஆர்க உயிர் நெஞ்சு.

**கேவல-ஏக, தனிப்பட்ட; கிடக்கையிலே-இருப்பதிலேயே; நிலை-நிலைப்பு; அறக்கெட்டு-அடியோடழிந்து; நிட்டுரம்-வெறுப்பு; ஆர்க-அமர்ந்திருப்பாயாக; உயிர்-நீ, ஜீவன்.**

**772. அறிவுத் தெளிவா லவிச்சையற நிட்டை**
**செறிவுற்றுச் சிந்தையறச் செத்தோர் - பிறிவற்றுச்**
**சித்தஞ் சிவபதத்தே ஜீவ சமாதியாய்**
**நித்தமுத்த ராவுயிர்ப் பார்.**

அறிவுத் தெளிவால் அவிச்சை அற நிட்டை செறிவு உற்றுச் சிந்தை அறச் செத்தோர் பிறிவு அற்றுச் சித்தம் சிவபதத்தே ஜீவ சமாதியாய் நித்த முத்தரா உயிர்ப்பார்.

**அவிச்சை-அவித்தை; செறிவுற்று-திடப்பட்டு; பிறிவு அற்று-அன்னியமற்று; சமாதியாய்-சமநிலை அடைந்தவராய்; உயிர்ப்பார்-வாழ்வார்.**

அறிவுத் தெளிவால் நிட்டை கூடி சிந்தையறச் செத்தோர், தம் சித்தம் சிவபதத்தில் பிரிவின்றிப் பொருந்த ஜீவசமாதியராய் நித்தமுத்தராய் வாழ்வார்.

## 65. சும்மாவிருத்தற்றிறன்

**773. செம்மா தவத்திறனாச் சிந்தை கடைப்பிடிக்க**
**எம்மா னியம்புறுதி யிவ்வளவே - சும்மா**
**விருத்தலே யன்றிமற் றெண்ணலிலை யாதும்**
**கருத்தினாற் செய்யுங் கடன்.**

செம் மா தவத் திறனாச் சிந்தை கடைப்பிடிக்க எம்மான் இயம்பு உறுதி இவ்வளவே சும்மா இருத்தலே அன்றி மற்று எண்ணல் இலை யாதும் கருத்தினால் செய்யும் கடன்.

**சிந்தை கடைப்பிடிக்க-பின்பற்ற; எம்மான்-எமது தலைவனாகிய ஸ்ரீரமணன்; இயம்பு-சொல்வது; உறுதி-உறுதியாக.**

**774. சும்மா விருந்தொளிருஞ் சோம்பல் சொரூபநிலை**
**அம்மா நிலையதுதா னானநிலை - செம்மாண்**
**அருந்தவத்தா லன்றி யடைவருமச் சோம்பல்**
**பொருந்தினோர் புண்ணியராப் போற்று.**

சும்மா இருந்து ஒளிரும் சோம்பல் சொரூபநிலை அம் மா நிலை அது தான் ஆன நிலை செம் மாண் அரும் தவத்தால் அன்றி அடைவு அரும் அச் சோம்பல் பொருந்தினோர் புண்ணியராப் போற்று.

**மா-பெரிய.**

## 66. வியட்டியகத்திறன்

**775. நானேநா னென்றமெய்ஞ் ஞானமின்றி யின்னானென்**
**றூனுடலே தானா வொழுகுவோன் - ஊனமுற**
**நாசமாய் வீணே நலிவான் கனாப்போலும்**
**பாசமோ கத்துட் படிந்து.**

நானே நான் என்ற மெய்ஞ்ஞானம் இன்றி இன்னான் என்று ஊன் உடலே தானா ஒழுகுவோன் ஊனம் உற நாசமாய் வீணே நலிவான் கனாப்போலும் பாச மோகத்துள் படிந்து.

தான் தானாக நிற்றலே ஞானபூமியெனப்படும். தான் ஊனுடலென்றே பிரமித் தொழுகுபவன், மோகத்துள் படிந்து கனாவாகிய சமுசாரத்தில் நலிவான்.

**776. பழுதறுமெய்ஞ் ஞானப் பரம்பொருடா னேக**
**முழுமுதலா நிற்கு முறையாற் - றொழுதற்**
**கினைத்தென்ற லாகா விறையிற்றான் வேறாய்த்**
**தனித்தன்மை யாகை தவறு.**

பழுது அறு மெய்ஞ்ஞானப் பரம்பொருள் தான் ஏக முழுமுதலா நிற்கும் முறையால் தொழுதற்கு இனைத்து என்றல் ஆகா இறையில் தான் வேறாய்த் தனித் தன்மை ஆகை தவறு.

**இனைத்து-இத்தன்மையது.**

## 777. அகண்டமெய்ஞ் ஞானவெளி யாம்பொருளின் வேறாய்
## உகண்டுழல்பொய்ந் நானா வுதித்தல் - வகிர்ந்துநல்
## லாறுபா ழாக வதனையிரு கூறாகக்
## கோறலாம் பாவங் குறி.

அகண்ட மெய்ஞ் ஞான வெளி ஆம் பொருளின் வேறு ஆய் உகண்டு உழல் பொய்ந் நானா உதித்தல் வகிர்ந்து நல் ஆறு பாழ் ஆக அதனை இரு கூறு ஆகக் கோறலாம் பாவம் குறி.

**உகண்டு-தாவி; வகிர்ந்து-ஊைந்து; நல் ஆறு-தலைசிறந்த அறம்;**
**கோறல்-சேதித்தல், வெட்டுதல்.**

அகண்டமான ஞான வெளியாம் பரம்பொருளினும் வேறாய்த் தேகான்ம பாவத்தால் 'நான்' என்றொருவன் தனித்து நிகழ்வதனை இனைத்தெனவாராயின், அந்நிகழ்ச்சிதான் அறநெறி பாழாயொழிய அவ்வத்துவிதப் பொருளை நானென்றும் தானென்றும் இருவேறு கூறாகச் சேதித்துக் கொல்லுதலாம் பாவமாம்.

**வி-ரை:-** சொரூப ஞானம் நிருவிசேட மாதலின் அகண்டமாம். அகங்காரம், அத்துவிதப் பரம்பொருளா மான்ம சொரூபமொன்றையே உயிரெனவும் இறையெனவும் இரு கூறு படுத்தலின் அது அதனை யிரு கூறாக வகிர்ந்து கோறலாம் பாவமாவதாம். நிரகங்கார நிலையா மவுனமே தலை சிறந்த வறன் என்பதாம்.

## 778. உணர்வசைவற் றொன்றா யொளிர்மெய் யுலகத்
## தணவலெவன் வேற்றியற்கை யாட்சி - புணர்வதாம்
## வெற்றுநினைப் பாலிறையின் வேறாய் மனவுலகத்
## துற்றொருவ னிற்ற லொழிந்து.

உணர்வு அசைவு அற்று ஒன்றாய் ஒளிர் மெய் உலகத்து அணவல் எவன் வேற்று இயற்கை ஆட்சி புணர்வது ஆம் வெற்று நினைப்பால் இறையின் வேறாய் மன உலகத்து உற்று ஒருவன் நிற்றல் ஒழிந்து.

**அணவல் எவன்-அணுகுதல் எப்படி; வேற்று இயற்கை-மாறுபட்ட சுபாவம் உள்ள;**
**ஒழிந்து-தவிர.**

## 779. உண்மையைவிட் டுத்தா னொழிந்துளதாத் தோற்றும்பாழ்
## எண்ணமே பந்தத் தியல்பதனாற் - றிண்ணமாய்
## உண்மையைவிட் டுத்தா னொழிய வொணாமையினவ்
## வெண்ணமெழுங் காலதனை யெற்று.

உண்மையைவிட்டுத் தான் ஒழிந்து உளதாத் தோற்றும் பாழ் எண்ணமே பந்தத்து இயல்பு அதனால் திண்ணமாய் உண்மையைவிட்டுத் தான் ஒழிய ஒணாமையின் அவ் எண்ணம் எழுங்கால் அதனை எற்று.

**ஒணாமையின்-முடியாமையினால்; எற்று-விலக்கு.**

**780. தன்னிலைவிட் டெந்நினைவுஞ் சாரற்க சார்வானேற்
பின்னிரங்கி மீட்டேயும் பேதுறற்க - என்னைபின்
எற்றென் றிரங்குவமுன் செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.**

தன் நிலை விட்டு எந்நினைவும் சாரற்க சார்வானேல் பின் இரங்கி மீட்டேயும் பேது உறற்க என்னை பின் எற்று என்று இரங்குவ முன் செய்யற்க செய்வானேல் மற்று அன்ன செய்யாமை நன்று.

**பின் இரங்கி-மேலும்; மீட்டேயும்-மீண்டும்; பேது-பேதைமை; எற்று என்று-ஐயோ, எதற்குச் செய்தோம் என்று; இரங்குவ-பச்சாத்தாபம் கொள்ளல்; மற்று-மறுபடி; அன்ன-அப்படிப்பட்ட காரியங்களை.**

**781. என்றுநா னான்மநிலை யென்னும்யோ கானந்தம்
ஒன்றுவே னென்ன வுயங்கற்க - என்றுமொன்றாம்
உண்மைஞா னான்மநிலை யோர்கால முஞ்சேய்மை
அண்மையாந் தேயமுமின் றாங்கு.**

என்று நான் ஆன்ம நிலை என்னும் யோக ஆனந்தம் ஒன்றுவேன் என்ன உயங்கற்க என்றும் ஒன்று ஆம் உண்மை ஞான ஆன்மநிலை ஓர் காலமும் சேய்மை அண்மை ஆம் தேயமும் இன்று ஆங்கு.

**என்று-என்றைக்கு; ஒன்றுவேன்-சேர்வேன்; உயங்கற்க-வருந்தவேண்டாம்; சேய்மை-தூரம்; அண்மை-அருகில்; தேயம்-தேசம், இடம்.**

ஆன்மநிட்டை யென்னும் பரயோகத்தாலெய்தும் பேரின்பம் யானெஞ்ஞான் றெய்துவே னென்றெண்ணியேங்காதொழிக. என்று மிரண்டற் றிருந்தொளிரும் ஆன்மவுலகின் கண் இடம் பொழுதுகள் எண்ணுதற் கிலவாம்.

**வி-ரை:-** ஆன்ம சொரூபமே இறைவனாதலால் ஆன்மநிட்டையே பரயோகமாம். திருவருட்பேறாஞ் சிதானந்தமெண்ணி மற்றனைத்தும் மறந்தொழிந்தார்க்கு ஏக்கவடிவா மவ்வெண்ணமே அதன் பேற்றுக்குப் பெருந்தடை யாகலானும், இறப்பெதிர்வு முதலாங் காலவேறுபாடுகளும் சேய்மையண்மை முதலாந் தேயப்பாகுபாடுகளும் கற்பனையா மனவுலகின்கணன்றி உண்மையா மான்மவுலகின்கண் ஒன்றுமேயின்றாகலானும் ‘என்று நானொன்றுவேனென்னவுயங்கற்க’ என்றார். மறப்பான் மறைந்த தன்னியல்பா மநுபவத்தை அன்றேயுறற் காமுபாய மதுவாகவோர்ந்து, அவ்வேக்கத்தில் வாளா கழிக்கும் நேரத்தை இப்பாவனையில் பயன்படக் கழித்தல் நலமாம். இறப்பெதிர் வற்றெல்லை யறநிகழும் நிகழ்வொன்றேயா யென்று மிருந்தொளிரும் என்றுமாம்.

நிகழ்வினைப் பற்றி யிறப்பெதிர்வு நிற்ப
நிகழ்கா லவையு நிகழ்வே - நிகழ்வொன்றே
யின்றுண்மை தேரா திறப்பெதிர்வு தேரவுன
லொன்றின்றி யெண்ண வுனல்.

நாமன்றி நாளேது நாடேது நாடுங்கா
னாமுடம்பே னாணாட்டு ணாம்படுவ - நாமுடம்போ
நாமின்றன் றென்றுமொன்று நாடிங்கங் கெங்குமொன்றா
னாமுண்டு நாணாடி னாம்.

உள்ளது நாற்பது-15,16.

## 67. மூலமுனைவுத்திறன்

**782. யாங்கள் பிறந்த விடமே தெனவறிந்து
தாங்கள் பிறந்தவிடஞ் சார்வதே - தாங்கள்
புகுந்தவிடத் தன்றியிலாப் புன்கண் களையத்
தகுந்தநெறி தம்மிற் றலை.**

யாங்கள் பிறந்த இடம் ஏது என அறிந்து தாங்கள் பிறந்த இடம் சார்வதே தாங்கள் புகுந்த இடத்து அன்றி இலாப் புன்கண் களையத் தகுந்த நெறி தம்மில் தலை.

**புன்கண்-துயர்; தலை-தலைசிறந்தது.**

யாம் பிறந்த விடமெதுவென அகமுகநாட்டத்தாலாராய்ந்து அவ்விடம் சார்ந்து தரித்தலே, தாம் புகுந்தவிடத்துப் புலனாவ தன்றிப் பிறந்த விடத்துத் தோன்றலில்லாத பிறவித் துன்பங்களைக் கெடுத்தற்கேற்ற வுபாயங்களுள் ஏற்றமுடையதாம்.

**வி-ரை:-** யாங்களென்றதுந் தாங்களென்றதும் அகந்தை வடிவாம் புருடனையும், பிறந்த விடமென்றது இதயத்தையும், புகுந்த விடமென்றது உடலுலகங்களா யுருப்பட்டுத் தோன்றும் மனத்தையும் என வுணர்க.

**783. வந்த வழியே மறிந்தாயே லவ்வழியால்
அந்தமிலாப் பேரின்ப வீடடைவாய் - சொந்த
உரிமையுள வீட்டுநிலை யோராது தேடித்
திரிந்துழலும் புந்தியே தேர்.**

வந்த வழியே மறிந்தாயேல் அவ்வழியால் அந்தம் இலாப் பேர் இன்ப வீடு அடைவாய் சொந்த உரிமை உள வீட்டு நிலை ஓராது தேடித் திரிந்து உழலும் புந்தியே தேர்.

**மறிந்தாயேல்-திரும்பிப் போவாயானால்.**

**784. மைய வுளத்து மடுக்கு முணர்வுறுங்கா
றையுணர்வு சற்று மடங்காது - மையலாம்
ஐயுணர்வு முற்று மவியுங்கா றெய்தாது
மெய்யுணர்வா மின்ப விளைவு.**

மைய உளத்து மடுக்கும் உணர்வு உறுங்காறு ஐ உணர்வு சற்றும் அடங்காது மையல் ஆம் ஐ உணர்வு முற்றும் அவியுங்காறு எய்தாது மெய் உணர்வு ஆம் இன்ப விளைவு.

**மைய-நடுவு; மடுக்கும்-அடையும்; காறு-வரை; ஐ உணர்வு-பஞ்சேந்திரிய உணர்வு.**

**785. கற்பிதத்தைச் சுட்டிக் கலங்காது நெஞ்சேநின்
னுற்பவத்தைச் சுட்டி யுளம்புகுதாய் - சிற்பரத்தில்
யாவுமே தானா வியல்கேவ லாத்துவிதம்
மேவுமே நின்சொருப மெய்.**

கற்பிதத்தைச் சுட்டிக் கலங்காது நெஞ்சே நின் உற்பவத்தைச் சுட்டி உளம் புகுதாய் சித்பரத்தில் யாவுமே தானா இயல் கேவல அத்துவிதம் மேவுமே நின் சொருப மெய்.

**உளம் புகுதாய்-உளம் அடைவாயாக; இயல்-விளங்கும்.**

## 68. சாதகர்நடைத்திறன்

**786. தங்கருமஞ் செய்யத் தலைப்பட்டார்க் கத்துவிதத்
துங்கமுறு மான்மநிலை சோர்தலே - பங்கமாம்
என்றாற் பிறர்கா ரியத்துத் தலையிடுதல்
ஒன்றுமோ வுள்ளப் பெறின்.**

தம் கருமம் செய்யத் தலைப்பட்டார்க்கு அத்துவிதத் துங்கம் உறும் ஆன்மநிலை சோர்தலே பங்கம் ஆம் என்றால் பிறர் காரியத்துத் தலையிடுதல் ஒன்றுமோ உள்ளப் பெறின்.

**ஒன்றுமோ-தகுமா? உள்ளப் பெறின்-யோசித்துப் பார்க்குமிடத்து.**

**787. செயிராந் திறமொன்றுந் தேறாது நாளும்
அயலா ரிடங்குணமே யாயின் - உயிர்வாழ்
வனாதரமே செய்தற் கவகாச மின்றி
மனோகரமா மென்றே மதி.**

செயிர் ஆம் திறம் ஒன்றும் தேறாது நாளும் அயலாரிடம் குணமே ஆயின் உயிர் வாழ்வு அனாதரமே செய்தற்கு அவகாசம் இன்றி மனோகரம் ஆம் என்றே மதி.

**செயிர்-குற்றம்.**

**788. திருத்தத் தகுவதுதன் சித்தமே யென்னுங்
கருத்தைக் கடைப்பிடிக்கி லன்றி - யொருத்தன்
பிறர்தங் குறைகளே பேணு மனத்தாற்
கறைபடுமேன் மேற்றன் கருத்து.**

திருத்தத் தகுவது தன் சித்தமே என்னும் கருத்தைக் கடைப்பிடிக்கில் அன்றி ஒருத்தன் பிறர்தம் குறைகளே பேணும் மனத்தால் கறைபடும் மேன்மேல் தன் கருத்து.

**கறைபடும்-மாசுபடும்.**

**789. அக்காரம் போலகந்தீ ரக்குணத்தா லன்றுநெஞ்சே**
**மிக்காருன் மேலன்பு மேவியது - தொக்கவாம்**
**உன்குற்ற மெல்லாமவ் வுத்தமருட் கொள்ளாது**
**மன்னித்த மாண்பா மதி.**

அக்காரம் போல் அகம் தீர் அக்குணத்தால் அன்று நெஞ்சே மிக்கார் உன்மேல் அன்பு மேவியது தொக்க ஆம் உன் குற்றம் எல்லாம் அவ் உத்தமர் உட்கொள்ளாது மன்னித்த மாண்பு ஆம் மதி.

**அக்காரம்-சர்க்கரை; மிக்கார்-அறிவுடையார்; தொக்கவாம்-தொகுதியாக உள்ள.**

**790. இழுக்கன் மனித்த வியல்பே யெனினும்**
**ஒழுக்கமுளங் கொண்டவுர வோரவ் - விழுக்கை**
**மதமானத் தாலே மறையா துடன்பட்**
**டிதமாய்த் திருந்த லியைபு.**

இழுக்கல் மனித்த இயல்பே எனினும் ஒழுக்கம் உளம் கொண்ட உரவோர் அவ் இழுக்கை மத மானத்தாலே மறையாது உடன்பட்டு இதமாய்த் திருந்தல் இயைபு.

**இழுக்கல்-தவறுதல்; மனித்த-மனித.**

**791. தொக்க நியமநெடுந் தூரந் துணைசெயலால்**
**ஒக்கவநுட் டித்தற் குரியனவே - மிக்கமெய்ஞ்**
**ஞான விசார நடையைத் தடுப்னைவை**
**ஊனமென் றப்போ தொழி.**

தொக்க நியமம் நெடும் தூரம் துணை செயலால் ஒக்க அநுட்டித்தற்கு உரியனவே மிக்க மெய்ஞ் ஞான விசார நடையைத் தடுப்பின் அவை ஊனம் என்று அப்போது ஒழி.

**தொக்க-(நன்மை தருவனவென்று) தொகுக்கப்பட்ட; ஒக்க-ஏற்ப.**

**792. வேண்டியதான் வேண்டியவா றெய்தினது செய்தவத்தால்**
**ஈண்டியதன் சத்தியினென் றெண்ணாதே - மூண்ட**
**இறைவன் றிருவருளா லென்றுணர்ந்து மேன்மேல்**
**இறைவன்றாள் காமுறுக வேற்று.**

வேண்டியதான் வேண்டியவாறு எய்தினது செய் தவத்தால் ஈண்டிய தன் சத்தியின் என்று எண்ணாதே மூண்ட இறைவன் திரு அருளால் என்று உணர்ந்து மேன்மேல் இறைவன் தாள் காமுறுக ஏற்று.

ஒருவன் வேண்டிய வேண்டியாங்கே யடையப்பெறின் அப்பேறு செய்தவத்தாலீண்டிய தன் சித்தித்திறலானே யாக நினைந்து மயங்கிச் செருக்குறாது, அதுதான் இறைவனுக்குத் தன்பாலுண்டான திருவருளானேயாக வுள்ளபடி யுணர்ந்து, அதன் பொருட்டு நன்றியறிதலுடன் கூடிப் பணிதலையேற்று, அவனடிக்கு மேன்மேலும் பத்தியுளோனாகக் கடவன்.

**வி-ரை:-** இறைவன் றாளென்புழி இறைவனென்னும் பெயர் அவனென்னுஞ் சுட்டு மாத்திரையாய் நின்றது. ஏற்றல் - பொருந்தல்.

**793. நடக்கும் படியே நடப்ப நடக்க**
**கடக்கநீ சற்றுங் கருதேல் - தொடக்கமென்**
**றொன்றுநீ யாற்றா துபசாந்த மாகவுளத்**
**தொன்றுங்கண் காணியோ டொன்று.**

நடக்கும் படியே நடப்ப நடக்க கடக்க நீ சற்றும் கருதேல் தொடக்கம் என்று ஒன்றும் நீ ஆற்றாது உபசாந்தமாக உளத்து ஒன்றும் கண்காணியோடு ஒன்று.

**கண்காணி-சாட்சி.**

**794. ஆண்டான் றிருவருளா லன்றித்தன் னாள்வினையால்**
**ஈண்டாது சித்தி யெனவறிவித் - தாண்டான்செய்**
**தண்ணருளை நாடத் தயாரிப்பே தோல்வியுண்டு**
**பண்ணு முயற்சிப் பயன்.**

ஆண்டான் திரு அருளால் அன்றித் தன் ஆள்வினையால் ஈண்டாது சித்தி என அறிவித்து ஆண்டான் செய் தண் அருளை நாடத் தயாரிப்பே தோல்வி உண்டு பண்ணும் முயற்சிப் பயன்.

**ஈண்டாது-கிடைக்காது; சித்தி-ஆன்ம சித்தி; தயாரிப்பே-தயாரிப்பதுவே.**

**795. அத்திரிசேய் போல வனைத்திலுமொவ் வோருறுதி**
**யுய்த்துணர்கிற் போரா வொழுகுவோர்க் - குத்தித்**
**திருகிலா நீர்மையாற் சேருலக வாழ்வே**
**குருகுல வாசங் குறி.**

அத்திரி சேய் போல அனைத்திலும் ஒவ்வோர் உறுதி உய்த்து உணர்கிற்போரா ஒழுகுவோர்க்கு உத்தித் திருகு இலா நீர்மையால் சேர் உலக வாழ்வே குருகுலவாசம் குறி.

**அத்திரிசேய்-தத்தாத்ரேயர்; உணர்கிற்போரா-உணர்பவராக; உத்தித் திருகு இலா-வக்கிர புத்தி இல்லாத; நீர்மை-அப்படிப்பட்ட தன்மை.**

அத்திரியின் சேய் (தத்தாத்ரேயர்) போல உலக அநுபவம் ஒவ்வொன்றிலும் உட்கிடையான வுண்மைகண்டு உறுதிபெறுவோர், அம்மனப்பான்மையால் உலக வாழ்வையே குருகுல வாசமாகக் கொள்வர். ஜடப்பொருள் சேதனப் பொருள் யாவற்றிலும் அறியக்கூடிய மெய் இருத்தலால் எல்லா வடிவங்களும் குருத்துவமாக அவர்க்கு விளங்குவதாம்.

## 69. அமைதித்திறன்

### (கலி விருத்தம்)

**796. அமைதியின் மேற்பட் டாக்கமு மில்லை**
**அமைதியின் மேற்பட் டூக்கமு மில்லை**
**அமைதியின் மேற்பட் டருந்தவ மில்லை**
**அமைதியின் மேற்பட் டமரவாழ் வின்றே.**

அமைதியின் மேற்பட்டு ஆக்கமும் இல்லை அமைதியின் மேற்பட்டு ஊக்கமும் இல்லை அமைதியின் மேற்பட்டு அருந்தவம் இல்லை அமைதியின் மேற்பட்டு அமரவாழ்வு இன்றே.

**இன்றே-இல்லையே.**

இங்கு அமைதியென்பது மனதின் நிச்சலத் தன்மை. அஃது இடையறாத விசாரத்தால் அமைவது. உண்மையில் தள்ளவும் கொள்ளவும் எதுவுமின்மையின் இதையறிந்த மனம் சலனமொழிந்து பரம சாந்தியுடன் விளங்கக் கூடும். அதுவே சகஜ நிலையின் வித்தாகலின் அமர வாழ் வெனச் சிறப்பித்தார்.

**797. பரபரப் பேயிடர்ப் படுக்கும் பகையாம்**
**பரபரப் பேபழி பாவமுண் டாக்கும்**
**பரபரப் பேமது பானமாஞ் சிந்தைப்**
**பரபரப் பேயிருட் படுகுழி யாமே.**

பரபரப்பே இடர்ப் படுக்கும் பகை ஆம் பரபரப்பே பழி பாவம் உண்டாக்கும் பரபரப்பே மதுபானம் ஆம் சிந்தைப் பரபரப்பே இருள் படுகுழி ஆமே.

அதிசூக்குமமான நினைவின் வேகமே துயராதலின், அப்பரபரப்பையே மதுபானமாகவும், பழிபகையாகவும் கூறினார். உண்மையில் காமம், குரோதம், மதமென்ற உட்பகையாவும் நினைவின் சலனமாதலின், அச்சலன மொழிந்தோன் அன்றே இடர் நீங்கப் பெறுவான்.

# 70. சீடாசாரத்திறன்

### (நேரிசை வெண்பா)

**798. என்றாலுஞ் சீடர்தமை யேற்ற குணமென்னும்**
**குன்றேறி நின்ற குரவோர்தம் - பொன்றா**
**அனுபூதி யாற்சொனநல் லாற்றின்க ணூன்றிக்**
**கனவேயு நிற்றல் கடன்.**

என்றாலும் சீடர்தமை ஏற்ற குணம் என்னும் குன்று ஏறி நின்ற குரவோர்தம் பொன்றா அனுபூதியால் சொன்ன நல் ஆற்றின் கண் ஊன்றிக் கனவேயும் நிற்றல் கடன்.

**பொன்றா-அழியாத; ஆற்றின்கண்-வழியில்; கனவேயும்-கனவிலும்.**

**799. மறதியா லோமற் றெதனாலோ வேத**
**நெறிதவறிச் செல்லநேர்ந் தாலும் - உறுதிபட**
**உய்யுநெறி மேற்கொண் டொழுகுவோ ராசான்சொல்**
**கைகடக்க லாகாது காண்.**

மறதியாலோ மற்று எதனாலோ வேத நெறி தவறிச் செல்ல நேர்ந்தாலும் உறுதிபட உய்யும் நெறி மேற்கொண்டு ஒழுகுவோர் ஆசான் சொல் கைகடக்கல் ஆகாது காண்.

**கைகடக்கல்-மீறுதல்.**

பிறவித் துன்பத்தினின்றுய்யப்பெறு முபாயத்தை உறுதிபட மேற்கொண்டொழுகு முயர்ந்தோர், மறதியாலோ மற்றெக்காரணத்தாலோ இதர வேதவிகிதாசாரங்க ளினின்று விலகி நடக்க நேர்ந்தாலும் தமக்குறுதியுரைத்த ஆசானாணையை மட்டும் அன்னாரெக்காரணம் பற்றியும் வரம்புமீறி நடக்க லாகாது.

**வி-ரை:-** குருவாணையை உல்லங்கனஞ் செய்தலாகா தென்பதும் வேதவிதியே யாதலால் வேதநெறி யென்பதற்கு இதர வேத விகிதாசாரங்க ளென்று உரைக்கப்பட்டது. அவற்றினின்று விலகி நடப்பார்க்குப் போன்று ஆசான் சொல்லை யதிக்கிரமித்து நடப்பார்க்குக் கழுவாயின்மையின் அவற்றைத் தவறி நடந்தாலும் இதனைத் தவறி நடத்தலாகா தென்றார். கழுவாய் - பிராயச்சித்தம்.

**800. பரன்பா லபசாரப் பட்டா லொருவன்**
**குரவனான் மாற்றிக் கொளலாம் - குரவன்பாற்**
**பட்டவப சாரம் பரனாலே மாற்றரிதென்**
**றொட்டுவதாஞ் சான்றோ ருரை.**

பரன்பால் அபசாரப் பட்டால் ஒருவன் குரவனால் மாற்றிக் கொளலாம் குரவன்பால் பட்ட அபசாரம் பரனாலே மாற்ற அரிது என்று ஒட்டுவது ஆம் சான்றோர் உரை.

இறைவன்பால் குற்றம் புரிந்து அபசாரப்பட்டால், குருவின் அருளால் அக்குற்றத்தை நாம் வெளியிட்டு மாற்றல் கூடும். ஆயின் குருவிடம் பட்ட அபசாரத்தை இறைவனாலும் மாற்றல் அரிதென்றார். கடவுள் பத்தியிலும் குருபத்தி வலியதென வற்புறுத்தியவாறு.

**801. செய்தொழுக வென்றுந்தன் சிந்தனையி லத்துவிதம்**
**செய்கையிலோர் காலுமது செய்யற்க - உய்தலுற**
**மூன்றுலகி னோடும் முயங்கலா மத்துவிதம்**
**ஆன்றகுரு வோடே யடாது.**

செய்து ஒழுக என்றும் தன் சிந்தனையில் அத்துவிதம் செய்கையில் ஓர் காலும் அது செய்யற்க உய்தல் உற மூன்று உலகினோடும் முயங்கல் ஆம் அத்துவிதம் ஆன்ற குருவோடே அடாது.

**முயங்கலாம்-பொருந்தலாம்; ஆன்ற-மாட்சிமையுடைய; அடாது-கூடவே கூடாது.**

**(14) *அத்துவித மென்று மகத்துறுக வோர்போதும்***
***அத்துவிதஞ் செய்கையி லாற்றற்க - புத்திரனே***
***அத்துவித மூவுலகோ டாகுங் குருவினோ***
***டத்துவித மாகா தறி.***

***- பகவான்***

அத்துவிதம் என்றும் அகத்து உறுக ஓர்போதும் அத்துவிதம் செய்கையில் ஆற்றற்க புத்திரனே அத்துவிதம் மூ உலகோடு ஆகும் குருவினோடு அத்துவிதம் ஆகாது அறி.

## 71. ஜீவகாருண்யத்திறன்

**802. தன்னையே தானுய்யக் கொண்ட தபோதனனே**
**மன்னுயிர்க்கு நன்மைசெய மாட்டுவான் - துன்னும்**
**குருடர்க் குதவுங் குருடனே யாந்தன்**
**இருடீர் கலாவன் னியன்.**

தன்னையே தான் உய்யக் கொண்ட தபோதனனே மன் உயிர்க்கு நன்மை செய மாட்டுவான் துன்னும் குருடர்க்கு உதவும் குருடனே ஆம் தன் இருள் தீர்கலா அன்னியன்.

**இருள் தீர்கலா-அஞ்ஞானத்தைத் தீர்த்துக்கொள்ளாத.**

**(குறள் வெண்பா)**

**(15) *உய்ந்தான்றான் மன்னுயிர்க ளுய்விப்பா னன்னியனோ***
***அந்தனுக்கந் தன்றுணையா மாறு.***

***- பகவான்***

உய்ந்தான்தான் மன் உயிர்கள் உய்விப்பான் அன்னியனோ அந்தனுக்கு அந்தன் துணை ஆம் ஆறு.

**(நேரிசை வெண்பா)**

**803. ஞானமாந் தன்னிலைக்கே நானழிந்து நிற்குறுமெய்ஞ்**
**ஞானி நலிந்தடைந்து நம்பினோர்க் - கூன**
**மயக்கொழியு மாற்றாலான் மாநுபவங் கூட்டல்**
**உயிர்க்கருணை யூனம் பிற.**

ஞானம் ஆம் தன் நிலைக்கே நான் அழிந்து நிற்குறும் மெய்ஞ் ஞானி நலிந்து அடைந்து நம்பினோர்க்கு ஊன மயக்கு ஒழியும் ஆற்றால் ஆன்மாநுபவம் கூட்டல் உயிர்க் கருணை ஊனம் பிற.

**நலிந்து-துன்புற்று; ஒழியும் ஆற்றால்-ஒழிப்பதால்.**

**804. தமக்கு மருத்துவர் தாமென்ப தாலே**
**எமக்கு மருத்துவ மெண்ணி - யமைக்க**
**மருத்துவ * வெம்பால் வருமுன் னுனக்கு**
**மருத்துவங் கண்டுபின் வா.**

* 'Physician ! heal thyself' என்னும் ஆங்கில வசனம் இங்கு காணத்தக்கது.

தமக்கு மருத்துவர் தாம் என்பதாலே எமக்கு மருத்துவம் எண்ணி அமைக்க மருத்துவ எம்பால் வருமுன் உனக்கு மருத்துவம் கண்டு பின் வா.

**மருத்துவ-வைத்தியனே.**

தம்மிடம் மருத்துவமமைக்க நெருங்கிய மருத்துவர்பால் கூறியது. நீ உனக்கு மருத்துவங்கண்டு பின்வா வென்றார். எவர்க்கும் தமது சொரூபமே பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், அப்பிணியின்றேல் உடற்பிணிகளெவையும் இன்மையின், அதை முதலில் மாற்றவேண்டு மென்பது கருத்து.

## 72. தைிரர் கடமைத்திறன்

**805. எற்றே யுலகத் தியற்கை யிருந்தவா**
**பெற்றோ ருயிர்வாழ்வும் பேணார்முன் - மற்றோ**
**பெருமிதம்பின் செய்வர் தைிரர் கடனாத்**
**தரும துரைமக்க டாம்.**

எற்றே உலகத்து இயற்கை இருந்தவா பெற்றோர் உயிர் வாழ்வும் பேணார் முன் மற்றோ பெருமிதம் பின் செய்வர் பிதிரர் கடனாத் தருமதுரை மக்கள் தாம்.

**எற்றே-என்னே! இருந்தவா-இருக்கிறது.**

தமது பெறலரும் பெற்றோர் முன்னே யுயிர்த்திருக்குங்கால் அன்னார் உயிர்வாழ்ந்திருத்தலையும் ஒருபொருளாக விரும்பி அதற்காவன செய்ய வொருப்படார்;அன்னார் மரித்தபின்போ, பிதிரர் கடனென்னப் பெயரிட்டு மிக்க செலவில் ஆரவாரச் செயல்பல வாற்றா நிற்பர் தருமதுரை மக்களாம். இவ்வுலகத்தியற்கை யிருந்தவா றென்னே!

**வி-ரை:-** பெற்றோருயிர் வாழுங்கால் அவரைப்பெரிதும் பேணாதிகழ்ந்து பின்னர்ப் பிதிரர் கடனெடுத்து நிகழ்த்தல் மடமை யென்பதாம். மற்று வினை மாற்றின் கண் வந்தது. தருமதுரை மக்களென்ற திகழ்ச்சிக் குறிப்பு. இது அன்பற்ற ஆடம்பர வியல்பை விளக்குவது.

## 73. பரோபகாரத்திறன்

### (குறள் வெண்பா)

**806. ஏதிலரை வஞ்சித் தியல்வோன் றனக்கேதா**
**னேதிலனாக் கேடுசெய் வோன்.**

ஏதிலரை வஞ்சித்து இயல்வோன் தனக்கே தான் ஏதிலனாக் கேடு செய்வோன்

**ஏதிலர்-பிறர் அல்லது பகைவர்**

பகைவரை வஞ்சித்துத்தான் அவ்வழுக்கு நெறியினால் வெற்றிகொள்பவன் தனக்குத்தானே கேடு விளைவிப்பவனாம்.

### (நேரிசை வெண்பா)

**807. அயலார்க் கொருவ னளிக்கின்ற வெல்லாம்**
**நயமாத் தனக்கேதா னல்கும் - இயல்புணரின்**
**ஊராண்மை யென்னு முபகாரம் யாவரே**
**சீராள ராகச் செயார்.**

அயலார்க்கு ஒருவன் அளிக்கின்ற எல்லாம் நயமாத் தனக்கே தான் நல்கும் இயல்பு உணரின் ஊராண்மை என்னும் உபகாரம் யாவரே சீராளராகச் செயார்.

**ஊராண்மை-பிறருக்கு உபகாரியாகும் தன்மை; சீராளராக-சிறப்பாக; செயார்-செய்யமாட்டார்.**

## (குறள் வெண்பா)

**808. தன்சொருப மாகத் தழைத்தலால் யாவனெவர்க்**
**கென்செயினுஞ் செய்கைதனக் கே.**

தன் சொருபமாகத் தழைத்தலால் யாவன் எவர்க்கு என் செயினும் செய்கை தனக்கே.

ஒருவன் பிறர்க்குதவுவதெல்லாம் தனக்கே செய்வதாம். அவ்வாறே பிறர்க்குத் தீங்கிழைப்பினு மென்க. சொரூப மொன்றே யாதலின்.

## (நேரிசை வெண்பா)

**809. பாதலத்தே புக்குப் படிந்தாலு மாவலிதான்**
**சீதரனுக் கீந்து சிறப்புற்றான் - ஆதலால்**
**ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்**
**விற்றுக்கோட் டக்க துடைத்து.**

பாதலத்தே புக்குப் படிந்தாலும் மாவலிதான் சீதரனுக்கு ஈந்து சிறப்பு உற்றான் ஆதலால் ஒப்புரவினால் வரும் கேடு எனின் அஃது ஒருவன் விற்றுக்கோள் தக்கது உடைத்து.

**ஒப்புரவு-பரோபகாரம்; எனின்-என்றாலும்; விற்றுக்கோள் தக்கது உடைத்து-விற்றாயினும் கொள்ளும் தகுதியை யுடைத்து.**

தானாற்றாப்புகும் ஒப்புரவின் பயனாய்த் தனக்குத் திண்ணமாய்க்கேடு விளையுமெனத் தன்னமைச்சன் சுக்கிரனான் முன்னறிந்து தடுக்கப்பட்டும், அத்தடைக்கணமைந்து நில்லாது மாவலிதான், வாமனனாயுருக் கரந்தேற்ற திருமகள் கேள்வனான மாயனுக்குப் பூதானம் புரிந்து, அதனாற் பாதலத்தே போய்ப்படியத் திருவடியாலாழ்த்தப்பட்டானாயினும் அதனாலுல குள்ளளவும் ஒழியாவுயர்வே யடைந்தான். ஆதலால், ஒப்புரவு செய்தலா லொருவனுக்கெவ்விதக்கேடு வருமாயினும், அக்கேடு, தன்னை விற்றாயினுங் கொள்ளுந் தகுதியை யுடைத்து.

**வி-ரை :-** பண்டமாற்றாகத் தன்னைவிற்று ஊதியம் படக் கொள்ளத் தகுவதொரு பொருள் எதுவுமேயில்லை யாகவும், இதுவாயின் அதுவுஞ் செய்யத்தகுமென்றது பொன்றாப் புகழ் பயத்தல் நோக்கி. ஒப்புரவினாற் கெடுவது கேடன் றென்பது கருத்து.

''கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு'' - குறள்

# 74. பூததயைத்திறன்

**810. ஓருயிருந் தன்னைக்கண் டுட்கலற வோம்படைசொற்**
**றியாருவகை பொங்க வியங்குவான் - சாருஞ்**
**சமநிலையின் மன்னியவத் தன்மயநோக் கத்தா**
**னெமனையுங்கண் டஞ்ச லிலன்.**

ஓர் உயிரும் தன்னைக் கண்டு உட்கல் அற ஓம்படை சொற்று யார் உவகை பொங்க இயங்குவான் சாரும் சமநிலையில் மன்னிய அத் தன்மய நோக்கத்தான் எமனையும் கண்டு அஞ்சல் இலன்.

**உட்கல்-அஞ்சுதல்; ஓம்படைச்சொல்-அபயவாக்கு; நோக்கத்தான்- நோக்கை உடையவன்.**

**811. வலியா ரெளியரைத்தம் வல்லாண்மை யாலே**
**நலியாநின் றாலதனை நாடிச் - சலியா**
**தெளியார்க் கிரங்குமிறை யேற்பவொறுப் பானென்**
**றளியார்ந் தொழுக லறன்.**

வலியார் எளியரைத் தம் வல் ஆண்மையாலே நலியா நின்றால் அதனை நாடிச் சலியாது எளியார்க்கு இரங்கும் இறை ஏற்ப ஒறுப்பான் என்று அளி ஆர்ந்து ஒழுகல் அறன்.

**நலியா நின்றால்-தீமை செய்தால்; ஏற்ப ஒறுப்பான்-தக்கவாறு தண்டிப்பான்; அளி-கருணை.**

வலியார் எளியரைத் தமது வல்லாண்மையால் வருத்துவரேல், எளியார்பாற் சலியாதிரங்குமிறைவன் அவ்வலாற்காரச் செயலை யாராய்ந்து தானும் அதற்குத்தக அவ்வலியாரை யடர்ப்பானென் றறிந்து எளியார்பா லருள் பூண் டொழுகல் அறிஞர் கடனாம்.

**812. ஆகத்தி னின்றகன்ற வாருயிரை மீட்டுமவ்**
**வாகத் தினிற்சேர்க்கு மாற்றலிலார் - சாகத்தான்**
**எந்தவுயிர் தன்னையுமெவ் வேதுகொண்டு மாகத்தின்**
**உந்துமதி கார முறார்.**

ஆகத்தினின்று அகன்ற ஆர் உயிரை மீட்டும் அவ் ஆகத்தினில் சேர்க்கும் ஆற்றல் இலார் சாகத்தான் எந்த உயிர் தன்னையும் எவ் ஏது கொண்டும் ஆகத்தின் உந்தும் அதிகாரம் உறார்.

உடலினின்று பிரிந்ததோருயிரை மீட்டும் முன்போலவ் வுடலிற் கொண்டு சேர்க்கும் வலியில்லார், எக்காரணங்கொண்டும் எவ்வுயிரையும் அதுதான் பொருந்திநின்றதோ ருடலினின்று, மரிக்கும்படி புறத்துத் தள்ளு மதிகாரமுடையோ ராகார்.

**வி-ரை :-** ஆருயிர் - அருமையாகிய உயிர்.

**813. ஊறுபடும் பொல்லா வொழுக்கத்தாற் செம்மையொடு**
**மாறுபடும் பாழ்த்தமட மாக்களந்தோ - சீறுவிடப்**
**பாம்புபோ லெற்றும் பழிபாவஞ் செற்றவுயிர்**
**தாம்பொடிப்பர் நெஞ்சந் தகர்ந்து.**

ஊறுபடும் பொல்லா ஒழுக்கத்தால் செம்மையொடு மாறுபடும் பாழ்த்த மட மாக்கள் அந்தோ சீறு விடப் பாம்பு போல் எற்றும் பழி பாவம் செற்ற உயிர் தாம் பொடிப்பர் நெஞ்சம் தகர்ந்து.

**எற்றும் - கொல்லும்; செற்ற-சேர்ந்து ஈடுபடுகின்ற.**

அவித்தை யொன்றே பாபஹேது. விடப்பாம்புபோல் உயிர்களைக் கொல்லும் பாபச் செயல்களில் ஈடுபடுபவரும், தம்மையறியாது உட்பகையால் உந்தப்பட்டுத்தான் அவ்வாறொழுகுகின்றனர். ஆதலின் எப்பாவியரென்னினும் அவர்மடமைக் கிரங்கலன்றிச் சீற்றம் ஒவ்வாது.

**814. மருவுந் தமர்பிறர்கள் வன்கணுழக் கும்போ**
**துருகி யுருகி யுகுமே - மருவும்**
**தொடையாகத் தன்மேற்சேர் துன்பங்கட் கெல்லாம்**
**உடையாத சிந்தை யுரன்.**

மருவும் தமர் பிறர்கள் வன்கண் உழக்கும் போது உருகி உருகி உகுமே மருவும் தொடையாகத் தன்மேல் சேர் துன்பங்கட்கு எல்லாம் உடையாத சிந்தை உரன்.

**உழக்கும்போது-அடையும்போது; உகும்-கண்ணீர் சிந்தும்;**
**தொடையாக-அடுக்கடுக்காக.**

**- வினா -**

**(கொச்சகக் கலிப்பா)**

**815. *பச்சையிலைத் தூறு படர்ந்தபுத ரென்றெண்ணி**
**வைச்சிடுகால் வீங்க வரிக்கதண்டு கொட்டலுமே**
**நிச்சயமாய் வேங்கடநின் னெஞ்சொப்பிச் செய்தாற்போற்**
**றற்செயலாய் நேர்ந்த தவற்றுக் கிரங்கலென்னே.**

*ஒருநாள் பகவான் அருணாசலத்தின்மேல் எழுந்தருளுகையில், புதரால் மறைக்கப்பட்ட ஒரு குளவிக்கூட்டின்மேல் தற்செயலாய்த் திருவடி வைக்கவே, திரளான குளவிகள் அத்திருவடி முழுவதும் மொய்த்துக்கொண்டு ஊசிகுத்தினாற் போலக் கொட்ட ஆரம்பித்தன. பகவான் உடனே அத் திருவடியை எடாது, ‘‘ஹிம்சை பண்ணியதற்கு இது

வேண்டும்; படு'' என்று கூறிக்கொண்டே சிறிது நேரம் நின் றருளத் திருவடியில் வீக்கங் கண்டது. அதுபற்றிய வினாவும் விடையுமே இச் செய்யுளும் அடுத்து வருவது மாகும்.

பச்சை இலைத் தூறு படர்ந்த புதர் என்று எண்ணி வைச்சிடு கால் வீங்க வரிக் கதண்டு கொட்டலுமே நிச்சயமாய் வேங்கட நின் நெஞ்சு ஒப்பிச் செய்தால்போல் தற்செயலாய் நேர்ந்த தவற்றுக்கு இரங்கல் என்னே.

**வரிக்கதண்டு - வரிக்குளவி.**

**- விடை -**

**(16) *பச்சிலைகட் கூடே படர்ந்ததங் கூடுலைய***
***வைச்சிடுகால் வீங்க வரிக்கதண்டு கொட்டிடினும்***
***தற்செயலாய் நேர்ந்த தவறேனுந் தானிரங்கும்***
***அச்செயலு மின்றே லவன்மனதின் றன்மையென்னே.***
***- பகவான்***

பச்சிலைகட்கு ஊடே படர்ந்த தம் கூடு உலைய வைச்சிடு கால் வீங்க வரிக் கதண்டு கொட்டிடினும் தற்செயலாய் நேர்ந்த தவறேனும் தான் இரங்கும் அச்செயலும் இன்றேல் அவன் மனதின் தன்மை என்னே.

## 75. நடுவுநிலைத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**816. நல்லா ரெனத்தா நடப்பார் நடுநிலைவிட்**
**டெல்லார் தமக்கு மியன்றபொது - அல்லாத**
**சிற்சில் லுரிமை சிறப்பாகத் தங்கட்கே**
**பற்றிக் கொளுதல் பழுது.**

நல்லார் எனத் தாம் நடப்பார் நடு நிலை விட்டு எல்லார் தமக்கும் இயன்ற பொது அல்லாத சிற்சில் உரிமை சிறப்பாகத் தங்கட்கே பற்றிக் கொளுதல் பழுது.

**817. உரிமைசில மற்றார்க் குளவென்னி னந்த**
**உரிமையெலாந் தங்கட்கு முண்டாம் - உரிமைசில**
**மற்றா ரிடத்து மறுப்பா ரவற்றைத்தாம்**
**உற்றாற் பழுதே யுறும்.**

உரிமை சில மற்றார்க்கு உள என்னின் அந்த உரிமை எலாம் தங்கட்கும் உண்டாம் உரிமை சில மற்றார் இடத்து மறுப்பார் அவற்றைத் தாம் உற்றால் பழுதே உறும்.

**உற்றால்-கொண்டால்.**

**818. நடுவுநிலை மாறி நடப்போர் சமமாங்**
**கடவுளுக்கு மாறாக் கழிவோர் - கடவுளைநன்**
**காராதித் தாலு மழியமறுக் கின்றாரவ்**
**வாரா தனையை யவர்.**

நடுவுநிலை மாறி நடப்போர் சமம் ஆம் கடவுளுக்கு மாறாக் கழிவோர் கடவுளை நன்கு ஆராதித்தாலும் அழிய மறுக்கின்றார் அவ் ஆராதனையை அவர்.

**மாறாக் கழிவோர்-எதிரிடையாக நடப்பவர்கள்; அழிய-முற்றிலும்.**

கடவுள் தன்மை எதுவெனின் நடுவுநிலை பிறழாமல், அருளில் தப்பாம லிருப்பதே. பகலவன், மழைபோல் கடவுள் எவரையும் புறக்கணிப்பதில்லை. 'நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுவில் நின்ற நடுவே' என்பது வள்ளலார் அருட்பா. ஆதலின் அடியாரும் நடுவுநிலை சிறிதும் தவறலாகாது. தவறின், அவர் தெய்வ ஆராதனை ஏற்புடைத்தன்றாம்.

## 76. மனச்சான்றுத்திறன்

**819. ஏயமனச் சான்றுக் கிசையொழுக்கே நல்லினந்தான்**
**மேயதனை யோர்கால் விலக்குமேற் - றூய**
**மனச்சான் றதனை மறுத்தங்கு வாழ்விற்**
**றனிச்சார்ந்து வாழ்வே தலை.**

ஏய மனச் சான்றுக்கு இசை ஒழுக்கே நல் இனம் தான் மேய அதனை ஓர்கால் விலக்குமேல் தூய மனச் சான்று அதனை மறுத்து அங்கு வாழ்வில் தனிச் சார்ந்து வாழ்வே தலை.

**ஏய-பொருந்த; இசை-இசைந்த; நல் இனம்-நல்லோர்; மேய அதனை-தான் மேவிய அதனை.**

அறிஞரால் நுனித்துணரவும் வாராத தன்மாதன்ம நுட்பங்களை அறுதியிட் டறிதற் கமைந்த கருவியாய்ப் பொருந்திய மனச்சான்றுக் கேற்ப வொழுகு மொழுக்கமே, உறுதியடைதற் குற்ற துணையாய்த் தான் மேவிய நல்லினத்தை, அதன் கண்ணே தானென்றும் இனிதுறைய வொட்டாது (ஊழ்வலியால் ஒரொருகால் வேறுபட விலக்குமேல் அந்நிலையிலும் அவ்வினத்தின் அடைதற் கருமையெண்ணி) அத்தெளிந்த மனச்சான்றை மறுத்து மீட்டும் அவ்வினத்துட் பயில முயலாது தனிப்பட நின்று வாழ்தலே அறிஞனொருவற்குச் சாலச் சிறந்ததாம்.

# 77. பொய்யாமைத்திறன்

**820. ஆன்மபர வுண்மை யநதிகா ரிக்குவந்து
தானுரைத்த றன்னிற் றவறாகும் - தான்முன்
மொழிந்தவத னோடு முரண்பட்டு வாய்மை
அழிந்து மறுக்கு மது.**

ஆன்ம பர உண்மை அநதிகாரிக்கு உவந்து தான் உரைத்தல் தன்னில் தவறாகும் தான் முன் மொழிந்த அதனோடு முரண்பட்டு வாய்மை அழிந்து மறுக்கும் அது.

ஒருவர்க் கொன்றைத்தான் முன் கொடுப்பதாகச் சொன்ன சொல்லோடு மாறுபடப் பின்னதனைக் கொடாது மறுத்து தன் வாய்மை யழிவது, அநதிகாரியினிடத்து மகிழ்ந்து ஆன்ம சொரூபமே பரமா முண்மையை அவனுக்கறிவுறுத்துவதனினும் மிகத்தவறாகும்.

**வி-ரை :-** முரண்பட்டு - செயவெனெச்சம் செய்தெனெச்சமாகத் திரிந்து நின்றது. அழிந்து மறுக்கு மது - மறுத்தழியுமது வென விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. தத்தியங்காதர்வணர் அயக்கிரீவரான ஆன்ம புராண வரலாற்றால் இச்செய்யுட் கருத்தினிது விளங்கும்.

> ''இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
> வசையன்று வையத் தியற்கை - நசையழுங்க
> நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீ செய்ந்நன்றி
> கொன்றாரிற் குற்ற முடைத்து'' - நாலடியார்

என்னும் நாலடியார்க் கருத்தும் ஈண்டைக் கொரு புடை யொப்பு நோக்கத் தக்கதாம்.

**821. நாயகமா யார்க்கு நடுநின்ற செம்பொருளே
தாயகமா மெய்யுருவாச் சார்தலால் - வீயும்
தலைபோகத் தக்க சமயத்துஞ் சொன்ன
சொலைமீற லுய்யாத் துயர்.**

நாயகமா யார்க்கும் நடு நின்ற செம்பொருளே தாயகம் ஆம் மெய் உருவாச் சார்தலால் வீயும் தலைபோகத் தக்க சமயத்துஞ் சொன்ன சொலை மீறல் உய்யாத் துயர்.

> **தாயகம்-பிறப்பிடம்; வீயும்-அழிந்து போகும்; உய்யாத் துயர்-தப்பமுடியாத பெருந்துயர்.**

எவ்வுயிர்க்கு மிறையாய் எல்லா ரிதயத்தும் 'யான்யா' னென் றொக்கவுறையும் ஆன்ம சொரூபமாஞ் செம் பொருளே எவ்வறங்கட்கும் பிறப்பிடமான உண்மையுருவாயுற்று விளங்கலால் தன்றலையே போகத்தக்க சாந்தருணத்தும் தான் சொன்ன சொல்லைத் தவறி நடத்தல் ஒருவற்குத் தப்பவொண்ணாத் துயர் தருவதாம்.

**வி-ரை :-** செம்பொருளுக்கு நாயகத்துவமும் ஆன்ம சொரூபமும் இரண்டும் ஒருங்கே யமைதல் முறையே உயிர்க்கற்பனையாலும் உண்மையாலு மெனவறிக. எவ்வறத்தைக் காக்கினும் காவாவிடினும் அனைத் தறங்கட்கும் மெய்ம்மையே அடிப்படையாயமைதலால், அதனைக் காத்தல் அவற்றையெல்லா மொருங்கு காத்தலும் அதனைப் பிழைத்தல் ஆங்கே அவற்றை யெல்லா மொக்கப் பிழைத்தலுமாக முடிதலால், ஒருவன் சாந்தருணத்தும் அம்மெய்ம்மை தான் தவறாது காக்கக் கடவதாகின்றது. மெய்ம்மையினின்றும் பிறழ்தல் பழிபாவ மிரண்டும் பயத்தலால் ஒருவற் கிம்மை மறுமை யிரண்டினும் மீளாத் துயர்தருமென்பதாம்.

# 78. அநாசத்தித்திறன்

**822. நீரிற் படகு நிகழ்வதலா னீர்படகில்**
**ஊரிற் பெருத்தவிடை யூறேயாம் - வாரிதிசூழ்**
**பாரில் வதிவதலாற் பார்மனித னுள்ளத்துட்**
**சேரிலுயிர் வாழ்வுமுற்றுந் தீங்கு.**

நீரில் படகு நிகழ்வது அலால் நீர் படகில் ஊரில் பெருத்த இடையூறே ஆம் வாரிதி சூழ் பாரில் வதிவது அலால் பார் மனிதன் உள்ளத்துள் சேரில் உயிர் வாழ்வு முற்றும் தீங்கு.

**வதிவது-வசிப்பது.**

படகுக் கிடையூறு அதுதான் நீரில் நிகழ்வதாற் சற்றுமுள தாகாது. அதனுள் நீர் அடைவதாலேயே பெரிது முண்டாவதாம். அதுபோன்று, மனிதனுக்கு வருந் தீங்கும், அவன் அந்நீர் சூழுலகில் வசிப்பதா லற்பமுமாகாது அதுதான் அவனகத்து ளடைவதாலேயே அவனுயிர் வாழ்வே அவலமாமாறு அதிகரிக்கும்.

**வி-ரை :-** உலகுணர்ச்சியே சமுசார பந்தமாவதன்றி கேவலம் உலகேயன்று. அவ்வுணர்ச்சி ஒருவனுள்ளத்தைப்பற்றி நிகழ்வதன்றிப் புறத்தைப் பற்றியதன்று. ஒருவன் உலகத்துள் உயிர்த்துலவுதலான் மட்டுமே அவனுயிர்க்கூறொன்று முண்டாய் விடுவதில்லை; அதனை யுள்ளத்துட் கொண்டுவக்கு முணர்வாலேயே துன்பங்களெல்லாம் தோன்றுகின்றன. ஆதலால், உலகத்துள் ஒருவன் குடும்ப முதலிய எங்கிருந்தாலு மிருக்கலாம். ஆயின் அவனகத்துள் மட்டும் அதனாசைக்குச் சற்று மிடங் கொடுத்தலாகாது.

புறத்தோற்றங் கொண்டு தான் சமுசார பந்தத்துளகப்பட் டிருப்பதாக ஒருவன் மதிமருள்வதற்குக் காரணம் தனக்ககம்புற மெனத் தோற்றற்கிடனாய் மயக்கத்தா லுண்டாய தேகான்ம புத்தியாம் அகந்தையே யாதலின், ஆன்ம விசாரத்தா லவ்வகந்தை யறுமேல் அம்மருட்சி அறவே நீங்கும். பார்-உலகு, சமுசாரம்.

உள்ளதே யாக வன்றி
 யுலகம தில்ல தாக
நள்ளலா லன்றி ஞால
 நவைதர லென்று மில்லை
மெள்ளவே மனத்தா லேழு
 விற்கிடை யகன்று போகென்
றுள்ளவா றுரைத்தோ னல்லா
 லுறுதெய்வ முணர்ந்தி லேனே.

- ஸ்ரீ ரமண சந்நிதிமுறை

## 823. கொள்ளுங் குடமன்றிக் கொள்ளா மரக்கட்டை
## வெள்ளத் தமிழ்தல் விதியன்றே - உள்ளத்துட்
## பற்றாநின் றாரன்றிப் பற்றா ருலகியல்வாய்
## உற்றாலு மாழ்க லுறார்.

கொள்ளும் குடம் அன்றிக் கொள்ளா மரக்கட்டை வெள்ளத்து அமிழ்தல் விதி அன்றே உள்ளத்துள் பற்றாநின்றார் அன்றிப் பற்றார் உலகியல்வாய் உற்றாலும் மாழ்கல் உறார்.

தண்ணீரைத் தன்னகத்துட் கொள்ளுங் குடமல்லது கொள்ளாத மரக்கட்டை அதனின் மூழ்கல் இயல்பன்றாம். அதுபோன்று, அவாவா லுலகியலை யுள்ளத்துட் பற்றி நிற்பவரல்லது அவ்வாறு பற்றாத மற்றையார் உடலா லதனிடை யகப்பட லுற்றாராயினும் அவர் போன் மயங்கி அவ்வுவரியி லாழ்ந்தழிய மாட்டார்.

**வி-ரை :-** உலகியல்-சமுசாரம்.

## 824. யாவற்றி னோடு மியல்வா னெனினுமுளத்
## தோர்பற்று மில்லா தொழுகுவோன் - ஆபத்துச்
## சேரா னொருகாலுஞ் சிந்தை சிவமயமாய்
## ஊராநிற் குந்தெளிவா லோர்.

யாவற்றினோடும் இயல்வான் எனினும் உளத்து ஓர் பற்றும் இல்லாது ஒழுகுவோன் ஆபத்துச் சேரான் ஒருகாலும் சிந்தை சிவமயமாய் ஊராநிற்கும் தெளிவால் ஓர்.

**ஊராநிற்கும்-ஊரும்.**

## 825. விஞ்சையாத் தோன்றும் வெறும்பொய் யுலகத்தைத்
## தஞ்சமாத் தான்பற்றித் தாழாது - நெஞ்சாற்
## றுறந்து புளிம்பழத் தோடுபோற் றோய்ந்து
## மறந்து கிடப்பே மதி.

விஞ்சையாத் தோன்றும் வெறும் பொய் உலகத்தைத் தஞ்சமாத் தான் பற்றித் தாழாது நெஞ்சால் துறந்து புளிம் பழத்து ஓடு போல் தோய்ந்து மறந்து கிடப்பே மதி.

**விஞ்சை-ஆச்சரியம்; தோய்ந்து-பொருந்தி.**

**826. அழுத்தமுறக் கட்டா வடிப்படைமேற் பாரம்**
**பழித்தலுறக் கீழ்வீழ்ந்து பாழாம் - உழைத்தலுறு**
**சாதகர்தா முன்பு சரியையையெவ் வாற்றானும்**
**மேதகவே காத்தல் விதி.**

அழுத்தம் உறக் கட்டா அடிப்படைமேல் பாரம் பழித்தல் உறக் கீழ் வீழ்ந்து பாழ் ஆம் உழைத்தல் உறு சாதகர் தாம் முன்பு சரியையை எவ் ஆற்றானும் மேதகவே காத்தல் விதி.

**பழித்தல் உற-பிறரால் அவமானப் படுத்தப்பட; சரியை-பக்திவைராக்கியம்; மேதகவே-நன்றாக.**

அழுத்தமுறக் கட்டப்படாத அஸ்திவாரத்தின் மீது ஏற்றிய பாரம் பழிக்கத்தக்க வகையில் கீழ்வீழ்ந்து பாழாவதாம். அதுபோல், முதலில் சாதகர் சரியை, கிரியை மார்க்கங்களை எவ்வகையிலும் மேன்மையுடன் காப்பது கடமையாகும். சித்த விருத்தியை யடக்கும் முயற்சி இன்றியமையாத தெனவும், ஆரம்ப சாதகர் சுதந்திரர் போல் நடிப்பது முடிவில் ஏமாற்றத்தைத்தரும் எனவும் வற்புறுத்தப்பட்டது.

**827. உண்மைப் பொருளை யொழியா தொருவனுளந்**
**திண்மையுறப் பற்றித் தெளிந்ததேல் - விண்மைபோ**
**லத்தியா சத்தா லடைவிடயப் பற்றுக்கள்**
**சுத்தியாந் தாமே துறந்து.**

உண்மைப் பொருளை ஒழியாது ஒருவன் உளம் திண்மை உறப் பற்றித் தெளிந்ததேல் விண்மைபோல் அத்தியாசத்தால் அடை விடயப் பற்றுக்கள் சுத்தி ஆம் தாமே துறந்து.

ஒருவன் உண்மைப் பொருளை ஒழியாது சோர்வில்லாது திண்மையுடன் நாடித் தெளிந்தனனாகில் விடயப்பற்றுக்கள் தாமாகவே தூய்மை பெற்று சொரூபத்தினின்றும் பிரியாத் தன்மையுடன் விளங்கும்.

## 79. துறவுமாட்சித்திறன்

**828. வழுக்குநிலஞ் சேர்துறவு மார்க்கம் மனத்தா**
**லிழுக்குறினுங் கேடுவந் தெய்தும் - வழுக்குநிலந்**
**தன்னிற் படர்வோன் சதிமறதி தன்னகத்திற்**
**கன்னமிடா தோம்பல் கடன்.**

வழுக்கு நிலம் சேர் துறவு மார்க்கம் மனத்தால் இழுக்கு உறினும் கேடு வந்து எய்தும் வழுக்கு நிலம் தன்னில் படர்வோன் சதி மறதி தன் அகத்தில் கன்னம் இடாது ஓம்பல் கடன்.

**படர்வோன்-செல்வோன்.**

துறவு மார்க்கம் வழுக்குநிலத்தில் நடப்பதை யொக்கும். மனத்தின் குற்றமே யாயினும் கேடுவிளைவது திண்ணம். ஆதலின், துறவெனும் அதிதீவிர சாதனை நெறியில் உடன்பட்டவன், எல்லாத் தோடங்கட்கும் மூலமாகிய தன்னை மறத்த லென்ற ஆவரண சத்தி உள்ளத்தில் கொள்ளை கொள்ளாது காத்தல் கடன்.

## 829. உடலி னுலகி னுவர்ப்பெப்போழ் துண்டாம்
## உடனே துறத்த லுறுதி - அடல்சேர்
## உறுதிமேற் கொண்ட வுயிர்க்குத்தம் வாணாள்
## அறுதி யிடலருமை யால்.

உடலின் உலகின் உவர்ப்பு எப்போழ்து உண்டாம் உடனே துறத்தல் உறுதி அடல் சேர் உறுதி மேற்கொண்ட உயிர்க்குத் தம் வாழ்நாள் அறுதி இடல் அருமையால்.

**அடல்-வல்லமை, ஆற்றல்; அறுதியிடல்-எல்லையிட்டுக் கூறல்.**

நோன்மை சேர்ந்த கைவல்ய பதத்தை அடைய முயலு முயிர்த் தொகைக்குத் தமது வாழ்நா ளிவ்வளவென்று வரையறுத்தறிய மாட்டாமையால், உண்மையில் உடலின் கண்ணும் உலகின் கண்ணும் எப்பொழுது வெறுப்புண்டாமோ அப்பொழுதே காலந்தாழ்க்கா துலகியலைத்துறத்தல் அவற்றுக் குறுதி பயப்பதாம்.

**வி-ரை :-** பிறவித் துன்பங்களைச் சுட்டெரித்தலால் அடல் சேருறுதியெனப்பட்டது. உயிரென்பது ஈண்டுப் பிறவற்றை யொழித்து மக்களுயிர் மேனின்றது. திடவைராக்கியம் பரிபாகக் குறியாதலால் உவர்ப்பெப் போழ்துண்டா முடனே துறத்தலுறுதி யென்றார். ஆசிரமக்கிரமம் சாமானியர்க்கே யன்றித் தீவிர முமுக்ஷுக்களுக் கன்றென்பதாம்.

## 830. பாதவத்தி னின்று பழநழுவும் பான்மையே
## சாதகனும் பக்குவந்தான் சார்பொழுதிற் - பாதகமா
## வூழ்குறுக்கிட் டாலொழிய வுப்பில்கூ ழாக்குடும்ப
## வாழ்வுதுறந் தேவிடு வான்.

பாதவத்தில் நின்று பழம் நழுவும் பான்மையே சாதகனும் பக்குவம் தான் சார் பொழுதில் பாதகமா ஊழ் குறுக்கிட்டால் ஒழிய உப்பு இல் கூழாக் குடும்ப வாழ்வு துறந்தேவிடுவான்.

**பாதவம்-மரம்.**

மரத்தினின்று பக்குவப்பட்ட காலத்தில் பழம் நழுவி விழுதலைப்போல், பரத்தில் மனதையொடுக்கும் சாதகனும், பக்குவமடைகின்ற காலத்தில், முன்

செய்த தீவினையாம் ஊழ் குறுக்கிட்டாலன்றி குடும்ப வாழ்க்கையை உப்பற்ற கூழாகத் துறந்தே விடுவான்.

## 831. சொப்பனமாத் தம்மிடத்துத் தோற்றும் பலபலவும்
## கற்பனையா வெண்ணிக் கழன்றோரே - சற்பனையாம்
## மாயச் சழக்கறுப்பார் மற்றையார் தாமறியார்
## ஆய சழக்கொழிக்கு மாறு.

சொப்பனமாத் தம்மிடத்துத் தோற்றும் பலபலவும் கற்பனையா எண்ணிக் கழன்றோரே சற்பனை ஆம் மாயச் சழக்கு அறுப்பார் மற்றையார் தாம் அறியார் ஆய சழக்கு ஒழிக்கும் ஆறு.

**சற்பனை-வஞ்சனை; ஆய சழக்கு-(மாயை) ஆகிய குற்றம்.**

## 832. அத்துவித மாமெய்ஞ்ஞா னான்ம சொரூபத்தை
## யுய்த்துணர்ந்த சுத்த வுணர்வோர்மற் - றித்துவிதக்
## காட்சிமெய் யாகக் கலங்கார் வறுமாயச்
## சூழ்ச்சியாத் தாந்துறப் பார்.

அத்துவிதம் ஆம் மெய்ஞ்ஞான ஆன்ம சொரூபத்தை உய்த்து உணர்ந்த சுத்த உணர்வோர் மற்று இத்துவிதக் காட்சி மெய்யாகக் கலங்கார் வறு மாயச் சூழ்ச்சியாத் தாம் துறப்பார்.

**வறு-வறண்ட.**

ஆன்ம சொரூபத்தை யுய்த்துணர்ந்தோர் இத்துவிதக் காட்சியை மெய்யென மதித்துக் கலங்கார். இதை என்றும் மாயச் சூழ்ச்சியாகத் துறப்பர்.

## 833. நிலையாமை கண்டறிந்த நெஞ்சத்தாற் புத்தன்
## றொலையாத செல்வந் துறந்தான் - புலனா
## முலகநிலை யாமை யுணர்ந்த வுளத்தோ
## னிலவுகிக னாத லரிது.

நிலையாமை கண்டு அறிந்த நெஞ்சத்தால் புத்தன் தொலையாத செல்வம் துறந்தான் புலன் ஆம் உலகம் நிலையாமை உணர்ந்த உளத்தோன் இலவுகிகன் ஆதல் அரிது.

**தொலையாத செல்வம்-பெருஞ் செல்வம்.**

உலகம், யாக்கை, இளமை, செல்வம் இவையாவும் நிலையற்றனவென நன்கறிந்த சித்தார்த்தன் (புத்தன்) பெருஞ் செல்வத்தை திடமாகத் துறந்தனன். புலனாகிய உலகின் நிலையாமை உணர்ந்த உளத்தோர் என்றும் உலக இயல்பின ராகார்.

**834. அச்சமே காணாப்பே ராண்மையா லிவ்வுலகைத்
துச்சமா வெண்ணித் துறந்தோரே - நிச்சயமாய்
மெய்ப்பொருள் காண்கிற்கும் வித்தகர்மற் றேனையரோ
பொய்ப்பொருள்காண் புல்லறிவி னார்.**

அச்சமே காணாப் பேர் ஆண்மையால் இவ் உலகைத் துச்சமா எண்ணித் துறந்தோரே நிச்சயமாய் மெய்ப்பொருள் காண்கிற்கும் வித்தகர் மற்று ஏனையரோ பொய்ப் பொருள் காண் புல் அறிவினார்.

**காண்கிற்கும்-காணும்.**

**835. இல்லாம லுள்ள வுலகை யிருந்துமே
இல்லாத தாக்கை யிகத்தலே - இல்லாது
போன்றொளிரும் போதப் பொருளாய தன்னிலையை
ஆன்றோ ரடைதலென் பார்.**

இல்லாமல் உள்ள உலகை இருந்துமே இல்லாததாக் கை இகத்தலே இல்லாது போன்று ஒளிரும் போதப் பொருள் ஆய தன் நிலையை ஆன்றோர் அடைதல் என்பார்.

**கை இகத்தலே-கைவிட்டு விடுவதே.**

**836. விடற்கியல்ப வெல்லாம் விடப்பட்ட பின்னர்
விடற்கியல்வ தன்றியெது விஞ்சும் - விடற்கியலா
வுள்ளமா வுள்ளத் தொளிர்சொருப வுண்மையே
வெள்ளமா மின்ப விளைவு.**

விடற்கு இயல்ப எல்லாம் விடப்பட்ட பின்னர் விடற்கு இயல்வது அன்றி எது விஞ்சும் விடற்கு இயலா உள்ளமா உள்ளத்து ஒளிர் சொருப உண்மையே வெள்ளம் ஆம் இன்ப விளைவு.

சொரூபவுண்மை வெள்ளமாம் இன்பவிளைவாக எஞ்சி நிற்பதென்றார். நீக்கக் கூடிய தெல்லாம் நானல்லவென்று நீக்கியபின், நீக்க இயலாது சைதன்யமாக எஞ்சி நிற்பதே அந்த ஆன்ம ஸ்வரூபம்.

**(குறள் வெண்பா)**

**837. அகந்தைத் தியாக மரிதிற் புரிந்தோ
ரிகந்தொழிய மற்றொன்று மின்று.**

அகந்தைத் தியாகம் அரிதில் புரிந்தோர் இகந்து ஒழிய மற்றொன்றும் இன்று.

**இகந்து ஒழிய-விட்டு ஒழிய.**

அகந்தையின் தியாகத்தால் அருமையில் தன்னிழப்பைச் சார்ந்தோர் அதன்மேல் நீக்கற்பால தொன்றுமில்லையென்றார்.

**838. சாதுவர்தஞ் சித்தஞ் சதாசிவமா நின்றொளிரவ்**
**வேதுவால் வேண்டலுமொன் றின்று.**

சாதுவர்தம் சித்தம் சதாசிவமா நின்று ஒளிர் அவ் ஏதுவால் வேண்டலும் ஒன்று இன்று.

சாதுக்களின் சித்தம் சதாசிவமாக வொளிரும் காரணத்தால், அவரால் வேண்டப்படுபொருள் ஏதுமில்லையாம்; பேரறிவில் சர்வமுமடங்கலின்.

**(நேரிசை வெண்பா)**

**839. இலாதொன்றுந் தன்பா லெதுவும்வேண் டாமென்**
**றுலாவுங்கம் பீர வுளத்தான் - சுலாவுஞ்சிந்**
**தாகுலங்க ளான்மிக் களித்தக்க கோவறிவை**
**ஆகலங்க லாற்றுகின் றான்.**

இலாது ஒன்றும் தன்பால் எதுவும் வேண்டாம் என்று உலாவும் கம்பீர உளத்தான் சுலாவும் சிந்தாகுலங்களால் மிக்கு அளித்தக்க கோ அறிவை ஆ! கலங்கல் ஆற்றுகின்றான்.

**சுலாவும்-திரியும்; கோ-அரசன்.**

## 80. துறவுண்மைத்திறன்

**840. நானனைத்தும் விட்டு நழுவினோ னென்றுளத்துட்**
**டானினைத்த றன்னிற் றலைத்துறவாம் - ஊனக்**
**குடும்பமாம் பந்தத்துட் கோத்தோனாத் தன்னை**
**உடம்பளவா வுன்னாமை யோர்.**

நான் அனைத்தும் விட்டு நழுவினோன் என்று உளத்துள் தான் நினைத்தல் தன்னில் தலைத் துறவு ஆம் ஊனக் குடும்பம் ஆம் பந்தத்துள் கோத்தோனாத் தன்னை உடம்பு அளவா உன்னாமை ஓர்.

**கோத்தோனா-சேர்ந்தவனாக.**

குடும்ப பந்தத்துட் சிக்குண்டோனாகத் தன் சொருபத்தை யுடம்பளவா யூனமுற வெண்ணாமை, நான் உலகபந்தங்க ளெல்லாவற்றினின்றும் உண்மையிலேயே விடுபட்டு நின்றோ னென்று தன்மனத்துட் டானெண்ணமிட்டுக் கொண்டிருக்கு மதனிலும் தலையாய துறவாம்.

**வி-ரை :-** நான் நழுவினோனென்று நினைத்தல் பாவனா மாத்திர மாகலானும், அற்றாயவுண்மை நிலை பாவனாதீத மாகலானும், சும்மா விருக்குஞ் சுபாவ நிலையே வீட்டியல்பா முண்மைத் துறவாவதன்றி, சமுசாரத்தினின்று தணந்தோனாகத் தன்னை யெண்ணிக் கொண்டிருப்பதன்மையின், உன்னாமை நினைத்தல் தன்னிற்றலைத்துற வாவதாம். பந்தத்துளகப்பட்டோனாகத் தன்னை நினைக்கு நினைப்புப்போல அதனிடத்து நின்று விடுபட்டோனாகத் தன்னை நினைக்கு நினைப்பும் உடம்பளவாகத் தன்னை யூனமுற நினைக்கும் ஒருவன் பாசபந்தமா மயக்கத்தையே வுணர்த்துவதாம். அம்மயக்க மழிந்துழி அவ்விரண்டு நினைப்புமே அதனோடகன்றொழிபனவாம். தேகபாவம் சிறிதேனுமிருந்தாலன்றி நான் துறந்தோ னென்னு நினைவுக்குச் சற்று மவகாச மின்றாம்.

> ''பத்தனா னென்னுமட்டே பந்தமுத்தி சிந்தனைகள்
> பத்தனா ரென்றுதன்னைப் பார்க்குங்கால் - சித்தமாய்
> நித்தமுத்தன் றானிற்க நிற்காதேற் பந்தசிந்தை
> முத்திசிந்தை முன்னிற்கு மோ''

என்னும் உள்ளது நாற்பதனோடிதனை யொருவாறொப்பிட்டுணர்க.

## 81. சமட்டிமனத்திறன்

**841. ஓதலிரண் டாமனத்தை யூர்ந்த சுபாசுபமாம்**
**வாதனையைக் கொண்டே வழங்கலாற் - பேதமுறு**
**நன்றொடுதீ தாக நடக்குமன முள்ளபடி**
**ஒன்றே யுணர்வார்க் குணர்.**

ஓதல் இரண்டா மனத்தை ஊர்ந்த சுப அசுபம் ஆம் வாதனையைக் கொண்டே வழங்கலால் பேதம் உறு நன்றொடு தீது ஆக நடக்கும் மனம் உள்ளபடி ஒன்றே உணர்வார்க்கு உணர்.

**ஓதல்-சொல்லுதல்; ஊர்ந்த-(மனத்தில்) வருகிற.**

**842. என்றன் மனமென்று முன்றன் மனமென்றும்**
**துன்றகமே பாசத் தொடக்காகும் - மன்றவே**
**தெள்ளும் பரமான்ம சிற்சத்தி யாயுளவா**
**றுள்ளமன மொன்றே யுணர்.**

என்றன் மனம் என்றும் உன்றன் மனம் என்றும் துன்று அகமே பாசத் தொடக்கு ஆகும் மன்றவே தெள்ளும் பரமான்ம சித் சத்தியாய் உளவாறு உள்ள மனம் ஒன்றே உணர்.

**தொடக்கு-பற்று; மன்றவே-நிச்சயமாகவே.**

எனது மனமென்றும் உனது மனமென்றும் தன்னிலையிற் பிரிந்து பொருந்து நினைவே ஒருவற்குப் பாசபந்தமாம். மிகத்தெளிந்த உண்மை மாத்திரமாம் பரமான்ம சொரூபத்தோ டிரண்டற்றியைந்த சிற்சத்தியாய் என்று மொருபடித்தாய் இருந்தபடி யிருக்கும் சுத்தமன மொன்றேயாம்.

**843. பலபலநான் போலவுடற் பார்வையாற் றோற்றல்**
**குலவுமொரே மெய்ந்நான் குறியாய் - தொலைவிலா**
**வேகசச் சித்தா வியல்சொருப திட்டியா**
**லோர்கவவை யாவுமொருங் கொன்று.**

பலபல நான் போல உடல் பார்வையால் தோற்றல் குலவும் ஒரே மெய்ந்நான் குறியாய் தொலைவு இலா ஏக சத் சித்தா இயல் சொருப திட்டியால் ஓர்க அவை யாவும் ஒருங்கு ஒன்று.

**குறியாய்-குறித்துக்கொள்க, கண்டுகொள்க.**

## 82. அகந்தையொழிவுத்திறன்

**844. அரந்தைசேர் மோக வகந்தையைநன் காராய்ந்**
**தரிந்திடாய் கூர்த்த வறிவால் - கிரந்தி**
**யகழ்ச்சியுறப் பெற்ற வகத்திலன்றி யுண்மை**
**மகிழ்ச்சிசேர் சாந்தி மடாது.**

அரந்தை சேர் மோக அகந்தையை நன்கு ஆராய்ந்து அரிந்திடாய் கூர்த்த அறிவால் கிரந்தி அகழ்ச்சி உறப் பெற்ற அகத்தில் அன்றி உண்மை மகிழ்ச்சி சேர் சாந்தி மடாது.

**அரந்தை-துன்பம்; அரிந்திடாய்-அறுத்தெறிவாய்; அகழ்ச்சியுறுதல்-அறுபடுதல்; மடாது-கிடைக்காது.**

**845. ஞான விசார நடத்தலா லுள்ளஞ்சேர்**
**மோன வருள்வாள் முனையாலே - ஊன**
**வகந்தைக் கிழங்கை யகழ்ந்தெறிதல் சாந்த**
**சுகந்ததும்பச் சூழுந் திறன்.**

ஞான விசாரம் நடத்தலால் உள்ளம் சேர் மோன அருள் வாள் முனையாலே ஊன அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எறிதல் சாந்த சுகம் ததும்பச் சூழும் திறன்.

**சூழும் திறன்-செய்யும் உபாயம்.**

**846. உடலுணர்வை மாய்க்க லுறுவதன்றி மெய்யாந்**
**திடமுயற்சி மற்றெதுவுஞ் செய்யேல் - உடலகந்தை**
**தானே யகில சமுசார துக்கத்துக்**
**கானதோ ரேது வறி.**

உடல் உணர்வை மாய்க்கல் உறுவது அன்றி மெய் ஆம் திட முயற்சி மற்று எதுவும் செய்யேல் உடல் அகந்தை தானே அகில சமுசார துக்கத்துக்கு ஆனதோர் ஏது அறி.

**உடலுணர்வு-உடலகந்தை, உடலே நானெனும் உணர்வு.**

**847. மேவலரும் பேரின்ப வீடு விழுத்துறவு**
**சாவகலுஞ் சாவு சதுரப்பா - டியாவும்**
**மருளுடனா னென்ற மயக்கமற லென்னும்**
**ஒருபொருள வேயென் றுணர்.**

மேவல் அரும் பேர் இன்ப வீடு விழுத் துறவு சாவு அகலும் சாவு சதுரப்பாடு யாவும் மருள் உடல் நான் என்ற மயக்கம் அறல் என்னும் ஒரு பொருளவே என்று உணர்.

**மேவலரும்-அடைவதற்கரிய; விழு-சிறந்த; சதுரப்பாடு-சாமர்த்தியம், விவேகம்.**

**848. கற்றலொடு கேட்டல் கருதலொடு நிற்றலருள்**
**பற்றலொடு மோனம் பரந்தாமம் - மற்றுமுப**
**சாந்த மகம்பத்தி தானந் தவந்தன்மம்**
**ஆர்ந்தயோ கெல்லா மவை.**

கற்றலொடு கேட்டல் கருதலொடு நிற்றல் அருள் பற்றலொடு மோனம் பரந்தாமம் மற்றும் உபசாந்தம் அகம் பத்தி தானம் தவம் தன்மம் ஆர்ந்த யோகு எல்லாம் அவை.

**(17)** ***தானந் தவம்வேள்வி தன்மம்யோ கம்பத்தி***
***வானம் பொருள்சாந்தி வாய்மையருள் - மோனநிலை***
***சாகாமற் சாவறிவு சார்துறவு வீடின்பம்***
***தேகான்ம பாவமறல் தேர். - பகவான்***

தானம் தவம் வேள்வி தன்மம் யோகம் பத்தி வானம் பொருள் சாந்தி வாய்மை அருள் மோனநிலை சாகாமல் சாவு அறிவு சார்துறவு வீடு இன்பம் தேகான்ம பாவம் அறல் தேர்.

**849. செப்பமுடைத் தன்மத் திறங்கடாம் பற்பலவாப்**
**பொற்பணிகள் போலப் புலப்படினும் - அப்பணிகட்**
**குண்மையாம் பொன்னேபோ லொன்றாந் தியாகமே**
**உண்மையா மவ்வறங்கட் கோர்.**

செப்பம் உடைத் தன்மத் திறங்கள் தாம் பற்பலவாப் பொன் பணிகள் போலப் புலப்படினும் அப்பணிகட்கு உண்மை ஆம் பொன்னே போல் ஒன்று ஆம் தியாகமே உண்மை ஆம் அவ் அறங்கட்கு ஓர்.

**செப்பமுடை-சிறந்த; பணி-ஆபரணம்; தியாகம்-தேகாத்மபாவம் விடல்.**

செம்மை சேர்ந்த தன்ம விசேடங்கள் தாம் பொன்னணிகள் போலப் பலதிறத்தனவாகக் காணப்படினும், அவ்வணி விசேடங்கட் கெல்லாம் சாமானியமாம் தங்க மொன்றே யுண்மையாவது போல அத்தன்ம விசேடங்கள் பலவற்றுக்கும் சாமானியமாந் தியாகமொன்றே யுண்மையாம்.

**வி-ரை :-** அன்னதானம், சொன்னதானம் முதலியன தன்ம விசேடங்கள். கிரீடம், குண்டலம் முதலியன அணி விசேடங்கள். அவ்விசேடங்கள் பலவும் சாமானிய மொன்றை விடுத்துத் தம்மட்டிற் பொருளாகாமையால், விகாரப்படும் பெயர் வடிவத் தோற்றமாங் கற்பனை மாத்திரத்தாலாயவை. பொன்னின்றேல் அணி விசேடங்கள் இல்லாதவாறு போலத் தியாகமின்றேல் தன்ம விசேடங்களு மிலவாம். உடல்களை யுயிர் போலத் தியாகமே தன்மங்களை யுள்ளிருந்தியக்குவதாம். தியாகத்தோடு சிறிதேனுங் கலக்கப் பெறாத தன்மங்கள் உயிரற்ற பிணம்போல வியர்த்தமாம். தியாகமாவது யானென தென்னும் அகப்புறப்பற்றுக்களை அற விடுதல்.

ஆவே றுருவின வாயினு மாபயந்த
பால்வே றுருவின வல்லவாம் - பால்போ
லொருதன்மைத் தாகு மறநெறி யாபோ
லுருவு பலகொள லீங்கு. - நாலடியார்

## 850. வயாவடிவாந் துன்ப வழியா மமதைத்
## தியாகமொருங் குற்றவதி தீரன் - உசாவால்
## அசேட வகந்தைத் தியாக வடைவே
## விசேடமாந் தன்ம விளைவு.

வயா வடிவு ஆம் துன்ப வழி ஆம் மமதைத் தியாகம் ஒருங்கு உற்ற அதி தீரன் உசாவால் அசேட அகந்தைத் தியாக அடைவே விசேடம் ஆம் தன்ம விளைவு.

**வயா-வேட்கைப் பெருக்கு, பேராசை.**

எனக்கென்றெழும் வேட்கை வடிவாம் பல்வேறு பற்றுக்களையும் வைராக்கியத்தா லொருங்கொழித்தலை முனைந்து மேற்கொண்ட விவேகியான தீரன், அவற்றுக்கெல்லா மூலமாய்ப் பிறவித் துன்பஞ்சேரும் வாயிலான யானென்னும் பற்றை எத்துணையு மெச்சமற அறவே விடுதலை அவ்யானாரென்னும் அகமுக விசாரத்தாலடைந்து அதனான் மனக்கவலைமாறி உபசாந்த சுகமுறலே அறத்தின் மிக்க பயனாம்.

**வி-ரை :-** அடைவென்னுங் காரணம் காரியத்தின் மேல் நின்றது.

**851. யானென் றிருமாந் தெழுந்திறைமெய்ப் பூரணத்தை
ஊனஞ் செயாதுள் ளொடுங்கலே - ஞான
சிவசந் நிதியாந் திருமூலட் டானத்
தவநன் னியமந் தரி.**

யான் என்று இறுமாந்து எழுந்து இறை மெய்ப் பூரணத்தை ஊனம் செயாது உள் ஒடுங்கலே ஞான சிவசந்நிதியாம் திருமூலட்டானத் தவ நல் நியமம் தரி.

யானென்றகங்கரித் தெதிரெழுந்து இரண்டற விருந்தொளிரு மிறைவனதுண்மை நிறைவைக் குறைவுறுத்தாது தன்னுதித்த விடமா முளத்துளொடுங்கப்பெறலே தன் மூலத்தானமா மவன் ஞான சந்நிதிக்கட் சார்வோன் தவறாது கடைப்பிடித் தொழுகக்கடவதாய நல்லொழுக்க முறையாம்.

**வி-ரை :-** சிவன் - உயிர்களுக்கொழியாது நன்மை செய்வோன். உடற்பிறப்பொன்றோடொழியாது, உயிராகிய யான் எங்கிருந்தெழுந்தேன் என்றாராய்தலால் அகந்தை யழிந்து தம் பிரம்ம மூலத்திற் பெயர்த்தும் போய்ப் பிறந்த இருபிறப்பாளரன்றி யேனையோர் அதிபாவனமா மவன் றிருமுன் னடைந்து திருமேனி காண்டலோ, தீண்டலோ அநுமதிக்கப்படாமையால் உள்ளொடுங்கலே தவநன்னியமமென்றார்.

> ''பிறந்த தெவன்றன் பிரம்மமூ லத்தே
> பிறந்ததெவ ணானென்று பேணிப் - பிறந்தா
> னவனே பிறந்தா னவனிதமு னீச
> னவனவன வன்றினமு நாடு''
>
> - உள்ளது நாற்பது அநுபந்தம்

உண்மை மாத்திரமா மான்ம சொரூபமே இறைவனாகவும் அதன் சைதன்ய விலாசமே அவன் சந்நிதியாகவும் உயிர்தா னுதித்தொடுங்கு முள்ளமே மூலத்தானமாகவும் உணர்தற்பாலதாம்.

**852. பரற்குரிய தாமெய்ப் பரிபூர ணத்தைச்
சுருக்குமகங் காரந் துரப்பே - பரற்குப்
பிழைபா டிலாது பிறங்கலுறு முண்மை
வழிபா டறிஞர் மதிக்கு.**

பரற்கு உரியது ஆம் மெய்ப் பரிபூரணத்தைச் சுருக்கும் அகங்காரம் துரப்பே பரற்குப் பிழைபாடு இலாது பிறங்கல் உறும் உண்மை வழிபாடு அறிஞர் மதிக்கு.

**துரப்பே-அகற்றுவதே; பிறங்கல்-விளங்கல்.**

**853. இறைக்குத்தா மூணாத லின்றித் தமக்கவ்**
**விறையையூ ணாக்கவுளத் தெண்ணும் - வெறியர்**
**அகந்தையே வாயிலா வந்தகனுக் கூணா**
**முகந்து கொளப்படு வார்.**

இறைக்குத் தாம் ஊண் ஆதல் இன்றித் தமக்கு அவ் இறையை ஊண் ஆக்க உளத்து எண்ணும் வெறியர் அகந்தையே வாயிலா அந்தகனுக்கு ஊணா முகந்து கொளப்படுவார்.

**முகந்து கொளப்படுவார்-ஏற்றுக்கொள்ளப்படுவார்கள்.**

அகந்தை வாயிலாக வெளிப்பட்டுழல்வோர் இறுதியில் யமனுக்காளாய் இடர்ப்படுதல் திண்ணம். தேகாத்ம புத்தியே மிருத்யுவின் ஆட்சியாம். இவர் தம்மை யொப்புவித்து இறைக்கு ஊணாதலின்றித் தாம் பரம் பொருளை ஊணாக்கி (அதாவது அசுரர் போல் அப்பொருள்பால் வரங்கள் பெற்று) அகங்காரத்தை வலிப்படுத்த விரையும் வெறியராவர்.

**854. சுட்டுணர்வா லானபுலத் தோற்றங்க ளோடவைதேர்**
**துட்டவகங் காரியாந் தோன்றலுமே - கெட்டுணவாச்**
**சிற்பரமாத் துன்று சிவபதத்தே துஞ்சிலன்றித்**
**தற்பரந்தான் சார்த லரிது.**

சுட்டு உணர்வால் ஆன புலத் தோற்றங்களோடு அவை தேர் துட்ட அகங்காரி ஆம் தோன்றலுமே கெட்டு உணவாச் சிற்பரமாத் துன்று சிவபதத்தே துஞ்சில் அன்றித் தற்பரம் தான் சார்தல் அரிது.

**தேர்-அறிகின்ற; தோன்றல்-தோற்ற ஒடுக்கமுள்ள அகங்கார ஜீவன்; துஞ்சில் அன்றி-செத்தால் அன்றி.**

**855. நிச்சலமாத் துன்று நிஜான்ம சொரூபநிலை**
**துச்சமனத் துக்குத் துலங்குமோ - சிச்சடமாப்**
**பூண்டவகங் காரப் புலங்கெட் டழியிலன்றி**
**யீண்டுவதன் றுண்மை யியல்.**

நிச்சலமாத் துன்றும் நிஜ ஆன்ம சொரூபநிலை துச்ச மனத்துக்குத் துலங்குமோ சித் சடமாப் பூண்ட அகங்காரப் புலம் கெட்டு அழியில் அன்றி ஈண்டுவது அன்று உண்மை இயல்.

**ஈண்டுவது-அடைவது.**

**856. நானென்னு மொன்று நடுவே முளைத்தன்றோ**
**தானொன்று சாந்தியறச் சாய்ந்ததுதான் - யானெனுமவ்**
**வீணகங் கார விருத்திரனைக் கொன்றன்றிக்**
**காணரிது கைவல் லியம்.**

நான் என்னும் ஒன்று நடுவே முளைத்து அன்றோ தான் ஒன்று சாந்தி அறச் சாய்ந்தது தான் யான் எனும் அவ் வீண் அகங்கார விருத்திரனைக் கொன்று அன்றிக் காண் அரிது கைவல்லியம்.

**விருத்திரன்-விருத்திராசுரன்.**

## (இன்னிசை வெண்பா)

**857. மனவுணர்வாஞ் சீவ மதியினொளி யான்ம**
**கனவுணர்வா முண்மைக் கதிரொளியிற் புக்காங்**
**கிறந்துபோய்த் தன்மயமா யென்றொழியு மன்றே**
**சிறந்த வமாவா சியை.**

மன உணர்வு ஆம் சீவ மதியின் ஒளி ஆன்ம கன உணர்வு ஆம் உண்மைக் கதிர் ஒளியில் புக்கு ஆங்கு இறந்து போய்த் தன்மயமாய் என்று ஒழியும் அன்றே சிறந்த அமாவாசியை.

அமாவாசையின் சிறப்பு மன வுணர்வாகிய சீவமதியானது ஞானக் கதிரவன் ஒளியில் புக்குத் தானிறந்து அவ்வொளியினின்றும் வேறுபடாது அழிதலே யென்றார்.

## (நேரிசை வெண்பா)

**858. செத்தாலே வீட்டுலகஞ் சேரலா மன்றிமற்**
**றெத்தாலுஞ் சேர லியையாதே - செத்தொழிகை**
**எவ்வதெனின் யானெனதை மாய்த்தலே யன்றிமற்**
**றிவ்வுடம்பை மாய்த்த லிழுக்கு.**

செத்தாலே வீட்டு உலகம் சேரல் ஆம் அன்றி மற்று எத்தாலும் சேரல் இயையாதே செத்து ஒழிகை எவ்வது எனின் யான் எனதை மாய்த்தலே அன்றி மற்று இவ் உடம்பை மாய்த்தல் இழுக்கு.

**எவ்வது-எத்தகையது.**

தானிறந் தொழிந்தாலே அகண்டான்ம சொரூபமாஞ் சிதாகாயமான வீட்டுலகை ஒருவனடைதல் ஆவதன்றி வேறெவ்வுபாயத்தாலும் அதனையடைதல் ஆகாதாம். இறந்தொழிவதுதா னெங்ஙன மென்னில் பந்தமூலமான யானென தென்னும் மோகத்தை யிறப்பித்தலன்றி இவ்வுடம்பை யிறப்பித்த லிழுக்காம்.

**வி-ரை :-** யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும். - குறள்.

யானெனது - தன்னோடுண்மையி லியைபில்லாத கருவி கரணாதிகளை மயக்கத்தால் யானெனதென்றிருக்கும் மானாபிமானம். ஒருவனைப் பந்தித்ததுதான் தேகான்ம புத்தியா மகந்தை யன்றித் தேகமேயன்மையின் இவ்வுடம்பை மாய்த்த லிழுக்கென்றார்.

**859. வித்தார மோக விலாசத்தில் வேட்கையறச்
செத்தாரே வாழ்க்கை சிவப்படுவர் - புத்தான்ம
சுத்தானு பூதித் துலக்கத்தா லன்றிமற்
றெத்தாலு மில்லைமெய் யின்பு.**

வித்தார மோக விலாசத்தில் வேட்கை அறச் செத்தாரே வாழ்க்கை சிவப்படுவர் புத்தான்ம சுத்தானுபூதித் துலக்கத்தால் அன்றி மற்று எத்தாலும் இல்லை மெய் இன்பு.

**வித்தார-விசாலமான.**

**860. இறப்போ டியைந்த விரும்பிறவி மாய்க்கும்
பிறப்போ டியையாப் பெரும்பே - ரிறப்பே
தெனநீர் வினாவி னிருளியைந்த யானோ
டெனது மிறந்து விடல்.**

இறப்போடு இயைந்த இரும் பிறவி மாய்க்கும் பிறப்போடு இயையாப் பெரும் பேர் இறப்பு ஏது என நீர் வினாவின் இருள் இயைந்த யானோடு எனதும் இறந்து விடல்.

**இயைந்த-பொருந்திய; இரும்-பெரிய; பெரும் பேர் இறப்பு-மிகப்பெருஞ் சாவு.**

**(குறள் வெண்பா)**

**861. நானா ரெனுந்தன்மெய்ந் நாட்டத்தாற் பொன்றுவதாம்
ஊனா ரகந்தை யுயிர்ப்பு.**

நான் ஆர் எனும் தன் மெய்ந் நாட்டத்தால் பொன்றுவது ஆம் ஊன் ஆர் அகந்தை உயிர்ப்பு.

**உயிர்ப்பு-வாழ்வு.**

அகந்தையின் உயிர்ப்பு நானாரென்ற விசாரமொன்றாலே இறப்பதாம். கன்மத்தாலும் ஜீவபோதத்தை அடிப்படை மெய்யாகக் கொண்ட பிறயோகங்களவையினாலு மன்று என்பது சூசனை.

**862. அறிவிலே தன்பொய் யகந்தையை மாய்த்துச்
செறிவதே யுண்மைத் தெளிவு.**

அறிவிலே தன் பொய் அகந்தையை மாய்த்துச் செறிவதே உண்மைத் தெளிவு.

**செறிவதே-நிலைபெறுவதே.**

உண்மைத் தெளிவாவது அறிவு சொரூபத்தில் பொய் அகந்தையை மாய்த்துச் செறிவதாம்.

**863. நானெனும்பொய்ம் மோகமதி நாசத்தா லன்றிமெய்ஞ்
ஞானவனு பூதியில்லை நாடு.**

நான் எனும் பொய்ம் மோக மதி நாசத்தால் அன்றி மெய்ஞ் ஞான அனுபூதி இல்லை நாடு.

**(நேரிசை வெண்பா)**

**864. ஒடுங்கியே யாவனுணர் வுண்மையூ டொன்றா
வடங்கினான் மோக வகந்தை - தொடங்கு
முயற்சியோய்ந் துள்ளத்து மூண்டொளிர்வன் சாந்த
வியற்கைசே ரின்பப் பதம்.**

ஒடுங்கியே யாவன் உணர்வு உண்மை ஊடு ஒன்றா அடங்கினான் மோக அகந்தை தொடங்கும் முயற்சி ஓய்ந்து உள்ளத்து மூண்டு ஒளிர்வன் சாந்த இயற்கை சேர் இன்பப் பதம்.

## 83. தத்துவஞானத்திறன்

**865. அதிகார மாகவல் லாண்மைபல வாற்றும்
சதிகார மாயை தனிலே - உதிசீவ
போதாகங் காரமயல் போயே பரமான்ம
போதானு பூதியுண் டாம்.**

அதிகாரமாக வல் ஆண்மை பல ஆற்றும் சதிகார மாயை தனிலே உதி சீவ போத அகங்கார மயல் போயே பரமான்ம போத அனுபூதி உண்டாம்.

**போயே-போன பிறகே.**

**866. ஆகத் தகம்புத்தி யற்றா லலமரல்சேர்
மோகக் கலக்கம் முடிந்தொழியும் - ஆகா
நிருவிகற்ப மாக நிகழ்சிற் பரமே
துருவகத்துத் தோன்று மகம்.**

ஆகத்து அகம் புத்தி அற்றால் அலமரல் சேர் மோகக் கலக்கம் முடிந்து ஒழியும் ஆகா நிருவிகற்பம் ஆக நிகழ் சித் பரமே துருவு அகத்துத் தோன்றும் அகம்.

**ஆகம்-உடம்பு; அலமரல்-துன்பம்; துருவு அகத்து-விசாரிக்கின்ற உள்ளத்தில்.**

**867. இல்லதுபோல் கின்ற விறையே யுளனன்றி
உள்ளதுபோ லுந்தா னொருவனென்றும் - இல்லையெனத்
தன்னுடைய சூனியத்தைத் தானுணருந் தன்மையையே
பன்னுபர ஞானமென் பார்.**

இல்லது போல்கின்ற இறையே உளன் அன்றி உள்ளது போலும் தான் ஒருவன் என்றும் இல்லை எனத் தன்னுடைய சூனியத்தைத் தான் உணரும் தன்மையையே பன்னு பரஞானம் என்பார்.

**போல்கின்ற-போல உள்ள; பன்னு-புகழ்ந்து கூறப்படுகின்ற.**

புறநாட்டத்திற் புலனாகாமையாற் கற்பனையே போற் கருத நின்ற பரன் மட்டுமே யுளனாவதன்றி புலனாமுபாதி நோக்கங் கொண்டே உளனாக மாறுபடவுணர்ந்த தானென்னுந் தனிப்புருடனொருவன் எக்காலுமே யின்றென உடலகந்தை வடிவா முயிர்ப்பொருளின் சூனியத்தை ஆன்ம விசார வடைவா லநுபவமா யறிதலையே விசேடித் துரைக்கப்படும் பரஞானமென உண்மையுணர்ந்தோர் பகர்வர்.

**(குறள் வெண்பா)**

**868. சத்துவ மோன சகஜ சமாதியே
தத்துவ ஞானச் சதிர்.**

சத்துவ மோன சகஜ சமாதியே தத்துவ ஞானச் சதிர்.

**சதிர்-சிறப்பு, அழகு.**

பொருள் வெளிப்படை. முக்குணங்களையும் தாண்டி நிற்பது சகஜநிட்டை யெனினும் சத்துவமே மனதின் ஆதி சொரூபமாதலின் சத்துவ மோனமென்றார்.

## 84. காட்சிமாட்சித்திறன்

**(நேரிசை வெண்பா)**

**869. மாணுஞ் சிதாகாய மார்த்தாண்டான் மாவுக்குக்
காணுந்தன் மங்கல்லார் கற்பனையே - தாணுவாம்
ஆன்மா விடத்துப்பா ழாயவிருண் மாயையிலை
ஆன்மா விரண்டற் றது.**

மாணும் சிதாகாய மார்த்தாண்ட ஆன்மாவுக்குக் காணும் தன்மம் கல்லார் கற்பனையே தாணு ஆம் ஆன்மா இடத்துப் பாழ் ஆய இருள் மாயை இலை ஆன்மா இரண்டு அற்றது.

**மாணும்- மாட்சிமை பொருந்திய; மார்த்தாண்டன்-சூரியன்.**

மாட்சிமைப்படும் அறிவாகாயமாய்த் தன்னிற்றா னமர்ந்தொளிரும் அகண்ட சூரியனா மான்மாவுக்கு அயலைச் சுட்டி யறியுந் தன்மை அவ்வயலையன்றி அறிவை யறியாதார் கற்பனை மட்டே. ஏனெனில், அசலப் பொருளா மான்மாவினிடத்துச் சூனியமா மிருண்மாயையில்லை. அதுதா னயலற்றதாம்.

**வி-ரை :-** இருளொடு கலந்த மந்தவொளியினன்றி ஒளியெங்குமா யெறிக்கு மகண்ட வெளியிற் கற்பனைகளைக் காண்டலரிதாகலானும் அவ்விருண்மாயை தா னத்துவிதான்மாவிடத் தபாவமாகலானும், அது தான் காணுந் தன்மங் கடந்ததாக, அத்தன்மத்தை யதன்பா லாரோபித்தல், அனைத்தையுந் தன்போ லறிதலே மனத்தின் மாண்பாகலான் கல்லார் கற்பனையே யென்றும், சைதன்யமே யுள்ளதாதலால் இருண் மாயை இல்லதென்பார் பாழாய விருண்மாயை யென்றுங் கூறினார். கல்லார் - உண்மை யுணர் வறவே யின்றி மனவுணர் வொன்றே யுடையார்.

## 870. யானுலகைக் காண்கின்றே னென்னி னதன்மன்மம்
## ஊனமறு முண்மை யொளியாய - ஞானபரி
## பூன்றவா னென்னுட் புலவுலகுங் காண்பானும்
## தோன்றலா மென்றே துணி.

யான் உலகைக் காண்கின்றேன் என்னின் அதன் மன்மம் ஊனம் அறும் உண்மை ஒளி ஆய ஞான பரி பூன்ற வான் என்னுள் புல உலகும் காண்பானும் தோன்றல் ஆம் என்றே துணி.

**மன்மம்-மர்மம்; தோன்றல் ஆம்-தோன்றுதல் ஆகும்.**

புலனா முலகைக்குறித்து ஒருவன் யானிதனைக் காண்கின்றே னென்னின் அதனுண்மை அபின்னமா முண்மையொளியாய அகண்ட சிதாகாயமா மான்ம சொரூபத்துள் விடயமாய்க் காணப்படுமுலகும் அதனைக் காணும் வினைமுதலாம் புருடனும் விளங்குவனவென்பதாம்.

**வி-ரை :-** இரட்டை முப்புடிகளாயியங்குங் கற்பனையாவும் அவற்றோ டறவே தாக்கற்று நின்ற அகண்ட சிதாகாயமாந் தன்னுண்மை யொளிச் சார்பால் உளவாகி யொளிர அவற்றுக் கவகாச மளித்தலே ஆன்ம வியல்பா யறிதற் பாலதாம். இரண்டற விருந்தொளிர்வதன்றிப் பிறிதொன்றை யெதிரிட்டுக் காண்டல் உண்மையில் இயைவதன்றாம். ஆகவே, ஒருவர் உலகை உண்மையாகவே காணுவதாகக் கருதின், அது அவிச்சையில் அநாதியாய்ப் படிந்து கிடந்த சூக்க வாதனைத் திரள் ஏற்ற காலத்தில் எதிர்ப்படத் தோன்றும் தூல உருவெளித் தோற்றமே யாதலால் காமுகர் காணுஞ் சூக்கவுருவெளித் தோற்றக் காட்சி போன்று அது முற்றும் மனமயக்கமேயாம்.

## 871. தோற்றமே மெய்யாத் துணிவிக்கு மிந்திரியத்
## தேற்றம் விபரீதத் தேற்றமாம் - தோற்றத்தைத்
## தேரிந் திரியமுந் தேர்வானுந் தோற்றத்தோ
## டோருருவிற் றாக வுணர்.

தோற்றமே மெய்யாத் துணிவிக்கும் இந்திரியத் தேற்றம் விபரீதத் தேற்றம் ஆம் தோற்றத்தைத் தேர் இந்திரியமும் தேர்வானும் தோற்றத்தோடு ஓர் உருவிற்று ஆக உணர்.

**தேற்றம்-முடிவு.**

திருக்கு திரிச்யங்களாகிய அடுக்கின் ஒற்றுமையை விளக்குவது. புலன்களால் அறியும் தோற்றங்களைத் தம்மில் இயங்குவனவாக நினைப்பதே மாயையாம். காணும் புலன்களின்றி நாமரூபங்களும், அகங்கார வடிவாகிய மனமின்றிப் புலன்களின் தொழில்களும் இலவாம். அறிவின்றி இவையாவு மின்மையின், அறிவினின்றும் வேறுபட்டு எதுவுமிலை யென வறிதலே வீடாம்.

## 872. கண்காணி தன்னையெவன் காண்பா னவனந்தக்
## கண்காணி தானேயாக் கண்டொளிர்வான் - கண்காணி
## வேறாகத் தானொருவன் வேறென்னும் பேதமதி
## யீறாகத் தன்சொருப மேய்ந்து.

கண்காணி தன்னை எவன் காண்பான் அவன் அந்தக் கண்காணி தானேயாக் கண்டு ஒளிர்வான் கண்காணி வேறாகத் தான் ஒருவன் வேறு என்னும் பேதமதி ஈறு ஆகத் தன் சொருபம் ஏய்ந்து.

**ஈறாக-முடிந்து; ஏய்ந்து-அடைந்து.**

தானே கேவல சைதன்யமான கண்(த்ருக்)ணாக விருப்பதால், ஒன்றையொன்றாக வறியும் மனமே தானென்று பிரமிப்பவன், தன்னை வேறாகவும், வஸ்துவை வேறாகவும் கற்பனை செய்தல் திண்ணம். ஆயின், இக்கற்பனை அழியாதவரையில் மாயையற்ற சொரூபப் பிராப்தியில்லை யென்றார். காணும் தன்னையும் காட்சியையும் எல்லையற்ற அறிவாக அறிவதே சொரூபமாம்.

## 873. கண்காணி கன்மபந்தங் காணான் பரவொளிசேர்
## விண்காணி யாட்சியா மேவுவான் - கண்காணுங்
## காட்சிகளைத் தன்சொருபக் காட்சியாற் றன்மயமா
## வாட்சிகொள வல்லா னறி.

கண்காணி கன்ம பந்தம் காணான் பர ஒளி சேர் விண் காணி ஆட்சியா மேவுவான் கண்காணும் காட்சிகளைத் தன் சொருபக் காட்சியால் தன் மயமா ஆட்சி கொள வல்லான் அறி.

**காணி ஆட்சியா-(பராகாசத்தைத் தன்) உடைமை நிலமாக.**

ஞான மாத்திரத்தில் கன்மம் கெட்டழிவதென்பதன் நுட்பத்தை விளக்குகிறார். தான் எல்லையிலாக் கண்ணாக அமைவதால், காட்சியும் தனக் கன்னிய மின்மையின் அவ்வாறு சொரூபமே யாயினோன், கன்மபந்தம் காண்பதில்லை. யாவும் தன்மயமாயின், உடலளவான கன்மி (ஜீவன்) அழிவதால் கன்மமில்லை யென்க.

**874. பரவெளியாந் தன்சொருபப் பார்வையாற் பார்க்கில்**
**உருவெளியே யாம்பொய் யுலகில் - மருவும்**
**உடலோ டொருப்பட் டொழுகுமகங் கார**
**மடமையே மாயப் பிறப்பு.**

பரவெளி ஆம் தன் சொருபப் பார்வையால் பார்க்கில் உரு வெளியே ஆம் பொய் உலகில் மருவும் உடலோடு ஒருப்பட்டு ஒழுகும் அகங்கார மடமையே மாயப் பிறப்பு.

**875. அற்பவக மல்லா வகண்டத்தால் யாவையுமம்**
**மெய்ப்பரமாந் தன்னுள்ளே மேவுவன - சொப்பனத்தே**
**துன்னியபல் வேறுவகைத் தோற்றம்போ லான்மாவே**
**அன்னியம்போற் காண்ப தறி.**

அற்ப அகம் அல்லா அகண்டத்தால் யாவையும் அம் மெய்ப்பரம் ஆம் தன் உள்ளே மேவுவன சொப்பனத்தே துன்னிய பல்வேறு வகைத் தோற்றம்போல் ஆன்மாவே அன்னியம்போல் காண்பது அறி.

**மேவுவன-இருப்பன; துன்னிய-பொருந்திய.**

ஆன்மாதான் பரிச்சின்னாகங்காரமன்றிப் பரிபூரண சிதாகாயமாதலால் அறிபடுவன வடங்கலும், அம்மெய்ப் பரமாந் தன்னுளிருந்து தன்மயமாகவே விளங்கித் தோன்றுவனவாம். ஆதலால் கனவின்கட் காணப்படும் பல்வேறுவகைக் காட்சிகள் போன்று, நனவின்கட் சுட்டறிவா லயல்போலத் தோன்றுந் தூல சூக்குமத் தோற்றமனைத்தும் உண்மையில் ஆன்மசொரூபமேயாம்.

**வி-ரை :-** இருக்குமவனாந் தன்னைக் காணுமவனாய்க் கலங்கியதனாலேயே அத்துவிதாகண்டான்ம சொரூபமாந் தனக்குத் துவிதத் தோற்றமும் பரிச்சின்ன பாவமும் ஏற்பட்டனவாம். காண்பானே யன்றிக் காட்சியுங் காணப்படுவனவுங்கூட உண்மையில் ஆன்ம சொரூபமேயாம். ''நாம வுருச் சித்திரமும் பார்ப்பானுஞ் சேர்படமு மாரொளியு மத்தனையுந் தானா மவன்'' (உள்ளது நாற்பது -1)

திரிபுடிபேதம் ஆன்மபாவத்தில் இன்றாம். காணப்படுவன போலக் காண்பானும் ஆன்மாவிற் கற்பிதமாம். அவையிரண்டன் தோற்றத்துக்கும் அவகாசமளிக்கும் பரமாகாயமே ஆன்ம வடிவாம். ஆதலால் இருத்தலே தனக்கியல் பன்றிக் காண்டல் உண்மையன் றெனக் காண்க.

**876. பொய்யா மராத்தோற்றம் போங்காறு மாதார
மெய்யாம் பழுதை விளங்காது - பொய்யா
மருவுமுல கத்தோற்ற மாறளவு முண்மைச்
சொருபவதிட் டானமுந்தோற் றாது.**

பொய் ஆம் அராத் தோற்றம் போம்காறும் ஆதார மெய் ஆம் பழுதை விளங்காது பொய்யா மருவும் உலகத் தோற்றம் மாறு அளவும் உண்மைச் சொருப அதிட்டானமும் தோற்றாது.

**அரா-அரவு, பாம்பு.**

**877. உலக வுணர்ச்சி யொழிந்த பொழுதே
குலவுபர மான்மவொளி கூடும் - குலவான்ம
சோதிசேர் வாழ்வே சுபாவவாழ் வாருயிர்க்கு
மீதியுள வெல்லா மிறை.**

உலக உணர்ச்சி ஒழிந்த பொழுதே குலவு பரம ஆன்ம ஒளி கூடும் குலவு ஆன்ம சோதி சேர் வாழ்வே சுபாவ வாழ்வு ஆர் உயிர்க்கு மீதி உள எல்லாம் இறை.

**இறை-அற்பம்.**

உலகம் ஆன்ம சொரூபத்தினயலாகத் தோன்றும் பேதவுணர்ச்சி பிரிந்த பொழுதே அகிலமுந் தன்மயமாக விளங்கும் ஆன்மாநுபவம் அடையப்படும். அவ்வாறு விளங்கும் ஆன்மஞான வாழ்வே ஆருயிர்க்கியற்கை வாழ்வாவது; சுட்டறிவுக் கிலக்காய்ப் பேதத்தொடு பொருந்தும் மற்றுள வாழ்வெல்லாம் மாயமாம்.

**வி-ரை :-** உலகமென்பதே காணப்படுவதென்னும் பொருளதாகலின், உலகவுணர்ச்சியென்றது பேதத்தோடு கூடியதனையே யாகக் கோடல் வேண்டும். சோதி - நிருவிசேடவுணர்வா முண்மை விளக்கம். விசேடமாந் திரிபுடிபேதம் மோக விளைவாதலாலும், அம்மோகம் உண்மையன்மையாலும் ஆன்ம சோதிசேர் வாழ்வே சுபாவ வாழ்வென்றும் பேதஞானம் எந்தத் திவ்யலோகத்தைப்பற்றி யியல்வதாயினும் அஞ்ஞான மெல்லா மஞ்ஞானமே யென்பார் மீதியுள்ளவெல்லா மிறையென்றுங் கூறினார்.

— ❖ —

# மூன்றுவது

# தத்துவ அநுபவவியல்

## 1. அபரோக்கஞானத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**878. ஆன்மாவே யுண்மைவிழி யாதலா லஃதறியும்**
**ஆன்மாவே யுண்மை யபரோக்கம் - ஆன்மநோக்**
**கற்றசடர் தாமே யபரோக்க மென்பரயல்**
**உற்றவிட யம்புலனா வோர்ந்து.**

ஆன்மாவே உண்மை விழி ஆதலால் அஃது அறியும் ஆன்மாவே உண்மை அபரோக்கம் ஆன்ம நோக்கு அற்ற சடர்தாமே அபரோக்கம் என்பர் அயல் உற்ற விடயம் புலனா ஓர்ந்து.

**அபரோக்கம்-கண்கூடான பிரத்யக்ஷ அனுபவம்; சடர்-ஜடர்.**

உண்மை மாத்திரமாயிருந்தொளிர்தலால் ஆன்மாவொன்றே உண்மை விழியாம். ஆதலால், உண்மையல்லாப் பிறிதொன்றை யுணர்தலில்லாத அதனாலறிபடும் அவ்வான்ம வஸ்து வொன்றே உண்மையிற் கண்கூடாகக்

காணும் பொருளாம். உண்மை அங்ஙனமாகவும், அநான்ம விடயம் அநான்ம வகந்தைக்குப் பொறிகள் வாயிலாற் புலனாக, ஆன்ம நோக்கம் புதைபட்ட மூடர் மாத்திரம், ஆன்மாவாந் தமக்கே அஃது நேரி லறிபட்டதாக மாறுபட நினைந்து அதனைக் கண்கூடென வழங்குவர்.

**வி-ரை:-** உண்மையே ஆன்மாவாதலால், உலக விடயம் ஆன்மாவுக் கயலெனவே கற்பனையென் றாயிற்று; ஆகவே மாயிகமாம் மனோமயவுலகம் உண்மையல்லாமலும், அதனாலஃது அறிவுருவ ஆன்மாவாந் தமக்கு நேரில் உண்மையி லறிபடாமலு மிருக்க, அதனை யபரோக்கமெனல் அறியாமை யென்பதாம். அதனை யபரோக்க மென்று உபசாரத்தா லுலகோர் வழங்குவோராயினும் உண்மையில் அபரோக்கமாவது ஆன்மாவொன்று மேயாம். அபரோக்கம் - கண்கூடு, பிரத்தியக்ஷம். ஆன்மாவே உண்மை விழி யென்பதனை,

> ''கண்ணலாற் காட்சியுண்டோ கண்ணதுதா
> னந்தமிலாக் கண்''
>
> - உள்ளது நாற்பது

என்பதனாற் காண்க.

## 879. எல்லையிலாக் கண்ணா யிருந்தொளிரான் மாவுக்குப் புல்லுவதா மோமுப் புடித்தோற்றம் - வல்லமைசேர் ஞானத் தழல்விழிசெய் நாட்டத்தாற் றன்மயமாம் ஏனையெதிர் யாவு மெரிந்து.

எல்லை இலாக் கண்ணாய் இருந்து ஒளிர் ஆன்மாவுக்குப் புல்லுவது ஆமோ முப்புடித் தோற்றம் வல்லமை சேர் ஞானத் தழல் விழி செய் நாட்டத்தால் தன்மயம் ஆம் ஏனை எதிர் யாவும் எரிந்து.

**புல்லுவது ஆமோ-பொருந்துமோ.**

## 880. தீதுநல மாந்தொந்த திட்டியொடு காலமிடம் ஏதுபலங் கன்மமிவை யின்றியே - யாதும் பிறிதா வறியவொரு பின்னமிலா வுண்மை அறிவே யனந்தவிழி யாம்.

தீது நலம் ஆம் தொந்த திட்டியொடு காலம் இடம் ஏது பலம் கன்மம் இவை இன்றியே யாதும் பிறிதா அறிய ஒரு பின்னம் இலா உண்மை அறிவே அனந்த விழி ஆம்.

## 2. நித்தாபரோக்கத்திறன்

**881. உள்ளுசா வாலே யுளதாம் பயன்முழுதும்**
**கள்ளநா னென்னுங் கருத்தழிவே - தெள்ளிதாய்**
**நித்தசித்த மாக நிகழான்ம தத்துவத்தை**
**மெத்தலெனக் கூறன் மிகை.**

உள் உசாவாலே உளது ஆம் பயன் முழுதும் கள்ள நான் என்னும் கருத்து அழிவே தெள்ளிது ஆய் நித்த சித்தம் ஆக நிகழ் ஆன்ம தத்துவத்தை மெத்தல் எனக் கூறல் மிகை.

**தெள்ளிது ஆய்-தெளிந்ததாய்; மெத்தல்-அடைதல்.**

**882. சுத்தாப ரோக்கத் துலக்கமாந் தன்சொருபம்**
**பத்தா மவன்றன் பரிசுபோற் - பொய்த்த**
**மறதிநீக் கத்தான் மடுப்பதலாற் கண்ட**
**உறுதி புதிதன் றுணர்.**

சுத்த அபரோக்கத் துலக்கம் ஆம் தன் சொருபம் பத்தாமவன் தன் பரிசுபோல் பொய்த்த மறதி நீக்கத்தால் மடுப்பது அலால் கண்ட உறுதி புதிது அன்று உணர்.

**பத்தாமவன்-தசமன்.**

**883. பூணுருவங் கெட்ட பொழுதோபொற் பூண்பொன்னாம்**
**பூணுருவாத் தோன்றுழியும் பொன்னன்றோ - பூண்போலச்**
**சித்தங் குயிற்றுந் திரிபதார்த் தங்களுஞ்சச்**
**சித்தளவாத் தேர்க தெளிந்து.**

பூண் உருவம் கெட்ட பொழுதோ பொன் பூண் பொன் ஆம் பூண் உருவாத் தோன்று உழியும் பொன் அன்றோ பூண் போலச் சித்தம் குயிற்றும் திரி பதார்த்தங்களும் சத் சித்து அளவாத் தேர்க தெளிந்து.

**பூண்-பொன்னாலான ஆபரணம்; உழி-சமயம்; குயிற்றும்-கற்பிக்கப்பட்ட, உண்டாகின்ற.**

ஆபரணம் உருவழியுங்காலத்து மட்டும் பொன்னல்ல; உருவத்தின் காட்சியிலும் அது பொன்னேயாவது. அதுபோல உள்ளத்தில் பதியும் திரிபதார்த்தங்களையும் சத்துசித்தாகவே தெளிந்தறிதல் வேண்டும். இஃது

‘‘மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்’’ - திருமந்திரம்

என்ற உண்மையாம்.

## 884. கழுத்தணிதா னந்தக் கழுத்திலுறச் செய்தே
## வழுக்கினாள் போலே மயங்கிக் - கழுத்திற்
## றடவிப்பார்த் தத்தைத் தலைப்படலே தன்னைத்
## தடவியுளத் தெய்துந் தரம்.

கழுத்து அணி தான் அந்தக் கழுத்தில் உறச்செய்தே வழுக்கினாள் போலே மயங்கிக் கழுத்தில் தடவிப்பார்த்து அத்தைத் தலைப்படலே தன்னைத் தடவி உளத்து எய்தும் தரம்.

**வழுக்கினாள்-காணாமல் போக்கினாள்.**

## 885. மன்மப் புலந்துருவு மார்க்கமொழிந் தெஞ்சியவாம்
## கன்மமுத லாய கடப்பாட்டால் - என்முயற்சி
## செய்துமித யத்துத் திகழான்ம வைப்பைத்தாம்
## எய்துவித் தின்புறுத்த லின்று.

மன்மப் புலம் துருவும் மார்க்கம் ஒழிந்து எஞ்சியவாம் கன்மம் முதலாய கடப்பாட்டால் என் முயற்சி செய்தும் இதயத்துத் திகழ் ஆன்ம வைப்பைத் தாம் எய்துவித்து இன்புறுத்தல் இன்று.

**துருவும்-விசாரிக்கும்; கடப்பாடு-சாதனம், காரியம், உழைப்பு; ஆன்ம வைப்பு-ஆன்ம பொக்கிஷம்; இன்று-இல்லை.**

## 886. சமாதிவடி வாய தவத்தா லினிமேற்
## றமாலனுப விக்கப் படூஉம் - சமானமறு
## மப்பதமெய் யாக வமையுமே லஃதப்போ
## தொப்பவிப் போது முளது.

சமாதி வடிவு ஆய தவத்தால் இனிமேல் தமால் அனுபவிக்கப்படூஉம் சமானம் அறும் அப்பதம் மெய்யாக அமையுமேல் அஃது அப்போது ஒப்ப இப்போதும் உளது.

**தமால்-தம்மால்.**

**887. அந்தநிலை யிப்போதின் றாகிமற் றப்போதே**
**வந்தடைவ தாமேலவ் வந்தநிலை - சொந்தமுள**
**தம்மியல்பல் லாமையாற் றம்மி னகல்வதன்றித்**
**தம்மிடநில் லாது தரித்து.**

அந்த நிலை இப்போது இன்று ஆகி மற்று அப்போதே வந்து அடைவதாமேல் அவ் வந்த நிலை சொந்தம் உள தம் இயல்பு அல்லாமையால் தம்மின் அகல்வது அன்றித் தம்மிடம் நில்லாது தரித்து.

**தம்மின்-தம்மிடத்திலிருந்து.**

ஓர்கா லமைந்து மற்றோர்கால் அகலும் அனுபவம் எவ்வளவு சிறந்ததாகவும் ஆனந்தம் அளிப்பதாகவும் இருப்பினும், இறுதி நிலையாகாததால் நித்யமன்று. தன்னியல்பல்லாத மற்றெந் நிலையும் தன்னின்றும் ஓர்கால் அகலல் இயற்கையும் நியாயமுமே யாதலின்.

**888. பூரணமே யாமதுவும் பூரணமே யாமிதுவும்**
**பூரணத்தோ டும்புணர்ந்தும் பூரணமப் - பூரணமே**
**பூரணத்தி னின்றுபரி பூரணமே போயினுமப்**
**பூரணமே மிஞ்சுவ தாம்.**

பூரணமே ஆம் அதுவும் பூரணமே ஆம் இதுவும் பூரணத்தோடும் புணர்ந்தும் பூரணம் அப் பூரணமே பூரணத்தில் நின்று பரிபூரணமே போயினும் அப் பூரணமே மிஞ்சுவது ஆம்.

''ஓம் பூர்ணமத; பூர்ணமிதம்'' என்ற உபநிடத வாக்கைத் தழுவி, நிறை பொருளின் தன்மை உணர்த்துவது இச்செய்யுள். நிறை பொருளினின்றும் வேறுபட்ட மாயை யின்மையின், பொருளில் கூடலும் குறைதலும் உண்மையில் நிகழ்வன அல்ல.

**(கலி விருத்தம்)**

**889. அதுவும் பரவெளியே நீயும் பரவெளியே**
**அதுநீயென் றோது மதுவும் பரவெளியே**
**புதுவதுவா வொன்றும் புணர்வதிலை போவதிலை**
**பொதுவதுவா நின்றொளிர்மெய்ப் பூரணத்தை விட்டயலே.**

அதுவும் பரவெளியே நீயும் பரவெளியே அது நீ என்று ஓதும் அதுவும் பரவெளியே புது அதுவா ஒன்றும் புணர்வது இலை போவது இலை பொது அதுவா நின்று ஒளிர் மெய்ப் பூரணத்தை விட்டு அயலே.

முற் செய்யுளின் குறிப்பைக் காண்க. ''பந்தவீடற்ற பரசுகம்'' என்ற ரமண பகவான் வாக்கை இச்செய்யுள் விளக்கி நின்றது. வீடு பெறுதலும் உண்மையில் இன்றென அறிய வேண்டும். பந்தம் கற்பனையாதலின், வீடும் கற்பனையே. சொரூபத்திற் கயலாய் ஞானியுமில்லை; அஞ்ஞானியுமில்லை; (மஹா வாக்கிய) ஞானோபதேசமும் பரமார்த்தத்தில் இல்லை! இயல்பான சொரூபம் விட்டகன்ற நினைவும் பொய்; அத்துயரை நீக்கப் புரிந்த தவமும் பொய்; இயல்பில் மறுபடி யமர்ந்ததான ஞானநிலையும் பொய்யே! சொரூப மொன்றே என்று முளது.

**(நேரிசை வெண்பா)**

**890. அத்துவித பூரணத்தை யன்றி யதுவிதுவாத்**
**தொத்துவிவ காரத் தொகையனைத்தும் - சத்தியமன்**
**றற்பமுமென் பஃதே யதனிடத்தவ் யாவுமுழுக்**
**கற்பனையென் பஃதே கருத்து.**

அத்துவித பூரணத்தை அன்றி அது இதுவாத் தொத்து விவகாரத் தொகை அனைத்தும் சத்தியம் அன்று அற்பமும் என்பஃதே அதனிடத்து அவ் யாவும் முழுக் கற்பனை என் பஃதே கருத்து.

நானா வகைப்பட்ட மாயாசம்பந்தமான பொருள்களனைத்தும், அத்துவித பூரணமான சொரூபத்தினின்றும் வேறுபட்டு உண்மையில் இலவென்பதை வற்புறுத்தியது. திரிபுடித்தோற்றங்கள் அனைத்தும் மனக் கற்பனைகளாக முடியும். சொரூபத்தினின்றும் வேறுபட்டு மனமோ நினைவுகளோ இல்லை. இதனால் உலகுண்மையின் நுட்பம் விளக்கியது. பிரம்ம சொரூபமெனக் காணின், உலகும் உண்மையே. அன்றேல் கேவல மித்தை யெனவே கூறல் வேண்டும்.

**891. ஒன்றே பலவாக வுற்பவித்து முற்பவியா**
**தென்றியம்ப வேண்டி யிருத்தலாற் - றொன்றேயவ்**
**வேகமா யாரு மியைதலான் மெய்ஞ்ஞான**
**யோகமே முத்தி யுணர்.**

ஒன்றே பலவாக உற்பவித்தும் உற்பவியாது என்று இயம்ப வேண்டி இருத்தலால் தொன்றே அவ் ஏகமாய் ஆரும் இயைதலால் மெய்ஞ்ஞான யோகமே முத்தி உணர்.

**தொன்றே-பழமைதொட்டு என்றுமே; ஆரும்-யாவரும்; மெய்ஞ்ஞான யோகம்-மெய்ஞ்ஞானம் அடைவது.**

**892. ஆன்ம சொரூபமிரண் டற்றமையாய்ந் தம்மெய்யைத்
தான்மருவ லுற்றுத் தடுமாறி - மேன்மேல்
அலங்குமுயிர்ச் சேட்டை யடங்குழியவ் வுள்ளத்
திலங்குமுணர் வம்மெய் யியல்பு.**

ஆன்ம சொரூபம் இரண்டு அற்றமை ஆய்ந்து அம்மெய்யைத் தான் மருவல் உற்றுத் தடுமாறி மேல்மேல் அலங்கும் உயிர்ச் சேட்டை அடங்கு உழி அவ் உள்ளத்து இலங்கும் உணர்வு அம்மெய் இயல்பு.

**மருவல் உற்று-அடையும் முயற்சியில் ஈடுபட்டு; அலங்கும்-வருந்தும்; உழி-சமயம்; இலங்கும்-விளங்கும்.**

## 3. நிருவிகற்பசமாதித்திறன்

**893. புறத்தில் விகற்பம் புலப்படா மையே
திறத்த நிருவிகற்பச் சீரன் - றிறக்கும்
மனத்தில் விகற்ப மருவாமை தானே
கனத்த நிருவிகற்பங் காண்.**

புறத்தில் விகற்பம் புலப்படாமையே திறத்த நிருவிகற்பச் சீர் அன்று இறக்கும் மனத்தில் விகற்பம் மருவாமை தானே கனத்த நிருவிகற்பம் காண்.

**விகற்பம்-மாறுபாடு; திறத்த-திறமையுடைய; சீர்-சிறப்பு; மருவாமை-அடையாமை.**

நுட்பமான விருத்திபேதம் வாதனை மாண்டமையா லுள்ளத் துதியா தொழிதலே யன்றி, திட்பமான வுலகபேதம் பொறிக்கு விடயமாய் வெளிப்படத் தோன்றாமை மட்டில் நிருவிகற்ப நிலையின் உண்மை யியல்பன்று.

**894. இருக்கின்றே னென்னு மியற்கை யுணர்வாய்த்
தரிக்கின் றதுவே சமாதி - செருக்கொன்
றுபாதியோ டேய்ந்த வுணர்வி னொழிந்தவ்
வபார நிலைக்கே யமர்.**

இருக்கின்றேன் என்னும் இயற்கை உணர்வாய்த் தரிக்கின்றதுவே சமாதி செருக்கு ஒன்று உபாதியோடு ஏய்ந்த உணர்வின் ஒழிந்து அவ் அபார நிலைக்கே அமர்.

**செருக்கு-அகங்காரம்; உணர்வின்-உணர்வினின்றும்.**

**895. நானென்ப தற்ற நடுநிலையே ஞானாந்த
மோன சமாதியென்பர் மூதறிஞர் - தானதுவாம்
மோன சமாதி முயங்கும் பரியந்தம்
நானறலே நாட்டமா நாடு.**

நான் என்பது அற்ற நடுநிலையே ஞான அந்த மோன சமாதி என்பர் மூது அறிஞர் தான் அது ஆம் மோன சமாதி முயங்கும் பரியந்தம் நான் அறலே நாட்டமா நாடு.

**அந்தம்-வரம்பு; முயங்கும்-சித்திக்கும்.**

**896. யானென்ற தன்மை யெழுந்தழிதல் போலன்றித்
தானென்று நின்று தரித்தலால் - யானென்ற
பொய்த்தன்மை பொன்றப் புறக்கணித்துத் தானென்ற
மெய்த்தன்மை நீயா விளங்கு.**

யான் என்ற தன்மை எழுந்து அழிதல் போல் அன்றித் தான் என்றும் நின்று தரித்தலால் யான் என்ற பொய்த்தன்மை பொன்றப் புறக்கணித்துத் தான் என்ற மெய்த்தன்மை நீயா விளங்கு.

**பொய்த்தன்மை-(யான், நான் என்னும்) பொய்யான தன்மையுணர்வு; மெய்த் தன்மை-(தான் ஆன்மாவே என்னும்) மெய்யான தன்மையுணர்வு.**

**897. யானுயிரென் றெண்ணி யியலழிந்த வென்னெஞ்சே
யானிறையென் றேமாந்து போதியால் - மேனிலையில்
யானென்ப தேதுமே யில்லை யிதயமாம்
தானென்ப தொன்றைத் தவிர்த்து.**

யான் உயிர் என்று எண்ணி இயல் அழிந்த என் நெஞ்சே யான் இறை என்று ஏமாந்து போதியால் மேல் நிலையில் யான் என்பது ஏதுமே இல்லை இதயம் ஆம் தான் என்பது ஒன்றைத் தவிர்த்து.

**இயல் அழிந்த-நிலை கெட்ட; போதியால்-போகின்றாய் ஆகையால்.**

அறியாமையாற் சீவனே நானெனச் சிந்தித்துச் சீரழிந்த மனமே! நினக்கோ ரெச்சரிக்கை செய்கின்றேன். இனிச் சிவமே நானெனச் சிந்தை செய்து மீண்டு மொருமுறை ஏமாறப்போகின்றாய். முடிந்த நிலையில், இருந்தொளி ரிதயமாமான்ம சொரூபமொன்றே உண்மையி லுளதாத லொழிந்து யானென்னுஞ் சிந்தை யெள்ளளவு மின்றாம்.

**வி-ரை:-** சீர்-சுத்தமான உண்மையுணர்வின் பத்தியும்.

நானா ரெனமனமுண் ணாடியுள நண்ணவே
நானா மவன்றலை நாணமுற - நானானாத்
தோன்றுமொன்று தானாகத் தோன்றினுநா னன்றுபொருள்
பூன்றமது தானாம் பொருள். - உள்ளது நாற்பது-30

என்னும் பாடலில் இம்மோனநிலையினடைவு நன்கு விளக்கப்பட்டிருத்தல் காண்க.

## 898. அமைந்தமனத் தாலே யகண்டானு பூதி
**சமைந்தநிலை தானே சமாதி - அமர்ந்த**
**பரிச்சின்ன மற்ற பரமான்ம சித்தி**
**தரிச்சமனந் தான்கடவுட் சத்து.**

அமைந்த மனத்தாலே அகண்ட அனுபூதி சமைந்த நிலை தானே சமாதி அமர்ந்த பரிச்சின்னம் அற்ற பரம ஆன்ம சித்தி தரிச்ச மனம் தான் கடவுள் சத்து.

விடயங்களைப் பற்றிப் புறத்துச் சலியாது தன்னையே பற்றலான் அகத்து நிலைத்த மனத்தால் விளைந்த பூர்ணாநுபவ நிலையே சமாதியாம்; எய்தப் பெற்ற தேகான்ம புத்தியாம் பரிச்சின்ன பாவங் கழன்று விளங்கும் அப்பரமான்ம சித்தி மாறாது நிலைத்த மனமே கடவுளினுண்மையாம்.

**வி-ரை:-** அகண்டம்-கண்டமல்லாதது; சித்தி-அடைவு.

## 899. அறிவுக் கறிவா யறிவுட் செறிமெய்க்
**குறியைப் பொருந்துங் குறிகேள் - குறிசுட்**
**டறிவா லதனையே யாய்ந்தறித லஃதுட்**
**செறிவதற் கான திறம்.**

அறிவுக்கு அறிவாய் அறிவு உள் செறி மெய்க் குறியைப் பொருந்தும் குறி கேள் குறி சுட்டு அறிவால் அதனையே ஆய்ந்து அறிதல் அஃது உள் செறிவதற்கான திறம்.

**செறி-இருத்தல்; குறி கேள்-உபாயம் கேள்.**

## 900. அறிவு கலங்கா தமைந்துதான் றானாச்
**செறிவே சிவத்துவ சித்தி - அறிவிற்**
**பிறிதொன்று மின்றாய்ப் பிறங்குமத னுண்மைச்**
**செறிவன்றோ சுத்த சிவம்.**

அறிவு கலங்காது அமைந்து தான் தானாச் செறிவே சிவத்துவ சித்தி அறிவில் பிறிது ஒன்றும் இன்றாய்ப் பிறங்கும் அதன் உண்மைச் செறிவு அன்றோ சுத்த சிவம்.

**செறிவே-இருத்தலே; பிறங்கும்-விளங்கும்.**

**901. உள்ளும் புறமு மொருமித் துணர்வுருவாய்**
**விள்ளுசிதா னந்த விளக்கமே - தள்ளருமெய்ஞ்**
**ஞானமுடி வாவறிஞர் நாட்டுபரா னந்தமய**
**மோனவடி வான முதல்.**

உள்ளும் புறமும் ஒருமித்து உணர்வு உருவாய் விள்ளு சிதானந்த விளக்கமே தள் அரு மெய்ஞ் ஞான முடிவா அறிஞர் நாட்டு பர ஆனந்தமய மோன வடிவு ஆன முதல்.

**விள்ளு-பிரகாசிக்கும்.**

**902. மோனமய மாக முடிந்த முழுமுதலை**
**நானதுவென் றெண்ணி நலிதலெவன் - மோனமயம்**
**நண்ணுவதே நிட்டையது நானறலே நானறவே**
**எண்ணுவதற் கெங்கே யிடம்.**

மோனமயம் ஆக முடிந்த முழுமுதலை நான் அது என்று எண்ணி நலிதல் எவன் மோனமயம் நண்ணுவதே நிட்டை அது நான் அறலே நான் அறவே எண்ணுவதற்கு எங்கே இடம்.

**நலிதல் எவன்-துன்புறுவது எதற்காக.**

மோன வடிவாக முடிந்தொழிந்த முழுமுதற் பொருளைக் குறித்து 'அதுநா' னென்றிடைவிடாது 'ஸோஹம்' பாவித்து, மனம் புண்ணாய் வருந்தலெவன்? மனந்தான் மோன வடிவடைதலே பரநிட்டை. 'அது' வாவது நானற நிற்றலாம். நானற்றொழியவே 'அதுநா' னென் றெண்ணற் கறவே யிடனின்றாம்.

**வி-ரை:-** 'சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாந் திருப்பெருந் துறையுறை சிவனே' என்றார் திருவாசகத்தும். சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நானெனவே, யல்லும் பகலு மரற்றுவதேன் - நல்லசிவ, ஞானமயம் பெற்றோர்க ணானில்லை யென்பரந்தோ, மோனமய மான முறை - என்னும் வெண்பாவாற் றாயுமானவர் அத்துவித வடைவா ஞானத்தை அழகுபடக் கூறல் காண்க.

## 4. நிருவிகாரத்திறன்

**903. ஆற்றப் பெரிய வரும்புலவீர் யாவற்றுத்**
**தோற்ற மறைவுந் தொடர்ச்சியாத் - தேற்றியே**
**போதுகின்ற தாமோ புலப்பட் டழிவனவோ**
**யாதோ விகாரத் திடம்.**

ஆற்றப் பெரிய அரும் புலவீர் யாவற்றுத் தோற்றம் மறைவும் தொடர்ச்சியாத் தேற்றியே போதுகின்றது ஆமோ புலப்பட்டு அழிவனவோ யாதோ விகாரத் திடம்.

**ஆற்ற-ஆன்ற; யாவற்று-யாவற்றினுடைய.**

**904. ஊனமா மூத்தை யுடலின் பிறப்பிறப்பால்**
**ஊனமாந் தோற்ற வொடுக்கங்கள் - ஞானவான்**
**ஆன்மாவுக் காமென்ன லம்புதோற் பத்திலயம்**
**வான்மேவு மென்னு மயக்கு.**

ஊனம் ஆம் ஊத்தை உடலின் பிறப்பு இறப்பால் ஊனம் ஆம் தோற்ற ஒடுக்கங்கள் ஞான வான் ஆன்மாவுக்கு ஆம் என்னல் அம்புத உற்பத்தி லயம் வான் மேவும் என்னும் மயக்கு.

**அம்புதம்-மேகம்.**

**905. படலா முலகைப் படாதாய் முழுதும்**
**விடலாய தன்னை விகாரப் - படலாய்**
**மயங்கி யுழலு மயக்கத்தின் மேலும்**
**மயக்கு முளவோ பிற.**

படல் ஆம் உலகைப் படாது ஆய் முழுதும் விடல் ஆய தன்னை விகாரப் படலாய் மயங்கி உழலும் மயக்கத்தின் மேலும் மயக்கும் உளவோ பிற.

**படல் ஆம்-புலப்படுகின்ற; படாது ஆய்-புலப்படாததாய்; விடல் ஆய-விட வேண்டிய; விகாரப் படலாய்-விகாரப்படுவதாய்; மயக்கத்தின்-மயக்கத்தைவிட.**

**906. விவகாரத் தால்விளையும் வில்லங்கஞ் சற்றும்**
**அவிகாரான் மாவை யடையா - தவகாச**
**வானங் கதுவாது மண்ணீர்தீக் காலவற்றின்**
**ஊனந் தினைத்துணையு மோர்.**

விவகாரத்தால் விளையும் வில்லங்கம் சற்றும் அவிகார ஆன்மாவை அடையாது அவகாச வானம் கதுவாது மண் நீர் தீக் கால் அவற்றின் ஊனம் தினைத்துணையும் ஓர்.

**அவகாசம்-இடம்; கதுவாது-பற்றாது; கால்-காற்று; தினைத்துணையும்-சிறிதளவும்.**

**907. மனைவியொடு நாத்தூண் மருகியொடு மச்சான்**
**மனையோ டனையாயு மற்றோர் - நினைவால்**
**ஒருத்தியே தோன்றுவா ளுண்மையிலே யன்னாள்**
**உருத்திரிதல் சற்று முறாள்.**

மனைவியொடு நாத்தூண் மருகியொடு மச்சான் மனையோடு அனை ஆயும் மற்றோர் நினைவால் ஒருத்தியே தோன்றுவாள் உண்மையிலே அன்னாள் உருத் திரிதல் சற்றும் உறாள்.

**நாத்தூண்-நாத்தனார், நாத்தி, புருஷனின் சகோதரி; மருகி-மருமகள்; அன்னாள்-அவள்; உறாள்-அடைவதில்லை.**

## 5. ஏகாந்தத்திறன்

### 908. உலையாத முத்தி யுறுவோர்க்கு வேண்டும்
### பலவாங் குணத்துள்ளும் பார்க்கின் - நிலையாம்
### தனிமை தனையுகக்குஞ் சால்பே மனத்தில்
### இனிதமைய வேண்டு மியல்பு.

உலையாத முத்தி உறுவோர்க்கு வேண்டும் பலவாம் குணத்து உள்ளும் பார்க்கின் நிலை ஆம் தனிமைதனை உகக்கும் சால்பே மனத்தில் இனிது அமைய வேண்டும் இயல்பு.

**உலையாத-கெடாத, அழியாத; பார்க்கின்-யோசித்துப்பார்த்தால்; உகக்கும்-விரும்பும்.**

அழிவில்லாத வீடுபேற்றை யவாவுவோர்க்குத் தகுதியாக நூல்களால் வேண்டப்படும் பல்வகைக் குணங்களுள்ளும் தலைசிறந்த தொன்றை யாராயின், மாறுதலில்லா வேகாந்தத்தை மகிழ்ந்து நாடும் மாட்சியாம். மேலும் அதுதான் அன்னார்தம் மனத்தில் இயல்பின் இனிதமைய வேண்டுவதொன்றாம்.

## 6. அசங்கத்திறன்

### 909. நெஞ்சமே நின்சந் நிதிமாண்பாற் றத்துவங்கள்
### கொஞ்சித்தம் முட்குலவிக் கூத்தாடில் - விஞ்சு
### மசங்க சொரூபஞா னானுபவத் தாலுட்
### கசங்காது சான்றாகக் காண்.

நெஞ்சமே நின் சந்நிதி மாண்பால் தத்துவங்கள் கொஞ்சித் தம்முள் குலவிக் கூத்து ஆடில் விஞ்சும் அசங்க சொரூபஞான அனுபவத்தால் உள் கசங்காது சான்றாகக் காண்.

**விஞ்சும்-கடந்து நிற்கும்.**

இது நெஞ்சொடு கூறல். உன் சந்நிதியில் தத்துவங்கள் எவ்வாறு கொஞ்சிக் கூடிப் பிரியினும், நீ அசைவற்ற சொரூப ஞானத்தால், சாக்ஷி மாத்திரமாய் அவைகளைக் காண்பாயாக என்றார். இதனால் ஞானாநுபவத்தில் (சாதனைக்காலத்தில்) பல சித்திகளும் விந்தைகளும் பிரதி பந்தங்களாகத் தோற்றக்கூடும் என்பது விளங்கியது.

**910. எவ்வெவையெவ் வெத்துணைவந் தெய்திடினும் போயிடினும்
அவ்வவற்றைக் காணுந்தா னன்னியனாய் - அவ்வவற்றாற்
காற்றிற் றுரும்பிற் கலங்காமே யவ்வவற்றை
ஆற்றி யிருப்ப தறிவு.**

எவ் எவை எவ் எத்துணை வந்து எய்திடினும் போயிடினும் அவ் அவற்றைக் காணும் தான் அன்னியன் ஆய் அவ் அவற்றால் காற்றில் துரும்பில் கலங்காமே அவ் அவற்றை ஆற்றி இருப்பது அறிவு.

**துரும்பில்-துரும்பைப்போல்.**

**911. உள்ளும் புறம்புமனைத் தூடுமளைந் தும்மவற்றோ
டெள்ளளவும் பற்றா தியல்விசும்பை - எள்ளும்
அசங்கனாத் தன்னையறிந் தாலன்றி மோக
வசங்கதனா காமை யரிது.**

உள்ளும் புறம்பும் அனைத்து ஊடும் அளைந்தும் அவற்றோடு எள் அளவும் பற்றாது இயல் விசும்பை எள்ளும் அசங்கனாத் தன்னை அறிந்தால் அன்றி மோக வசங்கதன் ஆகாமை அரிது.

**எள்ளும்-சமமான; மோக வசங்கதன்-மோக வசப்பட்டவன்.**

**912. உள்ளத்து வாதனைதா முள்ளபடி சங்கமென்
றெள்ளத் தகுவனவா வேய்தலாற் - கள்ள
மனமடங்கப் பெற்றாலம் மாண்புடையோ ரெந்த
இனமுறைந்தா லும்மின் றிழுக்கு.**

உள்ளத்து வாதனைதாம் உள்ளபடி சங்கம் என்று எள்ளத் தகுவனவா ஏய்தலால் கள்ள மனம் அடங்கப் பெற்றால் அம் மாண்பு உடையோர் எந்த இனம் உறைந்தாலும் இன்று இழுக்கு.

**எள்ள-இகழ; இன்று-இல்லை.**

உள்ளத்திலுற்ற திரளான வாசனைகளே ஆன்மாநுசந்தானத்துக்குத் தடையாய சங்கமென அறிஞராலுள்ளபடி இகழ்ந்தொதுக்கத்தகுவனவா யிருத்தலால், ஆன்மநிட்டையை ஆரம்பத்தில் ஏகாந்தத்திலிருந்து பொறுமையோடு புரிந்து அவ்வாற்றால் மனமட்டும் ஒருபடியா யடங்கப் பெற்றுவிட்டால், வாசனை மாண்ட அம்மாட்சி யுடைய சான்றோர் தம்மூழ்வினைவசத்தால் அதன் பின் புறத்தே எத்தகைய சங்கத்தினிடை உறையப்பெற்றாலும் அதனாலவர்க்கு வருவதொரு குற்றமின்றாம்.

**வி-ரை:-** அகச் சார்புகளாய வாசனைகள் ஏற்கெனவே யிருந்தாலொழிய அவற்றின் வாயிலாகப் புறச்சார்புகளாய சங்கம், ஆன்ம நிட்டையிலமரப் பெறாது

வெளி விடயத்தே மனத்தை யிழுத்தலைக்க வல்லுநவாகாமையின் மனமடங்கப்பெற்ற மாண்புடையோர்க் கெந்தவின முறைந்தாலும் இழுக்கெய்தாமை காண்க. உண்மையில் அகச்சார்பே சார்பன்றிப் புறச்சார்பு சார்பன்றென்பதாம். ஈண்டிலக்கணையால் வாசனைத் தொகுதி மனமெனப்பட்டது.

## 7. மனோநிக்கிரகத்திறன்

### (குறள் வெண்பா)

**913. தாறுமா றாகத் தடுமாறும் புந்தியோர்க்**
**கேறுமா றாகு மெலாம்.**

தாறுமாறு ஆகத் தடுமாறும் புந்தியோர்க்கு ஏறுமாறு ஆகும் எலாம்.

**ஏறுமாறு-ஒன்றுக்கொன்று முரணாக.**

சித்தோபசாந்தமொன்றே அநுபவத்தில் நேர்மை பெறலாம். அஃதன்றி வாதனை வயத்தவராய்த் தாறுமாறாகத் தடுமாறும் அகங்கார புத்தியினர்க்கு என்றும் சாந்தமின்மையின், என்றும் அநுபவத்தோடு ஒப்பு நிலை சித்திக்காது. ஆகையால் அவர்க்குப் புறநோக்கில் பல போகங்களிருப்பினும் எல்லாம் ஏறுமாறாகு மென்றார்.

### (நேரிசை வெண்பா)

**914. எங்குமே போக வியலா திருக்குமுழுப்**
**பங்குபோ லாகப் பவனனுட்க - எங்குமே**
**மேவா தலைமனத்தை வீட்டலே மெய்ம்மையாச்**
**சாவாமை யெய்துஞ் சதுர்.**

எங்குமே போக இயலாது இருக்கும் முழுப் பங்கு போல் ஆகப் பவனன் உட்க எங்குமே மேவாது அலை மனத்தை வீட்டலே மெய்ம்மையாச் சாவாமை எய்தும் சதுர்.

**பங்கு-முடவன்; பவனன்-காற்று; உட்க-பயப்பட; வீட்டலே-மாய்த்தலே.**

எவ்விடத்துஞ் சற்றுந் தங்காது காற்றும் வெட்கச் சதா சலிக்கு மனத்தை மிக்கணித்தாகப் புடைப்பெயரத்தானும் முடியாது அறவே முடங்கிக் கிடக்கும் முழு முடம் போலச் சுட்டறிவற்றுச் சும்மா விருக்குமாறு மாய்த்தலே, உண்மையில் ஒருவன் அமுதத்துவமடையும் உபாயமாம்.

**வி-ரை:-** ஜனன மரணச் சம்சாரம் உண்மையில் மனத்துக்கன்றி ஆன்மாவுக் கின்மையின் அம்மனத்தோடு அதன் வடிவாய்த் தான் சலியாது, அதனைத் தனக்கயலாக்கி மாய்க்கவே தன்னுண்மையா மமரத்தன்மை ஒருவற் கறிபடு மென்பதாம்.

**915. களைக்கு நிகர்த்தெழூஉங் காமாதி மூன்றும்
முளைக்கு முனதாகக் கீண்டு - வளிக்கு
நடுங்கி யெழாத நளிகடல்போற் சிந்தை
ஒடுங்கி யிருப்ப துணர்வு.**

களைக்கு நிகர்த்து எழூஉம் காம ஆதி மூன்றும் முளைக்கும் முனதாகக் கீண்டு வளிக்கு நடுங்கி எழாத நளி கடல்போல் சிந்தை ஒடுங்கி இருப்பது உணர்வு.

**நிகர்த்து-சமமாக; முனதாக-முன்னதாக; கீண்டு-கிள்ளி; வளி-காற்று; நளி-பரந்த; உணர்வு-ஞானம்.**

**916. எற்றுந் துயருக் கிடமாக வெப்புலத்தும்
சற்றுங் கருத்துச் சலியாமை - முற்றும்
மடங்கி யவிந்த மறிகடல்போற் சிந்தை
அடங்கி யிருப்ப தறிவு.**

எற்றும் துயருக்கு இடமாக எப்புலத்தும் சற்றும் கருத்துச் சலியாமை முற்றும் மடங்கி அவிந்த மறி கடல்போல் சிந்தை அடங்கி இருப்பது அறிவு.

**எற்றும்-எத்தகையதான; சலியாமை-சலனமுறாத் தன்மை;
மறிகடல்-கொந்தளிக்குங் கடல்.**

**917. மங்குற் படலஞ்சேர் வானத்திற் கண்காணச்
செங்கதிரோன் றோன்றாத் திறமேபோற் - கங்குல்செய்
சிந்தைப் படலஞ் செறிந்தமனா காயத்துஞ்
சொந்தசொரு பங்காண் பரிது.**

மங்குல் படலம் சேர் வானத்தில் கண்காணச் செம்கதிரோன் தோன்றாத் திறமேபோல் கங்குல் செய் சிந்தைப் படலம் செறிந்த மன ஆகாயத்தும் சொந்த சொருபம் காண்பு அரிது.

**மங்குல் படலம்-மேகக் கூட்டம்; செம் கதிரோன்-சூரியன்; கங்குல் செய்-அஞ்ஞான இருள் சூழ்ந்த; சொந்த-ஆன்ம; அரிது-முடியாது.**

மேகம் சூழ்ந்த வானத்தில் சூரியனைக் கண்களால் காணமுடியாத திறம்போல, மாயை சூழ்ந்த சித்தமாகிய மனாகாசத்திலும் உண்மை சொருபம் இன்னதெனக் காண்பதரிது.

**918. கருத்தைக் கடிந்தோன் கனஞான யானை
யெருத்தத் தரசா விவர்வான் - கருத்தாங்
கலக்கமே பொல்லாக் கடும்பிறவித் துன்ப
மலக்கமா மன்ற மதி.**

கருத்தைக் கடிந்தோன் கன ஞான யானை எருத்தத்து அரசா இவர்வான் கருத்து ஆம் கலக்கமே பொல்லாக் கடும் பிறவித் துன்ப மலக்கம் ஆம் மன்ற மதி.

**எருத்தம்-பிடரி; இவர்தல்-உட்காருதல்; மலக்கம்-துன்பம், மனக்கலக்கம்; மன்ற-தெளிவாக, நிச்சயமாக.**

சித்தச் சலனமே பிறவித் துன்ப வேர் ஆதலின், நினைவே பந்த மென்றார். நினைவுகளை யொழித்த கணமே தன்னியல் விளங்குவதால், அவ்வாறு மனம் இறந்தவனை, ஞானவேழத்தில் அமரும் அரசனென உருவகப்படுத்திச் சிறப்பித்தார்.

## 919. மனக்கலக்கந் தீர்நிம் மதித்தெளிவே முத்தி
## தனக்குறுதி யான சமாதி - முனைக்கமுயன்
## றுள்ளத் தெளிவா முபசாந்த போதமாய்க்
## கள்ளக் கலக்கமறக் காண்.

மனக் கலக்கம் தீர் நிம்மதித் தெளிவே முத்தி தனக்கு உறுதியான சமாதி முனைக்க முயன்று உள்ளத் தெளிவு ஆம் உபசாந்த போதமாய்க் கள்ளக் கலக்கம் அறக் காண்.

**முனைக்க முயன்று-ஊக்கத்துடன் முயன்று.**

## 920. ஆன்மாவ லோகனத்தா லல்லா தகங்காரம்
## தான்மாய்த லில்லாத் தகைமைபோல் - ஆன்ற
## மனவிளிவா லல்லாது மாயாதே துன்பக்
## கனவுலகக் காட்சியுங் காண்.

ஆன்ம அவலோகனத்தால் அல்லாது அகங்காரம் தான் மாய்தல் இல்லாத் தகைமைபோல் ஆன்ற மன விளிவால் அல்லாது மாயாதே துன்பக் கனவு உலகக் காட்சியும் காண்.

**அவலோகனம்-பார்த்தல்; தகைமைபோல்-அவ்விதமே; ஆன்ற-சிறந்த; விளிவு-அழிவு.**

ஆன்ம நாட்டத்தாலன்றி வேறெவ் வுபாயத்தாலும் அகந்தை யழிதலில்லாத் தன்மைபோன்று, துன்ப மயமாய்க் கனாப்போலக் காணுமுலகக் காட்சியும் முழுமனோநாசத்தாலன்றி வேறெத் திறத்தாலு மழியாதாம்.

**வி-ரை:-** அனைத்துக்கு மாதாரமாய் நின்ற அகண்டான்ம சொரூப ஞானமா முண்மை யுணர்ச்சியா லன்றிப் பொய்ம்மாயமா முடலகந்தை பொன்றக் கெடுதல் கூடாதாம். அவ்வாறே, உலகம் மனோமயமாதலின், அம்மன மழிதலாலன்றி உலக பாவனையு மொழியாதாம்.

**921. இயற்கையை மாய்க்க லியல்வதன்று யார்க்கு
மியற்கைபொரு ளன்றென் றிகழாய் - இயற்கைக்
கடிப்படையாந் தன்னை யறிந்துணர்ந்து நிற்கிற்
படிப்படியா வேகம் கெடும்.**

இயற்கையை மாய்க்கல் இயல்வது அன்று யார்க்கும் இயற்கை பொருள் அன்று என்று இகழாய் இயற்கைக்கு அடிப்படை ஆம் தன்னை அறிந்து உணர்ந்து நிற்கில் படிப்படியா வேகம் கெடும்.

**இயற்கையை-மனத்தின் பிரவிருத்தி இயல்பை; இகழாய்-விட்டுவிடுக.**

**922. மனத்தைச் செயலறவே மாய்க்கு முபாயம்
எனைத்தானுந் தாந்தெரியா தேங்கி - இனைவீர்காள்
காணப் படுபொருளுங் காண்பானுந் தானேயா
மாணவே காண்டல் வழி.**

மனத்தைச் செயல் அறவே மாய்க்கும் உபாயம் எனைத்தானும் தாம் தெரியாது ஏங்கி இனைவீர்காள் காணப்படு பொருளும் காண்பானும் தானேயா மாணவே காண்டல் வழி.

**எனைத்தானும்-எவ்வளவு கொஞ்சமும்; இனைவு-வருத்தம்; மாணவே-சிறப்பாக.**

**923. பொன்னிற் றொடிபோற் புனல்போன் மசரதத்திற்
றுன்னுகனாப் பட்டினத்தைச் சூழரண்போற் - றன்மயமே
காணப் படுபவெலாங் காண்பானி லன்னியமாப்
பேணப் படுதல் பிழை.**

பொன்னில் தொடிபோல் புனல்போல் மசரதத்தில் துன்னு கனாப் பட்டினத்தைச் சூழ் அரண்போல் தன்மயமே காணப்படுப எலாம் காண்பானில் அன்னியமாப் பேணப்படுதல் பிழை.

**தொடி-ஆபரணம்; புனல்-நீர்; மசரதம்-கானல் நீர்.**

## 8. மிருதமனத்திறன்

**924. எண்ணமாச் சிந்தை யியங்கா தொழிந்தாலும்
திண்ணமா வுண்டென்று செப்புவேன் - உண்மையாம்
காலமே யாகக் கரந்தொழுகி ஞானானந்
தாலயமாய் நிற்கு மது.**

எண்ணமாச் சிந்தை இயங்காது ஒழிந்தாலும் திண்ணமா உண்டு என்று செப்புவேன் உண்மை ஆம் காலமே ஆகக் கரந்து ஒழுகி ஞான ஆனந்த ஆலயம் ஆய் நிற்கும் அது.

**925. இன்றன் றிலதுள திங்கங் கெனுநினை**
**வொன்றுஞ் சிறிது முளதாகா - தொன்றான**
**நித்தமா யெங்கு நிறைந்ததாய்த் தான்விளங்கும்**
**சித்தமே சுத்த சிவம்.**

இன்று அன்று இலது உளது இங்கு அங்கு எனும் நினைவு ஒன்றும் சிறிதும் உளது ஆகாது ஒன்று ஆன நித்தமாய் எங்கும் நிறைந்ததாய்த் தான் விளங்கும் சித்தமே சுத்த சிவம்.

## 9. முற்றுணர்வுத்திறன்

**926. தன்னைத் தவிரமற்றோர் சத்தையைக்கா ணாமையினாற்**
**பின்ன மறப்பிறங்கும் பேரறிவே - உன்னதமாம்**
**முற்றுணர்வா மல்லாது முக்கா லமுமுணரும்**
**மற்றுணர்வோ வல்ல மதி.**

தன்னைத் தவிர மற்று ஓர் சத்தையைக் காணாமையினால் பின்னம் அறப் பிறங்கும் பேர் அறிவே உன்னதம் ஆம் முற்று உணர்வு ஆம் அல்லாது முக்காலமும் உணரும் மற்று உணர்வோ அல்ல மதி.

ஆன்ம சொரூபமாந் தன்னையன்றி தனக்கயலா மோருண்மையைத் தானறியப் பெறாமையால் குறைவற நிறைந்து விளங்குஞ் சாமானிய வறிவல்லது இவ்வுலகின்கண், முக்கால நிகழ்ச்சியும் ஒருங்குணர்ந்து கூறும் ஏனையறிவோ, உண்மையில் ஒப்பறவுயர்ந்த முற்றுணர்வன்றாம்.

**வி-ரை:-** எப்பொருளுஞ் சின்மாத்திரமாகலானும் அச் சின்மாத்திரமே தன் சொரூபமாகலானும் தன்னைத் தவிர மற்றோர் சத்தை உண்மையி லின்றாம்; எனவே, அத்தகைய தன்னிலைக்கண், பின்னப்படும் விசேடமாஞ் சுட்டுணர்வுக் கிடனின்றா யொழிதலான், அறிதற் றொழிலற்று, அபின்னமாக விளங்கும் மெய்யா மவிசேட வறிவே உண்மையில் முற்றுணர்வா மென்றவாறு.

முக்காலம் - இறப்பெதிர்வு நிகழ் வென்னும் மூன்று காலங்களினும் நிகழும் செயல்கள்; காலம் அதன் கண் நிகழுஞ் செயலுக்காதலா லாகு பெயர். முக்கால மென்றது அவ்வாறே மூவுலகத்து நிகழும் செயல்களுக்கும் உபலக்ஷணம்.

**927. உற்றமயற் பீழையொருங் குள்ளமொடுங் காதார்க்குச்**
**சிற்றுணர்வு தன்னானே சேர்ந்திருக்க - முற்றுணர்வான்**
**முன்புள்ள மோகவிருண் முற்றப் பெறுவதலால்**
**என்பயனு மில்லை யுயிர்க்கு.**

உற்ற மயல் பீழை ஒருங்கு உள்ளம் ஒடுங்காதார்க்குச் சிற்று உணர்வு தன்னானே சேர்ந்து இருக்க முற்று உணர்வால் முன்பு உள்ள மோக இருள் முற்றப் பெறுவது அலால் என்பயனும் இல்லை உயிர்க்கு.

**ஒருங்கு-முழுதும்.**

**928. உள்ளோனாந் தன்னை யுணர்வோனாப் பேதுற்றுக்
கள்ளமாங் காட்சிசில காண்பாற்கே - வெள்ளமாம்
முற்றுணர்வு மெய்யாமம் மோகமிலா ஞானிக்கோ
பித்துணர்வா மல்ல பிற.**

உள்ளோன் ஆம் தன்னை உணர்வோனாப் பேது உற்றுக் கள்ளம் ஆம் காட்சி சில காண்பாற்கே வெள்ளம் ஆம் முற்று உணர்வு மெய் ஆம்; அம் மோகம் இலா ஞானிக்கோ பித்து உணர்வு ஆம் அல்ல பிற.

**பேது-மயக்கம்.**

**929. அறிவோனாத் தன்னை யலமந்த போதே
அறிவுசிறி யேனென் றழுங்கல் - அறிவளவிற்
சிற்றுணர்வு போலே சிதைவுண் டொழிந்திடுமம்
முற்றுணர்வு மொக்க முடிந்து.**

அறிவோனாத் தன்னை அலமந்த போதே அறிவு சிறியேன் என்று அழுங்கல் அறிவு அளவில் சிற்று உணர்வு போலே சிதைவு உண்டு ஒழிந்திடும் அம் முற்று உணர்வும் ஒக்க முடிந்து.

**அழுங்கல்-வருந்துதல்; ஒக்க-ஒரேவிதமாய்.**

உளதாதல் மாத்திரனாய்த் தன்னை யுள்ளபடி யுணராது பிறிதொன்றைச் சுட்டியறியும் சுபாவ முடையோனாய்த் தன்னைக் கருதித் தடுமாறிய பொழுதே, ‘நான் சிற்றறிவே யுடையே’ னென்றொருவன் மனமழுங்கல். தன்னுண்மை இற்றெனத் தானறியுமளவில், தன் மெய்யியல்பில் அறியுந் தன்மமே யசங்கதமாய்த் தன்னிடத்தினின் றகறலால், பாரமார்த்திகத்திற் சிற்றறிவு போலே முற்றறிவு முண்மை யன்றாய், அதனோடொக்க முடிந்து சிதைவுண்டு போகும்.

**930. முற்றுணர்வோ னாக முழங்குமறை யீசனைத்தாம்
சிற்றுணர்வோ ராகத் தியங்குநர்க்கே - உற்றுணரின்
என்று மிறைதன் னியல்பாமெய்ப் பூரணத்தால்
ஒன்று முணர்த லிலை.**

முற்று உணர்வோன் ஆக முழங்கும் மறை ஈசனைத் தாம் சிற்று உணர்வோர் ஆகத் தியங்குநர்க்கே உற்று உணரின் என்றும் இறை தன் இயல்பு ஆம் மெய்ப் பூரணத்தால் ஒன்றும் உணர்தல் இலை.

**தியங்குநர்க்கே-மயங்குகிறவர்களுக்கே; உற்று உணரின்-சரியாகத் தெரிந்து கொண்டால்.**

சிற்றறிவினரென்னத் தம்மை யெண்ணித் தடுமாறு மவரை நோக்கியே, இறைவனை முற்றறிவினனெனச் சுருதிதா முழங்குவனவாம். உற்றுணருங்கால், இறைவன் தன்னியல்பா முண்மைப் பூரணத்தால் எஞ்ஞான்றும் யாதொன்றும் அறிதலே யிலனாம்.

## 931. காட்சி யனுபவங்கள் காணுங்கா லொன்றாய
## மாட்சியா லம்முத்த மாந்தர்க்குக் - காட்சியாற்
## றோற்றும் பலபேதந் துய்க்கு மனுபவத்தாற்
## போற்று மபேதமெனல் பொய்.

காட்சி அனுபவங்கள் காணுங்கால் ஒன்று ஆய மாட்சியால் அம்முத்த மாந்தர்க்குக் காட்சியால் தோற்றும் பல பேதம் துய்க்கும் அனுபவத்தால் போற்றும் அபேதம் எனல் பொய்.

**காணுங்கால்-ஆலோசிக்குமிடத்து.**

## 932. பிரமித்த நோக்காற்பல் பேதங்காண் குற்ற
## பரர்திட்டி யாலே பலவாம் - உருவத்தைக்
## காண்பான்போன் முத்தனுங் காணப் படுவதலாற்
## காண்பா னவனலன் காண்.

பிரமித்த நோக்கால் பல் பேதம் காண்குற்ற பரர் திட்டியாலே பலவாம் உருவத்தைக் காண்பான் போல் முத்தனும் காணப்படுவது அலால் காண்பான் அவன் அலன் காண்.

**காண்குற்ற-காணுதலுற்ற.**

## 933. சிற்றுணர்வோ னாத்தான் றெருமரன் முன்னிலையைப்
## பற்றுணர்வாற் போந்த பழுதேயாம் - மற்றுணர்வு
## விட்டுவிசா ரத்தாற்றன் மெய்யுணரச் சிற்றுணர்வு
## கெட்டுமுழு தாகுங் கிளர்ந்து.

சிற்று உணர்வோனாத் தான் தெருமரல் முன்னிலையைப் பற்று உணர்வால் போந்த பழுதே ஆம் மற்று உணர்வு விட்டு விசாரத்தால் தன் மெய் உணரச் சிற்று உணர்வு கெட்டு முழுது ஆகும் கிளர்ந்து.

**தெருமரல்-கலக்கம்; போந்த பழுதேயாம்-ஏற்பட்ட குற்றமேயாம்; கிளர்ந்து-விரிந்து, ஓங்கி.**

**934. குற்றநோக் காலேது கோலம் பலகோலும்**
**முற்றுமாந் தோற்ற முயங்குமோ - அற்றாய**
**அத்துவிதான் மாவை யபரோக்க மாவுணர்தல்**
**முற்றுணர்வா மல்ல பிற.**

குற்ற நோக்கால் ஏது கோலம் பல கோலும் முற்றும் ஆம் தோற்றம் முயங்குமோ அற்று ஆய அத்துவித ஆன்மாவை அபரோக்கமா உணர்தல் முற்று உணர்வு ஆம் அல்ல பிற.

**கோலம்-ரூபம்; பலகோலும்-பல கொள்ளுகின்ற; அற்றாய-அப்படிப்பட்ட.**

**935. கனாவி லனைத்துந்தன் கற்பனையாத் தன்னுட்**
**டுனாவிடத்துத் தோன்றாத் துணிவால் - நனாவில்**
**அனைத்துமா வொன்றுமான் மானுபவ மெய்தல்**
**அனைத்தே யனைத்து மறிவு.**

கனாவில் அனைத்தும் தன் கற்பனையாத் தன்னுள் துனா இடத்துத் தோன்றாத் துணிவால் நனாவில் அனைத்துமா ஒன்றும் ஆன்ம அனுபவம் எய்தல் அனைத்தே அனைத்தும் அறிவு.

**துனாவிடத்து-இல்லாவிட்டால்; தோன்றாத் துணிவால்-தோன்றியிருக்க முடியாது என்பதால்; அனைத்தே-மாத்திரமே; அனைத்தும் அறிவு-முற்றுணர்வு.**

**936. நவநா கரிகமய னண்ணாது ஞால**
**அவஞான வார்வ மகற்றிச் - சிவனான்ம**
**பேதமதி பேர்க்கிற் பிறங்குஞ் சிவஞான**
**போதமதி னுண்மைப் பொருள்.**

நவ நாகரிக மயல் நண்ணாது ஞால அவ ஞான ஆர்வம் அகற்றிச் சிவன் ஆன்ம பேத மதி பேர்க்கில் பிறங்கும் சிவஞான போதம் அதின் உண்மைப் பொருள்.

**அவ-கீழ்த்தரமான; பேர்க்கில்-நீக்கி; பிறங்கும்-விளங்கும்.**

## 10. துரியாதீதத்திறன்

**937. ஆணவத்தைக் கொன்ற வறிஞர்பான் மூன்றாகக்**
**காணவத்தை யாவுங் கழலவே - மாணவத்தை**
**ஆய துரீய மதீதமா யன்னார்பால்**
**மேயது வாகு மிகுந்து.**

ஆணவத்தைக் கொன்ற அறிஞர்பால் மூன்று ஆகக் காண் அவத்தை யாவும் கழலவே மாண் அவத்தை ஆய துரீயம் அதீதமாய் அன்னார்பால் மேய அது ஆகும் மிகுந்து.

**மாண்-சிறந்த; மேய அது ஆகும்-உண்டானது ஆகும்.**

**938. சுத்தசச் சித்தாந் துரீய சொரூபநிலை**
**அத்துவித மான வதீதங்காண் - முத்திறமாத்**
**துன்று மவத்தைவெறுந் தோற்றமாத் தானவற்றுக்**
**கொன்றுமதிட் டானமா மோர்.**

சுத்த சத் சித்து ஆம் துரீய சொரூபநிலை அத்துவிதமான அதீதம் காண் முத்திறமாத் துன்றும் அவத்தை வெறும் தோற்றமாத் தான் அவற்றுக்கு ஒன்றும் அதிட்டானமாம் ஓர்.

**முத்திறமா-மூன்று விதமாக.**

**939. ஏனையமூன் றுண்மையா வேய்ந்தாலன் றோசுத்த**
**ஞான நனாத்துயினான் காவதாம் - ஏனையவை**
**துன்றலாற் பொய்யாத் துரீயத்தின் முன்னேயஃ**
**தொன்றா மதீத முணர்.**

ஏனைய மூன்று உண்மையா ஏய்ந்தால் அன்றோ சுத்த ஞான நனாத் துயில் நான்காவது ஆம் ஏனையவை துன்றலால் பொய்யாத் துரீயத்தின் முன்னே அஃது ஒன்றாம் அதீதம் உணர்.

**(18) *நனவு கனவுதுயி னுடுவார்க் கப்பால்***
***நனவு துயிற்றுரிய நாமத் - தெனுமத்***
***துரிய மதேயுளதாற் றோன்றுமூன் றின்றாற்***
***றுரிய வதீதந் துணி.***

***- பகவான்***

நனவு கனவு துயில் நாடுவார்க்கு அப்பால் நனவு துயில் துரிய நாமத்து எனும் அத்துரியம் அதே உளதால் தோன்றும் மூன்று இன்றால் துரிய அதீதம் துணி.

**940. விழித்தலே யில்லா விழுத்துயிலென் றாலும்**
**தொழத்தகுமெய்ஞ் ஞானத் துரீயம் - வழுக்கும்**
**உறக்கத்தோ டொட்டா வொரேவிழிப்பென் றாலும்**
**சிறக்கப் பொருந்துந் தெரி.**

விழித்தலே இல்லா விழுத்துயில் என்றாலும் தொழத்தகும் மெய்ஞ்ஞானத் துரீயம் வழுக்கும் உறக்கத்தோடு ஒட்டா ஒரே விழிப்பு என்றாலும் சிறக்கப் பொருந்தும் தெரி.

**விழு-பெரிய.**

## 11. அகண்டவிருத்தித்திறன்

**941. விருத்தியெலாங் கண்டமெனின் வீறு மகண்டம்
நிருவிருத்தி யான நிலையாம் - பரத்து
விரவுமகண் டாகார மேவும் விருத்தி
பரவையுரு மேவுநதிப் பண்பு.**

விருத்தி எலாம் கண்டம் எனின் வீறும் அகண்டம் நிரு விருத்தி ஆன நிலை ஆம் பரத்து விரவும் அகண்டாகாரம் மேவும் விருத்தி பரவை உரு மேவும் நதிப் பண்பு.

**கண்டம்-ளைவுபட்டது; வீறும்-கடந்த, தாண்டிய; பரத்து-பிரம்மத்தினிடம்; விரவும்-நடைபெறுகின்ற; பரவை-சமுத்திரம்; பண்பு-போன்றது.**

## 12. கிரந்திபேதத்திறன்

**942. உற்றநோய்க் குள்ள முளையாமே யின்பத்தும்
சித்தமொரு சற்றுந் திளையாமே - ஒத்தாங்
குலவுமுதா சீன வுபசாந்த நீர்மை
குலவுகந்தி பேதக் குறி.**

உற்ற நோய்க்கு உள்ளம் உளையாமே இன்பத்தும் சித்தம் ஒரு சற்றும் திளையாமே ஒத்து ஆங்கு உலவும் உதாசீன உபசாந்த நீர்மை குலவு கந்தி பேதக் குறி.

**நோய்-துன்பம்; உளையாமே-வருந்தாமல்; திளையாமே-பூரித்து மூழ்காமல்; நீர்மை-தன்மை; கந்தி-கிரந்தி.**

**943. கடந்ததையுஞ் சிந்திக் கலாதேமே லெய்தக்
கிடந்ததையுஞ் சிந்திக் கிலாதே - படர்ந்து
நிகழ்வதற்குஞ் சான்றேயா நின்றுபசாந் தத்தால்
மகிழ்வதுபே தித்தகந்தி மாண்பு.**

கடந்ததையும் சிந்திக்கலாதே மேல் எய்தக் கிடந்ததையும் சிந்திக்கிலாதே படர்ந்து நிகழ்வதற்கும் சான்றேயா நின்று உபசாந்தத்தால் மகிழ்வது பேதித்த கந்தி மாண்பு.

**944. என்னென்ன சிந்தை யியைந்திடினு மின்றமையாத்
தன்னொழிந்து சாரவொணாத் தன்மையால் - அன்னோ
இடைநமுவிற் றான்மநிலை யென்றபிர மாதம்
அடையாமை தானு மது.**

என்னென்ன சிந்தை இயைந்திடினும் இன்று அமையாத் தன் ஒழிந்து சாரவொணாத் தன்மையால் அன்னோ இடை நழுவிற்று ஆன்மநிலை என்ற பிரமாதம் அடையாமை தானும் அது.

**இன்றமையா-இன்றியமையா; அன்னோ-அந்தோ, அம்ம.**

# 13. கிருதகிருத்தியத்திறன்

## 945. எவ்வெப் பொருள்களா லெவ்வெவர்க ளெங்கெங்கே
## எவ்வெவ் வனுபவங்க ளெய்திடினும் - அவ்வவ்
## வனுபவங்க ளெல்லா மறியுங்கா லான்ம
## அனுபவத்தின் கூறுகளே யாம்.

எவ் எப் பொருள்களால் எவ் எவர்கள் எங்கு எங்கே எவ் எவ் அனுபவங்கள் எய்திடினும் அவ் அவ் அனுபவங்கள் எல்லாம் அறியுங்கால் ஆன்ம அனுபவத்தின் கூறுகளே ஆம்.

**கூறு-அம்சம்.**

எவ்வெவ்விடங்களில் எவ்வெத்திறத்தினர் எவ்வெவ்வகைப்பட்ட பொருள்களால் எவ்வெவ்வகைப்பட்ட அனுபவங்களையடையினும் அப்பல் வேறு வகை யனுபவங்களனைத்தும் ஆராயுங்கால் உண்மையில் ஆன்மானுபவக் கூறுபாடுகளேயாம்.

**வி-ரை:-** எங்கெங்கே யெவ்வெவர்கள் என்பன முறையே பல்வேறுலகு களையும் அப்பல்வேறுலக பாலர்களையும் ஈண்டு விசேடித்துக் குறித்து நின்றன.

## 946. துய்த்தலுள வுஞ்சென்னி தூக்கவிடா தம்முதலை
## உய்த்துக்கொண் டுள்ளமீ தூர்தலாற் - சுத்த
## சுகாதீத மான்ம சொரூபமலா லான்மா
## சுகசொருப மென்றுரைத்தல் சூது.

துய்த்தல் உளவும் சென்னி தூக்க விடாது அம் முதலை உய்த்துக்கொண்டு உள்ளம் மீது ஊர்தலால் சுத்த சுகாதீதம் ஆன்ம சொரூபம் அலால் ஆன்மா சுக சொரூபம் என்று உரைத்தல் சூது.

**துய்த்தல் உளவும்-ஏற்பட்டவுடன்; சென்னி-தலை; முதல்-முதல் விருத்தியான மனம்; உய்த்துக் கொண்டு - தள்ளிக் கொண்டே சென்று; உள்ளம் மீது ஊர்தலால் - ஆன்மாவினிடம் கொண்டுசேர்க்கப் படுவதால்; சூது-தவறு.**

தன்னுளகப்பட்ட வுயிர்களை ஆற்றுவெள்ள மடித்துக் கொண்டு போய் ஈற்றி லாழிக்க ணமிழ்த்து விடுமாறு போன்று, தன்னையொரு முதல் போலத் தோற்றிக் கொண்டெழு மகங்கார வடிவாம் சீவ போதத்தை, தானநுபவிக்கும்

ஆன்ம சொரூபமாபிரம்மாநுபவத்தைக் கருத்தாலெண்ணவுந் தலைதூக்க விடாது, அவ்வநுபவப் பெருக்குத் தன்னோடு தள்ளிக் கொண்டே போய் மீண்டெக்காலு முய்தலாகாதபடி அதனை உள்ளக்கடலின்கண் ஒருங்கு மடுத்தலால் ஆன்ம சொருபம் ஆனந்தாதீத மென்பதன்றி, அது தான் வெறுமே ஆனந்த சொருபமென்னில் அவ்வாறு கூறல் முழுக் கற்பனையாம்.

**வி-ரை :-** இன்பந் துய்த்தற் கருவியாகிய மனம் ஆன்மாநுபவப் பெருக்கா லழிந்து படலானும், ஆகவே, அவ்வான்மாநுபவம் மனத்தாலநுபவிக்கப் படாமையானும் ஆன்மாவை வெறுமே ஆனந்த வடிவமெனல் பொருந்தாது; ஆனந்தாதீத மெனல்வேண்டு மென்பதாம்.

## 947. அன்னதே தானென்றவ் வான்மாவை யாய்ந்துணர்ந்தாற்
## பின்னுமே யந்தமெய்ப் பேரறிஞன் - பின்னமாம்
## எந்த நுகர்ச்சியை யாருக்கா விச்சித்துச்
## சிந்தைப் பரிவெய்து வான்.

அன்னதே தான் என்று அவ் ஆன்மாவை ஆய்ந்து உணர்ந்தால் பின்னுமே அந்த மெய்ப் பேர் அறிஞன் பின்னம் ஆம் எந்த நுகர்ச்சியை யாருக்கா இச்சித்துச் சிந்தைப் பரிவு எய்துவான்.

யானாரென்னும் அந்தர்முக விசாரத்தா லாராய்ந்து, சொல்லளவாய்க்கழியு மகந்தை தானாதலின்றி அதன் பொருளாய் நின்ற ஆன்ம சொரூபமே தன்னுண்மையியல் பென்று, அதனை யபரோக்கமாய்த் திடம்பட வநுபவித் தறியின், அதன் பின்னும் அவ்வுண்மையான பேரறிஞன் தனக்கயலா மெவ்வின்பத்தை யாவர் நுகர விரும்பி வீணே மனக்கிலேச மடைவான்?

**வி-ரை :-** அகண்டானந்தமா மத்துவிதான்ம சொருபமே தானாதலால், தனக்கயலாகப் பிறிதோரின்பமோ, அன்றிப் பிறிதோர் ஜீவனோ இன்மையின், பின்னமா மெந்த நுகர்ச்சியை யாருக்கா விச்சித் தெனவும், ''அவாவில்லார்க் கில்லாகும் துன்ப மஃதுண்டேற் றவாஅது மேன்மேல் வரும்'' (குறள்) என்றாங்கு, ஆசையா லன்றித் துன்பத் தோற்றமின்மையின், இச்சித்துச் சிந்தைப் பரிவெய்துவா னெனவுங் கூறினார். அவன்றான் தன்னையலா தன்னிய மொன்று மறியாப் பூரண நிலை யெய்தினோன் என்பதாம்.

## 948. மைதவழ்கர்த் தத்துவந்தான் மாண்டமெய்ஞ் ஞானிபாற்
## செய்தியெனு மோத்துவிதி செல்லாதாம் - வைதிக
## தன்மபரி பாலனார்த் தப்பொருட்டே மெய்ஞ்ஞான
## கன்ம சமுச்சயச்சொல் காண்.

மை தவழ் கர்த்தத்துவம்தான் மாண்ட மெய்ஞ்ஞானிபால் செய்தி எனும் ஓத்து விதி செல்லாதாம் வைதிக தன்ம பரிபாலனார்த்தப் பொருட்டே மெய்ஞ்ஞான கன்ம சமுச்சயச் சொல் காண்.

**மைதவழ்-அஞ்ஞானம் பொருந்திய; ஓத்து-வேதம்.**

கர்த்தத்துவ மின்மையின் ஞானியிடம் மாயா சம்பந்தமான கர்மங்களுக்கோ கர்ம பலன்களுக்கோ இடமில்லை. அவனுக்கு விதித்த கர்மம் ஏதுமிலை.

## 949. பெற்றவப் பேற்றின்மேற் பேறுவே றின்மையால்
## அற்றவகங் காரசுகா தீதர்க்கு - மற்றும்
## செயக்கடவ தில்லாத் திறத்தாலன் னோரே
## இயற்றிமுடித் தீடேறி யார்.

பெற்ற அப் பேற்றின் மேல் பேறு வேறு இன்மையால் அற்ற அகங்கார சுகாதீதர்க்கு மற்றும் செயக்கடவது இல்லாத் திறத்தால் அன்னோரே இயற்றி முடித்து ஈடேறியார்.

**ஈடேறியார்-உய்வு அடைந்தவர்கள்.**

அகங்காரமழிந்த ஆனந்தாதீதநிலை யடைந்தோர்க்கு, தாமடைந்த அவ்வான்மாநுபவத்துக் கப்பாலும் தம்மால் பெறக்கடவதாக அதனிற் சிறந்த மற்றோரநுபவ மின்மையால் அதனை யடைதற்கு குபாயமாகத் தம்மாற் பின்னுஞ் செய்ய வேண்டுவ தொரு செயல் இல்லா தொழிந்த காரணத்தால், அன்னாரே மக்களாகப் பிறந்தோர் செய்யவேண்டுவன வெல்லாங் குறைவறச் செய்து முடித்து, முடிந்த நிலையாம் பரமுத்தியடைந்தோர் (கிருத கிருத்தியர்).

**வி-ரை :-** நிரகங்கார நிலையே சுத்தமோனம்; ஆனந்தாதீத மென்பதும் துரியாதீத மென்பதுமதுவேயாம். பராற்பரமாம் அந்நிலை யடைந்தார்க்குப் பின்னும் முயன்றடையக் கடவதொரு நிலையின்மையால் அன்னோரே கிருத கிருத்திய ரென்பதாம்.

''நிறைகுடந்தா னீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார்.'' - தாயுமானவர்

## 950. தன்சொரூப மான சதாசிவத்தே தன்மயமாய்த்
## தன்செயலொன் றின்றியே தானடங்கிற் - பின்செயவொன்
## றின்றியெலா முன்பே யியற்றி முடித்தோனாய்த்
## துன்றுவான் சாந்த சுகம்.

தன் சொரூபம் ஆன சதாசிவத்தே தன்மயம் ஆய்த் தன் செயல் ஒன்று இன்றியே தான் அடங்கில் பின் செய ஒன்று இன்றி எலாம் முன்பே இயற்றி முடித்தோனாய்த் துன்றுவான் சாந்த சுகம்.

## 951. பூன்றமா மான்மானு பூதி புணர்ந்தவவ்
## வான்றோ ரயலொன் றறிவரோ - தோன்றும்
## இரண்டற்ற வன்னார்பே ரின்பமெண லாமோ
## மருண்டபரிச் சின்ன மதிக்கு.

பூன்றம் ஆம் ஆன்ம அனுபூதி புணர்ந்த அவ் ஆன்றோர் அயல் ஒன்று அறிவரோ தோன்றும் இரண்டு அற்ற அன்னால் பேர் இன்பம் எணல் ஆமோ மருண்ட பரிச்சின்ன மதிக்கு.

**எணல் ஆமோ-என்ன முடியுமோ.**

பூரண ஆன்மாநுபவம் பெற்ற அப்பெரியோர் அவ்வநுபவத்துக்கயலாக மற்றோரநுபவ முளதாயறிவரோ? அதீதமாகலின் இரண்டற யாவற்றினுஞ் சிறந்து விளங்கும் அன்னாரது பேரின்பம் சுட்டறிவாற் பொய்யா முலகை மெய்யாக மருண்டு புலம்பும் ஏனையோரது பரிச்சின்ன மனத்தால் இனைத்தென் றெண்ண லியல்வதோ?

**வி-ரை :-** பூன்றம்-(பூரணமென்னும் வடமொழித் திரிபு)நிறைவு; அனுபூதி-அனுபவம்; பரிச்சின்னம்-குறைவு. அகந்தையற்று நிறைந்த ஆன்மானு பூதிமான்களின் பேரின்பநிலை மனத்தால் மதித்தற்கரிய தொன்றென்பதாம்.

''தன்னை யழித்தெழுந்த தன்மயா னந்தருக்
கென்னை யுளதொன் றியற்றுதற்குத் - தன்னையலா
தன்னிய மொன்று மறியா ரவர்நிலைமை
யின்னதென் றுன்ன லெவன்.''

- உள்ளது நாற்பது 31

# 14. துக்காபாவத்திறன்

## 952. உள்ளமென யாவர்க் குளுமொளிர்தம் முண்மையே
## கள்ளமறு மின்பக் கடலதனாற் - கள்ளமு று
## விண்மையே போல வெறுங்கற் பிதத்தன்றி
## உண்மையிலே துன்ப முறாது.

உள்ளம் என யாவர்க்கு உளும் ஒளிர் தம் உண்மையே கள்ளம் அறும் இன்பக் கடல் அதனால் கள்ளம் உறு விண்மையே போல வெறும் கற்பிதத்து அன்றி உண்மையிலே துன்பம் உறாது.

## 953. மைம்மயல்சே ராஞான மார்த்தாண்ட னாந்தமது
## மெய்ம்மையே யின்பா விளங்கலாற் - பொய்ம்மையாம்
## சீவபோ தத்தாற் றெருமரலாந் துன்பலதொன்
## றியாவருமே யெய்திற் றிலர்.

மைம் மயல் சேரா ஞான மார்த்தாண்டனாம் தமது மெய்ம்மையே இன்பா விளங்கலால் பொய்ம்மை ஆம் சீவ போதத்தால் தெருமரல் ஆம் துன்பு அலது ஒன்று யாவருமே எய்திற்று இலர்.

**954. சுமங்களமாந் தன்சொருபஞ் சோதிக்கில் வாழ்வூ
டமங்களமங் கில்லை யறவே - தமங்கமென்று
மல்லா ததனூ டகம்புத்தி யாலழுங்கல்
பொல்லாத மோகப் புணர்ப்பு.**

சுமங்களம் ஆம் தன் சொருபம் சோதிக்கில் வாழ்வு ஊடு அமங்களம் அங்கு இல்லை அறவே தம் அங்கம் என்றும் அல்லாததன் ஊடு அகம் புத்தியால் அழுங்கல் பொல்லாத மோகப் புணர்ப்பு.

**955. ஒருவனாத் தம்மை யுணராதார் வீணில்
வெருவலாய் நாளும் விளிவார் - கருவா
முடலகந்தை யான வுணர்வொழியத் தன்மெய்த்
திடவுணர்வா லத்துவிதஞ் சேர்.**

ஒருவனாத் தம்மை உணராதார் வீணில் வெருவல் ஆய் நாளும் விளிவார் கரு ஆம் உடல் அகந்தை ஆன உணர்வு ஒழியத் தன்மெய்த் திட உணர்வால் அத்துவிதம் சேர்.

### (குறள் வெண்பா)

**956. போதமே யுண்மைப் புகலாகப் பற்றிலறும்
பேதைமைசேர் துன்பப் பிறப்பு.**

போதமே உண்மைப் புகல் ஆகப் பற்றில் அறும் பேதைமை சேர் துன்பப் பிறப்பு.

## 15. சுழுத்திவியாபகத்திறன்

### (நேரிசை வெண்பா)

**957. கனவிற் சுழுத்தி கலந்திலதென் றெண்ணி
மனவுரங் கெட்டுமதி மாழ்கேல் - அணவும்
நனவிற் சுழுத்திவலி நண்ணுமே னண்ணும்
கனவிற் சுழுத்திக் கலப்பு.**

கனவில் சுழுத்தி கலந்திலது என்று எண்ணி மன உரம் கெட்டு மதி மாழ்கேல் அணவும் நனவில் சுழுத்தி வலி நண்ணுமேல் நண்ணும் கனவில் சுழுத்திக் கலப்பு.

**மதி மாழ்கேல்-மனம் வருந்த வேண்டாம்; அணவும்-பொருந்தும்; வலி-திடம்**

**958. நனவிற் சுழுத்தி நடைகாறுந் தன்னை**
**வினவு முசாக்கை விடாமை - எனவே**
**கனவிற் சுழுத்தி கலந்தொளிருங் காறவ்**
**வினவுசா வாற்றல் விதி.**

நனவில் சுழுத்தி நடைகாறும் தன்னை வினவும் உசாக் கை விடாமை எனவே கனவில் சுழுத்தி கலந்து ஒளிருங்காறு அவ் வினவு உசா ஆற்றல் விதி.

**(19) *நனவிற் சுழுத்தி நடையென்றுந் தன்னை***
***வினவு முசாவால் விளையும் - நனவிற்***
***கனவிற் சுழுத்தி கலந்தொளிருங் காறும்***
***அனவரத மவ்வுசா வாற்று.*** ***- பகவான்***

நனவில் சுழுத்தி நடை என்றும் தன்னை வினவும் உசாவால் விளையும் நனவில் கனவில் சுழுத்தி கலந்து ஒளிருங்காறும் அனவரதம் அவ் உசா ஆற்று.

## 16. அறிதுயிற்றிறன்

**959. பாரின் படுவலையிற் பட்டுக் கொடுந்துயரக்**
**கூரம்பு தைத்துக் குலைகுலைந்து - பேரின்ப**
**ஆக்கமே நாடி யலைவீ ரறிவழியாத்**
**தூக்கமே பொன்றாச் சுகம்.**

பாரின் படுவலையில் பட்டுக் கொடும் துயரக் கூர் அம்பு தைத்து குலைகுலைந்து பேர் இன்ப ஆக்கமே நாடி அலைவீர் அறிவு அழியாத் தூக்கமே பொன்றாச் சுகம்.

**960. வஞ்சப் புலத்து வழக்கற்றுக் கஞ்சமலர்**
**நெஞ்சத் தலத்து நிலைபெற்றுத் - துஞ்சுவோர்**
**மெய்ஞ்ஞான வீட்டில் விழித்தார்மற் றோர்துயின்றார்**
**பொய்ஞ்ஞால வல்லிருள்வாய்ப் புக்கு.**

வஞ்சப் புலத்து வழக்கு அற்றுக் கஞ்ச மலர் நெஞ்சத் தலத்து நிலைபெற்றுத் துஞ்சுவோர் மெய்ஞ்ஞான வீட்டில் விழித்தார் மற்றோர் துயின்றார் பொய்ஞ் ஞால வல் இருள் வாய்ப் புக்கு.

**வழக்கு-போக்கு; கஞ்ச மலர்-தாமரை மலர்.**

தம்மை நம்பினாரை ஏமாற்றஞ் செய்யும் பல விடயங்களிற் சஞ்ச த்தலற்று தாமரை மலர் போலு மிதயத்தலத்தே தரிப்புற்று ஆங்கறிதுயிலமர்ந்தோரே உண்மையில் மெய்ஞ்ஞான விசும்பாம் வீட்டுலகத்துத் துயிலுணர்ந்தோராவர்; ஒழிந்தாரோ வெனில் உலகறிவென்னு மறியாமையாங் காரிருளின்கட்புக்குத் துஞ்சினோரே யாவர்.

**வி-ரை :-** ஞானமே மெய்யாதலால் பொய்யென்றது அஞ்ஞானத்தை. ஞாலம் அதனறிவுக் காகுபெயர். மற்றோ ரென்றது வஞ்சப் புலன்களையன்றி மற்றொன்று. மறியாது மயங்கித் திரியும் ஐயுணர்வின் மாக்களை.

## 17. அத்துவிதஞானத்திறன்

**961. சிவாயநம வென்னவகஞ் செத்தெரிய லுற்ற**
**தவாதசெழும் பத்தித் தழலின் - சுவாலைச்**
**சுவானுபவத் தின்கட் சுடர்வதே தோலாச்**
***சிவோக*மெனு முண்மைத் தெளிவு.**

சிவாயநம என்ன அகம் செத்து எரியல் உற்ற தவாத செழும் பத்தித் தழலின் சுவாலைச் சுவானுபவத்தின் கண் சுடர்வதே தோலாச் சிவோகம் எனும் உண்மைத் தெளிவு.

**தவாத-தடைபடாத; தோலா-தோல்வியடையாத.**

**962. கள்ளமறச் சித்தங் கடைப்பிடித்து நானாரென்**
**றுள்ளமெனுங் கல்லூ டுராய்ந்துராய்ந் - துள்ளுட்**
**கனலக் கடைந்த கதிரொளியே காண்டி**
***அனல்ஹக்* கெனுமெய் யறிவு.**

கள்ளம் அறச் சித்தம் கடைப்பிடித்து நான் ஆர் என்று உள்ளம் எனும் கல் ஊடு உராய்ந்து உள் உள் கனலக் கடைந்த கதிர் ஒளியே காண்டி அனல்ஹக் எனும் மெய் அறிவு.

**கல்-சாணைக்கல்; உள்கனல்-உள்ளே ஞான நெருப்பு எழும்படி; காண்டி-காண்க; அனல் ஹக்-அஹம் பிரம்மாஸ்மி என்ற மஹாவாக்யத்திற் கிணையான பொருள் தரும் குரான் மஹாவாக்யம்.**

**963. அத்துவித ஞான வழுத்தமே யாண்மையலாற்**
**பொய்த்துவித ஞாலப் புரளியிலே - எய்த்துமதி**
**தெவ்வர்மே லாண்மை செலுத்தலுமே தேருங்காற்**
**கவ்வுபே ரச்சமே காண்.**

அத்துவித ஞான அழுத்தமே ஆண்மை அலால் பொய்த் துவித ஞாலப் புரளியிலே எய்த்து மதி தெவ்வர் மேல் ஆண்மை செலுத்தலுமே தேருங்கால் கவ்வு பேர் அச்சமே காண்.

**மதி எய்த்து-மனம் இளைத்து, சோர்ந்து; தெவ்வர்-பகைவர்; தேருங்கால் - ஆலோசிக்குமிடத்து; கவ்வு-கவ்விக்கொள்ளும்.**

மெய்யா மத்துவித ஞானத்தின் கலங்கா நிலையே ஒருவர்க் காண்மை யாவதன்றி, விசித்திரமாய்த் தனக்கயல் போலக் காணப்படும் மாயா விலாசமா முலகின்கண் அறிவு கலங்கிச் சிலரை தனக்குப் பகைவராகக் கருதி அன்னார் மேலாண்மை செலுத்தலும் ஆய்ந்தறியுங்கால் தன்னைப் பெரிதும் பீடித்த அச்சத்தின் அறிகுறியேயாம்.

**964. அளைந்தமா மோக வகந்தைசேர் பேதங்**
**களைந்ததே கைவல்யக் காட்சி - துளைந்த**
**வதீதமா மோன வருட்சிற் பரமே**
**ததீயர்தேர் தாமப் பரம்.**

அளைந்த மா மோக அகந்தை சேர் பேதம் களைந்ததே கைவல்யக் காட்சி துளைந்த அதீதமாம் மோன அருள் சித்பரமே ததீயர் தேர் தாமம் பரம்.

**அளைந்த-அடர்ந்த; ததீயர்-மகான்கள்; தாமம் பரம்-பரந்தாமம்.**

## 18. திருவருட்டிறன்

**965. தன்னைநினைத் தோரடிநீ சார்ந்தா லதற்கீடா**
**வன்னையினு மிக்கவவ் வாண்டானும் - உன்னை**
**நினைத்துத்தா னொன்பதடி நீளவந் தேற்பா**
**னனைத்துக்கா ணன்னோ னருள்.**

தன்னை நினைத்து ஓர் அடி நீ சார்ந்தால் அதற்கு ஈடா அன்னையினும் மிக்க அவ் ஆண்டானும் உன்னை நினைத்துத் தான் ஒன்பது அடி நீள வந்து ஏற்பான் அனைத்துக் காண் அன்னோன் அருள்.

**அனைத்து-அவ்வளவு.**

ஆண்டான் அருளெவ்வாறெனின், அவனை நினைந்து நாம் ஓரடி சார்ந்தால் அவன் ஒன்பதடி பெயர்ந்து வந்து கருணையினால் நம்மை ஏற்பானென்றார். இதனால் அவனருளில் ஐயமுற வேண்டாமென்பது கருத்து. ‘‘தாயினுஞ் சாலப் பரிந்து’’ என்பது திருவாசகம். அன்னையினுந் தயையுடையாய் என்றார் வள்ளலார்.

**966. உள்ளதே யுள்ளமென வோங்குந் திருவருளேல்**
**உள்ளுருகி யுள்ளா வுயிர்கட்கே - உள்ளதனை**
**எள்ளுகுறை யேயுமலா தின்னருள்செய் யாக்குறையவ்**
**வுள்ளதனுக் கெங்ங னுறும்.**

உள்ளதே உள்ளம் என ஓங்கும் திருவருளேல் உள் உருகி உள்ளா உயிர்கட்கே உள்ளதனை எள்ளு குறை ஏயும் அலாது இன் அருள் செய்யாக் குறை அவ் உள்ளதனுக்கு எங்ஙன் உறும்.

பாரமார்த்தத்தில் யாதொன்றுளதாவதோ அம் முழுமுதலா மெய்ப்பொருளே, 'பின்னவுயிர் தோறும் அபின்ன விளக்கமாய் யாமே யுள்ளோ' மென, உயிர்க்குயிரா மான்ம சொரூபமாயிருந்தொளிரும் இதயவியல்பிற்றாய், எவற்றையு மடிப்படுத்து மேலாடுந் திருவருள் வடிவினதா மெனில், அத்தகைய பேரன்பை நினைத்து, தம்முடலே யன்றி யுள்ளுங் கசிந்துருக அவ்வுள்ள பொருளை அனவரதம் அனுசந்தானம் செய்யாதவுயிர்களுக்கே, அதனைக் கருத்தா லெண்ணவுஞ் செய்யா திகழ்ந்த குற்றம் பொருந்துவதல்லது, அவற்றுக் கின்னருள் பாலிக்கவில்லை யென்னும் குற்றம் அவ்வுள்ள பொருளாங் கடவுளுக் கெங்ஙன மெய்தும்?

**வி-ரை :-** உயிர்கள் தன்னையறிந்தடைதலில் சற்றும் வருந்தலாகாது என்றே தானவற்றுக் கயலாக நில்லாது, எவ்வுயிர்களுள்ளும் அவ்வுயிர்களின் உண்மையா மான்ம சொரூபமாகவே இறைவனிருந்தொளிர்தல் அவன் அவற்றின் பாற்கொண்ட பெருங்கருணைத் திறமாதலால் 'உள்ளதே யுள்ளமென வோங்குந் திருவரு' ளெனவும், இதயத்தில் இறைவன் இடைவிடாது 'யான்யா' னெனத் திகழ்ந்து கொண்டே யிருக்குந் திகழ்ச்சிவடிவாய் அனைத்துயிர்களுக்கும் அல்லும் பகலும் அருள் செய்து கொண்டே இருத்தலின் 'இன்னருள் செய்யாக் குறை யவ்வுள்ளதனுக் கெங்ஙனுறு' மெனவும் **அவனுக்கபிமுகமாய் அகத்துத் திரும்பித் தாமவனை நோக்கினாலொழிய, அவன் அவ்வாறு தங்களுக்கருள் செய்து கொண்டேயிருக்கு முண்மை அவற்றுக்குப் புலனாகாமையின்,** அருளே வடிவா மவனை அகத்தா லாய்தலில்லாத வுயிர்கள் அவன் சற்றுமே தமக்கருள வில்லை யென்றல் பெருந்தவறாமாதலின், 'உள்ளுருகி யுள்ளா வுயிர்கட்கே யுள்ளதனை யெள்ளுகுறையேயு' மெனவுங் கூறினார். இதயத்தில் இரண்டற விருந்தொளிரு மான்ம சொரூபமாம் பொருளொன்றே தான் பலவா யிருத்தல் போன்று உபாதியாற் பலவா மொவ்வோருயிருள்ளுந் தனித்தனி 'யான் யா' னென் றினிதுறையப் பெறுதலின் உள்ளம் (உள்ளோம், இருக்கின்றோம்) என்னும் பன்மை ஏற்புடைத்தாமாறு உணர்க. அது அவ்வா றிருந் தொளிர்தற் கிடனாங்காரணம் பற்றியே இதயம் தமிழில் உள்ளமென வழங்கப் பெறுதலின், ஈண்டு அவ்வுள்ள மெனும் பெயர் இரட்டுற மொழிதலால் அவ்விரண்டு பொருளும் ஒருங்குபட நின்றது. உருகியென்னுஞ் செய்தெ னெச்சம் செயவெனெச்சமாகத் திரித்துரைக்கப் பட்டது.

**967. அறிவுண் முகமா யகந்தை யடங்கிச்**
**செறிவுண் மிகவொளிர்சச் சித்தே - குறிகுணந்தீர்**
**தான்மனா தீதமாய்ச் சார்ந்தே குருவாய்த்தோன்**
**றான்மனா மீச னருள்.**

அறிவு உள் முகமாய் அகந்தை அடங்கிச் செறிவுள் மிக ஒளிர் சத் சித்தே குறி குணம் தீர் தான் மன அதீதமாய்ச் சார்ந்தே குருவாய்த் தோன்று ஆன்மன் ஆம் ஈசன் அருள்.

**செறிவுள்-ஒடுக்கத்தினுள்; குறி-உபாதி; தீர்-ஒழிந்து.**

அறிவந்தர் முகப்பட்டு 'நானா' ரென நாடுதலால், உடலே தானென்னு மூனவகந்தை தானுதித்த விடமா முளத்தின்கண் அடங்கி யொடுங்கு மொடுக்கத்துள் 'யான்யா' னென்றகண்டமாய் விளங்கும் உண்மை விளக்கமே, உபாதியுங் குணமு மொழிந்து விளங்குந்தான் மனவுணர்வுக் கப்பாலாய் நின்றே, அன்பரை வேண்டித் தன் சுத்த மாயையா லவையிரண்டுங் கொண்டு, அம்மனமேயன்றி ஐம்புலனுங் காணக் குருவடிவாய்ப் புறத்துத் தோன்றும் ஆன்மசொரூபமா மிறைவனருளாம்.

## 968. அருள்வண்ணங் கண்டமெய் யன்ப ரகஞ்செம்
## பொருள்வண்ண மாகப் பொலியும் - மருள்வண்ணச்
## சிந்தா குலந்தருபொய்ச் சிச்சடக்கட் டாமகந்தை
## யுந்தா தழியு முளத்து.

அருள் வண்ணம் கண்ட மெய் அன்பர் அகம் செம் பொருள் வண்ணம் ஆகப் பொலியும் மருள் வண்ணச் சிந்தாகுலம் தரு பொய்ச் சித் சடக் கட்டு ஆம் அகந்தை உந்தாது அழியும் உளத்து.

சித் ஜடக்கிரந்தியே பந்தமாய்ப் போலி ஜீவனை உந்துவதாம். அது வலிமையற்று அழிந்த உளத்தில், இயல்பாகவே மனமானது வஸ்து வண்ணமாக வேறுபடாது திகழும்; அக்னியாகவே ஒளிவீசும் காய்ச்சின இரும்பு போலு மென்பர்.

## 969. அருளமுத வெள்ளத் தமிழ்ந்துநின்ற சீவர்
## மருள்வயத்தா லேதவித்து மாழ்கல் - பொருகங்கை
## யாற்றுநீர் வெள்ளத் திடைநின்று நீர்வேட்கை
## மாற்றறியார் மாயு மடம்.

அருள் அமுத வெள்ளத்து அமிழ்ந்து நின்ற சீவர் மருள் வயத்தாலே தவித்து மாழ்கல் பொரு கங்கை ஆற்று நீர் வெள்ளத்து இடை நின்று நீர் வேட்கை மாற்ற அறியார் மாயும் மடம்.

**சீவர்-ஜீவர்; மாழ்கல்-அழிதல்; பொரு கங்கை-கரை புரண்டு வரும் கங்கை; நீர் வேட்கை-தாகம்.**

இறைவனருளா மமுத வெள்ளத்தில் இடையறாது மூழ்கி நின்ற மக்கள் தம்மைக் கவர்ந்த மயக்க வசத்தாலே மனத்தாபத்தாற் றவித்து வருந்தல் கரையை மோதுகின்ற கங்கையாற்று நீர் வெள்ளத்தின் மத்தியில் வாழ்ந்து நின்றே அன்னார் தம்மை வருத்துந் தாக விடாயை மாற்றிக் கொள்ள வகையறியாராய்த் தம் மடமையான் மாய்ந்தாற் போல வருந்தலாம்.

**வி-ரை :-** அருளே இறைவன் சொரூப மாதலின் அதுதா னெங்குங் கலந்ததாம். அதனை யகலாது அதனுளமிழ்ந்து நின்றே ஆருயிர்கள் பிறவித் துன்பத்தால் வருந்தல் பேதைமை யன்றிப் பிறிதில்லை யென்பதாம். மாற்ற வென்பத னீற்றில் அகரந்தொகுத்தல். மாயுமடம் என்பது மடத்தான் மாய்தலென மாறியுரைக்கப்பட்டது.

## 970. எல்லாரை யுங்கடைக்க ணிக்கும் பொதுக்கடவுள்
## பொல்லாரை யேனோ புறக்கணித்தல் - எல்லாமாய்ப்
## பொங்குங்கண் ணொன்றைப் புறக்கணிப்ப தில்லையவர்
## மங்குங்கண் மாலை மயக்கு.

எல்லாரையும் கடைக்கணிக்கும் பொதுக்கடவுள் பொல்லாரை ஏனோ புறக்கணித்தல் எல்லாமாய்ப் பொங்கும் கண் ஒன்றைப் புறக்கணிப்பது இல்லை அவர் மங்கும் கண் மாலை மயக்கு.

**எல்லாமாய்ப் பொங்கும் கண்-காணப்படுவன யாவையுமாய் இருந்தொளிரும் கண்.**

நல்லாரை மட்டிலன்றிப் பொதுப்பட யாவரையுங் கடைக்கணிப்பதாக அறிஞராற் கூறப்படு மிறைவன் பொல்லாரை மட்டும் புறக்கணிப்ப தேனோ வெனில், காணப்படுவன யாவுமாயிருந்தொளிருங் கண்ணே தானாதலால், அவன்றான் யாதொன்றையும் புறக்கணித்தல் முதற்கண் இயலாதேயாகவும், அவன்றானவ்வாறு செய்வதாக உண்மைக்கு மாறாய்த் தாங்கருதல், அது கருதுவார்தம் உண்மை யுணரமாட்டா தொளி மங்கிய மாலைக்கண்ணாய மனமயக்கமாம்.

**வி-ரை :-** ஆன்ம சொரூபமா யனைத்துயிருள்ளு நிறைந்து இடைவிடாதெப் பொழுதும் அவற்றை யெல்லாந் தன்மயமாய் இறைவன் அறிந்து கொண்டே யிருக்கவும் அவர்தா மவனை யறிந்தாலொழிய அவன்றான் றம்மை யறிதல் அவரா லறியலாகாமையின் அவர் மங்குங்கண் மாலை மயக்கென்றார்.

# 19. சச்சிதானந்தத்திறன்

## 971. அயலாய வற்றை யறிகின்ற புத்தி
## மயலாய விஞ்ஞான மாற்றி - இயலாய
## செம்மை யிதயத்தைச் சேரவே சித்தமாம்
## அம்மெய் யறிவானந் தம்.

அயல் ஆயவற்றை அறிகின்ற புத்தி மயல் ஆய விஞ்ஞானம் மாற்றி இயல் ஆய செம்மை இதயத்தைச் சேரவே சித்தம் ஆம் அம் மெய் அறிவு ஆனந்தம்.

**சித்தம்-அடையப்பட்டது.**

**972. சித்தாய சித்தமது சேட்டை யொடுங்கினாற்**
**சத்தாகத் தன்னையே தான்காணும் - சத்தோடு**
**சிற்சத்தி யொன்றிச் செறிபர மானந்த**
**எச்சமுமத் தானன்றி யேது.**

சித் ஆய சித்தம் அது சேட்டை ஒடுங்கினால் சத் ஆகத் தன்னையே தான் காணும் சத்தோடு சித் சத்தி ஒன்றிச் செறி பரம ஆனந்த எச்சமும் அத் தான் அன்றி ஏது.

**எச்சமும்-மற்றொன்றும்.**

**973. சிற்சடமாஞ் சீவன் செடவகந்தை செத்தவுடன்**
**சிற்சொருப மாகத் திகழ்கின்றான் - சிற்சொருபம்**
**சன்மாத் திரமாத் தரித்தலா லாங்கென்றும்**
**தன்மாத் திரவின்பந் தான்.**

சித் சடம் ஆம் சீவன் செட அகந்தை செத்தவுடன் சித் சொருபம் ஆகத் திகழ்கின்றான் சித் சொருபம் சத் மாத்திரமாத் தரித்தலால் ஆங்கு என்றும் தன் மாத்திர இன்பம் தான்.

**செட-ஜட; தரித்தலால்-இருத்தலால்; தன் மாத்திர-தானே ஆகிற.**

சிச்சட முடிவடிவாஞ்சீவன் சடவியல்பா முடலகந்தை சாதலும், சுத்த சைதன்யமாகத் துலங்குகின்றான். அச்சைதன்யம் அத்துவித வுண்மை மாத்திரமா யுள்ளத் தூன்றலால், துக்கக்கலப்பற்ற, அவ்வான்ம சொரூபமான சுத்த சுகமொன்றே அந்நிலைக்கண் நீக்கமற வனுபவமாவதாம்.

**வி-ரை :-** சடவகந்தை சாதல்-சிச்சடக்கிரந்திபேதித்தல். சிச்சடக்கிரந்தி பேதமாவது அவிச்சையா லொன்றுபட்ட உடலுயிர்கள் ஆன்ம விசாரத்தால் வேறாதல். ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான்மலை யுத்தமனே (தேவாரம்). தன் மாத்திர வின்பமெனக் கிரந்தி பேதப் பயனும், அதற்குக் காரணமாக சன்மாத்திரமெனச் சைதன்ய விலக்கணமும் கூறப்பட்டன.

**974. மறவாத போதமே மங்காத மெய்யன்**
**புறவான பத்தி யொழுக்கம் - பிறிவில்பே**
**ரின்பமய மாக வியல்சொருப மெய்யுணர்வே**
**யன்பியல்பாப் பொங்குவத னால்.**

மறவாத போதமே மங்காத மெய் அன்பு உறவு ஆன பத்தி ஒழுக்கம் பிறிவு இல் பேர் இன்பமயம் ஆக இயல் சொருப மெய் உணர்வே அன்பு இயல்பாப் பொங்குவதனால்.

**975. நிலையுளபோற் றோன்று நிகிலங்கட் கெல்லாம்**
**நிலையிலதா யுள்ள நிமித்தப் - புலையகங்**
**காரச் சழக்குக் கழிந்ததே லந்நிலையே**
**சாரக் கிடந்ததோர் சத்து.**

நிலை உள போல் தோன்றும் நிகிலங்கட்கு எல்லாம் நிலை இலதாய் உள்ள நிமித்தப் புலை அகங்காரச் சழக்குக் கழிந்ததேல் அந்நிலையே சாரக் கிடந்ததோர் சத்து.

**நிகிலங்கள்-உலகங்கள்; சழக்கு-குற்றம்; சாரக் கிடந்ததோர்-ஆசிரயமாக உள்ள ஓர்.**

## 976. அறிவுளபோற் றோற்றமுடை யாருயிர்கட் கெல்லாம்
## அறிவிலதா யுள்ளதோ ராவி - வெறியகங்
## கார மயக்கங் கழன்றதே லந்நிலையே
## தேரக் கிடந்ததோர் சித்து.

அறிவு உள போல் தோற்றம் உடை ஆர் உயிர்கட்கு எல்லாம் அறிவு இலதாய் உள்ளது ஓர் ஆவி வெறி அகங்கார மயக்கம் கழன்றதேல் அந்நிலையே தேரக் கிடந்ததோர் சித்து.

## 977. இன்புளபோற் றோற்றுபொரு ளின்பங்கட் கெல்லாமே
## இன்பிலதா யுள்ளதோ ரேதுவாம் - துன்பவகங்
## காரச் செருக்குக் கடிந்தக்கா லந்நிலையே
## ஊரக் கிடந்த வுவப்பு.

இன்பு உள போல் தோற்று பொருள் இன்பங்கட்கு எல்லாமே இன்பு இலதாய் உள்ளது ஓர் ஏது ஆம் துன்ப அகங்காரச் செருக்குக் கடிந்தக்கால் அந்நிலையே ஊரக் கிடந்த உவப்பு.

**ஊரக் கிடந்த-அனுபவிக்க.**

## 978. சுகசொருபச் செம்பொருளாத் தோயிற் றமக்குச்
## சுகநுகர்ச்சி யில்லையெனச் சொல்வார் - சுகசொருபம்
## சர்க்கரையே போலச் சடப்பொருளே யாமென்னத்
## தர்க்கமிட்டுச் சாதிப்பார் தாம்.

சுக சொருபச் செம்பொருளாத் தோயில் தமக்குச் சுக நுகர்ச்சி இல்லை எனச் சொல்வார் சுக சொருபம் சர்க்கரையே போலச் சடப் பொருளே ஆம் என்னத் தர்க்கம் இட்டுச் சாதிப்பார் தாம்.

**தோயில்-ஆகிவிட்டால்.**

தாம் சுக சொரூபச் செம்பொருளில் தோயுங்கால், தமக்குச் சுக நுகர்ச்சியில்லையெனச் சாதிப்பார், இன்பநுகர்ச்சியின் பொருட்டுத் தாம் இழந்து நிற்கும் நிலை வெருவுவார். அவர் சுகப் பொருளையும் சர்க்கரைபோல் மற்றொன்றாலறியப்படும் இன்பமெனத் தடுமாற்றமுறும் பேதையின ரன்றோ என்றார்.

**979. சத்துச்சித் தின்பமெனச் சாற்றினும்வெவ் வேறாக
உய்த்துணர்ந்தா லம்மூன்று மொன்றாகும் - ஒத்த
திரவமொடு மாதுரியஞ் சீதளங்கண் மூன்றும்
பொருவறுநீ ரொன்றேதான் போன்று.**

சத்துச் சித்து இன்பம் எனச் சாற்றினும் வெவ்வேறு ஆக உய்த்து உணர்ந்தால் அம் மூன்றும் ஒன்று ஆகும் ஒத்த திரவமொடு மாதுரியம் சீதளங்கள் மூன்றும் பொரு அறு நீர் ஒன்றேதான் போன்று.

தம்முண் மாறுபடலற்ற திரவம், மாதுரியம், சீதளமென்னும் மூன்று சொற்களும் ஒப்பற்ற நீராமொரு பொருளவேயாதல் போன்று, உண்மையுணர்வின்பம் என ஒன்றினொன்று வெவ்வேறு போலக் கூறப்படினும், உய்த்துணருங்கால் அம் மூன்று சொற்களும் ஆன்மசொரூபமா மொரு பொருளையே குறிப்பனவாகும்.

**வி-ரை :-** உண்மையுணர்வின்பம் என்பவற்றுள் சொல் வேறுபாடன்றிப் பொருள் வேறுபாடில்லை யென்பதால் உவமையில் எவ்வாறாயினும், பொருளில் ஆன்ம சொரூபந்தான் நிர்க்குணமாதலால், அவற்றை அதன் மூவேறியல்புகள் எனக் கூடக் கோடலாகாமை காண்க.

## 20. உண்மைமாட்சித்திறன்

**980. உளதாதல் தன்னியல்பவ் வொன்றொழிந்த வெல்லாம்
களவாய கற்பனையின் கற்றை - உளவாகா
தவ்வெல்லாந் தன்னின் றகல்வனவா மென்றென்றும்
இவ்வொன்று நீங்க லிலை.**

உளது ஆதல் தன் இயல்பு அவ் ஒன்று ஒழிந்த எல்லாம் களவு ஆய கற்பனையின் கற்றை உள ஆகாத அவ் எல்லாம் தன்நின்று அகல்வன ஆம் என்று என்றும் இவ் ஒன்று நீங்கல் இலை.

**கற்றை-தொகுதி.**

**981. அறிவுருவா வுள்ளோ னிலனா வொழியான்
பிறிதறிவு போந்தொழிய நின்றால் - அறிவுதனிற்
கள்ளமாம் பொய்த்துவிதக் கற்பனைதீர்ந் தாலறிவா
வுள்ளதனக் கில்லை யொழிவு.**

அறிவு உருவா உள்ளோன் இலனா ஒழியான் பிறிது அறிவு போந்து ஒழிய நின்றால் அறிவுதனில் கள்ளம் ஆம் பொய்த் துவிதக் கற்பனை தீர்ந்தால் அறிவா உள்ள தனக்கு இல்லை ஒழிவு.

**982. பராசத்தை யாந்தம் பரசொரூ பத்தே
யரோபத்தால் 'யான்'சிறிதுண் டாகச் - சொரூபத்தை
மாரணஞ்செய் கின்றபிர மாதவயர்க் கான்மபரி
பூரணஞ் சூனியமே போன்ம்.**

பராசத்தை ஆம் தம் பர சொரூபத்தே அரோபத்தால் யான் சிறிது உண்டாகச் சொரூபத்தை மாரணம் செய்கின்ற பிரமாத வயர்க்கு ஆன்ம பரிபூரணம் சூனியமே போன்ம்.

**பராசத்தை-மேலான உண்மைப்பொருளை; அரோபம்-கற்பனை; மாரணம் செய்தல்-கொல்லுதல்; வயர்க்கு - வசப்பட்டவர்க்கு.**

'நான்' என்ற நினைவே அகந்தையாதலின் அது சிறிதெழவும், தேகாத்ம புத்தியால் பந்தமுண்டாகி, சொரூபத்தினின்றும் நழுவலாகிய பிரமாதமென்னும் அஞ்ஞானம் ஜனிக்கின்றது. அஃதே உண்மையில் 'பிரம்ம ஹத்தி' தோஷ மென்றறிக. அவ்வாறு பிரமாதத்திற்கு வசப்பட்டு உழலும் பந்தஜீவர்க்குப் பூரணநிலை, அறியக் கூடாததாய், சூனியத்தைப் போலவே தோற்றும்.

**983. அறிஞ்சட்ட சித்தியினு மாசை யிலாதே
நிறைஞ்சிட்ட சாந்தபத நேர்வன் - புறஞ்சுட்டிக்
காண்போனாத் தன்னைக் கலங்காதே யுண்மைநிலை
மாண்போனாத் தன்னையுணர் வான்.**

அறிஞ்சு அட்ட சித்தியினும் ஆசை இலாதே நிறைஞ்சிட்ட சாந்த பதம் நேர்வன் புறம் சுட்டிக் காண்போனாத் தன்னைக் கலங்காதே உண்மை நிலை மாண்போனாத் தன்னை உணர்வான்.

**அறிஞ்சு-அறிந்து; நிறைஞ்சிட்ட-நிறைந்த; நேர்வன்-அடைவன்; மாண்போனா-மாட்சி உள்ளவனாக.**

உளத்துற்ற வாசனையாற் றன்மயமாய் வெளித்தோன்றும் மாயா விடயங்களை அஞ்ஞானத்தால் வேறாகச் சுட்டியறியும் அகங்காரவடிவனாகத் தன்னை மயங்கவறியாது, உளதாந்தன்மை மாத்திரமா மாண்புடையோனாகத் தன்னையுள்ளபடி தெளிய வுணர்வோன், அணிமாதியட்டமா சித்திகளும், உண்மை நிலை நின்று நோக்கச் சொப்பனமார் சித்திகளாய்த் துச்சமாதலை யறிந்து, அவையனைத்து மொருங்கடைவ தாயினும் அவற்றிற் சற்றுமாசை வையா தொழிந்து, சருவ வியாபகமாய் நிறைந்த, யாவற்றினுஞ் சிறந்த வுபசாந்த நிலையுறுவன்.

**(குறள் வெண்பா)**

**984. உள்ளதை யோம்பு முரவோ னெதற்குமே
வெள்குறான் சிந்தை விதிர்த்து.**

உள்ளதை ஓம்பும் உரவோன் எதற்குமே வெள்கு உறான் சிந்தை விதிர்த்து.

**ஓம்பும்-அனுசந்திக்கும்;உரவோன்-வலிமையுள்ளவன்;வெள்கு உறான்-அஞ்சமாட்டான்; விதிர்த்து-கலங்கி.**

உள்ளதை யுள்ளபடி யுணர்ந்து நிற்கும் உரவுடையோன், எது நேர்ந்திடினும் சிந்தையில் தன்னிலையினின்றும் பெயர்ந்து, அதனால் சங்கோச கிலேசங்களை யடையான்.

## 21. சருவம்பிரம்மத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**985. மித்தையறி வாக விகற்பமெலாந் தோற்றுவதோர்
சுத்தவறி வான சொரூபமே - ஒத்த
வறிவான தன்னை யறிந்தடைந்தார்க் கந்தப்
பிறவனைத்து மோர்தன் மயம்.**

மித்தை அறிவாக விகற்பம் எலாம் தோற்றுவது ஓர் சுத்த அறிவு ஆன சொரூபமே ஒத்த அறிவான தன்னை அறிந்து அடைந்தார்க்கு அந்தப் பிற அனைத்தும் ஓர் தன்மயம்.

**986. மன்றவுள தானதான் மாத்திரமே யன்றிமற்
றொன்றுமிலா தொன்றுமலா துள்ளதொன்றே - நின்றொளிர்சச்
சிற்பரமா மந்தச் சிவத்திலே தேர்பவெலா
மப்பரமே; அன்று பிற.**

மன்ற உளது ஆன தான் மாத்திரமே அன்றி மற்று ஒன்றும் இலாது ஒன்றும் அலாது உள்ளது ஒன்றே நின்று ஒளிர் சத் சித் பரம் ஆம் அந்தச் சிவத்திலே தேர்ப எலாம் அப்பரமே அன்று பிற.

**மன்ற உளதான-நிலைத்து உள்ள; தேர்ப-தெரிவன.**

**987. சத்தியமோ வன்றி யசத்தியமோ புத்திதரு
வித்தையோ வன்றி யவித்தையோ - சித்த
விரம்மியமோ வன்றி யரம்மியமோ யாவும்
பிரம்மமே; அன்று பிற.**

சத்தியமோ அன்றி அசத்தியமோ புத்தி தரு வித்தையோ அன்றி அவித்தையோ சித்த இரம்மியமோ அன்றி அரம்மியமோ யாவும் பிரம்மமே அன்று பிற.

**(இன்னிசை வெண்பா)**

**988. சிரத்தை யசிரத்தை சிந்தை யசிந்தை**
**விரத்தி யவிரத்தி வேத மவேதம்**
**வரம்மவரம் வந்தியா வந்தியம் யாவும்**
**பிரம்மமே; அன்று பிற.**

சிரத்தை அசிரத்தை சிந்தை அசிந்தை விரத்தி அவிரத்தி வேதம் அவேதம் வரம் அவரம் வந்தியம் அவந்தியம் யாவும் பிரம்மமே; அன்று பிற.

**சிந்தை-நினைப்பு; விரத்தி-வெறுப்பு; வேதம்-அறிவு; வரம்-மேன்மை; வந்தியம்-போற்றற் குரியது.**

## 22. சமரசத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**989. போதாந்த மோனப் பொதுவியல்பால் விஞ்சைசேர்**
**வேதாந்தத் துக்கு விரோதமிலை - தூய்தாத்**
**தனித்தொளிர்மெய் யத்துவித சாதனங்க ளாக**
**அனைத்துமத மும்முடன்பா டாம்.**

போதாந்த மோனப் பொது இயல்பால் விஞ்சை சேர் வேதாந்தத்துக்கு விரோதம் இலை தூய்தாத் தனித்து ஒளிர் மெய் அத்துவித சாதனங்களாக அனைத்து மதமும் உடன்பாடு ஆம்.

**போதாந்தம்-ஞான வரம்பு.**

**990. விரிவிலாப் புல்லறிவோர் வேறோர் சமயம்**
**எரிவினாற் கற்பித்தா ரேனும் - பிரிவில்**
**தெரிவே வடிவாத் திகழ்சிவத்துக் கஃது**
**முரியதே யாக வுணர்.**

விரிவு இலாப் புல் அறிவோர் வேறோர் சமயம் எரிவினால் கற்பித்தாரேனும் பிரிவு இல் தெரிவே வடிவாத் திகழ் சிவத்துக்கு அஃதும் உரியதே ஆக உணர்.

**விரிவு இல்-பரந்த நோக்க மில்லாத; எரிவு-நெஞ்சு எரிச்சல்; தெரிவு-அறிவு.**

அறிவு வடிவாகவே சிவம் விளங்குவதால், அறிவின் வினையாக ஏற்படும் சமயம் யாவும் சிவத்துக் குரியனவே. அது பற்றிப் புல்லறிவினால் பல மதப்

பிரிவுகளும் போதாதனபோல் மற்றோர் பிரிவான மதம் நூதனமாய் ஏற்படினும், அதுவும் சிவத்துக்கு முரணன்று.

**991. எந்தமத மீதி லிருக்கினுநம் பிக்கையுனக்**
**கந்தமத மெய்யன்போ டாசரித்தி - சொந்தமத**
**மீதபிமா னத்தால் வெளியிற் பிறமதமேல்**
**வாதமிடா துள்ளே மறிந்து.**

எந்த மதம் மீதில் இருக்கினும் நம்பிக்கை உனக்கு அந்த மதம் மெய் அன்போடு ஆசரித்தி சொந்த மதம் மீது அபிமானத்தால் வெளியில் பிற மதம் மேல் வாதம் இடாது உள்ளே மறிந்து.

**மறிந்து-திரும்பி.**

**992. துவிதவிசிட் டாத்துவித சுத்தாத் துவித**
**விவிதவழக் காடல் விடுத்துத் - தவமுதிரச்**
**சிந்தித் திறையையுபா சித்துத் திருவருட்சீர்**
**சந்தித்து மெய்யுணர்தல் சால்பு.**

துவித விசிட்டாத்துவித சுத்தாத்துவித விவித வழக்கு ஆடல் விடுத்துத் தவம் முதிரச் சிந்தித்து இறையை உபாசித்துத் திரு அருள் சீர் சந்தித்து மெய் உணர்தல் சால்பு.

**சால்பு-சிறந்தது.**

**993. மதியுள்ள காறு மதமுண்டா மந்த**
**மதிதனையாய்ந் துள்ளே மடங்கி - இதயந்**
**தனிலடங்கப் பெற்றவுப சாந்தமா மோனத்**
**தனையமத நிற்ற லரிது.**

மதி உள்ளகாறும் மதம் உண்டு ஆம் அந்த மதிதனை ஆய்ந்து உள்ளே மடங்கி இதயம் தனில் அடங்கப் பெற்ற உபசாந்தம் ஆம் மோனத்து அனைய மதம் நிற்றல் அரிது.

மதியுள்ளவரையில், மதம், நம்பிக்கை, சமயம் இவையிருந்தே தீரும். ஆனால் தாயுமானவர் கூறியவாறு ''மேல் சமயங்கடந்த மோனசமரஸம்'' என்பதை இங்கு விளக்குகிறார். அதுவே மதியை இதயத்தில் மடக்கி, மனமின்றி நிற்றல். அஃதே அரிது. அந்நிலையில் மதியும் பிறமதமும் கழலப்பெறுவன.

## 23. சைசவியத்திறன்

**994. ஈட்டமுறு மக்க ளினத்து ளகந்தைமதிச்
சேட்டையறி வற்ற சிசுக்களே - வாட்டமற
அம்மையப்ப ராலே யதேநினைவா யெக்காலும்
பன்மடங்கு பேணப் படும்.**

ஈட்டம் உறும் மக்கள் இனத்துள் அகந்தை மதிச் சேட்டை அறிவு அற்ற சிசுக்களே வாட்டம் அற அம்மை அப்பராலே அதே நினைவாய் எக்காலும் பன்மடங்கு பேணப்படும்.

**ஈட்டம் உறும்-பெருகும்.**

**995. விகாரமனஞ் சற்றும் விளையாத சுத்த
மகார்களே பாக்கிய வந்தர் - சுகோதயமாம்
அன்னைமடி நீங்கா தமர்ந்துவிளை யாடுமகிழ்
வன்னவர்முற் றூட்டாக லான்.**

விகார மனம் சற்றும் விளையாத சுத்த மகார்களே பாக்கியவந்தர் சுகோதயம் ஆம் அன்னை மடி நீங்காது அமர்ந்து விளையாடும் மகிழ்வு அன்னவர் முற்றூட்டு ஆகலான்.

**மகார்களே-மகான்களே; முற்றூட்டு-சர்வ உரிமையுடனும் அனுபவிக்கப்படும் செல்வம்.**

## 24. ஆன்மமுயக்கத்திறன்

**996. நானென்னும் புத்தி நழுவுற்று மெய்ஞ்ஞான
வானென்னு மான்மவரன் மாட்டொன்றித் - தானென்
றவனென்று சொல்லவிரண் டற்றநிலை தானே
சிவமொன்று கற்பின் சிறப்பு.**

நான் என்னும் புத்தி நழுவு உற்று மெய்ஞ்ஞான வான் என்னும் ஆன்ம வரன் மாட்டு ஒன்றித் தான் என்று அவன் என்று சொல்ல இரண்டு அற்ற நிலை தானே சிவம் ஒன்று கற்பின் சிறப்பு.

**997. யானவனென் றோது மிருவகைநோக் கொன்றியவம்
மோனமுயக் கிற்பேச்சு மூச்சுண்டோ - நானறவே
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.**

யான் அவன் என்று ஓதும் இருவகை நோக்கு ஒன்றிய அம் மோன முயக்கில் பேச்சு மூச்சு உண்டோ நான் அறவே கண்ணொடு கண் இணை நோக்கு ஒக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல.

**கண்-அறிவு.**

உபாதியுணர்வாங் கற்பனையால் வேறுபட வோதுங் குருசீட பாவ மிரண்டும் மெய்ம்மையாமான்ம பாவத்தா லொன்றுபட்ட ஞானவரம்பா மோனக் கலப்பிற் பேச்சுமூச்சுச் சிறிதுமுண்டோ? பேதபாவம் பிறக்கக் காரணமாய் நின்ற அகந்தை யறலால் அவ்விருவர் மதிகளும் ஒன்றோ டொன்று உண்மைத்திறத்தா லொத்தொழியுமாயின், அவர்தம்முட் பரமார்த்தந் தோன்ற நிகழும் ஓதல் கேட்டலாம் வாய்ச்சொற்கள் ஒருபயனு முடையவல்ல.

**வி-ரை :-** உண்மைத் திறத்தாலொத்தல்-உளதாதல் மாத்திரமா யமைதல். வாய்ச்சொற்கள்-உள்ளத்தின்க ணுறாது வாயளவிற் றோன்றுகின்ற சொற்கள். உபதேசமுறையா லுண்டாகும் மோனநிலையா மத்துவிதானுபவம் முன்னமே விளைந்து விட்டமையின் அவைதாம் உலகியலை யொத்து நடைபெறுவன வாகக் கொள்வ தன்றி உண்மையிற் பயன் குறித்தனவாகக் கொள்ளப்படா வென்பதாம்.

## 998. அணைந்தோ ரியல்பை யணைந்தோ ரறிவர்
## அணையார்மற் றெவ்வா றறிவர் - அணைந்தோ
## ரியல்புதே னுண்டதே னீப்போலத் தம்மி
## னயலறியா மாண்புடைத் தாம்.

அணைந்தோர் இயல்பை அணைந்தோர் அறிவர் அணையார் மற்று எவ்வாறு அறிவர் அணைந்தோர் இயல்பு தேன் உண்ட தேனீப் போலத் தம்மின் அயல் அறியா மாண்பு உடைத்தாம்.

வஸ்துவணைந்தோர் இயல்பு தேனையுண்ட தேனீப்போல பிறரால் அறியப்படாத மாண்புடைத்தது. அவர் அன்னியத்தைக் காணாததாலும் அவ்வாறாகும். அணைந்தோர் இயல்பை அணைந்தோரே அறிவார்; அணையார் அறிவது எவ்வாறென்றார்.

## 999. அணைந்தவர்தம் மாலு மனுபவித்த லன்றி
## அணைந்தசுகஞ் சிந்திப் பரிதால் - அணைந்தவரவ்
## வானந்தா தீதத் தகந்தை யறிவழிந்து
## மோனந்தா மார்ந்த முறை.

அணைந்தவர் தம்மாலும் அனுபவித்தல் அன்றி அணைந்த சுகம் சிந்திப்பு அரிதால் அணைந்தவர் அவ் ஆனந்தாதீதத்து அகந்தை அறிவு அழிந்து மோனம் தாம் ஆர்ந்த முறை.

அகந்தை அறிவழிந்து, ஆனந்தா தீதமான மோனத்தில் அணைந்தவரும், அஃதை அநுபவித்தலன்றி அச்சுகத்தைச் சிந்திப்பதரிதாம்; அம்முறையைச் சிந்தித்தலும் அவ்வாறே.

## 25. சைதன்யமாட்சித்திறன்

**1000. அகங்கார மாஞ்சுட் டறிவா னயல்போற்**
**சகங்காணு ஞானஞ் சடமே - அகங்காரம்**
**செத்தாற் றுலங்குமே சித்தமூ லத்துணர்வாம்**
**சுத்தாத் துவிதச் சுடர்.**

அகங்காரம் ஆம் சுட்டு அறிவான் அயல்போல் சகம் காணும் ஞானம் சடமே அகங்காரம் செத்தால் துலங்குமே சித்த மூலத்து உணர்வு ஆம் சுத்த அத்துவிதச் சுடர்.

**1001. சத்தேசித் தாகத் தழைத்தலாற் கேவலசச்**
**சித்தளவாச் சித்தமறத் தீரளவும் - அத்துவிதச்**
**சிற்பரமா முண்மை சிதாபாசக் கற்பனைசே**
**ரற்பமதி காண்ட லரிது.**

சத்தே சித்து ஆகத் தழைத்தலால் கேவல சத் சித்து அளவாச் சித்தம் அறத் தீர் அளவும் அத்துவிதச் சித்பரம் ஆம் உண்மை சிதாபாசக் கற்பனை சேர் அற்ப மதி காண்டல் அரிது.

**1002. திகந்தபூர் வத்திற் றினகரனேய் மட்டே**
**இகந்தனிலவ் விந்து விறுமாப் - பகந்தை**
**மயலுணர்வோ யச்சின் மயவுணர்வேய் மட்டே**
**உயிருணர்வின் வீறாப் புணர்.**

திகந்த பூர்வத்தில் தினகரன் ஏய் மட்டே இகம் தனில் அவ் இந்து இறுமாப்பு அகந்தை மயல் உணர்வு ஓயச் சின்மய உணர்வு ஏய் மட்டே உயிர் உணர்வின் வீறாப்பு உணர்.

**திகந்த பூர்வத்தில்-கிழக்கு அடிவானத்தில்; தினகரன்-சூரியன்; ஏய்-வரும்; இகம் தனில்- இவ்வுலகத்தில்; இந்து-சந்திரன்.**

இவ்வுலகிற் சந்திரன் கருவமுடையனாதல் கீழ்த்திசைக்கோடியிற் பகலவனுதிக்கும் பரியந்தமே; அதுபோன்று, ஜீவபோதச் செருக்குக் குலையாது நிற்றலும் மனத்துளடைந்த மயக்கம் அறவே யின்றாகச் சிவபோதஞ் சேருமளவேயாம்.

**வி-ரை :-** பூர்வ திகந்த மெனற்பாலது முன்பின்னாக மாறி நின்றது. சின்மயம்: சிவசொரூபம். இருட்கணன்றி மதிக்கு விளக்க மின்மையின் கதிரவனெழுச்சியா லிருளகறலும் மதியொளி மங்குதல் போல, அவிச்சையினன்றிச் ஜீவபோதத்துக்குச் சிறப்பின்மையின், சிவபோதஞ் சேர்தலா லவிச்சை கெடலும் ஜீவபோதச் செருக்குக் குலைந்தழியு மென்பதாம்.

**1003. உதயாத் தமன முறாதசிதா காச**
**இதயாத் துமப்பே ரிரவிக் - கெதிரே**
**அகன்ஞாலத் தான்ம வறிஞர்மனம் பட்டப்**
**பகன்மதியங் காணும் பரிசு.**

உதய அத்தமனம் உறாத சிதாகாச இதய ஆத்துமப் பேர் இரவிக்கு எதிரே அகன்ஞாலத்து ஆன்ம அறிஞர் மனம் பட்டப் பகல் மதியம் காணும் பரிசு.

**அகன் ஞாலத்து-பரந்த உலகத்தில்; மதியம்-சந்திரன்;பரிசு-போன்று உள்ளது.**

**1004. இலகுகண் ணாடியொளி யேய்க்கு மயல்சேர்**
**உலகை யொளிர்விக்கு முள்ளம் - குலவும்**
**கதிரொளியே கண்டீரவ் வுள்ளத்தி னுண்மை**
**உதிதருபே ரான்ம வொளி.**

இலகு கண்ணாடி ஒளி ஏய்க்கும் மயல் சேர் உலகை ஒளிர்விக்கும் உள்ளம் குலவும் கதிர் ஒளியே கண்டீர் அவ் உள்ளத்தின் உண்மை உதிதரு பேர் ஆன்ம ஒளி.

**ஏய்க்கும்-போன்ற ; உள்ளம்-மனம் ; உதிதரு-உதிக்கின்ற.**

## 26. பூமாமாட்சித்திறன்

### (இன்னிசை வெண்பா)

**1005. எந்நிலையி லொன்றை யெதிரிட்டுக் காண்பதிலை**
**எந்நிலையி லொன்றை யெதிரிட்டுக் கேட்பதிலை**
**எந்நிலையி லொன்றை யெதிரிட் டறிவதிலை**
**அந்நிலையே பூமா வறி.**

எந்நிலையில் ஒன்றை எதிரிட்டுக் காண்பது இலை எந்நிலையில் ஒன்றை எதிரிட்டுக் கேட்பது இலை எந்நிலையில் ஒன்றை எதிரிட்டு அறிவது இலை அந்நிலையே பூமா அறி.

''யத்ர ந அன்யத் பச்யதி யத்ர ந அன்யத் ச்ருணோதி, தத் பூமா'' என்பது ச்ருதி வாக்கு.

### (நேரிசை வெண்பா)

**1006. காட்சியுங் கேள்வியுங் காணும் பரிச்சின்ன**
**மாட்சி யுடையபிர மாதாவும் - வீழ்ச்சியுறு**
**மத்துவித ஞான வபரிமித பூமாவே**
**சுத்தவுப சாந்த சுகம்.**

காட்சியும் கேள்வியும் காணும் பரிச்சின்ன மாட்சி உடைய பிரமாதாவும் வீழ்ச்சி உறும் அத்துவித ஞான அபரிமித பூமாவே சுத்த உபசாந்த சுகம்.

பூமாவின் இலக்கணம் கூறுகிறார். அஃது சுத்த வுபசாந்த சுகநிலையாதலின், இரண்டற்ற பூரண மென்பதாம். அங்கு பரிச்சின்னமாய் அநுபவமுறும் ஜீவான்மா எள்ளளவும் இலதாதலின், உண்முகக் காட்சியில் திளைக்கும் மாட்சியுடைய பரிபக்குவ ஜீவனும் தனித்திலை யென்பது நுட்பமாம். இது பற்றியே பந்தனுமிலை, முக்தனுமிலை, பந்த முத்திகளுமிலை யெனச் சொரூபத்தைக் கூறினர்.

## 27. ஞானவெளித்திறன்

**1007. பூதலத்தே யோடோடிப் புண்ணியரைக் கண்டிறைஞ்சி**
**ஆதரத்தோ டுண்மையினை யாராய்வீர் - மாதவத்தோர்**
**திட்டமுறச் சிந்திக்குஞ் செம்பொருளைச் சோதித்தால்**
**வெட்டவெறு ஞான வெளி.**

பூதலத்தே ஓடோடிப் புண்ணியரைக் கண்டு இறைஞ்சி ஆதரத்தோடு உண்மையினை ஆராய்வீர் மா தவத்தோர் திட்டம் உறச் சிந்திக்கும் செம்பொருளைச் சோதித்தால் வெட்டவெறும் ஞான வெளி.

**இறைஞ்சி-பணிந்து; ஆதரத்தோடு-பக்தியோடு.**

**1008. காசினியைச் சுற்றிக் கடுக வலம்புரிந்து**
**தேசிகரைத் தேடிப்போஞ் சீடர்கட் - காசிரியத்**
**தந்தைமார் காட்டித் தருவதுதான் கண்டக்கால்**
**விந்தைசேர் ஞான வெளி.**

காசினியைச் சுற்றிக் கடுக வலம் புரிந்து தேசிகரைத் தேடிப்போம் சீடர்கட்கு ஆசிரியத் தந்தைமார் காட்டித் தருவதுதான் கண்டக்கால் விந்தை சேர் ஞான வெளி.

**காசினி-உலகம்; கடுக-விரைவில்.**

**1009. அங்கிங் கலமந் தலைந்த வலைச்சலறத்**
**தங்குசர ணான சதாகதிதான் - பங்கமறு**
**சச்சித்தா வோங்குசிவ தற்பரமாம் போதகுரு**
**விச்சைத் துரீய வெளி.**

அங்கு இங்கு அலமந்து அலைந்த அலைச்சல் அறத் தங்கு சரண் ஆன சதாகதிதான் பங்கம் அறு சத் சித்தா ஓங்கு சிவ தத்பரம் ஆம் போத குரு விச்சைத் துரீய வெளி.

**விச்சை-விந்தை, ஆச்சரியமான.**

**1010. சட்டை யுரித்திட்ட சர்ப்பமெனச் சங்கற்பக்**
**கட்டை யொழிக்குங் கலங்காத - நிட்டையிடை**
**முற்ற முடிய முயன்றால் வெளிப்படுதல்**
**வெற்றவெறு ஞான வெளி.**

சட்டை உரித்திட்ட சர்ப்பம் எனச் சங்கற்பக் கட்டை ஒழிக்கும் கலங்காத நிட்டையிடை முற்ற முடிய முயன்றால் வெளிப்படுதல் வெற்றவெறும் ஞான வெளி.

**1011. அடர்ந்தமுளி காடொன் றகண்டமாய்ப் பற்றிப்**
**படர்ந்தெரிய லுற்ற பரிசாம் - கடந்த**
**சிதாபாச சீவனறச் செத்தசுடு காடாம்**
**சிதாகாய சோதிச் சிறப்பு.**

அடர்ந்த முளி காடு ஒன்று அகண்டமாய்ப் பற்றிப் படர்ந்து எரியல் உற்ற பரிசு ஆம் கடந்த சிதாபாச சீவன் அறச் செத்த சுடு காடு ஆம் சிதாகாய சோதிச் சிறப்பு.

**முளி-முற்றும் உலர்ந்த முள்ளி.**

வற்றன் மரமடர்ந்த தொரு பெருங்காடு தீப்பற்றி நாற்புறமும் படர்ந்து எல்லையறக் கொழுந்து விட்டெரியக் கண்டாற் போல்வதாம், சிச்சடமாஞ் சீவன், உடலகந்தையாஞ் சடவியையு பொன்றக் கெட்டு ஞானாங்கியாற் கொளுவுண்டெரியும் மாப்பெருஞ் சுடுகாடாம் சிதாகாயத்தின் சிறந்த சோதிக் காட்சி.

**1012. நானென்னு ஞானமஞ் ஞானமாத் துஞ்சவெறுந்**
**தானென்னு மோனமே தக்கதுகாண் - ஏனென்னக்**
**கேட்கிலோ வுண்மை கிலேசத்துக் கேதுவா**
**வேட்கவொன் றில்லா வெளி.**

நான் என்னும் ஞானம் அஞ்ஞானமாத் துஞ்ச வெறும் தான் என்னும் மோனமே தக்கது காண் ஏன் என்னக் கேட்கிலோ உண்மை கிலேசத்துக்கு ஏதுவா வேட்க ஒன்று இல்லா வெளி.

**துஞ்ச-அழிய; வேட்க-விரும்ப.**

ஒன்றை விரும்பி யடையாததே கிலேசமாதலின், பிறவித்துயர் நீங்கத் தானெனும் மோனமே தக்க வுபாயமென்றார். அவ்வுண்மை வெளியில் தனக்கயலாக வேட்கக்கூடும் பொருளேது மின்மையின்.

**1013. குற்றங் கெடுக்குங் குருவருளா லல்லான்மற்**
**றெற்றாலுங் காண்ட லெளிதன்றே - மற்றாதும்**
**மாணக் கிடையாத மாட்சிசேர் மெய்ஞ்ஞான**
**வானத் தலத்தின் வளம்.**

குற்றம் கெடுக்கும் குரு அருளால் அல்லால் மற்று எற்றாலும் காண்டல் எளிது அன்றே மற்று யாதும் மாணக் கிடையாத மாட்சி சேர் மெய்ஞ்ஞான வானத் தலத்தின் வளம்.

**1014. வானத் தலத்தின் வளங்கண்டார் பேரின்ப**
**மோனச் சிவமா முடிகுவார் - மானச்**
**செருக்கோடு மற்றைச் செருக்காலே மேன்மேற்**
**பெருக்கும் பிறப்புப் பெயர்ந்து.**

வானத் தலத்தின் வளம் கண்டார் பேர் இன்ப மோனச் சிவமா முடிகுவார் மானச் செருக்கோடு மற்றைச் செருக்காலே மேல்மேல் பெருக்கும் பிறப்புப் பெயர்ந்து.

**மானச் செருக்கு-நான் தேகம் என்னும் தேகாபிமானச் செருக்கு; மற்றைச் செருக்கு-எனது என்னும் செருக்கு.**

**1015. உண்டுயிர்த்துக் கண்டுகேட் டுற்றுணரு மைம்புலனாம்**
**பண்டமெலாஞ் செய்யப் படுபொருளாக் - கொண்ட**
**பயனிலையா நின்றபரா சத்திக் கெழுவாய்**
**வியனிலையா ஞான விசும்பு.**

உண்டு உயிர்த்துக் கண்டு கேட்டு உற்று உணரும் ஐம்புலன் ஆம் பண்டம் எலாம் செய்யப்படு பொருளாக் கொண்ட பயனிலையா நின்ற பரா சத்திக்கு எழுவாய் வியன் நிலை ஆம் ஞான விசும்பு.

**உயிர்த்து-மணம் நுகர்ந்து; உற்று-தொட்டு; வியன்-ஆச்சரியமான.**

## 28. சிற்றம்பலத்திறன்

**1016. எங்கெங்குந் தானா யிருந்தொளிர்சிற் றம்பலத்தை**
**அங்கிங்குந் தேடி யலைந்திடுதல் - பங்கமுறும்**
**பான்மதியின் மேதகவாற் பட்டப் பகலிடையே**
**வான்சுடரைத் தீத்துரீஇ யற்று.**

எங்கு எங்கும் தானா இருந்து ஒளிர் சிற்றம்பலத்தை அங்கு இங்கும் தேடி அலைந்திடுதல் பங்கம் உறும் பால்மதியின் மேதகவால் பட்டப் பகலிடையே வான் சுடரைத் தீத் துரீஇ அற்று.

**பால் மதி-பூரண சந்திரன்; மேதகவு-மேன்மை; தீ-தீப்பந்தம்; துரீ-தேடுதல்.**

**1017. அகமும்பொய் யல்லா விதமும்பொய் யந்த
அகமிதத்தைக் காணு மறிவும் - மிகவும்பொய்
முப்புடியுந் தோற்றலுறு மூலப் பகுதியும்பொய்
அற்புதச்சிற் றம்பலமே மெய்.**

அகமும் பொய் அல்லா இதமும் பொய் அந்த அகம் இதத்தைக் காணும் அறிவும் மிகவும் பொய் முப்புடியும் தோற்றல் உறு மூலப் பகுதியும் பொய் அற்புதச் சிற்றம் பலமே மெய்.

யானென்னுங் காண்பானும் பொய்யாம். அவனாலிதுவெனச் சுட்டிக் காணப்படு பொருளாம் விடயமும் பொய்யாம். அக்காண்பான் அவ்விடயத்தைக் காணுங் கருவியாய் நின்றவறிவும் அவ்வாறே மிகவும் பொய்யாம். அவையே யன்றி அந்த முப்புடிகளும் தோன்றற்கிடனாய் நின்ற மூலப் பகுதியும் பொய்யாம். அறிவு வடிவாஞ் சிற்றம்பல மொன்றே மெய்யாம்.

**வி-ரை :-** அற்புதம்-அறிவு, என்றது உளதாதன் மாத்திரமா யொளிரும் விசுத்த வெளியான அவிசேட வறிவையாதலின், முன்னர் அறிவும் பொய்யென விசேடங் கருதியவதனோடு இது மாறுபடாமை யறிக. சிறுமை-நுண்மை, சிற்றம்பலம்-தகராகாயம், இதயாகாயம், சிதாகாயம் என்பனவு மது; அதுவே ஆன்ம சொரூபமாய் அவிரு மிறைவ னுண்மை வடிவாம்.

**1018. பம்பிப் பரந்த பலவுலகுந் தோற்றுஞ்சிற்
றம்பலமாந் தந்நிலைபொய் யாயொழிய - ஐம்புலத்தாற்
காண்பனதா மெய்யாக் கருதிக் கலங்குவார்
மாண்பய னெய்த லரிது.**

பம்பிப்பரந்த பல உலகும் தோற்றும் சிற்றம்பலம் ஆம் தம் நிலை பொய்யா ஒழிய ஐம்புலத்தால் காண்பன தாம் மெய்யாக் கருதிக் கலங்குவார் மாண் பயன் எய்தல் அரிது.

**பம்பி-செறிந்து, நிறைந்து விரிந்த.**

**1019. சித்தமலங் கெட்டுச் சிவமயமாய்த் தாமொளிரும்
வித்தகர்தா மல்லாமல் வேறாரே - உய்த்துணர்வார்
குற்றங் குறையொன்றுங் கூடாப் பெருமைசால்
சிற்றம் பலத்தின் சிறப்பு.**

சித்த மலம் கெட்டுச் சிவமயமாய்த் தாம் ஒளிரும் வித்தகர்தாம் அல்லாமல் வேறு ஆரே உய்த்து உணர்வார் குற்றம் குறை ஒன்றும் கூடாப் பெருமை சால் சிற்றம்பலத்தின் சிறப்பு.

# 29. அறிவுறுத்ததிறன்

**1020. அன்னதா லந்தச்சிற் றம்பலமே யாராலும்
பன்னலா காமெய்ப் பரசிவமாம் - என்னவே
தேர்வித்தா னென்னைச் சிவமயமாந் தன்னிலையைச்
சீர்வித் தகரமண தேவு.**

அன்னதால் அந்தச் சிற்றம்பலமே யாராலும் பன்னல் ஆகா மெய்ப் பரசிவம் ஆம் என்னவே தேர்வித்தான் என்னைச் சிவமயம் ஆம் தன்நிலையைச் சீர் வித்தக ரமண தேவு.

**பன்னல் ஆகா-விவரிக்க இயலாத.**

**1021. தன்னுருவாம் போழ்தத்துத் தன்னுருவாந் தானத்துத்
தன்னுருவாந் தானெய்தத் தானுவந்து - தன்னுருவாம்
தன்னைத் தனதுருவாந் தான்காட்டித் தந்திடலும்
தன்னுருவாந் தன்னையுணர்ந் தான்.**

தன் உருவாம் போழ்து அத்துத் தன் உருவாம் தானத்துத் தன் உருவாம் தான் எய்தத் தான் உவந்து தன் உருவாம் தன்னைத் தனது உருவாம் தான் காட்டித் தந்திடலும் தன் உருவாம் தன்னை உணர்ந்தான்.

# 30. ஆன்மநிலைத்திறன்

**1022. உலகை யொளிர்வித் தொளிக்குமகங் காரம்
இலகுதன் மூலமே தென்றுட் - குலவுமுளத்
தூக்கமொடு வீறி யொளிருந்தற் போதமே
நீக்கமறு தன்மெய்ந் நிலை.**

உலகை ஒளிர்வித்து ஒளிக்கும் அகங்காரம் இலகு தன் மூலம் ஏது என்று உள் குலவும் உளத்து ஊக்கமொடு வீறி ஒளிரும் தத் போதமே நீக்கம் அறு தன் மெய்ந் நிலை.

**ஒளிக்கும்-ஒளிந்துகொண்டிருக்கும்; வீறி-மிகுந்து; தற்போதம்-தத்போதம், பிரம்மபோதம், ஆன்ம போதம்.**

**1023. சுட்டுணர்வாற் றன்முன்னர்த் தோற்றும் பிறவற்றைச்
சுட்டுணர்வா லேங்கிச் சுழலாதே - துட்டமனம்
சுட்டுணர்நா னாரெனத்தற் சுட்டியுசாய்த் தன்மெய்க்கண்
நிட்டையே யுண்மை நிலை.**

சுட்டு உணர்வால் தன் முன்னர்த் தோற்றும் பிறவற்றைச் சுட்டு உணர்வால் ஏங்கிச் சுழலாதே துட்ட மனம் சுட்டு உணர் நான் ஆர் எனத் தன் சுட்டி உசாய்த் தன் மெய்க்கண் நிட்டையே உண்மை நிலை.

**தன்மெய்க்கண்-தன் நிஜசொரூபமான ஆன்மாவில்.**

## 1024. எந்நிலையிற் போனாலு மெந்நிறத்தில் வந்தாலும்
## தந்நிலையிற் றாமிருப்பார் தக்கோர்கள் - தந்நிலையே
## மெய்ந்நிலையா மல்லாமல் வேற்று நிலையனைத்தும்
## பொய்ந்நிலையே யன்றோ புகல்.

எந்நிலையில் போனாலும் எந்நிறத்தில் வந்தாலும் தம் நிலையில் தாம் இருப்பார் தக்கோர்கள் தம் நிலையே மெய்ந்நிலை ஆம் அல்லாமல் வேற்று நிலை அனைத்தும் பொய்ந்நிலையே அன்றோ புகல்.

**எந்நிலையில்-எவ்வாசிரமத்தில்; எந்நிறத்தில்-எவ்வருணத்தில்;**
**தக்கோர்-ஆன்ம ஞானிகள்.**

### (கலி விருத்தம்)

## 1025. ஆன்மநிலை யொன்றேமெய் யன்புநிலை யல்லால்
## வான்முளரி போற்பரத்து வைகுநிலை யெல்லாம்
## கானலுறு நீர்நிலைபோற் கற்பனையாற் றோன்றி
## மேன்மயலை யூட்டுமன மித்தைநிலை தாமே.

ஆன்ம நிலை ஒன்றே மெய் அன்பு நிலை அல்லால் வான் முளரி போல் பரத்து வைகு நிலை எல்லாம் கானல் உறும் நீர் நிலை போல் கற்பனையால் தோன்றி மேல் மயலை ஊட்டும் மன மித்தை நிலை தாமே.

**வான் முளரி-பிரம்ம லோகம் அல்லது ஆகாயத் தாமரை.**

உண்மை மாத்திரமா மான்மாவில் அதன் மயமாய் நிற்றலொன்றே உண்மையில் அன்பு பாராட்டலாகு நிலையாமன்றி, ஆன்ம நோக்கத்திலறவே யின்மையால் ஆகாயத்தினுற்ற தாமரையலர்போல் உண்மையில் அத்தியந்தாபாவமாம் ஏனை யனான்ம நிலைகள் யாவும், சீவ நோக்கத்தில் வழங்கலால் கானலினுற்ற நீர்நிலைபோல் அப்பர சொரூபமாஞ் சிதாகாயத்திற் சித்தக் கலக்கமாங் கற்பனையாற் புலப்பட்டு, அவற்றைத் தமக்கயலா யுண்மையென மயங்கிச் சுட்டறிவாலுற்று நோக்கி யுவப்பார்க்கு வீணிற் பிறவித் துன்பத்துக் கேதுவா மனமயக்கத்தை மேன்மேலு முண்டுபண்ணும், உண்மையி லன்பற்ற போலி நிலைகளே யாம்.

**(நேரிசை வெண்பா)**

**1026. இயல்பாந்தன் மெய்யேபே ரின்பா யிருந்தும்
மயல்பாய வஞ்ச மனத்தால் - அயல்போய்
நிதநையா நின்றின்ப நேடலே யின்பாம்
அதனை யிழப்பிப்ப தாம்.**

இயல்பு ஆம் தன் மெய்யே பேர் இன்பாய் இருந்தும் மயல்பு ஆய வஞ்ச மனத்தால் அயல் போய் நித நையா நின்று இன்பம் நேடலே இன்பு ஆம் அதனை இழப்பிப்பது ஆம்.

**மயல்பு ஆய-மயக்கம் பொருந்திய; நையாநின்று-வருந்தி; நேடல்-தேடுதல்.**

சுபாவமாந் தன் சொரூபமே பேரின்ப வடிவாயிருந்தும், அவ்வுண்மை யுணராது மயக்கம் பொருந்திய வஞ்ச மனத்தால், அவ்வின்பந்தான் அநான்ம விடயங்களி னுள்ளது போல் அவற்றை யவாவிச் சென்று அதனை என்றும் வருந்தித் தேடலே, ஆன்மாநுபவமா மவ்வின்ப நுகர்ச்சியை அறியா தகல்விப்பதாம்.

**வி-ரை :-** தூங்கி விழித்தோன், சுகமாய்த் தூங்கினே னென்று தானநுபவித்த வுண்மையே கூறலால், விடயச் சேர்க்கையற்றுச் சித்தம் வெறிதிருக்கும் சுழுத்தியாஞ் சுபாவ நிலையில் ஆன்மா சுகசொரூப மாதல் யாவர்க்கு மொப்ப முடிந்ததாம். அந்நிலையிற் றன்னியல்பாயிருந்த அவ்வின்பம் துயிலுணர்ந்ததும் தோன்றா தொழியக் காரணம், இன்ப வடிவாம் தன்னியல் மறந்து தன்னிலையிற் பிரிந்து விடயங்களை விரும்பியோடும் வேட்கையேயாம். ஆதலால், மோகத்தாலுண்டாம் விடயவேட்கையான் மனமலையாது, தன்னைத் தா னறிந்தமைந்து, விழிப்பிலும் சுழுத்திபோற் சாந்தமாய்ப் பிரமாதமற விளங்கி, தனது நிஜாநுபவமாம் நிரதிசயானந்தப் பேறடைக வென்பதாம்.

**1027. ஆன்மரச மொன்றே யதிரசமென் றாய்ந்ததனால்
ஆன்மநிலை நின்றா ரறிவுடையார் - ஆன்மசுகம்
ஒன்றா வுயர்ந்த வுறுதியென் றோராதார்
நின்றா ருலக நிலை.**

ஆன்ம ரசம் ஒன்றே அதிரசம் என்று ஆய்ந்து அதனால் ஆன்மநிலை நின்றார் அறிவு உடையார் ஆன்ம சுகம் ஒன்றா உயர்ந்த உறுதி என்று ஓராதார் நின்றார் உலக நிலை.

**(குறள் வெண்பா)**

**1027. *தன்மெய் யுருவுளத்துத் தானுணரி னாதிமுடி*
a *வின்றிநிறை வாஞ்சச்சித் தின்பு.***

***-பகவான்***

தன் மெய் உரு உளத்துத் தான் உணரின் ஆதி முடிவு இன்றி நிறைவு ஆம் சத் சித்து இன்பு.

**(நேரிசை வெண்பா)**

**1028. தந்தமுரு வின்பமெனத் தாமுணர மாட்டாரே**
**கந்தமிரு கம்போற் கலங்குவார் - தந்தமுரு**
**நன்றா யுணர்கிற்பார் ஞாலத்தை நாடாது**
**நின்றார் தமது நிலை.**

தம்தம் உரு இன்பம் எனத் தாம் உணரமாட்டாரே கந்த மிருகம் போல் கலங்குவார் தம் தம் உரு நன்றாய் உணர்கிற்பார் ஞாலத்தை நாடாது நின்றார் தமது நிலை.

**கந்த மிருகம்-கஸ்தூரி மான்.**

**1029. சுகமென்ப தான்ம சொரூபமே யான்ற**
**சுகமன்றி யில்லை சொரூபம் - சுகமென்ப**
**தொன்றே யுளதவ் வுறுதியுணர்ந் தான்மநிலை**
**நின்றேதுய் யின்ப நெடிது.**

சுகம் என்பது ஆன்ம சொரூபமே ஆன்ற சுகம் அன்றி இல்லை சொரூபம் சுகம் என்பது ஒன்றே உளது அவ் உறுதி உணர்ந்து ஆன்மநிலை நின்றே துய் இன்பம் நெடிது.

**நெடிது-எப்போதும்.**

சுகமென்று சொல்லப்படுவது ஆன்ம சொரூபமே. நிறைந்த சுகமே தானாவதல்லது ஆன்ம சொரூபம் அதனிற் சற்றும் பிரிந்திருப்பதில்லை. ஆன்ம சுகமொன்றே உண்மையிலுளதாவது. அவ்வுண்மையை உரம்பட வுணர்ந்து ஆன்ம நிலைக்கணகலாது நின்று அவ்வான்ம சுகமே அநவரதந் துய்ப்பாயாக.

**வி-ரை :-** மலர்மிசை யேகினா னென்னுங் குறளில் நீடு என்பது போல, ஈண்டு நெடிது என்பதும் நெடுங்கால மெனப் பொருள் படாது என்று மொரு தன்மைத்தாய் எனப் பொருள் பட்டு நின்றது.

## 31. ஆன்மவலத்திறன்

**(20) *அறிவுண்மை நிட்டனா மான்மவித் தாவா***
***னறிவாற் புலன்செற்றா னார்தா - னறிவங்கி***
***யாவனறி வாங்குலிசத் தான்கால காலனவன்***
***சாவினைமாய் வீரனெனச் சாற்று.***

***-பகவான்***

அறிவு உண்மை நிட்டனாம் ஆன்ம வித்து ஆவான் அறிவால் புலன் செற்றான் ஆர் தான் அறிவு அங்கி ஆவன் அறிவு ஆம் குலிசத்தான் காலகாலன் அவன் சாவினை மாய் வீரன் எனச் சாற்று.

**அறிவங்கி-ஞானாக்கினி; குலிசம்-வஜ்ராயுதம்; குலிசத்தான்-இந்திரன்.**

## 1030. அடங்கலற்று மீக்கிளர்ந்த வான்மநிட்டை யாலைந்
## துடங்குசெற்ற ஞானவுர வோனே - மடங்கலற்ற
## கூற்றடர்த்த ஞான குலிசத்தான் மாச்சரியத்
## தோற்றமறு ஞானச் சுடர்.

அடங்கல் அற்று மீக்கிளர்ந்த ஆன்மநிட்டையால் ஐந்து உடங்கு செற்ற ஞான உரவோனே மடங்கல் அற்ற கூற்று அடர்த்த ஞான குலிசத்தான் மாச்சரியத் தோற்றம் அறு ஞானச் சுடர்.

**அடங்கல் அற்று-பிரமாதத்தால் தடைபடாமல்; மீக்கிளர்ந்த-மேலோங்கிய; உடங்கு-ஒருங்கு; மடங்கல் அற்ற-பின்வாங்காத; கூற்று-யமன்; அடர்த்த-கொன்ற, வென்ற; மாச்சரியம்-பொறாமை.**

## 1031. ஆறு பொறிவழியா யண்டமெலாங் கண்டாளும்
## வீறு படைத்தவக வெஞ்சூரைச் - சீறி
## மடக்கியித யத்து மடித்தோனே பேரின்
## படுக்குங் குமார னறி.

ஆறு பொறி வழியாய் அண்டம் எலாம் கண்டு ஆளும் வீறு படைத்த அக வெம் சூரைச் சீறி மடக்கி இதயத்து மடித்தோனே பேர் இன்பு அடுக்கும் குமாரன் அறி.

**ஆறுபொறி-ஆறாவது பொறியான மனம் உள்ளிட்ட; கண்டு-பார்த்து, சிருஷ்டித்து; வீறு-பலம்; சூரை-சூரனை; சீறி-கோபித்து; அடுக்கும்-பொருந்திய, உடைய.**

ஆறு பொறி வழியே அண்டமெலா மாராய்ந்து அவை யாவற்றின் மேலும் ஒருங்காட்சி செலுத்தும் வீறு படைத்த வகந்தையாங் கொடுஞ்சூரைப் புறம்போகா துளத்துள் மடக்கி வெகுண்டடர்த்துக் கொன்றொழித்தோனே நிரதிசயானந்த மடுக்குங் குமரனாம்.

**வி-ரை :-** மெய், வாய், கண், மூக்குச் செவிகளோடு மனத்தையுங் கூட்டப் பொறியாறாம். வீறு-வேறொருவர்க்கிலாச் சிறப்பு. சூரபதுமன் தேவர் கிளையை யோடோடத் துரத்தித்துரத்தி வருத்தியமையால் வெஞ் சூரெனவும், அவன்றா னாயிரத்தெட் டண்டங்களையும் பொது நீக்கித் தனித்தாண்ட வியப்புத் தோன்ற அண்டமெலா மெனவுங் கூறினார்.

'அகந்தையுண் டாயி னனைத்துமுண் டாகு
மகந்தையின் றேலின் றனைத்து - மகந்தையே
யாவுமா ம்.......' - உள்ளது நாற்பது - 26

எனவே அகந்தை யெழுச்சியே அகிலத் தோற்றமு மாதலாற் காண்டல் கற்பனையாப் படைத்தலுமாம். ''கண்ணலாற் காட்சியுண்டோ?'' ''மனத்தையன்றி யுலகுண்டோ?'' என வருவனவும் ஈண்டைக் காராய்ந்து கொள்க. கண்டாளுமென, உலகப் படைப்பளிப்புக்கே அகந்தை காரணமாதல் கூறினாரேனும், உபலக்ஷணத்தா லேனை யழிப்புக்கும் அது கொள்க. எனவே அயனரியர னென்னும் மூவருமாய்த் தானே நின்று அவர் முத்தொழில்களுந் தானே யாற்றுகின்ற வகந்தையை வீறுபடைத்தவகமென விசேடித்ததும் அகவெஞ் சூரென அதனைச்சூராக வுருவகஞ் செய்ததும் மிகப் பொருத்தமாதல் காண்க. அத்துணை யாற்றல் சான்ற வகந்தையை ஏற்றவிடனறிந்தெறிய வேண்டுமென்பார் மடக்கி யிதயத்து மடித்தோ னென்றார். ஆன்ம சூரிய னாட்சி செலுத்து மிதய மண்டலத்தில் கற்பனையா மகந்தை மதிவலி தொலையுமாறறிக. கடலோடா கால்வ னெடுந்தேர், கடலோடு நாவாயு மோடா நிலத்து (குறள்). தத்துவத்தில் சிவசத்திகள் முறையே சச்சித்தாகக் குமாரன் ஆனந்த சொரூபமாதலாற் பேரின் படுக்குங் குமாரனென்றார். இதனாலகந்தை வெற்றி யாலடையும் பயனிது வெனக் கூறப்பட்டது.

## 32. ஆன்மசொரூபத்திறன்

**1032. ஓவியமா மிந்த வுடலேநா மென்றிருப்பீர்**
**ஓவியந்தான் யாதேனு முன்னுமோ - ஆவியே**
**உன்னுவதூஉ முன்னா தொழிவதூஉ மாதலால்**
**அன்னதே நாமென் பது.**

ஓவியமாம் இந்த உடலே நாம் என்று இருப்பீர் ஓவியம்தான் யாதேனும் உன்னுமோ ஆவியே உன்னுவதூஉம் உன்னாது ஒழிவதூஉம் ஆதலால் அன்னதே நாம் என்பது.

**1033. உடம்புநா னென்னுமுயி ரவ்வுடல்வே றென்ன**
**உடம்பெனாக் கொண்டவ் வுயிருள் - நடம்புரியும்**
**வேறுயிரொன் றுண்டென்னின் மெய்யுயிரா மஃதன்றி**
**வேறுயிர்க ளுண்டோ விளம்பு.**

உடம்பு நான் என்னும் உயிர் அவ் உடல் வேறு என்ன உடம்பெனாக் கொண்டு அவ் உயிருள் நடம் புரியும் வேறு உயிர் ஒன்று உண்டு என்னின் மெய் உயிர் ஆம் அஃது அன்றி வேறு உயிர்கள் உண்டோ விளம்பு.

**1034. உலகுபுல னாகு முழியன்றி மற்றவ்**
**வுலகுபுல னாகா வுழியும் - மலியும்**
**அசரீரி யாகவுளை யாவொளிரு முண்மை**
**நிசவடிவ மாகு நினக்கு.**

உலகு புலன் ஆகும் உழி அன்றி மற்று அவ் உலகு புலன் ஆகா உழியும் மலியும் அசரீரி ஆக உளையா ஒளிரும் உண்மை நிச வடிவம் ஆகும் நினக்கு.

**உழி-சமயம், காலம்; உளையா-வருந்தாத, சுகமாய் உள்ள.**

உலகம் தோற்றமாகுங் காலத்தும், அஃது புலப்படாத சுழுத்தியிலும், அடிப்படையாகச் சரீர பந்தமின்றி விளங்குவது ஆன்மா வாகிய நித்ய வடிவாம். சுழுத்தியில் உலகம் மனம் இவை இன்மையின், சூன்யமே உளதென் போர் வாதம் மறுத்ததாம். சுழுத்தியிலும் நிஜபோதம் (சைதன்யம்) அழியாத அடிப்படை யாகும்.

## 1035. ஓரப் படுமுலக முண்மையே யாகவலா
## தோருமனக் கற்பனையா வுற்றொழிக - ஓரும்
## உணர்வுருவா நீயங் குளையன்றோ சுத்த
## உணர்வதுவே யான்ம வுரு.

ஓரப்படும் உலகம் உண்மையே ஆக அலாது ஒரும் மனக் கற்பனையா உற்று ஒழிக ஒரும் உணர்வு உருவா நீ அங்கு உளை அன்றோ சுத்த உணர்வு அதுவே ஆன்ம உரு.

**உளை-உள்ளாய்.**

## 1036. அறிவோ டறியாமை யற்றொழியத் தீர்வெற்
## றறிவான வுண்மையே யான்மா - செறிவாம்
## பிரஞ்ஞான மாமப் பிரம்ம சொரூபத்
## தொரஞ்ஞான மில்லை யுணர்.

அறிவோடு அறியாமை அற்று ஒழியத் தீர் வெற்று அறிவான உண்மையே ஆன்மா செறிவு ஆம் பிரஞ்ஞானம் ஆம் அப் பிரம்ம சொரூபத்து ஒர் அஞ்ஞானம் இல்லை உணர்.

**தீர்-தீர்ந்த, முடிவான; ஒர்-ஒருவித.**

## 1037. அஞ்ஞான மில்லா ததுமட்டு மன்றதுவே
## சுஞ்ஞான மான சொரூபமாம் - விஞ்ஞான
## பேதமெவ் வாறு பிறக்குமத னின்றதுசற்
## போதமல் லாதொழிந்த போது.

அஞ்ஞானம் இல்லாதது மட்டும் அன்று அதுவே சுஞ்ஞானம் ஆன சொரூபம் ஆம் விஞ்ஞான பேதம் எவ்வாறு பிறக்கும் அதனின்று அது சத் போதம் அல்லாது ஒழிந்த போது.

**1038. ஆன்மா தனக்கவ் வறிவு குணமன்றா
லான்மவுரு நிர்க்குண மாதலால் - ஆன்ம
வறிவு செயலன் றகர்த்தத் துவத்தால்
அறிவு சொரூபமே யாம்.**

ஆன்மா தனக்கு அவ் அறிவு குணம் அன்று ஆல் ஆன்ம உரு நிர்க்குணம் ஆதலால் ஆன்ம அறிவு செயல் அன்று அகர்த்தத்துவத்தால் அறிவு சொரூபமே ஆம்.

**1039. வேறொன்றைச் சற்றும் விரும்பா தெதுதானே
ஊறின் றுளனானென் றுள்ளொளிரும் - வீறொன்றும்
உண்மையள வாமந் நிருபா திகவுணர்வே
திண்மைசேர் தன்மெய்த் திறம்.**

வேறு ஒன்றைச் சற்றும் விரும்பாது எது தானே ஊறு இன்று உளன் நான் என்று உள் ஒளிரும் வீறு ஒன்றும் உண்மை அளவு ஆம் அந் நிருபாதிக உணர்வே திண்மை சேர் தன் மெய்த் திறம்.

**ஊறு-தடை; வீறு ஒன்றும்-திடமான.**

யாதொன்று, தன்னுண்மை காணப் பிறிதோ ரொளியைச் சற்றும் வேண்டாது, ‘உளனாகின்றேன் யான்’ எனத்தானே ஊனமின்றாயுள்ளத் தொளிருமோ, வீறுசான்ற, உளதாதன் மாத்திரமாம் அத்தகைய நிருபாதிக வுணர்வே உறுதி சேர்ந்த ஆன்ம சொரூப வுண்மையாம்.

**வி-ரை :-** யாதொன்றுளதாகின்றதோ, அதுவே யொளியாவது கொண்டு, வேறொன்றைச் சற்றும் விரும்பாதென்றும், அதுவே தன்னியல்பா லனைத்துள்ளுங் கலந்து நின்று அகண்டமாதலால் ஊறின் றொளிருமென்றும் கூறினார். உணர்வே ஒளியாக வுணர்க. வீறு-வேறொன்றற்கில்லாச் சிறப்பு.

**1040. ஞான விளக்கமா நண்ணுந்தன் னுண்மையைமற்
றூன விடயம்போ லோர்த்தலெவன் - நானெனும்பொய்த்
தன்மையறத் தன்னிற்றான் சாந்தமா நிற்கின்மெய்த்
தன்மைதா னாவொளிருந் தான்.**

ஞான விளக்கமா நண்ணும் தன் உண்மையை மற்று ஊன விடயம் போல் ஓர்த்தல் எவன் நான் எனும் பொய்த் தன்மை அறத் தன்னில் தான் சாந்தமா நிற்கின் மெய்த் தன்மை தானா ஒளிரும் தான்.

**1041. முப்புடிக ளாக முயங்குந் தொகைபலவுள்
எப்புடியுந் தன்னைவிட் டின்றேனும் - அப்புடியுள்
ஒன்றுமே தானன் றுவற்றுக் கெலாமிடனா
நின்றதே தன்மெய்ந் நிலை.**

முப்புடிகள் ஆக முயங்கும் தொகை பலவுள் எப்புடியும் தன்னை விட்டு இன்றேனும் அப்புடி உள் ஒன்றுமே தான் அன்று உவற்றுக்கு எலாம் இடனா நின்றதே தன் மெய்ந்நிலை.

பல தொகைப்பட, என்றும் ஒன்றை விட்டொன்று பிரியாது முத்திறத் தனவாகவே தோன்றும் விடயங்களுள் எத்திறமும் காண்பானாந் தன்னைத் தவிர்த்துத் தோன்றலின்றேனும் அம் மூன்றனு ளொன்றுமே தன்னுண்மை யுருவன்றாம். அவை யனைத்துந் தோன்றி மறைதற்கிடனாய்த் தன்மாத்திரமா யிருந்தொளிர நின்றதே தன்னுண்மை நிலையாம்.

**வி-ரை :-** முப்புடிகள்-காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்றாற் போன்ற முப்புடைப் பேதங்கள். அவைதாம் சீவ நோக்கத்திலன்றி ஆன்ம நோக்கத்தி லறவே யின்மையால் அவற்றுக்கெனாது உவற்றுக்கென மொழிந்ததாம். அம்முப்புடிகட்கும் ஆன்மாவுக்கும் இடைப்பட்ட வியை பினைத்தென இதனாற் கூறப்பட்டது.

**1042. மன்னுபரி பூரணமா மாட்சிசேர் தன்சொருபம்**
**துன்னவொரு சற்றுந் துவிதமிலை - தன்னைப்**
**புணர்வதுசற் போதம் புலம்பிறிதொன் றில்லை;**
**உணர்வதுவே தன்மெய் யுரு.**

மன்னு பரிபூரணம் ஆம் மாட்சி சேர் தன் சொருபம் துன்ன ஒரு சற்றும் துவிதம் இலை தன்னைப் புணர்வது சத்போதம் புலம் பிறிது ஒன்று இல்லை உணர்வு அதுவே தன் மெய் உரு.

**துன்ன-அடைய.**

**1043. சூக்கமாய்த் தூலமாய்ச் சூனியமாய்ப் பூரணமாய்**
**ஏக்கமா யேங்கா விறுமாப்பாய் - நோக்கலுறு**
**தொந்தமெலாந் தோற்றற் கிடனா யிருப்பதோர்**
**அந்தமிலாப் பேரறிவே யான்.**

சூக்கமாய்த் தூலமாய்ச் சூனியமாய்ப் பூரணமாய் ஏக்கமாய் ஏங்கா இறுமாப்பாய் நோக்கல் உறு தொந்தம் எலாம் தோற்றற்கு இடனாய் இருப்பது ஓர் அந்தம் இலாப் பேரறிவே யான்.

**நோக்கல் உறு-உணரப்படும்.**

**1044. பொய்யாகப் பஃறான் புறப்பட் டிருவினையும்**
**செய்யாமே செய்துழன்று சிந்தைதரும் - கையாற்றால்**
**எய்யாமே யெய்த்தற் கிடனா யிருப்பதொரு**
**மெய்யான சின்மயமே தான்.**

பொய்யாகப் பஃறான் புறப்பட்டு இருவினையும் செய்யாமே செய்து உழன்று சிந்தை தரும் கையாற்றால் எய்யாமே எய்த்தற்கு இடனாய் இருப்பது ஒரு மெய் ஆன சின்மயமே தான்.

**பஃறான்-பலவாக; கையாற்றால்-துன்பத்தால்; எய்யாமே-வருந்தாமல்; எய்த்தற்கு-வருந்துதற்கு.**

## 1045. இருக்கின்றே னென்னு மியல்பளவா யூனச்
## செருக்கின்றா முண்மைத் தெளிவாய் - அருக்கன்றான்
## மானவே தான்றானாய் மன்னி விளங்கிதய
## வானமே யான்மா மதி.

இருக்கின்றேன் என்னும் இயல்பு அளவாய் ஊனச் செருக்கு இன்று ஆம் உண்மைத் தெளிவாய் அருக்கன்தான் மானவே தான் தானாய் மன்னி விளங்கு இதய வானமே ஆன்மா மதி.

**மானவே-போலவே.**

இருக்கின்றேனென்னும் உளதாமியற்கை மாத்திரமாயும் நானென்னும் பரிச்சின்னாகங்காரப் பற்றற விளங்கும் அவ்வுண்மை விளக்கமாயும் என்றிவ்வாறு கதிரவன் போன்று தான்றானாய் என்று மொருபடித்தா யிருந்தொளிரும் இதயவானமே ஆன்ம சொரூபமாம்.

## 1046. அதிசூக் குமமெய் யறிவொளியா யிஃதென்
## றெதிர்சுட் டகந்தை யிலதாய் - மதிசோர்ந்
## தறிந்திலே னென்ன வழுங்குவதாய் மோனஞ்
## செறிந்துளதே யான்மசச் சித்து.

அதி சூக்கும மெய் அறிவு ஒளியா இஃது என்று எதிர் சுட்டு அகந்தை இலது ஆய் மதி சோர்ந்து அறிந்திலேன் என்ன அழுங்குவது ஆய் மோனம் செறிந்து உளதே ஆன்ம சத் சித்து.

### (குறள் வெண்பா)

## 1047. அசைபடக் காட்சி யகிலமு மான்மா
## வசைவறு முண்மை யுணர்வு.

அசைபடக் காட்சி அகிலமும் ஆன்மா அசைவு அறும் உண்மை உணர்வு.

ஆதாரத் திரையும் அசைபடக் காட்சியும் ஆன்மாவே யாகும். பின்ன நோக்கத்தில் நிழல்கள் அசைவன போல் தோற்றிடினும், உண்மையுணர்வில் அசைவறுவதாம். முற்றும் அறிந்தால் சலனமில்லை.

## 1048. உணர்வுரு வானவவ் வுண்மைத் திரைமேற்
## புணர்வன வம்முப் புடி.

உணர்வு உரு ஆன அவ் உண்மைத் திரைமேல் புணர்வன அம் முப்புடி.

முப்புடிகள், உணர்வாகிய ஆதாரத் திரையில் புணர்ந்து நீங்குவன; அசைபடங்களை யொத்து ஆதாரவுணர்வில் அவைகளின் சலன மறும்.

### (நேரிசை வெண்பா)

## 1049. இசையே ழனுக்குந்தா னின்றமையா துட்சேர்
## இசையாஞ் சுருதி யெனவும் - விசையால்
## அசையோ வியங்கட் கடிப்படமே போன்றும்
## வசைதீர்ந் துளதான்ம வஸ்து.

இசை ஏழனுக்கும் தான் இன்று அமையாது உள் சேர் இசை ஆம் சுருதி எனவும் விசையால் அசை ஓவியங்கட்கு அடிப்படமே போன்றும் வசை தீர்ந்து உளது ஆன்ம வஸ்து.

**விசை-மின் சக்தி; வசை-குற்றம், பற்று.**

இசை விசேட மேழு மிசைத்தற்குத் தா னின்றியமையாதாய் அவற்றுட் கலந்து அவற்றை யிசைப்பிக்குஞ் சாமானிய விசையாஞ் சுருதி போலவும், சில கருவிச் செயலா லசைவனவாஞ் சாயா படங்கள் பலவுந் தோன்றற்குத் தானத்தியா வசியமாய் அவற்றுக் கடியாயமைந்து அவற்றைத் தோற்றுவிக்கும் அசையாப் படமாந் திரைச்சீலை போலவும் ஏதமறத் தன்னிற்றா னிருந்தொளிர்வதாம் ஆன்மவத்து.

**வி-ரை :-** அடி-அடிப்படை, ஆதாரம். ஏதம்-தோற்ற வொடுக்கம் முதலாய விகாரங்கட்கிடனாங் குற்றம். உலகு நாம ரூப மாத்திரமாதலால், ஆன்மா அவ்விரு கூற்றுக்கு மாதாரமா முண்மை இருவேறுதாரணங்களால் இனிது விளக்கப்பட்டது. ஜடமா முலகையும், அதனைச் சித்தமா யொளிர்விக்கு முணர்வையும், உடலையுயிர் போன்று உள்ளும் புறமும் ஓதப்புரோதமாய் கலந்தியக்குஞ் சித்தாய ஸத்தே ஆன்ம வத்து வென்பதாம். உலகத் தோற்றம் காண்பானையின்றி யமையாமையால் உணர்வும் உடன் கூட்டி யுரைக்கப்பட்டது. சாமானிய விசையும் திரைச்சீலையும் இன்றேல் முறையே இசை விசேடங்களும் சித்திர விசேடங்களும் இல்லாதது போல், ஆன்மவத்து வின்றேல் உலகுணர்வுகளும் உறற்பாலனவல்ல என்றுணர்க.

> ''உலகறிவு மொன்றா யுதித்தொடுங்கு மேனு
> முலகறிவு தன்னா லொளிரும் - உலகறிவு
> தோன்றிமறை தற்கிடனாய்த் தோன்றிமறை யாதொளிரும்
> பூன்றமா மஃதே பொருள்.''

- உள்ளது நாற்பது-7

**1050. பொய்யெவற்றி னுள்ளுந்தான் பொங்கலாற் பல்வேறாம்
பொய்யவற்றை மெய்போற் புலப்படுத்திப் - பொய்யவற்றின்
பெய்குறிபோல் வாராமற் பேராம லெங்குநிதம்
வைகுவதே யான்மபர வஸ்து.**

பொய் எவற்றின் உள்ளும் தான் பொங்கலால் பல்வேறு ஆம் பொய் அவற்றை மெய்போல் புலப்படுத்திப் பொய் அவற்றின் பெய் குறிபோல் வாராமல் பேராமல் எங்கும் நிதம் வைகுவதே ஆன்ம பர வஸ்து.

**பெய்குறி-இடப்பட்ட அடையாளங்கள்; வைகுவதே-இருப்பதே.**

**1051. எவ்வெவ் வுயிருள்ளு மேய்ந்து மறிபடா
தவ்வவ் வுயிரையுடம் பாக்கொண்டு - செவ்வே
இமையா தயரா தியக்கு மவனே
அமுதனா மந்தரான் மா.**

எவ்எவ் உயிர் உள்ளும் ஏய்ந்தும் அறிபடாது அவ்அவ் உயிரை உடம்பாக் கொண்டு செவ்வே இமையாது அயராது இயக்கும் அவனே அமுதன் ஆம் அந்தரான்மா.

**ஏய்ந்தும்-இருந்தும்; செவ்வே-நன்றாக.**

**1052. எழலும் விழலு மியல்பெனக்கொண் டென்றும்
உழலுமகங் கார வுயிராய்ச் - சுழலும்
சகடக்கா லன்று சலியா துளமெய்
அகடச்சே யான்மா வறி.**

எழலும் விழலும் இயல்பு எனக்கொண்டு என்றும் உழலும் அகங்கார உயிராய்ச் சுழலும் சகடக்கால் அன்று சலியாது உள மெய் அகடு அச்சே ஆன்மா அறி.

**அகடு-நடுவில்.**

''ஊனவுடலேயா'' னென்றெழுதலும் தற்காலிகமாய் விழுதலுமே, சகலகேவல மிரண்டினும் முறையே தன் சுபாவமாகக் கொண்டு, சதா சுற்றலுறுஞ் சகடக்கால் போலிடைவிடாதுழலு மகங்கார வடிவாஞ் சீவன் அல்ல ஆன்மா; அச்சகடக்காலை யச்சாணி போலத் தானதனை யசைவித்து அதனடுவே தான் மட்டுமசைவற இருப்பதே ஆன்மாவாகிய நீ.

**1053. தோன்றுவது தோன்ற மறைவதெலாந் தான்மறைக
ஆன்ம சொரூப வறிவுக்கென் - பூன்றமாப்
பொங்குசிவக் கேவலத்திற் புக்கொழிய யாவுமிஞ்சித்
தங்குமதே தன்சொருபந் தான்.**

தோன்றுவது தோன்ற மறைவது எலாம் தான் மறைக ஆன்ம சொரூப அறிவுக்கு என் பூன்றமாப் பொங்கு சிவக் கேவலத்தில் புக்கு ஒழிய யாவும் மிஞ்சித் தங்கும் அதே தன் சொருபம் தான்.

**1054. அவகடந்துன் றவ்வகத்தை யாய்ந்தடங்கத் தோன்றும்**
**சிவனடஞ்செய் காட்சித் திறனென் - றுபநிடங்கள்**
**ஓலமிடுந் தெய்வவரு ளுண்மைத் தெளிவாய**
**வாலறிவே யான்ம வடிவு.**

அவகடம் துன்று அவ் அகத்தை ஆய்ந்து அடங்கத் தோன்றும் சிவன் நடம் செய் காட்சித் திறன் என்று உபநிடங்கள் ஓலம் இடும் தெய்வ அருள் உண்மைத் தெளிவாய வால் அறிவே ஆன்ம வடிவு.

**அவகடம்-வஞ்சகம்.**

**1055. பிறிதொன் றிலாத பிரம்ம சொரூபக்**
**குறிதொன்று தொட்ட குலாக்காண் - வறிதன்று**
**சூனியம்போல் தோன்றினுமத் தொல்சொருபம் பூரணமெய்**
**தானியலோர் கேவலசச் சித்து.**

பிறிது ஒன்று இலாத பிரம்ம சொரூபக் குறி தொன்று தொட்ட குலாக்காண் வறிது அன்று சூனியம்போல் தோன்றினும் அத் தொல் சொருபம் பூரண மெய் தான் இயல் ஓர் கேவல சத் சித்து.

**வறிது-பாழ்.**

**1056. யானென்னு மெண்ண மிறையு மெழாவிடமே**
**மோனஞ் சொரூபமென்பர் மூதறிஞர் - மோன**
**சொரூபமே யீசன் சொரூபமே சீவன்**
**சொரூபமே யித்தொல் லுலகு.**

யான் என்னும் எண்ணம் இறையும் எழா இடமே மோனம் சொரூபம் என்பர் மூது அறிஞர் மோன சொரூபமே ஈசன் சொரூபமே சீவன் சொரூபமே இத்தொல் உலகு.

நானென்னு நினைவு சற்று முதியாத நிலையே மோனமென்றும் சொரூப மென்றும் பேரறிஞர் கூறுவர். இறை, உயிர், உலகு என்னும் மூன்றுமாய்த் தோன்றுவது உண்மையில் அதுவே யாம்.

**1057. ஆனவுல கீசனுயி ராயவற்றுக் கெப்பொருட்கும்**
**வானமென மேவுண்மை மாத்திரமெய் - தானே**
**பரசுமனா தீதப் பரந்தாம மென்னும்**
**பரசிவமா மான்மசொரூ பம்.**

ஆன உலகு ஈசன் உயிர் ஆயவற்றுக்கு எப்பொருட்கும் வானம் என மேவு உண்மை மாத்திர மெய் தானே பரசுமனாதீதப் பரந்தாமம் என்னும் பரசிவம் ஆம் ஆன்ம சொரூபம்.

## 33. ஆன்மமாட்சித்திறன்

**1058. காண்பானே காட்சியாங் கைவல் லியசொருப**
**மாண்பாலே தன்மெய் மகத்தாமால் - காண்பானாந்**
**தன்மையகங் காரமறச் சாய்ந்தொழிந்த மோனவொளித்**
**தன்மையே சிற்பரமாந் தான்.**

காண்பானே காட்சி ஆம் கைவல்லிய சொருப மாண்பாலே தன்மெய் மகத்து ஆம் ஆல் காண்பான் ஆம் தன்மை அகங்காரம் அறச் சாய்ந்து ஒழிந்த மோன ஒளித் தன்மையே சித் பரம் ஆம் தான்.

**1059. மகத்தான சாந்த மகோததியாம் போத**
**சுகத்தான மான சொரூபம் - அகத்தே**
**மனந்தலைப்பட் டாழ மடுத்தா ரடுத்தா**
**ரனந்தநிதி யாந்தன் னருள்.**

மகத்தான சாந்த மகோததி ஆம் போத சுக ஸ்தானம் ஆன சொரூபம் அகத்தே மனம் தலைப்பட்டு ஆழ மடுத்தார் அடுத்தார் அனந்த நிதி ஆம் தன் அருள்.

**மடுத்தார்-மூழ்கியோர்.**

**1060. தானே மகத்தன்றித் தன்னினுமே மிக்கதாம்**
**ஏனை மகத்தொன்று மில்லையே - ஆனதால்**
**எற்றுத் திறத்தாலும் யாங்காணேந் தன்னைத்தான்**
**விற்றுக் கொளத்தக்க வேறு.**

தானே மகத்து அன்றித் தன்னினுமே மிக்கது ஆம் ஏனை மகத்து ஒன்றும் இல்லையே ஆனதால் எற்றுத் திறத்தாலும் யாம் காணேம் தன்னைத் தான் விற்றுக் கொளத்தக்க வேறு.

**1061. மகத்தாம் பரமான்ம மாட்சிப்பே றன்றி**
**யிகத்தாம் பயனொன்று மில்லை - அகத்தா**
**முசாவா லதனை யுணர்ந்தனுப விக்க**
**வசாரவகந் தன்னை யழி.**

மகத்து ஆம் பரமான்ம மாட்சிப் பேறு அன்றி இகத்து ஆம் பயன் ஒன்றும் இல்லை அகத்து ஆம் உசாவால் அதனை உணர்ந்து அனுபவிக்க அசார அகம் தன்னை அழி.

மகத்தான பரமான்ம லட்சியம் பெறும் பேற்றைக் காட்டிலும் உலகில் பயன் வேறெதுவுமில்லை. உள்ளே புரியும் விசாரத்தால் அதனை உணர்ந்து அனுபவிக்க வேண்டி, போலி ஜீவபோதத்தை அழிக்கக்கடவா யென்றார்.

**1062. இருந்தொளிர்மெய்ஞ் ஞான வெழின்மணியா மான்ம**
**அருந்தனத்தை யாராய்ந் தகத்தே - பொருந்தின்**
**அயாமூல மாம்பிறவி யல்லலற மாயும்**
**வியாமோக மென்னு மிடி.**

இருந்து ஒளிர் மெய்ஞ்ஞான எழில் மணி ஆம் ஆன்ம அரும் தனத்தை ஆராய்ந்து அகத்தே பொருந்தின் அயா மூலம் ஆம் பிறவி அல்லல் அற மாயும் வியாமோகம் என்னும் மிடி.

**அயா மூலம்-துன்ப காரணம்; வியா மோகம்-பெரும் மோகம்.**

**1063. அந்த மணியி னருமையறி யாமையினே**
**மந்தராய்ச் சோம்பி மடிகின்றார் - தந்தம்**
**உரிமையா மத்தை யுளவறிந்து பெற்றார்**
**பெரியார்பே ரின்பமுற்றார் பேண்.**

அந்த மணியின் அருமை அறியாமையினே மந்தராய்ச் சோம்பி மடிகின்றார் தம்தம் உரிமை ஆம் அத்தை உளவு அறிந்து பெற்றார் பெரியார் பேர் இன்பம் உற்றார் பேண்.

**1064. அறிவுருநா னாரென் றமைதியாத் தேறிச்**
**செறிவதின்றித் தன்சொருபச் சித்திற் - பிறிவதாய்ச்**
**சித்தவடி வான சிதாபாச மாகமருண்**
**டெய்த்தலெவ னேதப் புலத்து.**

அறிவு உரு நான் ஆர் என்று அமைதியாத் தேறிச் செறிவது இன்றி தன்சொருபச் சித்தில் பிறிவதாய்ச் சித்த வடிவு ஆன சிதாபாசம் ஆக மருண்டு எய்த்தல் எவன் ஏதப் புலத்து.

**பிறிவதாய்-வேறானதாய்; எய்த்தல்-துன்புறுதல்.**

**1065. ஞாலமட மாந்தர் நயக்குமணி மாதிசித்தி**
**ஏல வொருங்கே யிசைந்தாலும் - மூல**
**முடிச்சவிழ்த் தான்ம முழுமணியெய் தாதார்**
**படிச்ச படிப்பனைத்தும் பாழ்.**

ஞால மட மாந்தர் நயக்கும் அணிமா ஆதி சித்தி ஏல ஒருங்கே இசைந்தாலும் மூல முடிச்சு அவிழ்த்து ஆன்ம முழுமணி எய்தாதார் படிச்ச படிப்பு அனைத்தும் பாழ்.

**ஏல-நன்றாக.**

**1066. நல்லசிவ சிந்தை நழுவாத மோனவருட்
செல்வமே யுண்மைத் திருவென்பர் - புல்லவொணா
வொட்பங்கூ ரந்த வுயர்நிதியஞ் சிந்தையறப்
பெட்புற் றவர்க்கேயாம் பேறு.**

நல்ல சிவ சிந்தை நழுவாத மோன அருள் செல்வமே உண்மைத் திரு என்பர் புல்ல ஒணா ஒட்பம் கூர் அந்த உயர் நிதியம் சிந்தை அறப் பெட்பு உற்றவர்க்கே ஆம் பேறு.

**1067. ஒளித்தகட லுட்சிந்தை யொன்றிக்கல் லோடு
குளித்துயர்நன் முத்தைக்கைக் கொண்டு - களித்தாங்
கிதயத்துள் வைராக் கியத்தோடாழ்ந் தான்ம
நிதியத்தைப் பெற்றவல நீங்கு.**

ஒளித்த கடலுள் சிந்தை ஒன்றிக் கல்லோடு குளித்து உயர் நல் முத்தைக் கைக்கொண்டு களித்து ஆங்கு இதயத்துள் வைராக்கியத்தோடு ஆழ்ந்து ஆன்ம நிதியத்தைப் பெற்று அவலம் நீங்கு.

**1068. ஊனமற வுள்ளதோ ரொண்பொருளாந் தன்சொருபத்
தியானெனதென் றோது மிரண்டுமற - மோனமாத்
துன்றுமதி சுத்த சுவானுபவ போதமே
வென்று விளங்குவது மேல்.**

ஊனம் அற உள்ளது ஓர் ஒண் பொருளாம் தன் சொருபத்து யான் எனது என்று ஓதும் இரண்டும் அற மோனமாத் துன்றும் அதி சுத்த சுவானுபவ போதமே வென்று விளங்குவது மேல்.

## 34. ஆன்மபரத்திறன்

**1069. பொக்கம் படாதொளிர்சற் போதமே புத்தியுயிர்
சொக்குமனோ தீத சொரூபமாம் - தொக்க
அதிசாந்த மாமவ் வருட்பரமே யோர்க்கு
மதிசாந்த மாக்கும் மருந்து.**

பொக்கம் படாது ஒளிர் சத் போதமே புத்தி உயிர் சொக்கும் மனோதீத சொரூபம் ஆம் தொக்க அதிசாந்தம் ஆம் அவ் அருட்பரமே ஓர்க்கும் மதி சாந்தம் ஆக்கும் மருந்து

**பொக்கம்-கறை; தொக்க-திரண்ட.**

**1070. பல்வகையா மூர்த்திகளைப் பார்த்துப் பதற்றமொடு
சில்பொழுது சிந்தையாற் செம்மாப்பார் - நில்லாத
பொய்ம்மையா மெய்யையலாற் பொய்ம்மருவா மெய்ம்மயமாம்
தம்மையே தாமுணரா தார்.**

பல்வகையாம் மூர்த்திகளைப் பார்த்துப் பதற்றமொடு சில் பொழுது சிந்தையால் செம்மாப்பார் நில்லாத பொய்ம்மை ஆம் மெய்யை அலால் பொய்ம் மருவா மெய்ம்மயம் ஆம் தம்மையே தாம் உணராதார்.

**சில்பொழுது-சிறிது நேரம்; செம்மாப்பார்-மகிழ்வார்.**

**1071. அன்னியர் தம்மை யடைந்து வழிபட்டா
லன்னியங்கள் யாவு மடையலாம் - மன்னியமெய்ச்
சிற்பரமாந் தெய்வச் சிவபதத்து வாழ்க்கையுயிர்க்
கற்பர்மற் றாரளிப் பார்.**

அன்னியர் தம்மை அடைந்து வழிபட்டால் அன்னியங்கள் யாவும் அடையலாம் மன்னிய மெய்ச் சித்பரம் ஆம் தெய்வச் சிவபதத்து வாழ்க்கை உயிர்க்கு அற்பர் மற்று ஆர் அளிப்பார்.

**1072. பெற்றதா வன்றிப் பிரிந்ததாப் பேதுறுவார்
உற்ற துயிலோ டுணர்வினிடைச் - சற்றும்
தெரியா ததற்குந் தெரிவதற்கு மொப்பக்
கரியாகத் தம்மைக் கலார்.**

பெற்றதா அன்றிப் பிரிந்ததாப் பேது உறுவார் உற்ற துயிலோடு உணர்வின் இடைச் சற்றும் தெரியாததற்கும் தெரிவதற்கும் ஒப்பக் கரி ஆகத் தம்மைக் கலார்.

**1073. தேற்று முபாசனையாற் சேருந்தெய் வம்பலவும்
தோற்றமறை வுற்றுத் தொலைதலாற் - றேற்றமோ
டென்றுமுள தாந்தன் னியற்கையே மாறாது
நின்றபர தெய்வ நிஜம்.**

தேற்றும் உபாசனையால் சேரும் தெய்வம் பலவும் தோற்றம் மறைவு உற்றுத் தொலைதலால் தேற்றமோடு என்றும் உளது ஆம் தன் இயற்கையே மாறாது நின்ற பரதெய்வ நிஜம்.

யாவ னுள்ளே னென்றெண்ணினும் எண்ணா விடினும் அத்தெளிவோ டென்று மியல்வதாந் தன்னுண்மை இயல்பே தான் பரவி வரும் பர தெய்வத்தின் ஒழியாது நின்ற வுண்மை வடிவமன்றி, தெளிந்த வுபாசனையா லெதிர்ப்படும் மூர்த்திகளெல்லாம் தன் பாவனை நிகழுமளவும் தாந்தோன்றா நின்று அது நெகிழவே தாமும் மறைந்தொழிவதால் அவைதா மல்லவாம்.

**வி-ரை :-** முதலடியில் தெய்வமென்றது தேவதா மூர்த்தங்களை. மூர்த்தம்-வடிவம். மூர்த்த மெனினும் மூர்த்தியெனினு மொக்கும். உண்மையில் ஆன்ம சொரூபமே யாண்டவன் சொரூபமெனக் காரணங் காட்டிக் கூறியவாறு.

## 1074. இங்கங் கிதுவதுவென் றேநோக்குஞ் சுட்டறிவா லெங்கெங்கென் னென்ன வெதிர்ப்படுமோ - அங்கங்கவ் வெல்லாமுந் தானா விருந்தொளிருந் தன்னுண்மை வில்லார்ந்த சுத்த வெளி.

இங்கு அங்கு இது அது என்றே நோக்கும் சுட்டு அறிவால் எங்கு எங்கு என்ன என்ன எதிர்ப்படுமோ அங்கு அங்கு அவ் எல்லாமும் தானா இருந்து ஒளிரும் தன் உண்மை வில் ஆர்ந்த சுத்த வெளி.

**வில்-ஒளி.**

சுட்டுநோக்கினால் இங்கு, அங்கு, இது, அது என வெளிப்படும் யாவையுமே அவையவையில் தனித்துக் காணாது எல்லாவற்றையும் ஸ்வஸ்வரூபமாகவே காணும் அகண்ட வறிவே சுத்த வெளியாம்.

## 1075. இதுவதுவென் றேசுட்டி யெண்ணப் படுமவ் வெதுவுமனக் கற்பிதமென் றோர்ந்தே - பொதுவிலகம் சும்மா விருக்கச் சுடருமவ் வுண்மையே செம்மாண் சொரூபசச் சித்து.

இது அது என்றே சுட்டி எண்ணப்படும் அவ் எதுவும் மனக்கற்பிதம் என்று ஓர்ந்தே பொதுவில் அகம் சும்மா இருக்கச் சுடரும் அவ் உண்மையே செம்மாண் சொரூப சத் சித்து.

இது, அதுவென சுட்டுணர்வினால் அறியப்படும் யாவும் மனக்கற்பிதமென நன்கறிந்து, நடுநிலையி லொருவன் சும்மா விருக்கத் தானாகவே யொளிரும் செம்மைப் பொருளே சித்ரூபம்.

## 1076. ஆன்மபர தத்துவமல் லாதபிற தத்துவத்தைத் தான்மயங்கி யாய்ந்து தடுமாறல் - ஊன மயிர்வினைஞன் குப்பையை வாரித்தள் ளாது செயிர்படநன் காய்ந்த திறம்.

ஆன்ம பர தத்துவம் அல்லாத பிற தத்துவத்தைத் தான் மயங்கி ஆய்ந்து தடுமாறல் ஊன மயிர் வினைஞன் குப்பையை வாரித் தள்ளாது செயிர்பட நன்கு ஆய்ந்த திறம்.

**செயிர்பட-மெய்வருந்தி,பாடுபட்டு.**

**1077. அன்புக் கடம்பூண் டகத்தே யொழுகுவார்க்
கின்பமயம் பொங்கிமேன் மேலெழுங்காண் - இன்பமோ
டன்புசிவ மான்மா வருளறிவு சாந்திவீ
டென்பவெலாந் தன்மெய் யியல்.**

அன்புக் கடம் பூண்டு அகத்தே ஒழுகுவார்க்கு இன்பமயம் பொங்கி மேல் மேல் எழும் காண் இன்பமோடு அன்பு சிவம் ஆன்மா அருள் அறிவு சாந்தி வீடு என்ப எலாம் தன்மெய் இயல்.

**கடம்-நெறி.**

## 35. அபயநிலைத்திறன்

**1078. பேதபுத்தி துன்றுமனப் பேதைமையா லான்மாவிற்
பீதியுழக் கின்றார் பெருந்தேவர் - நேதியாற்
றன்சொருப வுண்மையைச் சார்ந்துபர மாத்துவிதத்
தஞ்சலற நிற்ற லறிவு.**

பேத புத்தி துன்றும் மனப் பேதைமையால் ஆன்மாவில் பீதி உழக்கின்றார் பெரும் தேவர் நேதியால் தன் சொருப உண்மையைச் சார்ந்து பரம அத்துவிதத்து அஞ்சல் அற நிற்றல் அறிவு.

**1079. ஆன்ம சுதந்தரஞ்சே ரன்றே நிரந்தரமாத்
தான்மகிழ்சேர் சித்தோப சாந்தமுண்டாம் - வான்மயமெய்
யத்துவித மானவவ்வே காதிபத்தி யக்கருத்தூ
டெத்துவித வாசைபய மின்று.**

ஆன்ம சுதந்தரம் சேர் அன்றே நிரந்தரமாத் தான் மகிழ் சேர் சித்த உபசாந்தம் உண்டாம் வான்மயமெய் அத்துவிதமான அவ் ஏகாதிபத்தியக் கருத்தூடு எத் துவித ஆசை பயம் இன்று.

நிரந்தரமான தன் மகிழ்வில் செறிந்த சித்தோப சாந்தம், ஆன்ம சுதந்திரத்தில் சேர்ந்த அன்றே உண்டாவதன்றி, அதன் முன்னர் எவ்வகையிலுமில்லை. அத்துவிதமான அவ்வேகாதிபத்யக் கருத்தில் எந்த துவித வேட்கையும் பயம் விளைவிக்கும்படி செல்லாதாம்.

## 36. அத்துவிதத்திறன்

**1080. ககனமா மொன்றே கடமடத்தா லவ்வக்
ககனமாக் காண்டல் கடுப்பச் - சுககனசித்
துண்மையா மொன்றே யுயிரிறையாக் காண்டலினவ்
வுண்மைவே றாகா துணர்.**

ககனம் ஆம் ஒன்றே கட மடத்தால் அவ் அக் ககனமாக் காண்டல் கடுப்பச் சுக கன சித்து உண்மை ஆம் ஒன்றே உயிர் இறையாக் காண்டலின் அவ் உண்மை வேறு ஆகாது உணர்.

**கடுப்ப-போல.**

**1081. சீவ னெனவுஞ் சிவனெனவு முண்மையிலே
யாவது முண்டோ விருவேறு - மேவும்
அமிழ்தி னியன்றவாண் டானடிமைப் பாவை
தமில்வேறு பாடுண்டேற் சாற்று.**

சீவன் எனவும் சிவன் எனவும் உண்மையிலே ஆவதும் உண்டோ இரு வேறு மேவும் அமிழ்தின் இயன்ற ஆண்டான் அடிமைப் பாவை தமில் வேறுபாடு உண்டேல் சாற்று.

**பாவை-பதுமை.**

## 37. நாத்திகத்திறன்

**1082. தன்னையசத் தாகத் தடுமாறு வானன்றோ
நின்னையசத் தாக நிகழ்த்துவான் - தன்னதுமெய்
உள்ளபடி யோர்வானவ் வுண்மையே யாமுன்னை
எள்ளலெவன் சூனியநீ யென்று.**

தன்னை அசத்து ஆகத் தடுமாறுவான் அன்றோ நின்னை அசத்து ஆக நிகழ்த்துவான் தன்னது மெய் உள்ளபடி ஓர்வான் அவ் உண்மையே ஆம் உன்னை எள்ளல் எவன் சூனியம் நீ என்று.

கடவுள் இல்லையென்னும் நிரீசுவரவாதியின் கொள்கையைப்பற்றி ஈசுவரனை முன்னிலைப் படுத்திக் கூறியது இது. அசத்து-இல்லாதது. மெய்-உண்மை. ‘தான் இருப்பதாக உணரும் ஒருவன் அவ்விருத்தலாகிய உண்மையினின்றும் வேறல்லாத கடவுளை இல்லாததென்று கூறுதல் என்?’ என்றபடி.

## 38. ஆத்திகத்திறன்

**1083. உளனென்பார்க் குள்ளா னுணர்வா வுளத்தே**
**களஞ்சேர் மனத்திலனெக் காலும் - களஞ்சேர்**
**மனத்தைத் திருத்தி மயக்கமற நோக்கிற்**
**றனித்தொளிர்வன் றானாத் தழைத்து.**

உளன் என்பார்க்கு உள்ளான் உணர்வா உளத்தே களம் சேர் மனத்து இலன் எக்காலும் களம் சேர் மனத்தைத் திருத்தி மயக்கம் அற நோக்கில் தனித்து ஒளிர்வன் தானாத் தழைத்து.

**களம்-களங்கம்; தனித்து-சிறந்து.**

**1084. எய்த்த சொரூப மிதுவென் றகந்தெளிந்து**
**சுத்தமா முண்மை துலங்குற்ற - புத்தன்**
**ஒருவனே யாத்திகனென் னும்பெயர்க்கு மெய்யே**
**அருகனா கின்றா னறி.**

எய்த்த சொரூபம் இது என்று அகம் தெளிந்து சுத்தம் ஆம் உண்மை துலங்கு உற்ற புத்தன் ஒருவனே ஆத்திகன் என்னும் பெயர்க்கு மெய்யே அருகன் ஆகின்றான் அறி.

**எய்த்த-அறிகின்ற;புத்தன்-ஞானி; அருகன்-தகுதியுள்ளோன்.**

## 39. அநாதிமலமுத்தத்திறன்

**1085. வானுடல மாக வழங்குற்ற மெய்ஞ்ஞான**
**பானுவாந் தம்மெய்ப் பரிசுணர்ந்தார்க் - கூனுடல**
**மோகாந்த கார முயங்கியதே யின்மையாற்**
**றேகாந்தர்க் கேதிமிரந் தேர்.**

வான் உடலம் ஆக வழங்கு உற்ற மெய்ஞ்ஞான பானு ஆம் தம் மெய்ப் பரிசு உணர்ந்தார்க்கு ஊன் உடல மோக அந்தகாரம் முயங்கியதே இன்மையால் தேக அந்தர்க்கே திமிரம் தேர்.

**அந்தர்-குருடர்; திமிரம்-இருட்டு.**

**1086. செயக்கடவ தாமுசாத் தேர்ஞானம் பாச**
**மயக்கடுசீ வன்பாலே மன்னும் - மயக்கற்**
**றனாதிமல முத்தமா மத்துவிதான் மாக்கண்**
**மனாதுமல போத மயக்கு.**

செயக்கடவது ஆம் உசாத் தேர் ஞானம் பாச மயக்கு அடு சீவன்பாலே மன்னும் மயக்கு அற்று அனாதி மல முத்தம் ஆம் அத்துவித ஆன்மாக்கண் மனாது மல போதம் மயக்கு.

**அடு-தாக்குண்ட.**

**1087. நிசரதமா வெங்கு நிறைந்திருக்கு மான்மா**
**மசரதமா மாயையாற் கட்ட - வசப்படுமோ**
**பந்தப்பட் டாற்போற் பதறாதே யாறமரச்**
**சிந்தித்துத் தேறத் தெளி.**

நிச ரதமா எங்கும் நிறைந்திருக்கும் ஆன்மா மசரதம் ஆம் மாயையால் கட்ட வசப்படுமோ பந்தப்பட்டால் போல் பதறாதே ஆற அமரச் சிந்தித்துத் தேறத் தெளி.

**நிசரதம்-நிஜரசம்; மசரதம்-பேய்த்தேர்,கானல்நீர்.**

**1088. உன்னைநீ யேனோ வுபாதியள வாகமனத்**
**துன்னிவீ ணாக வுழல்கின்றாய் - துன்னு**
**முபாதியிலா தொன்று முறக்கிலுநின் னுண்மை**
**யபாதிதமா நிற்ற லறி.**

உன்னை நீ ஏனோ உபாதி அளவு ஆக மனத்து உன்னி வீணாக உழல்கின்றாய் துன்னும் உபாதி இலாது ஒன்றும் உறக்கிலும் நின் உண்மை அபாதிதமா நிற்றல் அறி.

**அபாதிதம்-தடையற்று.**

## 40. சதாசார வாழ்க்கைத்திறன்

### (ஆசிரிய விருத்தம்)

**1089. வாழ்வதே யெண்ணு கின்றீர்**
**வாழ்வகை யெதுவென் றோரீர்**
**பாழ்வளர் மயக்கத் தூடு**
**பகற்கனாக் கண்டு நீவிர்**
**தாழ்வதே வாழ்வா வெண்ணித்**
**தருக்கியே செருக்கு கின்றீர்**
**பாழையூ டுருவிச் சென்று**
**பற்றிடீ ருண்மை வாழ்வே.**

வாழ்வதே எண்ணுகின்றீர் வாழ் வகை எது என்று ஓரீர் பாழ் வளர் மயக்கத்து ஊடு பகற்கனாக் கண்டு நீவிர் தாழ்வதே வாழ்வா எண்ணித் தருக்கியே செருக்குகின்றீர் பாழை ஊடுருவிச் சென்று பற்றிடீர் உண்மை வாழ்வே.

**(நேரிசை வெண்பா)**

**1090. தவற்றுமன மாயைத் தடுமாற்றஞ் சாயக்
கவற்றுமுனி வார்வங் கடிந்தே - எவற்றும்
உதாசீன மாக வொழுகலே நன்றாம்
சதாசார வாழ்க்கை தரி.**

தவற்று மன மாயைத் தடுமாற்றம் சாயக் கவற்று முனிவு ஆர்வம் கடிந்தே எவற்றும் உதாசீனம் ஆக ஒழுகலே நன்று ஆம் சத் ஆசார வாழ்க்கை தரி.

**கவற்று- துன்பந் தருகின்ற; கடிந்தே-நீக்கியே.**

**1091. தன்னியல்பே யாகத் தடைபடா துள்ளத்து
மன்னியமெய் யன்புமய வாழ்க்கையே - துன்னியபொய்ம்
மோகவகங் காரம் முடிந்த சிவசொருப
போகமாம் போதப் பொலிவு.**

தன் இயல்பே ஆகத் தடைபடாது உள்ளத்து மன்னிய மெய் அன்புமய வாழ்க்கையே துன்னிய பொய்ம் மோக அகங்காரம் முடிந்த சிவசொருப போகமாம் போதப் பொலிவு.

**1092. தம்பார முற்றுமரன் றாள்சேர்த் துதாசீன
கம்பீர வாழ்க்கை கடைப்பிடித்து - மொய்ம்பாரும்
சொச்சந்த மாகத் துலங்குமறி வாளரே
சச்சந்தர் பாக்கியவந் தர்.**

தம் பாரம் முற்றும் அரன் தாள் சேர்த்து உதாசீன கம்பீர வாழ்க்கை கடைப்பிடித்து மொய்ம்பு ஆரும் சொச்சந்தம் ஆகத் துலங்கும் அறிவாளரே சத் சந்தர் பாக்கியவந்தர்.

**மொய்ம்பு ஆரும்-சக்தி வாய்ந்த; சொச்சந்தம்-ஆன்மசுகம்;
சச்சந்தர்-மெய்யழகுடையோர்.**

**1093. அன்புமய மாமெய் யறிவுணர்ச்சி தோய்ந்தவகத்
தின்பமயம் பொங்கி யெழுவதாம் - துன்பமயல்
வேட்கையங் கில்லை விசுத்த சொரூபவியல்
வாழ்க்கையது சாந்த மயம்.**

அன்புமயமாம் மெய் அறிவு உணர்ச்சி தோய்ந்த அகத்து இன்பமயம் பொங்கி எழுவது ஆம் துன்ப மயல் வேட்கை அங்கு இல்லை விசுத்த சொரூப இயல் வாழ்க்கை அது சாந்த மயம்.

**1094. குறிக்கொண் டொழுகக் குலவுவது சுத்தத்**
**துறக்கமாம் போத சொரூபம் - மறக்கமிலா**
**வோர்மையா லுள்ளத் துபாசித்துத் தானதுவா**
**நேர்மையுறல் வாழ்க்கை நிறைவு.**

குறிக்கொண்டு ஒழுகக் குலவுவது சுத்தத் துறக்கம் ஆம் போத சொரூபம் மறக்கம் இலா ஓர்மையால் உள்ளத்து உபாசித்துத் தான் அதுவா நேர்மை உறல் வாழ்க்கை நிறைவு.

**சுத்தத் துறக்கம்-பேரின்பம்; மறக்கம்-மறதி.**

**1095. அருள்வாழ்க்கை யேசெம் பொருள்வாழ்க்கை அல்லா**
**மருள்வாழ்க்கை காணுலக வாழ்க்கை - வெருள்வாழ்க்கை**
**வாழ்வதென்ன மாயமனோ மாயா விலாசத்தூ**
**டாழ்வதே யன்றோ வது.**

அருள் வாழ்க்கையே செம்பொருள் வாழ்க்கை அல்லா மருள் வாழ்க்கை காண் உலக வாழ்க்கை வெருள் வாழ்க்கை வாழ்வது என்ன மாயம் மனோ மாயா விலாசத்தூடு ஆழ்வதே அன்றோ அது.

**1096. ஐயுணர்வாற் காணு மகிலமெய் யாநம்பி**
**நொய்யபுலன் மேற்பாயு நோக்கத்தால் - மையல்**
**உருப்பாரைப் பற்று முயிர்ச்சேட்டை யற்றுச்**
**சரிப்பார்க்கு வேண்டா தவம்.**

ஐ உணர்வால் காணும் அகிலம் மெய்யா நம்பி நொய்ய புலன்மேல் பாயும் நோக்கத்தால் மையல் உருப்பாரைப் பற்றும் உயிர்ச்சேட்டை அற்றுச் சரிப்பார்க்கு வேண்டா தவம்.

**நொய்ய-அற்ப; உருப்பார்-நாமரூப உலகம்; சரிப்பார்க்கு-நடப்பவர்க்கு.**

**1097. உகளுமகங் கார வுயிர்ப்பற்றுத் துக்க**
**மகிழ்வுமுத லாந்தொந்த மாற்றி - அகிலமுந்தான்**
**ஆதிக்கங் கொண்ட வருள்வழித்தாம் பட்டோர்க்குச்**
**சாதிக்க வேண்டா தவம்.**

உகளும் அகங்கார உயிர்ப்பு அற்றுத் துக்கம் மகிழ்வு முதல் ஆம் தொந்தம் மாற்றி அகிலமும் தான் ஆதிக்கம் கொண்ட அருள்வழித் தாம் பட்டோர்க்குச் சாதிக்க வேண்டா தவம்.

**உகளும்-தாவும்.**

அகங்காரம், அவ்வழிப்பட்ட துக்கமகிழ்வு, இவை மாற்றி அருள்வழிப்பட்டவர்க்குத் தவம் சாதிக்க வேண்டா மென்றார். தவம் புரிபவனையே ஒப்புவித்த இடத்தில், முயற்சி, தவம் வேறின்மையாம். இதுவே

பிரபத்தித் தானம் அல்லது சும்மா விருத்தல். ‘‘இம்மாயா யோகமினி ஏனடா’’ என்றார் தாயுமானவரும்.

## 41. நிட்களத்திறன்

**1098. உருவந்தா னாயி னுடையோனா மாதி**
**சொருபந்தா னும்மற்றே தோற்றும் - உருவந்தான்**
**அல்லா விடினோ வயலறிவே கூடாதேல்**
**ஒல்லுவதா மோவவ் வுரை.**

உருவம் தான் ஆயின் உடையோனாம் ஆதி சொருபம் தானும் அற்றே தோற்றும் உருவம் தான் அல்லாவிடினோ அயல் அறிவே கூடாதேல் ஒல்லுவது ஆமோ அவ் உரை.

**ஒல்லுவது-பொருந்துவது.**

**1099. நினைந்துநினைந் தன்பர் நெடும்பா வனையாற்**
**புனைந்தவுரு வேதான் பொருந்தல் - அனந்த**
**உருநாம மேவினுமா யோபாதி யான்மெய்**
**அருவா மறிவே யரன்.**

நினைந்து நினைந்து அன்பர் நெடும் பாவனையால் புனைந்த உருவே தான் பொருந்தல் அனந்த உரு நாமம் மேவினும் மாய உபாதியால் மெய் அரு ஆம் அறிவே அரன்.

**1100. சும்மா விருந்திதயஞ் சொல்லும் பராவாக்காற்**
**செம்மாண் பொருளநுசந் தித்தலே - பொய்ம்மாய**
**விண்மை யுருப்பெயர்போய் மேவுமுளத் துள்ளொளியாம்**
**வண்மையுறு மாதிபர வாழ்த்து.**

சும்மா இருந்து இதயம் சொல்லும் பராவாக்கால் செம்மாண் பொருள் அநுசந்தித்தலே பொய்ம்மாய விண்மை உருப் பெயர் போய் மேவும் உளத்து உள் ஒளி ஆம் வண்மை உறும் ஆதி பர வாழ்த்து.

**1101. அவ்வனுசந் தானஞா னாசாரர் செய்துதியாம்**
**எவ்விதநூ லுக்கு மிதயந்தான் - செவ்வியதாம்**
**அந்தப் பரம்பொருளி னன்றிப் பெயர்வடிவாம்**
**எந்தத் திறத்திலுமே யின்று.**

அவ் அனுசந்தான ஞான ஆசாரர் செய் துதி ஆம் எவ்வித நூலுக்கும் இதயம் தான் செவ்வியது ஆம் அந்தப் பரம் பொருளின் அன்றிப் பெயர் வடிவு ஆம் எந்தத் திறத்திலுமே இன்று.

**1100, 1101 ஆம் பாடல்களின் உரை :-** மனோ வாக்குக்கள் மாய்வுறலான் இதயந் தன்னியல்பா யிருந்தியம்பும் பராவாக்கால், மாட்சிமைப்பட்ட செவ்விய பொருளை அநுசந்தான வடிவால் வாழ்த்தலே, ஆகாச நீலத்தைப் போன்ற மாயப்பொய்யான நாம ரூபங்களின்றி ஒரு மொழியா மோனத்துள் விளங்கொளியாம் ஆதி பரப்பிரம்மத்தை உள்ளவாறே ஒருவன் நிர் விசேடமாய் வாழ்த்தலாம்; ஆதலால், அவ்வநு சந்தான வடிவான ஞானாசாரத்தி னொழுகுஞ் சான்றோரா லருளப்பெற்ற எவ்வியல் வாய்ந்த தோத்திர நூலுக்கும் கற்பனை கடந்த அச்செம் பொருளின் கணன்றி அதனறிகுறியாக மட்டும் அன்னா ராண்டுவரும் எந்தப் பெயர் வடிவப் பாகுபாட்டிலும் அதனுண்மை நோக்கமின்றாம்.

**வி-ரை :-** வண்மை-நிறைவு. தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய் நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலின்மையிற் றூய்தாய், தானெல்லா வற்றையுங் கலந்து நிற்கின்ற முதற் பொருள் விகாரமின்றி எஞ்ஞான்று மொரு தன்மைத்தாதல் பற்றி அதனைச் செம்பொருளென்றார். நோன்மை-கனம், நிறைவு. பாவனாதீதமா மவ்வுண்மை வாழ்த்தலொன்றே நாம ரூப விசேடக் கலப்பற்ற இயல்பாம் பொது வடிவில் அமையலாவ தென்றறிக. எனினும் அந்நூல் கடாமும் மேற் பார்வையிற் பல்வேறு சமயச் சார்புடையன வாகத் தோற்றி நிற்கையிலும், ஆழநோக்கி யுய்த்துணர்பவர்க்கு அஃதற்று நடக்கும் நடுநிலையாம் பொதுத்தன்மை புலனாகாமற் போகாது. இதயம்-உள்ளக்கிடக்கை.

## 1102. மதியரவி தம்மின் மணந்தாலே போலப்
## புதியவியப் பாகுமிறும் பூதால் - இதயமுறக்
## கொஞ்சியடி யாரைக் குசலவுசா வாற்றுநடன்
## குஞ்சிதவண் பாதக் குலா.

மதிய ரவி தம்மில் மணந்தாலே போலப் புதிய வியப்பு ஆகும் இறும்பூது ஆல் இதயம் உறக் கொஞ்சி அடியாரைக் குசல உசா ஆற்றும் நடன் குஞ்சித வண் பாதக் குலா.

**நடன்-நடனம்; குஞ்சித-தூக்கிய; வண்-கருணை.**

## 1103. திகந்தமெலாஞ் சுற்றித் திரிந்துபட ருற்றும்
## இகந்தனிலே மாழ்கலறி வீனம் - அகந்தை
## தருமசைவு மாய்க்குஞ் சதாசிவமா மோனப்
## பரமசிவன் பாதம் பயில்.

திகந்தம் எலாம் சுற்றித் திரிந்து படர் உற்றும் இகம் தனிலே மாழ்கல் அறிவீனம் அகந்தை தரும் அசைவு மாய்க்கும் சதாசிவம் ஆம் மோனப் பரமசிவன் பாதம் பயில்.

**திகந்தம்-திசைகளின் முடிவு, எல்லை; படர்-பிரிதல்; இகம்-இவ்வுலகம்; பயில்-அநுசந்தானம் செய்.**

**1104. அறிவோ டிதயத் தடங்கினா ரல்லால்
மிறைதீர்ந்த வுண்மைநிலை மேவார் - முறையே
உறக்கத்தோ டேனைவிழிப் பூடுமனத் துக்கு
மறப்புநினைப் பான்மெய் மறைந்து.**

அறிவோடு இதயத்து அடங்கினார் அல்லால் மிறை தீர்ந்த உண்மை நிலை மேவார் முறையே உறக்கத்தோடு ஏனை விழிப்பு ஊடு மனத்துக்கு மறப்பு நினைப்பால் மெய் மறைந்து.

**மிறை-குற்றம்; மேவார்-அடைய மாட்டார்கள்.**

## 42. சகஜநிட்டர்திறன்

**1105. விவகார நிட்டைதுயின் மெய்யுளியல் பாத்தூங்
கவிகார ஞானி யறியான் - புவிமீது
வண்டிச் செலவுநிலை மற்றைக் கிடையதனுட்
கண்டுயில்வோன் காணான் கரி.**

விவகாரம் நிஷ்டை துயில் மெய் உள் இயல்பாத் தூங்கு அவிகார ஞானி அறியான் புவி மீது வண்டிச் செலவு நிலை மற்றைக் கிடை அதன் உள் கண் துயில்வோன் காணான் கரி.

உலகின் கண் வண்டி செல்லுதலும் நிற்றலும் மற்றுங் கிடத்தலும் ஆகிய பேதங்கள் அவ்வண்டிக்குள் அயர்ந்துறங்கும் பிரயாணி அறியாமை போன்று, ஆன்ம சொரூபமா மத்துவித மெய்க்கண் தன்னியல்பா லறிதுயில் கோடலால் விகாரமற்ற ஞானியும், தொழில் வடிவாய் இகத்தைப் பற்றி நிகழும் பிரவிருத்தியும், நிட்டை வடிவாய்ப் பரத்தைப் பற்றி நிகழும் நிவிருத்தியும், மூடமா யொன்றுந் தோன்றாத வுறக்கமும் ஆகிய பேதங்களும் தனக்கயலாய்ச் சற்று மறியான்.

**வி-ரை :-** நிலை-பூட்டிய வெருத்தோடு பொருந்தி நிற்றல். கிடை- எருத்துப் பூட்டுத் தறிக்கப் பெற்று வண்டி மட்டும் வறிது கிடத்தல். வண்டியின் செலவு, நிலை, கிடை மூன்றும் ஞானியின் விவகாரம் நிட்டை துயில்கட்கு முறையே ஒப்பாகக் கொள்க. கண்டுயில்வோன் கண்ணும் விகாரமின்றேனும் விழித்தவுடன் அவனறிவில் அது மீளத் தோன்றலால், எவ்வவத்தையிலும் அஃதறவே யின்றாக இயல்பா யறிதுயிலமரும் ஞானியை அவனின் வேறுபடுக்கவே அவிகார ஞானியெனச் சிறப்பித்த தென்க. மெய்ஞ்ஞானி, குணங்கட்கெல்லா மாதாரமாய் நின்ற மனம் மடிந்தொழிந்தமையால் நிர்க்குணப் பொருளாய் நிலைத்தலின் அவன்றா னாற்றுவனவாகக் கூறப்படும் முக்குணச்செயல் வேறுபாடுகளாய விவகார நிட்டை துயில் யாவும் அவற்றைக் காணும் பிறர் நோக்கத்தாலன்றி, தன்னியல்பா மான்ம நோக்கத்தா லவனுக் கறவே யில்லை யென்பதாம். நிட்டை விவகாரத் துயில்கள் முறையே ஸத்துவ ராஜத தாமதச் செயல்களாம்.

**(21) *வண்டிதுயில் வானுக்கவ் வண்டிசெல னிற்றலொடு***
***வண்டிதனி யுற்றிடுதன் மானுமே - வண்டியாம்***
***ஊனவுட லுள்ளே யுறங்குமெய்ஞ் ஞானிக்கும்***
***ஆனதொழி னிட்டையுறக் கம்.***

***-பகவான்***

வண்டி துயில்வானுக்கு அவ்வண்டி செலல் நிற்றலொடு வண்டி தனி உற்றிடுதல் மானுமே வண்டி ஆம் ஊன உடல் உள்ளே உறங்கும் மெய்ஞ் ஞானிக்கும் ஆன தொழில் நிட்டை உறக்கம்.

**1106. சான்றா யிருந்தொளிருஞ் சான்றோர்தஞ் சுத்தமனம்**
**மான்றோராய் மாந்தர் மதிமருளத் - தோன்றயலார்**
**கோட்டம் படிந்தமனக் குற்ற நினைவுகளும்**
**காட்டும் படிமக் கலன்.**

சான்றாய் இருந்து ஒளிரும் சான்றோர்தம் சுத்தமனம் மான்றோர் ஆய் மாந்தர் மதி மருளத் தோன்று அயலார் கோட்டம் படிந்த மனக் குற்ற நினைவுகளும் காட்டும் படிமக்கலன்.

**மான்றோர்-மதி மயங்கியவர்கள்; கோட்டம்-கோணல்; படிமக்கலன்-முகம் பார்க்கும் கண்ணாடி.**

**1107. சத்துவமுந் தாண்டிச் சரிக்குஞ் சகஜர்கர்த்**
**தத்துவமுன் னிட்டுழல்வார் தங்கண்ணுக் - கெத்துமிகத்**
**துன்னு மிராஜதர்போற் றோற்றலாற் சிற்சிலகால்**
**அன்னதுகொண் டையுறா தே.**

சத்துவமும் தாண்டிச் சரிக்கும் சகஜர் கர்த்தத்துவம் முன்னிட்டு உழல்வார் தம் கண்ணுக்கு எத்து மிகத் துன்னும் இராஜதர் போல் தோற்றலால் சிற்சிலகால் அன்னது கொண்டு ஐ உறாதே.

**எத்து-வஞ்சகம்.**

**1108. இம்மை மறுமைக் கிரும்பாவ மும்பழியும்**
**சும்மையா வீட்டிச் சுமப்பரால் - செம்மைக்**
**குரியரா யோரு மொளிர்ஜீவன் முத்தப்**
**பெரியார்ப் பிழைத்து விடின்.**

இம்மை மறுமைக்கு இரும் பாவமும் பழியும் சும்மையா ஈட்டிச் சுமப்பர் ஆல் செம்மைக்கு உரியர் ஆய் ஓரும் ஒளிர் ஜீவன் முத்தப் பெரியார்ப் பிழைத்துவிடின்.

**இரும்-பெரிய.**

செம்பொருளைச் சேர்தற் குரிமை பூண்டொழுகும் பாக்கியர்தாமும் அதுவே தாமாக விளங்கும் சீவன் முத்தரா முண்மைப் பெரியார் பால் அபராதஞ் செய்துவிடின் அதனாலன்னோர் இம்மைக்குப் பழியும் மறுமைக்குப் பாவமு மீட்டிச் சுமையாய்ச் சுமந்து கெடுவர்.

**வி-ரை :-** இரும் பாவம்-பெரும் பாவம்; இரும்பழி யெனவுங் கூட்டுக. சும்மை-சுமை. இம்மை மறுமைக் கிரும் பாவமும் பழியும் என்ற தெதிர் நிரனிறையணி. பெரியாரைப் பிழைத்தலால் விளையுந் தீங்கு இனைத்தெனக் கூறு முகத்தால் அது செய்தலாகா தென்பது அறிவுறுத்தப்பட்டது.

**1109. செக்குச் சிவலிங்கந் தேறா தொருங்கொக்க**
**நக்கிப் பிழைக்குங்கீழ் நாயனையார் - பொக்கர்**
**விழுமியார் தம்மையும் வேறா வுணரா**
**தொழுகுவா ரொக்கப் பிழைத்து.**

செக்குச் சிவலிங்கம் தேறாது ஒருங்கு ஒக்க நக்கிப் பிழைக்கும் கீழ் நாய் அனையார் பொக்கர் விழுமியார் தம்மையும் வேறா உணராது ஒழுகுவார் ஒக்கப் பிழைத்து.

**பொக்கர்-கீழ் மக்கள்; விழுமியார்-ஞானிகள்.**

செக்குச் சிவலிங்கங்களை வெவ்வேறாயறியாது அவை யிரண்டையும் ஒன்றுபோல நக்கிப் பின்னதன்கண் அபசாரப்படும் நாயனைய கீழ்மக்கள் சிறியர் பெரியோர்களை வெவ்வேறா யுணராது அவரிருவர் பாலும் ஒன்றுபோ லொழுகிப் பின்னவர்பா லபசாரப்படுவர்.

**1110. சூரியனை நோக்கிச் சுணங்கன் குரைக்கினுமச்**
**சூரியனை நிந்தை தொடராது - சூரியன்போல்**
**வீரியமெய்ஞ் ஞானவொளி மிக்கோரை மேவாது**
**பூரியர்தம் புன்சொற் பழி.**

சூரியனை நோக்கிச் சுணங்கன் குரைக்கினும் அச் சூரியனை நிந்தை தொடராது சூரியன்போல் வீரிய மெய்ஞ் ஞான ஒளி மிக்கோரை மேவாது பூரியர்தம் புன்சொல் பழி.

**பூரியர்-அற்பர்.**

## 43. திதப்பிரஜ்ஞர்திறன்

**1111. அகநோக்க மென்னப் புறநோக்க மென்ன**
**நிகழ்நோக்க வேற்றுமை யின்றித் - திகழ்நோக்க**
**மொன்றேயா வென்று மொழுகுஞ் சிதம்பரனே**
**பொன்றாத் திதப்பிரஞ்ஞ னாம்.**

அக நோக்கம் என்னப் புற நோக்கம் என்ன நிகழ் நோக்க வேற்றுமை இன்றித் திகழ் நோக்கம் ஒன்றேயா என்றும் ஒழுகும் சிதம்பரனே பொன்றாத் திதப்பிரஞ்ஞன் ஆம்.

**திகழ்-இருப்பு, சத்து.**

ஸ்திதப் பிரஜ்ஞனைக் குறித்து அர்ச்சுனன் வினவியதும், கிருஷ்ணன் விடையும் பகவத்கீதை இரண்டாம் அத்தியாயத்தில் காண்க. இங்கு ஸ்திதப்பிரஜ்ஞனாகிய முக்தனுக்கும், லய சமாதிகளை விரும்பும் சாதகனுக்கு முள்ள பேதத்தை நுட்பமாய் விளக்கினார். அக நோக்காகிய மனோலயத்தில் இன்பமும், மனம் வெளியில் பிரவர்த்திக்குங்கால் ஏகதேசம் துன்பமும் காண்பவன் சாதகனேயாவான். முக்தனாகிய சிதம்பரனோ அப்பேதமே யின்றி எங்கும் எவற்றிலும் சுத்த சைதன்ய ஸ்வரூபமான ஏகவஸ்துவையே அனுபவிப்பதில் மகிழ்கிறான்; அவனுக்குப் பந்தமுமில்லை; தான் முக்தனென்ற ஞானமு மில்லை.

**1112. எவனிதய மெய்யுணர்வால் யானற்றுத் தானாஞ்**
**சிவசொருப மாகத் திகழும் - அவனே**
**எதற்கு மசையா திருக்குமுழு மோனத்**
**திதப்பிரஞ்ஞ னாகத் தெரி.**

எவன் இதய மெய் உணர்வால் யான் அற்றுத் தான் ஆம் சிவசொருபம் ஆகத் திகழும் அவனே எதற்கும் அசையாது இருக்கும் முழு மோனத் திதப்பிரஞ்ஞன் ஆகத் தெரி.

''நான்'' என்ற போதமற்று எவன் சிவனோடடைவால் சொரூபமாகவே விளங்குகின்றானோ அவனே ஸ்திதப்பிரஜ்ஞனாம். அவன் நிச்சலனாதலின் மூவுலகும் அழிவுறினும் தன்னிலையினின்று பெயரான்.

## 44. கிரந்திபேதித்தார்திறன்

**1113. சுட்டறிவாற் சிந்தை சுழல்பா மரர்விடயக்**
**கட்டா முலகெங்குங் காண்பதுபோல் - விட்டே**
**அடிச்சித்தான் மாவெங்கு மார்ந்தொளிரக் காண்பான்**
**முடிச்சவிழ்த்து நின்ற முனி.**

சுட்டு அறிவால் சிந்தை சுழல் பாமரர் விடயக் கட்டு ஆம் உலகு எங்கும் காண்பது போல் விட்டே அடிச் சித்து ஆன்மா எங்கும் ஆர்ந்து ஒளிரக் காண்பான் முடிச்சு அவிழ்த்து நின்ற முனி.

**அடி-ஆதாரம்.**

**1114. விவிதபே தத்தால் விசித்திரமாத் தோற்றுந்**
**துவிதப் பிரபஞ்சத் தோற்றம் - சவிதாவா**
**யென்று மிருந்தொளிரும் யாவன்முற் றோன்றாது**
**பொன்றுமோ வன்னான் புதன்.**

விவித பேதத்தால் விசித்திரமாத் தோற்றும் துவிதப் பிரபஞ்சத் தோற்றம் சவிதா ஆய் என்றும் இருந்து ஒளிரும் யாவன் முன் தோன்றாது பொன்றுமோ அன்னான் புதன்.

**1115. என்றுமான் மாவி னிறுமாந் திதயத்தே**
**நன்றுநிலை பெற்றமெய்ஞ் ஞானிதான் - துன்றும்**
**மயலென்று மெண்ணான் மகிதலத்தைத் தன்னின்**
**அயலென்று மெண்ணா னறி.**

என்றும் ஆன்மாவின் இறுமாந்து இதயத்தே நன்று நிலை பெற்ற மெய்ஞ்ஞானி தான் துன்றும் மயல் என்றும் எண்ணான் மகிதலத்தைத் தன்னின் அயல் என்றும் எண்ணான் அறி.

**இறுமாந்து-பெருமிதத்தோடு.**

**1116. தெரிவிலே தோன்றுஞ் செகமுழுதுஞ் சுத்தத்**
**தெரிவளவாத் தேர்வான் றெரிவான் - தெரிவையலா**
**தன்னியமா முண்மை யதற்கின்மை கண்டமைவான்**
**றன்னியனாந் தன்னிலே தான்.**

தெரிவிலே தோன்றும் செக முழுதும் சுத்தத் தெரிவு அளவாத் தேர்வான் தெரிவான் தெரிவை அலாது அன்னியம் ஆம் உண்மை அதற்கு இன்மை கண்டு அமைவான் தன்னியன் ஆம் தன்னிலே தான்.

**தெரிவு-ஞானம்; தெரிவான்-ஞானி.**

தோற்றங்கள் அனைத்தும் நித்ய ஸத்யமல்லவென, அத்தோற்றங்களை அவ்வளவிலே முற்றும் அறிந்து புறக்கணித்தவன், தன்னியல் அறியும் தன்யனாகிறான். என்னை? தன்னியல் அறிய முயற்சி வேண்டலின்மையின்; பொய்த்தோற்றங்களைப் பொய்யாக அறிதலே சாலுமென்றார்.

**1117. அத்துவித பூரணத்தே யாழ்ந்தழிந்த சித்தத்தோர்**
**பொய்த்துவித வாழ்விற் புலம்புறார் - சுத்தவுணர்**
**வான சொரூப வருட்பரத்தே யஃதன்றி**
**யானிதுவென் றொன்று மிலை.**

அத்துவித பூரணத்தே ஆழ்ந்து அமிழ்ந்த சித்தத்தோர் பொய்த் துவித வாழ்வில் புலம்பு உறார் சுத்த உணர்வு ஆன சொரூப அருட்பரத்தே அஃது அன்றி யான் இது என்று ஒன்றும் இலை.

**புலம்பு-மயங்குதல்.**

## 1118. தொடர்பரிந்த கத்தத் துவத்தாலே ஞானி
## கடவதாச் செய்கன்மங் காணான் - சடமாம்
## அயலணுவுந் தோற்றா வறிவாலே யைய
## மயலணுவுந் தோற்றாது மற்று.

தொடர்பு அரிந்த கத்தத்துவத்தாலே ஞானி கடவதாச் செய் கன்மம் காணான் சடம் ஆம் அயல் அணுவும் தோற்றா அறிவாலே ஐயம் மயல் அணுவும் தோற்றாது மற்று.

**அரிந்த-அறுக்கப்பட்ட.**

## 1119. உண்டுயிர்த்துக் கண்டுகேட் டுற்றுணரு மைம்புலத்திற்
## பண்டுபோ லாகப் பயின்றாலும் - மண்டும்
## உசாவுரத்தால் விண்டதே யுண்மையொளி யாலே
## வசீகரிக்கப் பட்ட மனம்.

உண்டு உயிர்த்துக் கண்டு கேட்டு உற்று உணரும் ஐம்புலத்தில் பண்டு போலாகப் பயின்றாலும் மண்டும் உசா உரத்தால் விண்டதே உண்மை ஒளியாலே வசீகரிக்கப்பட்ட மனம்.

**உயிர்த்து-நுகர்ந்து; பண்டுபோல்-முன்புபோல்; விண்டதே-கிரந்தி பேதிக்கப்பட்டதே.**

உண்மை விளக்கத்தால் வசீகரிக்கப்பட்ட வுள்ளம், அதன் பின்பும் முன் போலவே, கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றுணருமைம்புல விஷயங்களிற் சஞ்சரித்துக் கொண்டிருப்பினும், நிறைந்த திடவிசாரத்தாற் கிரந்தி பேதித்ததேயாம்.

**வி-ரை :-** கிரந்தி பேதித்த வுள்ளம் புல விஷயங்களிற் போகக் கூடாதென்ற நியமமில்லை. கர்த்தத்துவமாஞ் சுட்டுணர்வற்று நின்றே, தன்மயமாகப் பயிற்சி வசத்தா லவைகளினியலக் கூடும். ஆனால் அவற்றா லெட்டுணையுங் கட்டுண்பது மட்டுமில்லை. உண்மை விளக்கம்-ஸத்தாமாத்திரமாஞ் சொரூப ஞானம்.

## 1120. ஞானவாழ் வுள்ளத்து நண்ணினோர் புன்புலஞ்சே
## ரூனவாழ் விற்சற்று மோகையுறார் - மோனவாழ்
## வானவது வன்றோ வகண்டபிரம் மானுபவம்
## தானவதி யில்லாப் பரம்.

ஞான வாழ்வு உள்ளத்து நண்ணினோர் புன்புலம் சேர் ஊன வாழ்வில் சற்றும் ஓகை உறார் மோன வாழ்வு ஆன அது அன்றோ அகண்ட பிரம்ம அனுபவம் தான் அவதி இல்லாப் பரம்.

**ஓகை-உவகை, மகிழ்வு; அவதி-எல்லை; அவதியில்லா அகண்ட பரப்பிரம்மானுபவம் எனக் கூட்டுக.**

## 1121. மறிகடலோ டொன்றா மருவுநதி மாறிப்
## பிறிபடுத லில்லாத பெட்பே - அறிவுருவாம்
## ஆன்ம சொரூப மடைந்த வுயிர்க்கில்லை
## தான்மயங்கி மீண்டுஞ் சனிப்பு.

மறி கடலோடு ஒன்றா மருவும் நதி மாறிப் பிறிபடுதல் இல்லாத பெட்பே அறிவு உரு ஆம் ஆன்ம சொரூபம் அடைந்த உயிர்க்கு இல்லை தான் மயங்கி மீண்டும் சனிப்பு.

**மறி-அலை; சனிப்பு-பிறப்பு.**

அலையெறியுங் கடலோடு ஐக்கியமடைந்த நதி அந்நிலையினின்று மாறிப் பின்னொரு முறை பிரிவுபடலற்ற விதமே, அறிவுருவா மான்ம சொரூபத்தை ஆய்ந்தறிந்த ஆருயிர் பொருளல்லவற்றைப் பொருளென மருண்டு அம் மருளான் மறுபடி பிறத்தலு மில்லை.

**வி-ரை :-** அத்துவித மாட்சியால் அறிவு மறதிகளன்றி ஆன்மலாப நட்டங்கள் வேறிலவாமாகவே அடைந்த வென்பதற்கு ஆய்ந்தறிந்த வென்றுரைக்கப்பட்டது. அறிவை யறிவது பொருள் என்றாரான்றோரும். பிறப்புக்குக் காரணம் மயக்கமே யாதலால், மயங்கிச் சனிப்பென்றார். என்னை? பொருளல்ல வற்றைப் பொருளென்றுணரும் மருளானா மாணாப் பிறப்பு என்பவாகலான் மருவு நதி யெனவும், அடைந்தவுயிர் எனவுங் கூறினாரேனும் அவற்றுக்கந் நாமரூபங்கள் அதன் முன்னன்றிப் பின்னின்மையின், நதி மருவிய பின் னென்பதும் உயிரடைந்த பின் னென்பதுமே கருத்தாகக் கொள்க.

''ஊரங் கணநீ ருரவுநீர்ச் சேர்ந்தக்காற்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம் - ஒருங்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து'' -நாலடியார்.

## 1122. பிறப்போ ரிறப்ப ரிறப்போர் பிறப்பர்
## மறப்போ டியைந்தமன மாந்தர் - சிறப்பென்னுஞ்
## செம்பொருளைத் தேர்ந்துமனஞ் செத்தோர் பிறப்பிறப்பற்
## றும்பருள ராங்கே யுணர்.

பிறப்போர் இறப்பர் இறப்போர் பிறப்பர் மறப்போடு இயைந்த மன மாந்தர் சிறப்பு என்னும் செம்பொருளைத் தேர்ந்து மனம் செத்தோர் பிறப்பு இறப்பு அற்று உம்பர் உளர் ஆங்கே உணர்.

**உம்பர்-மேலான பதவியான பரமபதம்.**

மனமிறந்தவரே அமரராவோரென்றார். பிறந்தவரிறத்தலும், இறந்தவர் மறுபிறப் பெய்தலும் திண்ணமாதலின், மனமிறந்து 'சித்தமாயுள் பொருளை'ச் சாராதவரை, அமரத்தன்மை உண்மையிலன்று.

## 1123. சச்சித்தைக் கண்டார் சதாசிவத்தைக் கண்டார்மற்
## றச்சத் துவித மறக்கண்டார் - சொச்சத்
## துரியநிலை யாந்தஞ் சுபாவநிலை கண்டார்
## பெரியரவர் காணார் பிறப்பு.

சத் சித்தைக் கண்டார் சதாசிவத்தைக் கண்டார் மற்று அச்சத் துவிதம் அறக் கண்டார் சொச்சம் துரியநிலை ஆம் தம் சுபாவ நிலை கண்டார் பெரியர் அவர் காணார் பிறப்பு.

துவிதமே, அதாவது ஏகமாகிய வஸ்துவில் காண்போன், காணப்படு பொருளென இரண்டாகக் காணலே, பயத்தின் முக்கிய ஹேதுவாம். துவிதம் அற ஏகரஸமாகிய ஸத்சித்தையே ஸதா அநுபவிப்போர், சுபாவமாகிய துரியத்தில் நிலைத்து, என்றும் பிறப்பைக் காணார்.

## 1124. முன்னொருகான் மூல முடிச்சவிழப் பெற்றானேற்
## பின்னொருகா லத்தும் பிணைபடான் - தன்னியல்பாம்
## ஈதே யிறைமைநிலை யீதே திறலாட்சி
## ஈதே யுபசாந்த மெண்.

முன் ஒருகால் மூல முடிச்சு அவிழப் பெற்றானேல் பின் ஒருகாலத்தும் பிணைபடான் தன் இயல்பு ஆம் ஈதே இறைமை நிலை ஈதே திறல் ஆட்சி ஈதே உபசாந்தம் எண்.

எவற்றுக்கும் மூலமாமிதயக் கிரந்தி முன்னொரு முறை பேதிக்கப்பெற்றானாயின் அதன்பின் னொரு பொழுதும் அவன் சமுசார பந்தத்துளகப்படான். கடவுணிலை, ஆற்றலுடைமை, உபசாந்தம் என்பனவெல்லாம் உண்மையில் சொரூபவியல்பாய்ச் சுடருமிஃதேயாம்.

**வி-ரை :-** ஒரே பொருளவாம் உண்மையுணர்வின்பத் திறன்களே, இறைமை நிலை முதலாக முறையே இங்குக் கூறிய மூன்றுமாம்.

# 45. சான்றோர்மாட்சித்திறன்

## 1125. மாவத்து வாக மகேசனையுட் கொண்டோர்மற்
## றோர்பற்று மற்றோ ருலவுங்கால் - ஆபத்
## திலாப்பாது காப்பா விருந்தொளிரவ் வீச
## னுலாப்போது கின்றா னுணர்.

மா வத்துவாக மகேசனை உள் கொண்டோர் மற்று ஓர் பற்றும் அற்றோர் உலவுங்கால் ஆபத்து இலாப் பாதுகாப்பா இருந்து ஒளிர் அவ் ஈசன் உலாப் போதுகின்றான் உணர்.

ஈசன் என்றும் தன்னிடமொப்புவித்த நெஞ்சினராகிய அடியாரைக் காக்கும் கருணை கூறுவது. அவர் உலாவும்போதும் அவரைக் காக்கக் கூடு துணையாக அவன் வெளிப்போந்தனன் என்றார்.

**1126. சித்த நசித்துச் சிவமயமா நிற்கின்றோன்**
**ஒத்துயிரு ளெல்லா முடனுறைவோன் - முத்தனாத்**
**தெள்ளு மவன்சொருப சிந்தனத்தால் விண்டொளிரும்**
**உள்ளிருந் துண்மை யொளி.**

சித்தம் நசித்துச் சிவமயமா நிற்கின்றோன் ஒத்து உயிர் உள் எல்லாம் உடன் உறைவோன் முத்தனாத் தெள்ளும் அவன் சொருப சிந்தனத்தால் விண்டு ஒளிரும் உள் இருந்து உண்மை ஒளி.

அகந்தை வடிவாம் பரிச்சின்ன வறிவு நசித்து அகண்ட வறிவா மிறைவடிவாய் நிலைத்தோன் ஒருயிரிற் போன் றெல்லா வுயிர்களிலும் உயிர்க்குயிரா யுடனுறைவோனாவன்; ஆதலால் ஜீவன் முத்தனாய்த் தெளிந்து விளங்கும் அவன் சொரூபத்தை அன்பொடு கருதலால் அங்ஙனங் கருதுவாருளப் பூட்டுடைந்து உண்மையொளி அவனருளால் அவ்வுள்ளத்திலிருந்தே விளங்கும்.

**வி-ரை :-** அவன் சொரூபத்தை அநுசந்தானஞ் செய்வோ ரகத்தே உண்மையொளி தனக்குத் தானே விளங்கக் காரணம், அம் முத்தன் சொரூபம், சிவ சொரூபமாய் எல்லாவுயிர்களிலும் இனிதுறைதல் என்பார், சிவமயமா நிற்கின்றோ னெனவும், ஒத்துயிருளெல்லா முடனுறைவோ னெனவுங் கூறினார்.

**1127. சாவாதெஞ் ஞான்றுஞ் சதோதயமாய்ப் பொங்குபர**
**வாழ்வாமெய்ஞ் ஞான மலிந்தோர்தம் - பார்வைநீர்**
**ஆடினார் தம்மை யமரகதிக் குய்த்திடுமஃ**
**தீடிலா ஞானமெளி தீந்து.**

சாவாது எஞ்ஞான்றும் சதோதயமாய்ப் பொங்கு பர வாழ்வு ஆம் மெய்ஞ்ஞானம் மலிந்தோர்தம் பார்வை நீர் ஆடினார் தம்மை அமர கதிக்கு உய்த்திடும் அஃது ஈடு இலா ஞானம் எளிது ஈந்து.

**(குறள் வெண்பா)**

**1127. *சாதுறவா லுட்டெளிவாய்ச் சாருளவிற் சார்பதமில்***
**a *போதகனூற் புண்ணியத்தாற் போ.***

***-பகவான்***

சாது உறவால் உள் தெளிவு ஆய் சார் உளவில் சார் பதம் இல் போதகன் நூல் புண்ணியத்தால் போ.

**(நேரிசை வெண்பா)**

**1128. ஏகரச மாக விருந்தொளிர்மெய்ஞ் ஞானசிவ**
**போகரசந் தாந்திளைத்த புந்தியோர் - மோகரசக்**
**கானலாம் பாழைக் கடவுளருங் காதலிக்குந்**
**தானமா மாற்றுவார் தாம்.**

ஏகரசம் ஆக இருந்து ஒளிர் மெய்ஞ்ஞான சிவ போக ரசம் தாம் திளைத்த புந்தியோர் மோக ரசக் கானல் ஆம் பாழைக் கடவுளரும் காதலிக்கும் தானமா மாற்றுவார் தாம்.

ஞானானுபவமாகிய போகரசத்தில் திளைக்கும் புத்தியுடையோர், பாசமாகிய கானல் கொண்ட சமுசாரப் பாழையும், தேவரும் காதல் கொள்ளக் கூடிய ஞான பூமியாகவே கண்டு மாற்றுவார்.

**1129. சாந்தி நிறைந்து ததும்புமுளச் சான்றோர்பால்**
**ஏய்ந்தவர்தஞ் சித்தமெலா மின்பமாம் - தோய்ந்த**
**குதுகலஞ்சே ரன்னார் குளிர்ந்தமுக மன்றோ**
**மதுகரஞ்சேர் செந்தா மரை.**

சாந்தி நிறைந்து ததும்பும் உளச் சான்றோர் பால் ஏய்ந்தவர்தம் சித்தம் எலாம் இன்பம் ஆம் தோய்ந்த குதுகலம் சேர் அன்னார் குளிர்ந்த முகம் அன்றோ மதுகரம் சேர் செந்தாமரை.

## 46. பெரியோர்மாட்சித்திறன்

**1130. ஆன்ற பெரியோர்க் கருட்பணி செய்தொழுகின்**
**மான்ற வுயிர்க்கு மயக்கமறும் - ஊன்றுநிலை**
**யானவருட் செல்வ மகத்தெய்தும் பேறுபெற்ற**
**மானவராய் வாழ்வா ரவர்.**

ஆன்ற பெரியோர்க்கு அருள் பணி செய்து ஒழுகின் மான்ற உயிர்க்கு மயக்கம் அறும் ஊன்று நிலையான அருள் செல்வம் அகத்து எய்தும் பேறு பெற்ற மானவராய் வாழ்வார் அவர்.

**மானவர்-மனிதர்.**

# 47. வாதனைமாண்டார்திறன்

**1131. என்று முடலேநா னென்னு மியற்கையகத்**
**தின்றிக் கலக்க மெழாமையால் - துன்று**
**கனவூடுஞ் சிந்தை கலங்கா ரகந்தை**
**மனவா தனைமாண் டவர்.**

என்றும் உடலே நான் என்னும் இயற்கை அகத்து இன்றிக் கலக்கம் எழாமையால் துன்று கனவு ஊடும் சிந்தை கலங்கார் அகந்தை மன வாதனை மாண்டவர்.

**1132. கலங்கு மனத்தாற் கடையாய நாற்கால்**
**விலங்கொடுபுள் ளாதியுயிர் மேவும் - இலங்கொளிசேர்**
**யாவனது சிந்தையெவ் வெண்ணத்தா லும்மன்றி**
**வாழ்வதோ வாழ்வா னவன்.**

கலங்கும் மனத்தால் கடை ஆய நால் கால் விலங்கொடு புள் ஆதி உயிர் மேவும் இலங்கு ஒளி சேர் யாவனது சிந்தை எவ் எண்ணத்தாலும் அன்றி வாழ்வதோ வாழ்வான் அவன்.

மக்களினுந் தாழ்ந்த நாற்கால் விலங்கு, பறவை முதலிய பல்லுயிர்த் தொகைகளும் சதா சங்கற்ப வடிவாய்ச் சலித்துக் கொண்டிருக்கும் மனத்தால் உயிர் வாழ்வனவாம். ஒளிபெற்று விளங்கும் எவ்வறிஞனது சிந்தை அவ்வாறெவ்வெண்ணத் தாலுமன்றி இருப்பு மாத்திரத்தால் வாழ்வதோ அவனே உண்மையில் வாழ்வோனாம்.

**வி-ரை :-** மனமிறந்த மவுன வாழ்வே உண்மையில் மனித வாழ்வெனத் தகுவதென்பதாம். மாட்சி மிக்க மக்கட் பிறப்படைந்தும் ஆன்மலாபமா முபசாந்த சுகத்தை அதனாலடைந் தனுபவித்த லின்றிக் கலங்கு மனத்தா லொருவன் காலங்கழிக்கும் வாழ்வு விலங்கு வாழ்வு போலக் கடையாமென்பது கருத்து. ஆதியென்றதனா லூர்வன நீர்வாழ்வன கொள்க.

**1133. மெத்தவிவ காரங்கண் மேவித்தாஞ் செய்தாலும்**
**செத்தமன வாதனையார் செய்யாரே - சித்தநெடுந்**
**தூரஞ் செலவிடுத்தார் தொல்கதைதாங் குந்திநெடு**
**நேரஞ் செவிமடுப்பார் நேர்.**

மெத்த விவகாரங்கள் மேவித் தாம் செய்தாலும் செத்த மன வாதனையார் செய்யாரே சித்தம் நெடும் தூரம் செல விடுத்தார் தொல்கதை தாம் குந்தி நெடு நேரம் செவி மடுப்பார் நேர்.

**குந்தி-உட்கார்ந்து.**

**1134. வாளா விருந்துமன வாதனைமா ளாராயின்**
**ஆளா யனைத்துந்தா மாற்றினரே - வாளா**
**கிடந்துங் கனவிற் கிரியேறிப் பள்ளத்**
**திடந்தலைகீ ழாவிழுவா ரேய்த்து.**

வாளா இருந்தும் மன வாதனை மாளார் ஆயின் ஆளாய் அனைத்தும் தாம் ஆற்றினரே வாளா கிடந்தும் கனவில் கிரி ஏறிப் பள்ளத்து இடம் தலை கீழ் ஆய் விழுவார் ஏய்த்து.

**வாளா-சும்மா; ஏய்த்து-போன்றது.**

**1133, 1134 பாடல்களுக்கான உரை :-** புராணக்கதை நிகழுமிடத்துக் கேட்பார் பலருட் டாமுஞ் சிலராய் ஆங்குக் குந்தியிருந்து, தம் மனத்தை மிகச் சேய்தா மொரு விடயத்திற் செல்ல விடுத்தோராய் அக்கதையை நெடுநேரஞ் செவி மடுத்தாற் போல்வார், உண்மையில் அதனைச் சற்றும் மடாரேயாதல் போன்று மனத்தின்கண் வாதனை மாளப்பெற்றார் பலவாந் தொழில்களை மனம் பொருந்தித்தாஞ் செய்யினும் உண்மையில் அத்தொழிலொன்றும் அவர் செய்யாதோரே யாவர்.

அவ்வாறே உறக்கத்திற் படுக்கைக்கண் உடற்சேட்டையறத் தாஞ் சும்மா கிடப்பினும், கனவின்கண் மலை முகட்டிலேறி மடுவினிடத்துத் தலைகீழாய் விழுவதாகத் தம்மைக்கண்டு, கலங்குவார் போன்று, மனத்தின்கண் வாதனை மட்டும் மாளப் பெறாராயின் அன்னார், கருவி கரணங்களாலே தாமசைவற்றிருப்பினும் அவ்வாசனைக்கு வசங்கதராதலால் அனைத்துக் கர்மங்களு மாற்றியோரே யாவர்.

**வி-ரை :-** வாதனை செத்தா ரென்னாது செத்த வாதனையா ரென்றது வடநூல் வழக்குப் பற்றி. தூரம் தூரத்து நிகழ்ச்சிக்காகு பெயர். தொல் கதை: புராணக் கதை. புராணங்கேட்பா ரவைக்களத்து அன்னாருடலாற் காணப்படினும் அவர்தம் மனத்தா லாங்கில்லை யெனக் குறிப்பாற் கூறுவார் இருந்தென்னாது குந்தியென்றார்.

''சித்த மவுனஞ் செயல்வாக் கெலாமவுனஞ் சுத்த மவுன மென்பாற் றோன்றிற் பராபரமே'' (தாயுமானவர்). வாதனை மாண்டார் தன்மை கூறப் புக்கார் அதன் சிறப்பு நன்று துலங்க வாதனை மாளா மற்றோர் தன்மையும் உடன் கூறினார்.

**(22) *சேய்மையுளஞ் சென்றுகதை கேட்பார்போல் வாதனைகள்***
***தேய்மனஞ்செய் துஞ்செய்யா தேயவைகள் - தோய்மனஞ்செய்***
***தின்றேனுஞ் செய்ததே யிங்கசைவற் றுங்கனவிற்***
***குன்றேறி வீழ்வார் குழி.***

***-பகவான்***

சேய்மை உளம் சென்று கதை கேட்பார்போல் வாதனைகள் தேய்மனம் செய்தும் செய்யாதே அவைகள் தோய் மனம் செய்து இன்றேனும் செய்ததே இங்கு அசைவு அற்றும் கனவில் குன்று ஏறி வீழ்வார் குழி.

## 48. ஜீவன்முத்தர்திறன்

**1135. * கத்தத் துவங்கெடினுங் கன்மபந் தங்கழன்ற**
**முத்தரெனக் கூறன் முறையாமோ - மற்ற**
**விருத்தியா லுண்டு வினைசெய் துடலம்**
**தரித்துக் கிடப்பார் தமை.**

*இதுவும் அடுத்தபாட்டும் குளகம்.

கத்தத்துவம் கெடினும் கன்ம பந்தம் கழன்ற முத்தர் எனக் கூறல் முறை ஆமோ மற்ற விருத்தியால் உண்டு வினை செய்து உடலம் தரித்துக் கிடப்பார் தமை.

**1136. அடைந்தவினைக் காளாகி யப்பெரியோர் தாமும்**
**இடைந்துபடக் காண்டுமே யென்னின் - இடைந்துபடல்**
**பார்ப்பார்தந் திட்டிப் பரிசன்றி யன்னார்தம்**
**நோய்ப்பால்சொன் னாரோ நுவல்.**

அடைந்த வினைக்கு ஆள் ஆகி அப்பெரியோர் தாமும் இடைந்துபடக் காண்டுமே என்னின் இடைந்து படல் பார்ப்பார் தம் திட்டிப் பரிசு அன்றி அன்னார் தம் நோய்ப்பால் சொன்னாரோ நுவல்.

**இடைந்துபட-இடர்ப்பட; காண்டுமே-காண்கிறோமே; நோய்ப்பு-நோவு.**

**1137. அந்தப் பெரியோ ரதீதமா வுள்ளதையே**
**சொந்த சொரூபமாத் துய்ப்பாரா - இந்தஜடர்**
**நோய்ப்பா லுடம்புருவா நோக்கலே யன்னோரைப்**
**பார்ப்பார்தந் திட்டிப் பரிசு.**

அந்தப் பெரியோர் அதீதமா உள்ளதையே சொந்த சொரூபமாத் துய்ப்பாரா இந்த ஜடர் நோய்ப்பால் உடம்பு உருவா நோக்கலே அன்னோரைப் பார்ப்பார்தம் திட்டிப் பரிசு.

**1138. கத்தத் துவங்கழன்று கத்தன் பணிநின்ற**
**முத்தப் பெரியோரை முன்னித்தாம் - நத்திப்**
**புகழ்வார்பாற் புண்ணியமும் போற்றாதன் னோரை**
**இகழ்வார்பாற் பாவமும்போ மெண்.**

கத்தத்துவம் கழன்று கத்தன் பணி நின்ற முத்தப் பெரியோரை முன்னித் தாம் நத்திப் புகழ்வார்பால் புண்ணியமும் போற்றாது அன்னோரை இகழ்வார்பால் பாவமும் போம் எண்.

**1139. கன்மமெவ் வாறியலுங் கத்தத் துவங்கழியிற்
கன்மநடை பேறுநாங் காண்டுமே - என்னினோ
மாய்ந்தவகப் பற்றான் மகேசனே தம்முளத்துத்
தோய்ந்துசெயப் பெற்றார் துணி.**

கன்மம் எவ்வாறு இயலும் கத்தத்துவம் கழியில் கன்ம நடைபேறு நாம் காண்டுமே என்னினோ மாய்ந்த அகப் பற்றால் மகேசனே தம் உளத்துத் தோய்ந்து செயப்பெற்றார் துணி.

**காண்டுமே-காண்கிறோமே.**

**1140. ஜீவன்முத் தப்பெரியோர் செய்கை யகமமதை
யாவுந்தீர் மோன லகரியால் - ஆர்வ
உறக்கத் திடையெழுப்பி யுண்பிக்கப் பட்டுச்
சிறுக்கர் புசிக்குந் திறம்.**

ஜீவன்முத்தப் பெரியோர் செய்கை அக மமதை யாவும் தீர் மோன லகரியால் ஆர்வ உறக்கத்து இடை எழுப்பி உண்பிக்கப்பட்டுச் சிறுக்கர் புசிக்கும் திறம்.

**லகரி-லஹரி, போதை; சிறுக்கர்-சிறுவர்.**

உவத்தலுற்ற வுறக்கத்தினின்றுணர்த்தி உற்றாராலூட்டப் பெற்றுப் பாலருணவருந்தும் பான்மை போல, பாச பந்தத்தினின் றுயிர் விடுதலையாகப் பெற்ற பெரியோர் செய்வனவாகத் தோன்றுஞ் செயல்களும் அவர் செயலன்றி, உண்மையில் அவரை முதலில் யானெனத் தலைதூக்கவே யிடங்கொடாமையால் அவ்யானேயன்றி அதனைப்பற்றி யெழும் எனதென்பதும் யாவு மொருங்கழிந்த அவரியல்பான பரவெள்ளத்தின் பரமாம்.

**1141. கூலிக் கெடுப்போன் குறித்தவிடங் கொண்டுபோ
யேலச் சுமையை யிறக்கலெனச் - சாலச்
சிறக்குமெய்ஞ் ஞானியுமித் தேகச் சுமையை
யிறக்கியே சிந்தைமகிழ் வான்.**

கூலிக்கு எடுப்போன் குறித்த இடம் கொண்டுபோய் ஏல் அச் சுமையை இறக்கல் எனச் சாலச் சிறக்கும் மெய்ஞ்ஞானியும் இத் தேகச் சுமையை இறக்கியே சிந்தை மகிழ்வான்.

கூலிக்குச் சுமையெடுப்போன் குறித்தவிடத்திற் சுமையை யிறக்கி மகிழ்கிறான். அதுபோல ஞானியும் தேகச்சுமையை யிறக்கிச் சொரூபத்தில் லயித்து மகிழ்ச்சி கொள்வான். இதனால் ஒருக்காலும் ஞானிக்கு தேகாபிமானம் ஏற்படாது என்பதை விளக்கியது. தேகம் உள்ளவரை ஞானிக்கும் பந்தவுணர்ச்சி யுண்டெனப் பொருளல்ல.

**(வேறு)**

**1141.** ***கண்ட வன்றனைக் காயந் தனையன***
**a** ***முண்ட பின்னிலை யொப்ப விடுப்பனே.***

***-பகவான்***

கண்டவன் தனைக் காயம்தனை அனம் உண்டபின் இலை ஒப்ப விடுப்பனே.

**(நேரிசை வெண்பா)**

**1142. வீழ்ந்தசிறு ஐந்துதலை மேலெடுக்க வொட்டுமோ**
**ஆழ்ந்தகடல் வேலை யழியுங்காற் - றாழ்ந்தவுடல்**
**ஊனவகங் காரமெழ வொட்டுமோ மெய்ஞ்ஞான**
**மோனமுழு வெள்ள முகத்து.**

வீழ்ந்த சிறு ஐந்து தலை மேல் எடுக்க ஒட்டுமோ ஆழ்ந்த கடல் வேலை அழியுங்கால் தாழ்ந்த உடல் ஊன அகங்காரம் எழ ஒட்டுமோ மெய்ஞ்ஞான மோன முழு வெள்ளம் முகத்து.

**ஒட்டுமோ-முடியுமோ; வேலை-அலை.**

**1143. வஞ்சமயற் காட்சிக்கண் மாழ்குறுமோ நானற்றுத்**
**தன்சொருப மாட்சி தரித்தமனம் - விஞ்சைசேர்**
**சுத்தத் துரியவெளிச் சூழலின்கண் மெய்ப்படுமோ**
**பொய்த்துவிதக் காட்சிப் புலம்.**

வஞ்ச மயல் காட்சிக்கண் மாழ்கு உறுமோ நான் அற்றுத் தன் சொருப மாட்சி தரித்த மனம் விஞ்சை சேர் சுத்தத் துரிய வெளிச் சூழலின்கண் மெய்ப்படுமோ பொய்த் துவிதக் காட்சிப் புலம்.

**1144. இறந்தும் பிறந்துமுழ லின்னுயிர்தன் னுண்மை**
**மறந்தவுயிர்ப் பாமெழுச்சி மாய - அறிந்தடங்கல்**
**ஆவன்முற் றச்செய் தடையமிகத் தக்கதாம்**
**ஜீவன்முத் தானுபவச் சீர்.**

இறந்தும் பிறந்தும் உழல் இன் உயிர் தன் உண்மை மறந்த உயிர்ப்பு ஆம் எழுச்சி மாய அறிந்து அடங்கல் ஆவல் முற்றச் செய்து அடைய மிகத் தக்கது ஆம் ஜீவன் முத்த அனுபவச் சீர்.

**உயிர்ப்பு-வாழ்க்கை.**

**1145. கத்தத் துவங்கெட்டுக் கத்தனாந் தம்புருடன்**
**செத்துமவன் மூவினையாந் தேவிமார் - ஒத்தே**
**அமங்கலியா காதிருவ ராயொருத்தி மட்டும்**
**சுமங்கலியா வெஞ்சுவளோ சொல்.**

கத்தத்துவம் கெட்டுக் கத்தன் ஆம் தம் புருடன் செத்தும் அவன் மூவினை ஆம் தேவிமார் ஒத்தே அமங்கலி ஆகாது இருவர் ஆய் ஒருத்தி மட்டும் சுமங்கலியா எஞ்சுவளோ சொல்.

**(குறள் வெண்பா)**

**(23)** ***பத்தாபோய்க் கைம்மையுருப் பத்தினியெஞ் சாததுபோற்***
***கத்தாபோ மூவினையுங் காண்.***

***-பகவான்***

பத்தா போய்க் கைம்மை உறாப் பத்தினி எஞ்சாதது போல் கத்தா போம் மூவினையும் காண்.

**(நேரிசை வெண்பா)**

**1146. பிராரத்தத் தாலே பிறந்தவுடற் கந்தப்**
**பிராரத்த மென்றும் பிழையா - பிராரத்தந்**
**தான்கடந் தான்சிச் சடக்கிரந்தி பேதித்துத்**
**தான்றனித்த ஜீவன்முத் தன்.**

பிராரத்தத்தாலே பிறந்த உடற்கு அந்தப் பிராரத்தம் என்றும் பிழையா பிராரத்தம் தான் கடந்தான் சித் சடக் கிரந்தி பேதித்துத் தான் தனித்த ஜீவன் முத்தன்.

**பிழையா-தவறாது.**

ஜீவன் முக்தன் தவிர பிறர்க்குப் பிராரப்தம் தப்பாது. உடலறிவுள்ள வரையில் இருவினைகளாகிய உணவு, அதாவது பயன் நல்கும் ஊழ், ஏற்பட்டே தீரும். ஜீவன் முத்தர்க்கும் பிராரப்தம் தப்பாது என்ற விசிட்டாத்துவிதக் கொள்கை இதனால் மறுக்கப்படுகிறது. எவ்வாறெனின், அவர் கிரந்தி பேதித்ததால் உடலறிவு இழந்தவராதலின், அவருக்கு உடல்வினை நிகழ்வது பரதிருட்டியிலேயே என்க.

**1147. வினைநுகர்ச்சி யேயுடலா மேவினா லார்க்கும்**
**வினைநுகர்ச்சி யின்றேல் விழாதோ - எனவுரைப்பிற்**
**பூத வுடலம் புலப்பட்ட தாருக்கோ**
**நீத முறநீ நிகழ்த்து.**

வினை நுகர்ச்சியே உடலா மேவினால் ஆர்க்கும் வினை நுகர்ச்சி இன்றேல் விழாதோ என உரைப்பின் பூத உடலம் புலப்பட்டது ஆருக்கோ நீதம் உற நீ நிகழ்த்து.

**நீதம் உற-நியாயப்படி.**

## 1147. *வேடன்கைப் பட்ட புறவு விடப்படின்*
a *காடுங் கடந்து விடுமென்னின் - நாடியகம்*
*வேடன்றான் வேறகல வேறான வக்காடும்*
*வீடா யொடுங்கி விடும்.*

***- பகவான்***

வேடன் கைப்பட்ட புறவு விடப்படின் காடும் கடந்து விடும் என்னின் நாடி அகம் வேடன் தான் வேறு அகல வேறான அக்காடும் வீடு ஆய் ஒடுங்கிவிடும்.

## 1148. களியனா மந்தன்றன் காயமேற் கூறை
யளைதல் விழுத லறியான் - வெளியா
மொளியுருத்தேர் சித்த னுடலியைபு நீக்கந்
தெளிவுறான் மித்தை செடம்.

களியன் ஆம் அந்தன் தன் காயம்மேல் கூறை அளைதல் விழுதல் அறியான் வெளி ஆம் ஒளி உருத் தேர் சித்தன் உடல் இயைபு நீக்கம் தெளிவு உறான் மித்தை செடம்.

**களியன்-கள்ளுண்டு மயங்கியவன்; கூறை-ஆடை.**

தனையுணர்ந்தவன் தனு உணர்கிலனென்பது ஸ்ரீ பகவான் வாக்கு. முக்தருக்கும் தேகம் விழும் வரை கூடியிருப்பதால் பிறர்க்கெழும் ஐயங்களை யிது போக்குவது. அகண்ட சித்துணர்வில் லயித்த ஞானி தேகம் இருப்பதையும் விழுவதையும் சொரூபத்தினின்றும் வேறாக உணரான். கள் வெறியிலிருப்பவன் புனைதுகில் நீங்கினும் இருப்பினும் அக்களியில் ஓராதான் போல்.

### (கலி விருத்தம்)

## (24) *தனுநிலை யிலதாந் தங்கினு மெழினும்*
*வினையினு லடுத்து விடுத்திடு மேனும்*
*புனைதுகி லினைக்கள் வெறிக்குரு டனைப்போற்*
*றனையுணர் சித்தன் றனுவுணர் கிலனே.*

***-பகவான்***

தனு நிலை இலது ஆம் தங்கினும் எழினும் வினையினால் அடுத்து விடுத்திடும் ஏனும் புனை துகிலினைக் கள் வெறிக் குருடனைப்போல் தனை உணர் சித்தன் தனு உணர்கிலனே.

## (நேரிசை வெண்பா)

**1149. நிகழ்ந்தசெம் பட்டுமடி நீறாகி யுண்மை**
**இகந்துமிக வாத்தோற்ற மேய்க்கும் - அகந்தைச்**
**செயிர்தீரப் பெற்ற செழுஞ்சீவன் முத்தர்**
**உயிரோ டுடம்பி னுரு.**

நிகழ்ந்த செம்பட்டு மடி நீறு ஆகி உண்மை இகந்தும் இகவாத் தோற்றம் ஏய்க்கும் அகந்தைச் செயிர் தீரப்பெற்ற செழும் சீவன்முத்தர் உயிரோடு உடம்பின் உரு.

**இகந்து-நீங்கி.**

**1150. ஆன வராக்கா லராவே யறிவதென**
**ஞானி யியலறிவான் ஞானியே - ஞானியியல்**
**வேறொருவ ராலே விபரீத மாகவலாற்**
**றேறரிது மெய்ம்மைத் திறத்து.**

ஆன அராக் கால் அராவே அறிவது என ஞானி இயல் அறிவான் ஞானியே ஞானி இயல் வேறு ஒருவராலே விபரீதம் ஆக அலால் தேற அரிது மெய்ம்மைத் திறத்து.

**அரா-பாம்பு.**

பாம்பின்கால் பாம்பறியுமென்பதை யொக்க ஞானியின் தன்மையை அச்செல்வம் பெற்ற ஞானியேதான் அறியமுடியும். நூலறிவு மட்டும் பெற்ற ஒருவரால் ஞானியின் மெய்த்தன்மையை தெளிந்தறிய இயலாது. அவரறிவு மயக்க அறிவாய் உண்மையை உள்ளபடியன்றி மாறாகவே காணுமாதலின். சீவன் முக்தி இலக்கணம் கூறும் நூல்களிலும் ஞானியர் பித்தராகவும் பேயராகவும் பாலராகவும் காட்சியளிப்பரென்றும் உலகுணர்வு ஒழியப்பெறாத பாமரரால் அவரை மதிக்க இயலாதென்றும் கூறியிருப்பது காண்க.

**1151. தன்னையழித் தோங்குந் ததாகார மோனநிலை**
**மன்னியமெய்ஞ் ஞான மகானந்தி - அன்னியமொன்**
**றோராத மாட்சி யுடையபிரம் மானுபவம்**
**யாராலு மெண்ண லரிது.**

தன்னை அழித்து ஓங்கும் தத் ஆகார மோனநிலை மன்னிய மெய்ஞ்ஞான மகா ஆனந்தி அன்னியம் ஒன்று ஓராத மாட்சி உடைய பிரம்மானுபவம் யாராலும் எண்ணல் அரிது.

பிரமானுபவம் யாராலும் எண்ணலரிது. ஏனெனின் அது நினைவிற் காதாரமான ‘தான்’ என்பது அழிந்தவிடத்துத் தழைக்கும் மோனம். அன்றியும் துவிதமின்றி, அன்னியத்தைக் காணாத மாண்புடையது.

(25) *தன்னை யழித்தெழுந்த தன்மயா னந்தருக்*
*கென்னை யுளதொன் றியற்றுதற்குத் - தன்னையலா*
*தன்னிய மொன்று மறியா ரவர்நிலைமை*
*யின்னதென் றுன்ன லெவன்.*

*-பகவான்.*

தன்னை அழித்து எழுந்த தன்மய ஆனந்தருக்கு என்னை உளது ஒன்று இயற்றுதற்குத் தன்னை அலாது அன்னியம் ஒன்றும் அறியார் அவர் நிலைமை இன்னது என்று உன்னல் எவன்.

## 49. ஞானியர்திறன்

**(கலி விருத்தம்)**

**1152. ஞானியின் பெருமை நவில வொணாது**
**தானியல் வண்ணந் தானே யறிவன்**
**வானினும் பெரியன் மலையினுந் திண்ணியன்**
**ஊனுணர் வொழிந்துய்த் துணர்ந்து கொளாயே.**

ஞானியின் பெருமை நவில ஒணாது தான் இயல் வண்ணம் தானே அறிவன் வானினும் பெரியன் மலையினும் திண்ணியன் ஊன் உணர்வு ஒழிந்து உய்த்து உணர்ந்து கொளாயே.

ஞானியின் பெருமையை ஊனுணர்வொழித்து உய்த்துணர வேண்டுமென்றார். எவ்வாறெனின், தேகாத்ம புத்தியுள்ளவரை ஞானியும் நம்மைப்போல் சரீரியாகவும் பந்தனாகவும் தோற்றுவதால், அந்த அஞ்ஞான புத்தியழிதலும், அவன் அகண்டநிலை விளங்குவதாம்.

**(நேரிசை வெண்பா)**

**1153. அரூபமா நின்றே யனைத்தும் விளக்குஞ்**
**சொரூபமா முண்மைச் சுடரைத் - திரோதமறத்**
**தானாகத் தானே தழைத்தொளிரக் கண்டமுனி**
**வானாளு மன்னன் மதி.**

அரூபமா நின்றே அனைத்தும் விளக்கும் சொரூபம் ஆம் உண்மைச் சுடரைத் திரோதம் அறத் தானாகத் தானே தழைத்து ஒளிரக் கண்ட முனி வான் ஆளும் மன்னன் மதி.

**திரோதம்-மறைப்பு.**

உண்மையில் உலகையாள்வோர் மன்னரல்லர். சிவலோகமாள்பவரே மன்னராம். அவர்தாம் சொரூபத்தில் அகந்தையழித்து தாமாகவே தழைத்து அனைத்துமாய் விளங்கும் மெய்ச்சுடராய், மறைக்குஞ் சக்தியின்றி விளங்குபவர்.

## 1154. சொருபந் தனிலே துயிலறிஞன் சித்தம்
பருவந்து பாழ்படான் பாரில் - சொருப
நிருவிகற்ப மோன நிரதிசயா னந்தப்
பரவையிற்பே ராது படிந்து.

சொருபம் தனிலே துயில் அறிஞன் சித்தம் பருவந்து பாழ்படான் பாரில் சொருப நிருவிகற்ப மோன நிரதிசயானந்தப் பரவையில் பேராது படிந்து.

**பருவந்து-துன்புற்று; பரவை-கடல்.**

சொரூபமான நிருவிகற்பமோன நிரதிசயானந்த நிலையில் பெயராது படிந்து, சொரூபந்தனில் துயில் கொள்வோன் எக்காரணம் பற்றியும் திரிபுடிகளான பாழில் வினையாளனாகத் துயரை அநுபவியான்.

## 1155. நனவாய தன்னை நழுவிப்போய் மாயக்
கனவாகக் காணு முலகை - நனவாகப்
போற்றும் புலவரும் வேறே தமையுணர்ந்து
தேற்றும் புலவரும் வேறு.

நனவு ஆய தன்னை நழுவிப்போய் மாயக் கனவு ஆகக் காணும் உலகை நனவு ஆகப் போற்றும் புலவரும் வேறே தமை உணர்ந்து தேற்றும் புலவரும் வேறு.

## 1156. நுனித்துநுனித் தெத்தனைதா நோக்கினுமெய்ந் நூல்கள்
தனைத்தனினற் காயவே சாற்றும் - மனித்தன்
கடிமுகங்கண் டுள்ளங் களிப்பதே யன்றோ
படிமக் கலங்காண் பலன்.

நுனித்து நுனித்து எத்தனை தாம் நோக்கினும் மெய்ந் நூல்கள் தனைத் தனில் நன்கு ஆயவே சாற்றும் மனித்தன் கடிமுகம் கண்டு உள்ளம் களிப்பதே அன்றோ படிமக்கலம் காண் பலன்.

தம்மை நுணுகி நுணுகி ஒருவனெத்தனைதா மாராய்ந்தாலும், தனக்குட்டன்னை யாராய்ந்தறியவே உண்மைநூல்களெளாக்கக் கூறுவனவாம். ஒருவன் கண்ணாடி காணும் பயன் அது காட்டுந்தன் முகச்சாயையே யாகாது அதன் வாயிலாய்த் தன் னுளங்களிக்க வுண்மை முகங்காண்டலன்றோ?

**வி-ரை :-** நற்காய்தல்-ஐயந்திரிபற வாராய்தல்; நன்கு நற்கென வலித்தல் பெற்றது. கடி முகம் - விளக்க மமைந்த முகம். கண்டு களித்தலென்பது

களித்துக் காண்டலென விகுதி பிரித்துக்கூட்டி, களித்தல் காரியமாதலாற் செய்தனெச்சம் செயவெனெச்சமாகத் திரித்துரைக்கப்பட்டது. ஆராய்ச்சி முழுதும் நூலிற்றொடங்கி நூலொடுமுடிந்து விடின், ஏட்டுச் சுரைக்காய் கறிக்காகாமை போன்று உண்மையுணர்வாலுறு முபசாந்த சுகமுறா தொழிய, அந்நூலுணர்ச்சிக்காகப் பட்ட பாடனைத்தும் விழலுக் கிறைத்தாற்போல் வீணாய் விளிதலால் மெய்ந் நூல்கள் தனைத்தனினற்காயவே சாற்றுதலா மென்க. ''எந்நூலிலும் முக்தியடைவதற்கு மனத்தை யடக்கவேண்டுமென்றே சொல்லப் பட்டுள்ளபடியால், மனவடக்கமே நூல்களின் முடிவான கருத்து என்றறிந்து கொண்ட பிறகு,நூல்களை யளவின்றிப் படிப்பதாற் பயனில்லை. மனத்தை யடக்குவதற்குத் தன்னையாரென்று தனக்குள் விசாரிக்க வேண்டுமேயல்லால் எப்படி நூல்களில் விசாரிப்பது?'' (நானார்)

## 1157. வேத்தியமாந் தம்மை விளக்கலுறு மெய்ஞ்ஞான சாத்திரமாந் தர்ப்பணத்தைச் சார்ந்தாருட் - சூத்திரமா பாடியத்தைப் பார்ப்பார் பலராகத் தம்மியலைத் தேடியறிந் துய்வார் சிலர்.

வேத்தியம் ஆம் தம்மை விளக்கல் உறும் மெய்ஞ்ஞான சாத்திரம் ஆம் தர்ப்பணத்தைச் சார்ந்தாருள் சூத்திர மா பாடியத்தைப் பார்ப்பார் பலர் ஆகத் தம் இயலைத் தேடி அறிந்து உய்வார் சிலர்.

**தர்ப்பணம்-முகம் பார்க்கும் கண்ணாடி; பாடியம்-உரை நூல்.**

## 1158. மெய்ஞ்ஞானி வேறேயம் மெய்ஞ்ஞான நூலுணர்ந்த விஞ்ஞானி வேறே விளம்புங்கால் - அஞ்ஞானக் கட்டறக்காண் பார்க்குக் கலைஞரைநீத் தான்மபர நிட்டர்பாற் சேர்தலே நேர்.

மெய்ஞ்ஞானி வேறே அம் மெய்ஞ்ஞான நூல் உணர்ந்த விஞ்ஞானி வேறே விளம்புங்கால் அஞ்ஞானக் கட்டு அறக் காண்பார்க்குக் கலைஞரை நீத்து ஆன்ம பர நிட்டர்பால் சேர்தலே நேர்.

ஓர்ந்துரைக்குங்கால் மெய்ஞ்ஞானியும், அம் மெய்ஞ்ஞான நூலுணர்ந்த விஞ்ஞானியும் இருவரும் வெவ்வேறாம். ஆதலால்,பாச பந்தமற முயல்வார்க்கு அவ்விஞ்ஞானிகளை விலக்கி பரமுணர்ந்த ஆன்மநிட்டர் பாலடைதலே நேர் வழியாம்.

**வி-ரை :-** ஆன்ம நிட்டரை யடைந்தாலொழிய அநுபவ ஞானங்கை கூடாமையின், இவ்வாறு கூறினார். கேவல விஞ்ஞானத்தாற் கிடைக்கப் பெறும் பயன் உலகிற் புகழும் பூஜையுமொழிய வேறின்றாம்.

**1159. அருள்வல் லபத்தா லனைத்தையுந் தாங்கும்
பொருளுணர்ந்த ஞானி புகல்சொல் - இருளின்
வயப்பட்டு நீடு மயங்குயிர்கட் கென்று
முயப்பற்றுக் கோடா முணர்.**

அருள் வல்லபத்தால் அனைத்தையும் தாங்கும் பொருள் உணர்ந்த ஞானி புகல் சொல் இருளின் வயப்பட்டு நீடு மயங்கு உயிர்கட்கு என்றும் உயப் பற்றுக்கோடு ஆம் உணர்.

**நீடு-நெடுங்காலம்.**

அருள் வல்லபத்தால் அனைத்தையும் தாங்கும் பொருளை யுணர்த்தவல்ல ஞானியின் சொற்களே, இருளிலுழலும் பந்த ஜீவர்க்குப் பற்றுக்கோடும் உய்வகை நெறியுமாம்.

## 50. ஞானிகள்கன்மத்திறன்

**1160. தொழிலறலே ஞானத் துணிபேற் றொழுவாற்
றொழிலறலு ஞானத் துணிபே - தொழிலின்
உவப்புவர்ப்பு நீத்துள்ளத் தோர்பொறுப்பு மில்லா
நிவப்பதுகாண் ஞான நிலை.**

தொழில் அறலே ஞானத் துணிபேல் தொழுவால் தொழில் அறலும் ஞானத் துணிபே தொழிலின் உவப்பு உவர்ப்பு நீத்து உள்ளத்து ஓர் பொறுப்பும் இல்லா நிவப்பு அது காண் ஞான நிலை.

**தொழு-குட்டநோய்.**

**1161. எண்ணக் கடவதா யாதுமிலை யெண்ணமற்ற
வண்ணமாத் தன்மயத்தில் வாழ்வோர்க்கு - நண்ணக்
கடவதுமோ னானுபவக் காட்சியே தன்பாற்
படர்வதொன்று மில்லை பரத்து.**

எண்ணக் கடவதா யாதும் இலை எண்ணம் அற்ற வண்ணமாத் தன்மயத்தில் வாழ்வோர்க்கு நண்ணக் கடவது மோனானுபவக் காட்சியே தன்பால் படர்வது ஒன்றும் இல்லை பரத்து.

**படர்வது-அடைவது.**

**1162. இருத்தலே தம்மெய் யியல்பென் றுணர்ந்து
கருத்தறுகம் பீரநிலை கண்டோர் - பெருத்த
பலகா ரியங்கள் பயிற்றினுங்கர்த் தாவா
மலகா ரகர்த்தர் மதி.**

இருத்தலே தம் மெய் இயல்பு என்று உணர்ந்து கருத்து அறு கம்பீர நிலை கண்டோர் பெருத்த பல காரியங்கள் பயிற்றினும் கர்த்தாவா மலகார் அகர்த்தர் மதி.

**மலகார்-கலக்கமுறார்.**

## 1163. அறத்துறையின் முற்றி யதீதமாந் தம்மெய்த்
## திறத்துறைநன் முத்தராஞ் சீவர் - புறத்து
## நிகழ்த்தலே போன்று நியம நெறியை
## இகத்தலுமோ ரேஎ ருடைத்து.

அறத் துறையில் முற்றி அதீதமாத் தம் மெய்த் திறத்து உறை நல் முத்தர் ஆம் சீவர் புறத்து நிகழ்த்தலே போன்றும் நியம நெறியை இகத்தலும் ஓர் ஏயர் (ஏர்) உடைத்து.

**ஏர்-அழகு.**

## 1164. அசரீரி யான வகண்டமா முத்தன்
## சசரீரி போலச் சரித்தல் - வசமாப்
## படியளந்த மால்போற் பராகாய வீதி
## யடியளந்தாற் போலு மறி.

அசரீரி ஆன அகண்ட மா முத்தன் சசரீரி போலச் சரித்தல் வசமாப் படி அளந்த மால்போல் பராகாய வீதி அடி அளந்தால் போலும் அறி.

விடுதலை பெற்ற ஜீவான்மா தேகாத்மபுத்தி கிஞ்சித்து மில்லாதவனாய், அகண்ட சிதம்பரத்தில் சஞ்சரிப்பவ னாயினும் இங்கு, பரதிருஷ்டியில், சரீரியாகவே காணப்படுகிறான். இஃது பரநோக்கின் குறையே யொழிய ஜீவன் முக்தியில் லோபமில்லை. ஆன்மாக்கள் உய்தியடைதற்பொருட்டெனினும் பொருந்தும். அஃது எங்கும் வியாபித்துள்ள திருமால் தாம் உலகத்தைத் தம் வயமாக்க தாம் குறளுருவமாகவும் அண்டம் பெரிதாகவும் தோன்ற உலகளந்ததை யொக்கும்.

## 1165. கருவி கரணசங் காதமே செய்கை
## புரியும் வினைமுதலாப் போக்கிப் - புரிவனவாய்
## வைகுமவற் றோடெவ் வகைத்தொடர்பு மில்லறிஞன்
## செய்குறினுஞ் செய்கலா தான்.

கருவி கரண சங்காதமே செய்கை புரியும் வினைமுதலாப் போக்கிப் புரிவனவாய் வைகும் அவற்றோடு எவ்வகைத் தொடர்பும் இல் அறிஞன் செய்குறினும் செய்கலாதான்.

**சங்காதம்-கூட்டுத்தொகுதி.**

**1166. போந்ததுகொண் டுள்ளம்பூ ரித்தோராய்த் தொந்தமெலாம்
நீந்தினராய் மாச்சரிய நீங்கினராய்ச் - சாந்தநிலை
துன்னினராய் வெற்றியொடு தோல்வியிடை யாற்றுமவர்
கன்மமதாற் கட்டுண் கலார்.**

போந்தது கொண்டு உள்ளம் பூரித்தோராய்த் தொந்தம் எலாம் நீந்தினராய் மாச்சரியம் நீங்கினராய்ச் சாந்த நிலை துன்னினராய் வெற்றியொடு தோல்வி இடை ஆற்றும் அவர் கன்மம் அதால் கட்டுண்கலார்.

**(குறள் வெண்பா)**

**(26)** ***எய்தலிலின் புற்றழுக்கா றிற்றிரட்டை யெற்றுசமன்
செய்திடினுஞ் சிக்கற்றான் றேர்.***

***-பகவான்***

எய்தலில் இன்பு உற்று அழுக்காறு இற்று இரட்டை எற்று சமன் செய்திடினும் சிக்கு அற்றான் தேர்.

**அழுக்காறு-பொறாமை; இற்று-நீங்கி; எற்று-கடந்து; சிக்கு-பந்தம்.**

## 51. தன்மயர்சால்புத்திறன்

**(நேரிசை வெண்பா)**

**1167. புறச்சின்னங் கொண்டுபிர போதனையா ராய்வார்
வெறிச்சென்ன நோக்கியே மீள்வர் - வெறிச்ச
முகத்துநோக் காலே முகந்தறிய வொண்ணா
வகத்தொளி காணா ரவர்.**

புறச்சின்னம் கொண்டு பிரபோதனை ஆராய்வார் வெறிச்சு என்ன நோக்கியே மீள்வர் வெறிச்ச முகத்து நோக்காலே முகந்து அறிய ஒண்ணா அகத்து ஒளி காணார் அவர்.

**பிரபோதன்-ஞானி.**

உண்முகத்தில் ஒளிவிடும் பிரகாசத்தைக்கண்டு மகிழ்பவரை புறவடையாளங்கள் கண்டு அறியலாகா தென்றார். அவ்வுண்முக வொளி காணாதவர், பேரறிவில் திளைப்பவரை வெற்று முகத்து நோக்கால் கண்டறிய வொணாமல், ஏமாற்றமடைவர். முத்தர் பாலர், பித்தர், பேதையரெனக் காட்சியளித்தலாலு மென்க.

**1168. சித்திகளே கொண்டு தெரிக்கப் படுஞ்சீவன்
முத்தரது மாட்சி முரண்படுமே - முத்தரவர்
சித்திகள்சேர்ந் தேனுமவை சேராதே னுந்திகழ்வர்
சித்திவியப் பாரோரார் தேர்.**

சித்திகளே கொண்டு தெரிக்கப்படும் சீவன் முத்தரது மாட்சி முரண்படுமே முத்தரவர் சித்திகள் சேர்ந்தேனும் அவை சேராதேனும் திகழ்வர் சித்தி வியப்பார் ஓரார் தேர்.

சித்திகளைக்கொண்டு முத்தரையளவிடும் பேதைமையை விளக்குவது. முத்தியென்பது சொரூபப் பிராப்தியேயாதலின் முத்தர்கள் சித்திசேர்ந்தவராகவோ அவையினின்று பிரிந்தவராகவோ தம் நிலையில் திகழ்வார்; அச்சித்திகளை யெள்ளளவும் கருதார். முக்தியில் அவை பிரதி பந்தமு மன்று.

**1169. சேணிற் கிடந்தொளிர்சச் சிட்டர் பெருமையைத்தம்
மாணத் தகாப்புன் மயலாலே - காணப்பல்
சித்திகள்கற் பித்துச் சிறுமைப் படுத்துறுமுன்
மத்தர் மலிந்த துலகு.**

சேணில் கிடந்து ஒளிர் சத் சிட்டர் பெருமையைத் தம் மாணத்தகாப் புன் மயலாலே காணப் பல் சித்திகள் கற்பித்துச் சிறுமைப் படுத்து உறும் உன்மத்தர் மலிந்தது உலகு.

**சேணில்-வெகுதூரத்தில்; சச்சிட்டர்-சத்சிஷ்டர், ஞானி.**

**1170. தன்மயராம் பூரணர்க்குச் சித்திகளாற் சால்புரைத்தல்
இன்னுழையுஞ் செங்கதிரின் றுன்னணுச்சீர் - வன்னம்
நிகழ்த்துவத னாலே நிறைசுடர்ஞா யிற்றின்
மகத்துவநன் கோதன் மதி.**

தன்மயர் ஆம் பூரணர்க்குச் சித்திகளால் சால்பு உரைத்தல் இல் நுழையும் செங்கதிரின் துன் அணுச் சீர் வன்னம் நிகழ்த்துவதனாலே நிறைசுடர் ஞாயிற்றின் மகத்துவம் நன்கு ஓதல் மதி.

**இல்-வீடு; துன்-நெருங்கியுள்ள.**

**1171. உடலுலக வாழ்க்கை யொராங்கே நிகழ
வுடலுலகைச் சித்தா வுணர்ந்தோன் - உடலுலக
பெத்தனாத் தன்னைப் பிறரை மருட்டுவான்
முத்தனையார் தேர்வர் முகத்து.**

உடல் உலக வாழ்க்கை ஒராங்கே நிகழ உடல் உலகைச் சித்தா உணர்ந்தோன் உடல் உலக பெத்தனாத் தன்னைப் பிறரை மருட்டுவான் முத்தனை யார் தேர்வர் முகத்து.

உடல் உலகு இவற்றைச் சித்தினின்றும் வேறுபடாது காண்போன் தானும் பிறரைப்போல் பெத்தனாகவே நடித்து இறுதியில் உடல் கழல்கின்றான் எனினும் அவனுக்கு மூவினைகளும் உண்மையில் நிகழ்வனவன்று; அசத்தியமே. அவன் நிலையை இன்னதென நினைத்தல் கூடாமையால், அவனை யார் தேர்வரென்றும் ''பெத்தனாத் தன்னைப் பிறரை மருட்டுவான்'' என்றும் சிறப்பித்தார்.

## 52. மவுனமாட்சித்திறன்

**1172. வாலிதா மெய்ஞ்ஞான மாட்சி யளிப்பதாய்**
**ஏல்புடைய வெல்லா வெழுத்துக்கும் - மூலமாய்**
****ஓரெழுத்தென் றுந்தானா யுள்ளத் தொளிர்வதாம்***
***ஆரெழுத வல்லா ரதை.***

*இவ்விரண்டடிகளும் பகவான் திருவாக்கு.

வாலிதாம் மெய்ஞ்ஞான மாட்சி அளிப்பதாய் ஏல்புடைய எல்லா எழுத்துக்கும் மூலமாய் ஓர் எழுத்து என்றும் தானாய் உள்ளத்து ஒளிர்வதாம் ஆர் எழுத வல்லார் அதை.

**வாலிதாய்-தூய்மையானதாய்.**

**1172. *அக்கரம தோரெழுத் தாகுமிப் புத்தகத்தோ***
**a *ரக்கரமா மஃதெழுத வாசித்தா - யக்கரமா***
***மோரெழுத்தென் றுந்தானா யுள்ளத் தொளிர்வதா***
***மாரெழுத வல்லா ரதை.***

***-பகவான்***

அக்கரம் அது ஓர் எழுத்து ஆகும் இப் புத்தகத்து ஓர் அக்கரம் ஆம் அஃது எழுத ஆசித்தாய் அக்கரம் ஆம் ஓர் எழுத்து என்றும் தானாய் உள்ளத்து ஒளிர்வதாம் ஆர் எழுத வல்லார் அதை.

**1173. சாலத் தெளிவுடைத்தாய்ச் சத்தியமா யெம்மொழிக்கும்**
**மூலமாந் தெய்வ மொழிவினவின் - ஆலடியின்**
**ஞான சொரூபமா நம்பனுப தேசிக்கும்**
**மோனமே யந்த மொழி.**

சாலத் தெளிவு உடைத்தாய்ச் சத்தியமாய் எம் மொழிக்கும் மூலம் ஆம் தெய்வ மொழி வினவின் ஆல் அடியில் ஞான சொரூபமாம் நம்பன் உபதேசிக்கும் மோனமே அந்த மொழி.

**நம்பன்-சத்குரு.**

உய்த்துணரவல்லார்க்கு உண்மையுந் தெளிவும் ஒருங்கே மிக்குடையதும் மொழிகட்கெல்லாம் மூலமாவதும் தெய்வத்தன்மை சேர்ந்ததுமாஞ் சிறந்தமொழி எதுவென்றாராயின், கல்லாலடியாங் கருத்தகத்துச் சநகாதிகளாஞ் சதாசாரர்க்கு சொருபமாந் தக்ஷிணாமூர்த்தி அந்தரங்கத்தினறிவிக்கும் மோனமே அவ்வொரு மொழியாம்.

**(வேறு)**

**1173.** ***மௌனமுள் ளெழுமொரு மொழியரு ணிலையே.***
**a** ***-பகவான்***

மௌனம் உள் எழும் ஒரு மொழி அருள் நிலையே.

**(நேரிசை வெண்பா)**

**1174. உரைபலவற் றாலு மொளிர்விக்க வொண்ணாப்**
**பெருமைசா லந்தப் பிரம்மம் - அரிதாம்**
**குருமோனத் தாலே குலவலினம் மோன**
**வுரையேகாண் மிக்க வுரை.**

உரை பலவற்றாலும் ஒளிர்விக்க ஒண்ணாப் பெருமைசால் அந்தப் பிரம்மம் அரிதாம் குரு மோனத்தாலே குலவலின் அம் மோன உரையே காண் மிக்க உரை.

பிரமத்துக்குத் தகுதியுடைய உரை மோன வியாக்கியான மொன்றேயாம். மோனத்தாலே குரு குலவுதலே உண்மையில் பிரமத்தை அறிவிப்பதாம். ''வாய்ச் சொற்களென்ன பயனுமில.''

**1175. சால யதார்த்தம்போற் சாருங் கணிகத்துக்**
**காலயவிஞ் ஞான மடிப்படையாம் - ஆலயவிஞ்**
**ஞானந் தனக்கு நலியாவா தாரசிலை**
**மோனமாந் தொல்லை முதல்.**

சால யதார்த்தம்போல் சாரும் கணிகத்துக்கு ஆலய விஞ்ஞானம் அடிப்படையாம் ஆலய விஞ்ஞானம் தனக்கு நலியா ஆதார சிலை மோனமாம் தொல்லை முதல்.

> **கணிகம்-நொடியில் தோன்றியும் மறைவதுமானது; ஆலய விஞ்ஞானம்-மரணம்வரை நீடிக்கும் உடலுணர்வு; ஆதார சிலை-அடித்தளம்.**

ஆலய விஞ்ஞானமும் பழித்தற்பாலதன்று. அஃது ஞானத்தின் அடிப்படையாதலின். அதற்கும் நலியாத ஆதாரமெனப்படுவது மோனஸ்வரூபமொன்றே.

**1176. ஒன்றுமதி யூகத்தா லுண்டின் றுருவருவென்
றொன்றிரண் டென்று முரையாடா - தென்றும்
தவலிலனு பூதியாஞ் சச்சிதா னந்த
மவுனமே யுண்மை மதம்.**

ஒன்றும் மதி யூகத்தால் உண்டு இன்று உரு அரு என்று ஒன்று இரண்டு என்றும் உரையாடாது என்றும் தவல் இல் அனுபூதியாம் சத் சித் ஆனந்த மவுனமே உண்மை மதம்.

**தவலுதல்-அழிதல்.**

அறிந்த தன்னைவிட்டு அறியாவயலையே போய்ப் பொருந்தும் மதியூகத்தால், உண்டின்றென ஆத்திக நாத்திகமும் உருவருவென வியக்தாவியக்தமும் இரண்டொன்றெனத் துவிதாத் துவிதமும் என இவற்றுளொன்று பற்றி வாளா வாதியாமல் என்றுந் தவறுதலில்லாத சச்சிதானந்தான்மாநுபூதி வடிவாக நிகழும் மவுனமே உண்மை மதமாம்.

**1177. ஜாதிமத மோகச் சடங்கா யிரத்தாலும்
பேதமதி சற்றும் பெயருமோ - ஓதுமதீ
தாதிமத மோன வருள்வாழ் வுளம்பற்றிப்
போதமுதி யாத பொழுது.**

ஜாதி மத மோகச் சடங்கு ஆயிரத்தாலும் பேத மதி சற்றும் பெயருமோ ஓதும் அதீத ஆதி மத மோன அருள் வாழ்வு உளம் பற்றிப் போதம் உதியாத பொழுது.

மேலோர் மீக்கூறும் மனாதீதமான மவுன மென்னும் ஆதி சமயாசரணையான வருள் வாழ்க்கை ஒருவனுள்ளத்துட் படிந்து உண்மையுணர் வுதியாவிடத்து, ஜாதி சமயச்சடங்காற்றலே சதாசாரம் போல், அதுவே பரமாக வறிவு மயங்கி ஆயிரக் கணக்கிற் கடைப்பிடித்தொழுகும் கன்மாநுட்டானத்தான் மட்டும் ஞானாநுபவமா முபசாந்தத்துக் கூறு விளைக்கும் விகற்ப புத்தி சற்றும் விலகுவதன்று.

**வி-ரை :-** மவுனமே ஆதிமத மென ஈண்டுக் கூறப்பட்டது போல, அதுவே உண்மை மதமென இந்நூலிற் பிறாண்டுங் கூறப்படும். சதாசாரம்-ஆன்றோரொழுக்கம். அருள் வாழ்வு-தன்னிழப்பா மிறைபணி நிற்றலோடு சருவான்ம பாவத்தாற் சாருஞ் ஜீவகாருணிய வொழுக்கமுமாம். சமூகக் கட்டுப்பாடு பற்றிச் சடங்காற்றுங் காலும் விகற்ப புத்தியற நிலைதவறாது நின்றே நிகழ்த்த வேண்டு மென்பதாம்.

''எத்தவத்தைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே''-பட்டினத்தார்.

**1178. மாக்கடல்வா யோடி மடுக்கு நதித்திரள்போற்
றேக்குசிதா னந்த சிவாம்புதிக்கே - நோக்கமாச்
செல்லுமத மெல்லாஞ் சிவமயமா மாதலால்
இல்லைபே தத்துக் கிடம்.**

மாக்கடல் வாய் ஓடி மடுக்கும் நதித் திரள்போல் தேக்கு சிதானந்த சிவ அம்புதிக்கே நோக்கமாச் செல்லும் மதம் எல்லாம் சிவமயமாம் ஆதலால் இல்லை பேதத்துக்கு இடம்.

**மடுக்கும்-சங்கமமாகும்.**

**1179. கொள்கைக்கட் பேதங் குறித்ததா னாரெனுமக்
கொள்கைகுறிக் கொண்டுண்மூழ் குங்காலை - உள்ளதனை
அன்றிநா னின்றி யழிதலா லம்மோனத்
தொன்றுமோ பேத வுணர்வு.**

கொள்கைக்கண் பேதம் குறித்த தான் ஆர் எனும் அக் கொள்கை குறிக்கொண்டு உள் மூழ்குங்காலை உள்ளதனை அன்றி நான் இன்றி அழிதலால் அம்மோனத்து ஒன்றுமோ பேத உணர்வு.

**1180. ஒன்றாதேற் பேத வுணர்ச்சியம் மோனத்துள்
ஒன்றுமோ மற்றை யுணர்ச்சிதான் - என்றாலோ
பேத வுணர்ச்சி பிரிதலே மெய்யறிஞர்
ஓது மபேத வுணர்வு.**

ஒன்றாதேல் பேத உணர்ச்சி அம் மோனத்துள் ஒன்றுமோ மற்றை உணர்ச்சிதான் என்றாலோ பேத உணர்ச்சி பிரிதலே மெய்யறிஞர் ஓதும் அபேத உணர்வு.

**1181. ஊன வினாவிடைக ளுண்மை துவிதமொழிக்
கானதா மன்றி யறியுங்கால் - மோனமாம்
அத்துவிதச் செம்மொழிக்க ணந்த வினாவிடைகள்
எத்துணையு மெய்த லிலை.**

ஊன வினா விடைகள் உண்மை துவிதமொழிக்கு ஆனதாம் அன்றி அறியுங்கால் மோனமாம் அத்துவிதச் செம்மொழிக்கண் அந்த வினா விடைகள் எத்துணையும் எய்தல் இலை.

**ஊன-குறைபாடான.**

குறைபாட்டோடு கூடிய வினாவுண்டாய் நிகழ்தலும், அதற்கென்றோர் விடையுண்டாய் நிகழ்தலும், அற்றாய துவித பாவமாம் உலக பாஷைக்கண் ஏற்பனவா மன்றி, ஆராயுங்கால், அத்துவிதாநுபவமாம் பராவாக்காகியமோன பாஷைக்கண் அதுதான் பூரணமாதலால் அத்தகைய வினாவிடைதா மெத்துணைச்சிறிது மிடம் பெறுதலிலவாம்.

**வி-ரை :-** ஊனமென்பதனை விடையோடுங் கூட்டுக. ஊனமென்பது வினாவிடைகளுக் கியற்கை விசேடணம்; இனம் விலக்க வந்ததொன்றன்று. ஆனவா மென்னும் பன்மை நோக்கி, வினாவுண்மையும் விடை யுண்மையும் எனத் தனித்தனியே கூட்டியுரைக்கப்பட்டது. இவ்வெண்பா பஞ்சதசியினின்று மொழிபெயர்ப்பு.

### (குறள் வெண்பா)

**(27) *இத்துவித பாடையி லேயே விஞவிடைகள்***
***அத்துவிதத் தின்றே யவை.***

***-பகவான்***

இத்துவித பாடையிலேயே வினா விடைகள் அத்துவிதத்து இன்றே அவை.

### (நேரிசை வெண்பா)

**1182. யாங்கெய்தி நின்றா லிருவர்மன முங்கலக்கும்**
**ஆங்கெய்தி நிற்றலே யாயுங்காற் - பாங்கெய்தும்**
**கூரார்ந்த கேள்விக் குலாவுடையோர் தம்முளிடை**
**பேராது பேசுறுமெய்ப் பேச்சு.**

யாங்கு எய்தி நின்றால் இருவர் மனமும் கலக்கும் ஆங்கு எய்தி நிற்றலே ஆயுங்கால் பாங்கு எய்தும் கூர் ஆர்ந்த கேள்விக் குலா உடையோர் தம் உள் இடை பேராது பேசு உறும் மெய்ப் பேச்சு.

ஆராயுங்கால், அறிவா னளவளாவலுற்றோரா மிருவர் மனங்களும் எவ்விடமடைந்து நின்றாலிரண்டற வொன்றுமோ, அவ்விடமடைந்து நிற்றலே அன்னார் தம்முளிடைவிடாது பேசும் உண்மைப் பேச்சாம்.

**வி-ரை :-** கேள்விக் குலா-அறிவு விளக்கமுமாம். பாங்கெய்துங் கூரார்ந்த கேள்வி-நன்மையமைந்த கூர்மை மிக்க வறிவு. இருவர்- குருசீடர்; அன்றியிருவருமே, ஒரு குருவையடுத்து, ஓருழைப்பயின்று உறவு கொண்டாடும் உண்மைச் சீடர்களும், பிறருமாம். அவ்விருவர் மனமுங் கலக்குமிடம் இதயம்.

ஆங்கெய்திநிற்றல்-தன்மயநிட்டை சார்தல். அதுவே, பயன்படுதல் நோக்கி அறிஞர் தம்முள் இடைவிடாது நிகழ்த்தும் உண்மைப் பேச்சாம். அதுவே மோனமெனவும் பராவாக்கெனவும்படும்.

## 53. சுத்தமவுனத்திறன்

**1183. விகற்பமா மோக வெளிற்றறிவு நீங்கி**
**முகப்பதா மோனப் பதமே - சுகப்பதமாச்**
**சாதிக்க வேண்டு தவத்தா லிதயத்தே**
**சோதித் தடைசொருபங் காண்.**

விகற்பமாம் மோக வெளிற்று அறிவு நீங்கி முகப்பதாம் மோனப் பதமே சுகப் பதமாச் சாதிக்க வேண்டு தவத்தால் இதயத்தே சோதித்து அடை சொருபங் காண்.

**வெளிற்று அறிவு-பயனற்ற அறிவு, அறியாமை; முகப்பது-எய்துவது.**

**1184. துட்டவகங் காரமனத் தோற்றமாங் கற்பனைதீர்**
**வெட்டவெளி யாக விளங்கலே - மட்டறுமெய்ஞ்**
**ஞானானு பூதியா நண்ணுமே காத்துவித**
**மோனானு பூதி முறை.**

துட்ட அகங்கார மனத் தோற்றமாம் கற்பனை தீர் வெட்ட வெளியாக விளங்கலே மட்டு அறும் மெய்ஞ்ஞான அனுபூதியா நண்ணும் ஏக அத்துவித மோன அனுபூதி முறை.

**1185. சுத்தமனத் தூடு சுடர்சொருப மோனமே**
**முத்தித் துவாரமா முற்றுவதால் - ஒத்த**
**வழியாது பற்றி வழங்கினுந்தா மந்தப்**
**புழையே முடிவாம் புகல்.**

சுத்த மனத்து ஊடு சுடர் சொருப மோனமே முத்தித் துவாரமா முற்றுவதால் ஒத்த வழி யாது பற்றி வழங்கினும் தாம் அந்தப் புழையே முடிவாம் புகல்.

**புழை-வாயில்.**

**1186. அத்துவிதச் செம்பொருளா மான்மசொரூ பத்தைமுழுச்**
**சித்தமொடு நீக்கமறச் சிந்திப்பே - சுத்தபர**
**மோனமா மன்றிவெறு மூடமனச் சோம்பலுணர்**
**வூனமா மோகமே யோர்.**

அத்துவிதச் செம்பொருளாம் ஆன்ம சொரூபத்தை முழுச் சித்தமொடு நீக்கமறச் சிந்திப்பே சுத்த பர மோனமாம் அன்றி வெறும் மூட மனச் சோம்பல் உணர்வு ஊன மா மோகமே ஓர்.

**1187. எழாதசெஞ் சொல்லா மெழிற்பரா வாக்கால்**
**வழாது சிவன்றாள் வழுத்தித் - தொழாதுதொழும்**
**திண்மை நழுவாதுட் சேர்மோன மேயியல்பாம்**
**உண்மை வழிபா டுணர்.**

எழாத செம் சொல்லாம் எழில் பராவாக்கால் வழாது சிவன் தாள் வழுத்தித் தொழாது தொழும் திண்மை நழுவாது உள் சேர் மோனமே இயல்பு ஆம் உண்மை வழிபாடு உணர்.

இதயத்தினின் றெழாத அழகிய செஞ்சொல்லாம் பராவாக்கால், ஆன்ம சொரூபமாய் ஆங்குறையும் சிவனடியைத் தைலதாரைபோற் றவறாது வாழ்த்தித் தொழாது தொழுகின்ற திட்பமறாத மவுனமே, அவ்விதயத்து நிகழும் இயல்பா முண்மை வழிபாடாம்.

**வி-ரை :-** அகங்காரச் சுட்டுணர்வறத் தொழுதலின் தொழாது தொழ லென்றார். இயல்பாம் வழிபா டென்றதும் அதனானே யென வறிக. உட்சேருண்மைவழிபாடெனக் கூட்டப்பட்டது.

**1188. சிவத்திலே தம்முண்மை தேர்ந்தோரே யான்ற**
**சுவத்தமா மோனநிலை தோய்ந்தோர் - சிவத்துக்**
**கயலான வற்றி லகம்புத்தி நீங்கிச்**
**செயலற்று நில்லாய் சிவத்து.**

சிவத்திலே தம் உண்மை தேர்ந்தோரே ஆன்ற சுவத்தம் ஆம் மோனநிலை தோய்ந்தோர் சிவத்துக்கு அயலானவற்றில் அகம் புத்தி நீங்கிச் செயல் அற்று நில்லாய் சிவத்து.

**1189. யானாய பொய்ம்முதலா ரென்றுசாஅய் யானற்ற**
**தானாய வீசன்மெய்த் தத்துவத்தே - தானே**
**மரணமா யொன்று மவுனநிலை மாண்பே**
**சரணா கதிதன்மச் சால்பு.**

யான் ஆய பொய்ம்முதல் ஆர் என்று உசாஅய் யான் அற்ற தான் ஆய ஈசன் மெய்த் தத்துவத்தே தானே மரணம் ஆய் ஒன்றும் மவுனநிலை மாண்பே சரணாகதி தன்மச் சால்பு.

''போலி முதலான யானென்போன் யாவன்'' என அகமுகத்தா லாழ்ந்தாராய்ந்து, அவ்வகந்தையற்ற ஆன்ம சொரூபமா மிறைவனதுண்மை வடிவில் அவ்வாராய்ச்சித் திறத்தால் தானே அழிதலாய், தானதனோடிரண்டறக் கலந்து விளங்கும் மவுன நிலையின் மாட்சியே சரணாகதிதன்ம நிறைவாம்.

**வி-ரை :-** பொய்ம் முதலாய யானெனெ மாறியுரைக்கப் பட்டது. கனவு நனவு களிலன்றிக் **கன**வுறக்கத்தில் அகந்தை யறியப் படாமையின் அதனைப் பொய்ம்முத லென்றும், பொய்யாதலின் விசாரத்தால் விளியுமென்பார் உசாஅய்

மரணமா யென்றும், உயிர்த்திருக்கும் போதே புத்திபூர்வமாய் வலியச் சாதலென்பார் தானே மரணமா யென்றும், அவ்வாறகந்தை யழிந்த அம்மவுன நிலைக்கண் என்றுமே துவிதத் தோற்றத்துக் கேதுவின்மையின் ஒன்றும் மவுன நிலை யென்றும், அந்நிலையே சரணாகதி தன்மத்தின் பரிஸமாப்தி யென்பார், சரணாகதி தன்மச் சால்பென்றும், ஈசன் ஆன்ம சொரூபத்தின் வேறன்மையால் தானாய வீசனென்றும் கூறினார். ஈசன் மெய்த்தத்துவ மென்றது உளதாதன் மாத்திரமா முரஞ்சான்ற வியல்பு நிலையை யெனவுணர்க. இச் செய்யுட் கருத்தே

'' யானே யென்னை யறிய கிலாதே
யானே யென்றன தேயென் றிருந்தேன்
யானே நீயென் னுடைமையு நீயே
வானோ ரேத்தும் வானவ ரேறே''

என்னும் நம்மாழ்வார் பாசுரத்தின் உள்ளக் கிடக்கை யாதல் உய்த்துணர்க.

## 1190. பழவினைப் பாங்கே பரனாட்டு விப்பான்
## கிழவனை யஃது கெடவே - பழவினையால்
## ஊனமாஞ் செய்ம்முயற்சி யூறுகளு மூதியமாம்
## மோனமா நிற்கை முறை.

பழவினைப் பாங்கே பரன் ஆட்டுவிப்பான் கிழவனை அஃது கெடவே பழவினையால் ஊனம் ஆம் செய்ம் முயற்சி ஊறுகளும் ஊதியம் ஆம் மோனமா நிற்கை முறை.

## 1191. எல்லாஞ்செய் வல்ல விறைநியதிக் கேறுமா
## றொல்லாது செய்ய வொருவர்க்கும் - பொல்லாத
## ஊனமா மாய வுளக்கவலை யோய்ந்தடிக்கே
## மோனமாய் நிற்கை முறை.

எல்லாம் செய் வல்ல இறை நியதிக்கு ஏறுமாறு ஒல்லாது செய்ய ஒருவர்க்கும் பொல்லாத ஊனமாம் மாய உளக் கவலை ஓய்ந்து அடிக்கே மோனம் ஆய் நிற்கை முறை.

**ஏறுமாறு-எதிர்மாறாக; ஒல்லாது- முடியாது.**

எல்லாஞ் செய்யவல்ல முடிவிலா வாற்றலுடைய பரமேசுவரனாணைக்கு மாறுபாடு செய்ய எவராலு மியலாது. ஆதலால், பொல்லாக் குறைபாடாற்றும் மாயமா மனக்கவலை மாற, திருவடித் தியானத்தான் மேலெழும் பர போத வசமாய் உயிர்ச்சேட்டை யொடுங்கி நிற்றல் முறையாம்.

## 1192. அலையுமன நீரி லகந்தையாஞ் சாயை
## அலைவதனை மாற்றுமுறை யாயின் - நிலைநழுவத்
## தானதனை நோக்காது தன்னையே தான்குறித்து
## மோனமுற நிற்கை முறை.

அலையும் மனம் நீரில் அகந்தையாம் சாயை அலைவு அதனை மாற்றும் முறை ஆயின் நிலை நழுவத் தான் அதனை நோக்காது தன்னையே தான் குறித்து மோனம் உற நிற்கை முறை.

எண்ணங்களா மலைகளை யென்றும் எறிந்து கொண்டே யிருக்கும் மனமாகிய நீர்நிலையில் அகந்தையா மான்ம வஸ்துவின் சாயை அமையாதசைந்து கொண்டே யிருப்பதனை அசைவற மாற்று முறை யாராயின் தன்னுண்மை நிலை நழுவுமாறு தான் அச்சாயையே நோக்கிக் கொண்டிராமல், அதன் பொருளாந் தன்னையே விடயமாகப் பற்றி தன்னிற்றான் சும்மா தரித்து நிற்றலே முறையாம்.

**1193. நானற் றொழுகுமெய்ஞ் ஞான சமாதியே**
**மோனத் தவமென்பர் மூதறிஞர் - ஊன**
**நினைப்பற்ற மோன நிகழ்ச்சியுற நெஞ்சிற்**
**றனைப்பற்றல் சாதன மாம்.**

நான் அற்று ஒழுகும் மெய்ஞ்ஞான சமாதியே மோனத் தவம் என்பர் மூது அறிஞர் ஊன நினைப்பு அற்ற மோன நிகழ்ச்சி உற நெஞ்சில் தனைப் பற்றல் சாதனம் ஆம்.

**1194. மற்றவற்றைச் சுட்டி மதித்துப் புறம்போகா**
**துற்றதன் னுண்மைநிலை யோர்ந்துளத்து - நிற்றலால்**
**நானென்னும் போத நழுவப் பிறங்குசுத்த**
**மோனமே ஞான முடிபு.**

மற்றவற்றைச் சுட்டி மதித்துப் புறம் போகாது உற்ற தன் உண்மைநிலை ஓர்ந்து உளத்து நிற்றலால் நான் என்னும் போதம் நழுவப் பிறங்கு சுத்த மோனமே ஞான முடிபு.

**பிறங்கு-விளங்கும்.**

**1195. கனாமகன்கட் கண்டவிவ காரநகை யாகி**
**நனாமகனாட் டத்துநலிந் தாற்போற் - றனாதிடத்துக்**
**கற்பிதமாஞ் சீவவிவ காரமுந்தற் போதத்துத்**
**தப்புதலா லெல்லாஞ் சழக்கு.**

கனாமகன்கண் கண்ட விவகாரம் நகையாகி நனா மகன் நாட்டத்து நலிந்தாற்போல் தனாது இடத்துக் கற்பிதம் ஆம் சீவ விவகாரமும் தற்போதத்துத் தப்புதலால் எல்லாம் சழக்கு.

**நகையாகி-நகைப்பாகி; தன்போதம்-தற்போதம், அகந்தையறிவு; தத் போதம்-ஆன்ம அறிவு ; சழக்கு-பொய், குற்றம்.**

### (கலி விருத்தம்)

**1196. இருட்புரை தன்னி லிருந்தவன் சுத்த**
**வருட்பரை தன்சொரூ பத்தை விளக்கப்**
**பொருட்பொலி வாஞ்சிவ போதத் தழுந்தி**
**யுருப்படு மோனத் தொடுங்குவ னாமே.**

இருள் புரை தன்னில் இருந்தவன் சுத்த அருள்பரை தன் சொரூபத்தை விளக்கப் பொருள் பொலிவு ஆம் சிவ போதத்து அழுந்தி உருப்படும் மோனத்து ஒடுங்குவன் ஆமே.

**புரை-அறை ; அருட்பரை-அருட்சக்தி.**

இருட்புரையிலிருந்து ஜீவன் தன் சொரூபத்தை விசாரித் தறிதலால் பொலியும் சிவபோதத் தழுந்தி உருப்படும் மோனத்தி லொடுங்குபவனாவோன்.

### (நேரிசை வெண்பா)

**1197. தள்ளரிய சங்கற்ப ஜாலங் களையெல்லாம்**
**தள்ளியகங் காரமுளஞ் சாருங்கால் - உள்ளொளிரும்**
**பூன்றசொரூ பாகார போதமா மோனமே**
**ஆன்றபரா வாக்கென் றறி.**

தள் அரிய சங்கற்ப ஜாலங்களை எல்லாம் தள்ளி அகங்காரம் உளம் சாருங்கால் உள் ஒளிரும் பூன்ற சொரூபாகார போதமாம் மோனமே ஆன்ற பராவாக்கு என்று அறி.

**1198. குழலினிது யாழினிது கொஞ்சுந்தம் மக்கள்**
**மழலைமொழி மாணவினி தென்பர் - உழலுமனம்**
**ஓய்ந்துபரா வாக்கா முடையா னருண்மொழியை**
**ஆய்ந்துதாங் கேளா தவர்.**

குழல் இனிது யாழ் இனிது கொஞ்சும் தம் மக்கள் மழலை மொழி மாண இனிது என்பர் உழலும் மனம் ஓய்ந்து பராவாக்கு ஆம் உடையான் அருள் மொழியை ஆய்ந்து தாம் கேளாதவர்.

சத்குருவாகிய தடுத்தாட் கொள்வோனின் அருண் மொழிகளை அகம் குழைந்து கேட்டு, ஆராய்ந்து, உண்மகிழாதவ ரன்றோ குழலினி தென்றும், யாழினி தென்றும் மக்கள் மழலையினிதென்றும் போற்றுவ ரென்றார். ஸ்வரூபப் பிராப்தியின் முக்கிய ஹேதுவாதலின் குரு வாசகம் இவ்வினிமை யொலிகளிலும் இனிதென்க.

**1199. உள்ளெழுசங் கற்பமா மோசை யடங்கினலால்
விள்ளரிய மோனநிலை விள்ளாதே - உள்ளே
விருத்தியடங் குற்றோர் வியன்போர்க் களத்தும்
உரத்தமுழு மோனம் விடார்.**

உள் எழு சங்கற்பமாம் ஓசை அடங்கின் அலால் விள் அரிய மோனநிலை விள்ளாதே உள்ளே விருத்தி அடங்குற்றோர் வியன் போர்க்களத்தும் உரத்த முழு மோனம் விடார்.

**விள்ளாதே-விளங்காது.**

**1200. ஊனமா மூத்தை யுடலகந்தை யோய்ந்துளஞ்சேர்
மோனமா முண்மை முடிவுணரார் - ஞான
சுயாராய் விலார்மேற்கொள் சொன்மோனஞ் சித்த
வியாபார மன்றோ விளம்பு.**

ஊனம் ஆம் ஊத்தை உடல் அகந்தை ஓய்ந்து உளம் சேர் மோனம் ஆம் உண்மை முடிவு உணரார் ஞான சுய ஆராய்வு இலார் மேற்கொள் சொல் மோனம் சித்த வியாபாரம் அன்றோ விளம்பு.

**1201. புன்மாய மோகப் புலவிடய வேட்கையாம்
உன்மாத முற்று மொழிந்துபோய்த் - தன்மூலத்
தாழ்வா லகந்தையறி வற்றொளிர்மெய்ஞ் ஞானான்ம
வாழ்வே மனோரம் மியம்.**

புன்மாய மோகப் புலவிடய வேட்கையாம் உன்மாதம் முற்றும் ஒழிந்துபோய்த் தன் மூலத்து ஆழ்வால் அகந்தை அறிவு அற்று ஒளிர் மெய்ஞ் ஞான ஆன்ம வாழ்வே மனோரம்மியம்.

**உன்மாதம் - பைத்தியம்.**

**1202. சுத்தமோ னத்துச் சுடர்விட் டொளிர்சொருபப்
புத்தமுதார்ந் துள்ளமகிழ் பொங்குவோர் - சித்தமயல்
சேர்ந்தவுன் மாதச் சிறுகளிசேர் புன்புலத்தை
ஓர்ந்துலகத் தூழ்த்த லுறார்.**

சுத்த மோனத்துச் சுடர் விட்டு ஒளிர் சொருபப் புத்தமுது ஆர்ந்து உள்ளம் மகிழ் பொங்குவோர் சித்தமயல் சேர்ந்த உன்மாதச் சிறு களி சேர் புன் புலத்தை ஓர்ந்து உலகத்து ஊழ்த்தல் உறார்.

**ஊழ்த்தல்-கெடுதல்.**

அறிவின்பங் கண்டோர் பிறவின்பம் பேணார். கண்டமும் நானாவுமான புலவின்பங்கள் யாவும் உன்மத்தச் சிறுகளி யென்றார். அவை கணமேனும்

நிலைக்காது மாற்றலுற்று வேட்கையை மிகைப்படுத்தலால். சொரூபமாகிய புத்தமுதி லாழ்ந்தோர் அவற்றை எவ்வாறு மதித்து நாடுவார்?

**1203. அகிலவே தாகமசித் தாந்தமா வான்றோர்**
**மிகவிளங்கத் தேறலுற்ற மெய்ம்மை - சகல**
**தருமோப தேச சதாசரணை மோனப்**
**பரமோப சாந்தப் பதம்.**

அகில வேத ஆகம சித்தாந்தமா ஆன்றோர் மிக விளங்கத் தேறல் உற்ற மெய்ம்மை சகல தரும உபதேச சத் ஆசரணை மோனப் பரம உபசாந்தப் பதம்.

**1204. அறமாதி யாவு மறவிடுத்தல் வீட்டுத்**
**திறமா முபசாந்திச் சீர்மை - பிறவற்றின்**
**சிந்தையற விட்டுச் சிவமாம் பரசொருபப்**
**புந்தியுறு மோனமே போற்று.**

அறம் ஆதி யாவும் அற விடுத்தல் வீட்டுத் திறம் ஆம் உபசாந்திச் சீர்மை பிறவற்றின் சிந்தை அற விட்டுச் சிவமாம் பரசொருபப் புந்தியுறும் மோனமே போற்று.

## 54. பராபத்தித்திறன்.

**1205. குற்றங் குறையொன்றுங் கூறிக் கொளவுளத்துட்**
**சற்றுமிட மற்றவுப சாந்தமே - முற்றிலுந்தாம்**
**தம்மைச் சிவபதத்திற் றன்மயமா யர்ப்பித்த**
**செம்மையுறு பத்தித் திறம்.**

குற்றம் குறை ஒன்றும் கூறிக்கொள உளத்துள் சற்றும் இடம் அற்ற உபசாந்தமே முற்றிலும் தாம் தம்மைச் சிவபதத்தில் தன்மயமாய் அர்ப்பித்த செம்மை உறு பத்தித் திறம்.

**1206. இறைவ னருளுக் கிலக்காகி யின்ப**
**நிறைவுண்மை நின்றொளிரு நெஞ்சத் - துறுமோ**
**அறியாமை யாமூ னகந்தை யறிவின்**
**குறியா மனப்புன் குறை.**

இறைவன் அருளுக்கு இலக்கு ஆகி இன்ப நிறைவு உண்மை நின்று ஒளிரும் நெஞ்சத்து உறுமோ அறியாமையாம் ஊன் அகந்தை அறிவின் குறியாம் மனப் புன் குறை.

**1207. வேற்றுநினை வுள்ளத்து மேவுமட்டே தன்னினைவாற்
றேற்றுமிறை தன்னினைவு சேர்தலாம் - வேற்று
நினைவழிவா லந்த நினைவுமழி வேமெய்ந்
நினைவா நினையா நினைவு.**

வேற்று நினைவு உள்ளத்து மேவும் மட்டே தன் நினைவால் தேற்றும் இறை தன் நினைவு சேர்தல் ஆம் வேற்று நினைவு அழிவால் அந்த நினைவும் அழிவே மெய்ந் நினைவாம் நினையா நினைவு.

**1208. துன்றுநினை வொன்றுமறச் சும்மா விருப்பைநினை
வென்றவழக் கென்னை யியம்புகெனின் - என்றும்
மறப்பிலா வுண்மை மயமா முணர்ச்சித்
திறத்தினா லென்றே தெளி.**

துன்றும் நினைவு ஒன்றும் அறச் சும்மா இருப்பை நினைவு என்ற வழக்கு என்னை இயம்புக எனின் என்றும் மறப்பு இலா உண்மை மயமாம் உணர்ச்சித் திறத்தினால் என்றே தெளி.

**1209. களந்ததும்பு மாயக் கருத்தழிந்து வான்போல்
உளந்திறந்து பொங்கு மொளியாற் - றெளிந்த
உபசாந்த முற்றவிடத் துட்சுரக்கு மன்பே
சிவமார்ந்த மெய்ப்பத் திமை.**

களம் ததும்பும் மாயக் கருத்து அழிந்து வான்போல் உளம் திறந்து பொங்கும் ஒளியால் தெளிந்த உபசாந்தம் உற்ற இடத்து உள் சுரக்கும் அன்பே சிவம் ஆர்ந்த மெய்ப் பத்திமை.

**களம் -அஞ்ஞான இருள்.**

இருள் நிறைந்ததும் இனைத்தென் றறியப்படாமையின் மாயமுள்ளதுமான இதயக்கிரந்தி யழிந்து திறந்தமையால், அவ்விதயத்தின் கண் ஆகாயம் போலகண்டமாய்ப் பொங்கு மறிவால் தெளிந்த வுபசாந்த மமைந்த விடத்து ஆங்க விரு மான்ம சொரூபத்தைப்பற்றி உள்ளூறு மன்பே மங்களமார்ந்த உண்மைப் பத்தியாம்.

**1210. தன்னையே மிக்க சதாகதியாச் சார்ந்தொழுகுந்
தன்னியரே தன்மெய் தலைப்படுவார் - அன்னியருக்
கந்த வனந்த வருட்பரந் தாமவீ
டெந்தவிதத் தாலு மரிது.**

தன்னையே மிக்க சதாகதியாச் சார்ந்து ஒழுகும் தன்னியரே தன் மெய் தலைப்படுவார் அன்னியருக்கு அந்த அனந்த அருட் பரந்தாம வீடு எந்த விதத்தாலும் அரிது.

**தன்னையே -ஆன்ம சொரூபமாம் இறைவனையே.**

**1211. ததீயர் தனக்கே சகலவிதத் தாலு**
**மதீனமா நின்றமெய் யன்பர் - அதீதமா**
**வோங்குபரந் தாம முலப்பிலா வன்புபட்ட**
**வாங்கவர்க்கே முற்றூட் டறி.**

ததீயர் தனக்கே சகல விதத்தாலும் அதீனமா நின்ற மெய் அன்பர் அதீதமா ஓங்கு பரந் தாமம் உலப்பு இலா அன்புபட்ட ஆங்கு அவர்க்கே முற்றூட்டு அறி.

## 55. ஞானசித்தித்திறன்

**1212. சித்திகள்பல் வேறாகச் செப்பினுமப் பல்வேறு**
**சித்திகட்கு ஞானமே சென்னியாம் - சித்திகளுள்**
**ஏனையபெற் றார்ஞான மிச்சிப்ப ரிச்சியார்**
**ஞானமுற்றா ரேனையவை நாடு.**

சித்திகள் பல் வேறு ஆகச் செப்பினும் அப் பல்வேறு சித்திகட்கும் ஞானமே சென்னியாம் சித்திகளுள் ஏனைய பெற்றார் ஞானம் இச்சிப்பர் இச்சியார் ஞானம் உற்றார் ஏனையவை நாடு.

**1213. ஆன்ம சொரூபசித்த ரான்றசித்தி யவ்வொன்றால்**
**ஏனையவை யாவுமொருங் கெய்தினரே - ஆனவெலாம்**
**விண்ணுளகி லம்போல் வியத்தா வியத்தமாய்**
**நண்ணுறுஞா னான்மசித்தர் மாட்டு.**

ஆன்ம சொரூப சித்தர் ஆன்ற சித்தி அவ் ஒன்றால் ஏனையவை யாவும் ஒருங்கு எய்தினரே ஆன எலாம் விண்ணுள் அகிலம் போல் வியத்த அவியத்தமாய் நண் உறும் ஞான ஆன்ம சித்தர் மாட்டு.

**1214. ஆழவே மூழ்கி யடித்தலங்கண் டாலிதயத்**
**தேழைமனப் பான்மை யிகந்தொழியும் - வாழவரும்**
**வானத் தரசும் வணங்கமுடி தன்னடியில்**
**ஞானப் பெருநா யகம்.**

ஆழவே மூழ்கி அடித்தலம் கண்டால் இதயத்து ஏழை மனப்பான்மை இகந்து ஒழியும் வாழவரும் வானத்து அரசும் வணங்க முடி தன் அடியில் ஞானப் பெரு நாயகம்.

## 56. பிரம்மத்திறன்

**1215. மும்முதனா யாமெய்ம் முழுமுதலை யன்றியிலா**
**அம்மகா சிற்சத்தி யாங்குடிலை - அம்மநிதம்**
**சூதாடு தற்கச் சுகமோன மெய்ம்முதலே**
**ஆதார மாகு மரங்கு.**

மும்முதல் நாயா மெய்ம் முழு முதலை அன்றி இலா அம் மகா சிற்சத்தியாம் குடிலை அம்ம நிதம் சூது ஆடுதற்கு அச் சுகமோன மெய்ம் முதலே ஆதாரம் ஆகும் அரங்கு .

**நாயா-சொக்கட்டான் ஆடும் காயாகக்கொண்டு; குடிலை-மாயை.**

**1216. படரும் படம்பலவும் பார்ப்பாரேன் மூலப்**
**படராப் படமொன்றைப் பாரார் - படராப்**
**படமொன்றைப் பார்ப்பார் படஞ்சிலவும் பாரார்**
**இடமொன் றரங்கியற்கை யீது.**

படரும் படம் பலவும் பார்ப்பாரேல் மூலப் படராப் படம் ஒன்றைப் பாரார் படராப் படம் ஒன்றைப் பார்ப்பார் படம் சிலவும் பாரார் இடம் ஒன்று அரங்கு இயற்கை ஈது.

**இடம் ஒன்று அரங்கு - விசாலமான படக்காட்சிச் சாலை.**

**1217. படராப் படமன்றிப் பார்வைக் களத்திற்**
**படரும் படமொன்று மில்லை - படத்திற்**
**படரும் படமன்றிப் பார்க்குங்கா லந்தப்**
**படராப் படமொன்றும் வேறு.**

படராப் படம் அன்றிப் பார்வைக் களத்தில் படரும் படம் ஒன்றும் இல்லை படத்தில் படரும் படம் அன்றிப் பார்க்குங்கால் அந்தப் படராப் படம் ஒன்றும் வேறு.

**படம்-திரை; பார்வைக்களம் - படக்காட்சிச் சாலை.**

**1218. படராத மூலப் படமே பிரம்மம்**
**படராத வந்தப் படத்திற் - படரும்**
**படங்களே ஜீவேச் சுரஜகங்கள் பார்ப்ப**
**அடங்கலுமே மாயை யறி.**

படராத மூலப் படமே பிரம்மம் படராத அந்தப் படத்தில் படரும் படங்களே ஜீவ ஈச்வர ஜகங்கள் பார்ப்ப அடங்கலுமே மாயை யறி.

**பார்ப்ப-பார்க்கப்படுவன.**

**1219. படரும் படமான ஜீவனே தன்போற்
படரும் படஜீவ ரோடு - படரும்
படஜகத்தை யன்றிப் படேச்சுரரை யெண்ணிப்
படஜகத்தி லேங்கு பவன்.**

படரும் படமான ஜீவனே தன்போல் படரும் பட ஜீவரோடு படரும் பட ஜகத்தை அன்றிப் பட ஈச்சுரரை எண்ணிப் பட ஜகத்தில் ஏங்குபவன்.

**படரும்-அசையும்.**

**1220. படராத மூலப் படமான தன்னைப்
படரும் படமாக வெண்ணிப் - படருழக்கும்
சித்த விருத்தி செறிந்தடங்கி மோனநிலை
முற்ற விருக்கை முறை.**

படராத மூலப் படமான தன்னைப் படரும் படமாக எண்ணிப் படர் உழக்கும் சித்த விருத்தி செறிந்து அடங்கி மோனநிலை முற்ற இருக்கை முறை.

**படர் உழக்கும்-துன்பமடையும்.**

## 57. முத்தியுருத்திறன்

**1221. கட்டுண்டேன் யாரெனத்தற் காணுங் கருத்திடையக்
கட்டெண்ண முற்றுங் கழல்வதாற் - கட்டின்
உயலெணமுந் தீர்ந்துள்ளத் தெஞ்சியதன் னுண்மை
இயலுணர்வ தேவீட் டியல்பு.**

கட்டுண்டேன் யார் எனத் தன் காணும் கருத்திடை அக் கட்டு எண்ணம் முற்றும் கழல்வதால் கட்டின் உயல் எணமும் தீர்ந்து உள்ளத்து எஞ்சிய தன் உண்மை இயல் உணர்வதே வீட்டு இயல்பு.

**உயல்-மோட்சமுறல்.**

**1222. மீந்ததா யாது விளங்குமோ போதமய
சாந்தமா மஃதே சதாசிவமாம் - ஆர்ந்தபர
மான வதுவே யகமென் றகந்தையற்ற
மோனமமே முத்தி முடிபு.**

**குறிப்பு :-** ‘அகிலவேதாந்த’ என்னும் பகவானது உள்ளது நாற்பது அனுபந்தம் 40வது பாடல் ஈண்டு ஆராய்ந்து அறியத்தக்கது.

மீந்ததாய் யாது விளங்குமோ போதமய சாந்தமாம் அஃதே சதாசிவமாம் ஆர்ந்த பரம் ஆன அதுவே அகம் என்று அகந்தை அற்ற மோனமே முத்தி முடிபு.

**1223. யாவுமே தோற்று மிடவறிவாந் தன்னைத்தான்**
**ஆய்வுமே லிட்ட வமைதியிலே - சோர்வுமே**
**லிட்டு நிலைகலக்க மெய்தாமே யாவையுந்தான்**
**விட்டு விடுதலே வீடு.**

யாவுமே தோற்றும் இட அறிவு ஆம் தன்னைத் தான் ஆய்வு மேலிட்ட அமைதியிலே சோர்வு மேலிட்டு நிலை கலக்கம் எய்தாமே யாவையும் தான் விட்டு விடுதலே வீடு.

**1224. சுட்டறிவு முற்றுந் தொலைந்தாலல் லாதுயிரைக்**
**கட்டுபுலக் கட்டுலகக் கட்டறார் - நிட்டையாம்**
**ஆன்மநிலை நிற்றலா லவ்வறிவு பொன்றலே**
**தான்மகிழு முத்தித் தரம்.**

சுட்டறிவு முற்றும் தொலைந்தால் அல்லாது உயிரைக் கட்டு புலக் கட்டு உலகக் கட்டு அறார் நிட்டையாம் ஆன்மநிலை நிற்றலால் அவ்வறிவு பொன்றலே தான் மகிழும் முத்தித் தரம்.

**கட்டு-சேர்க்கை.**

**1225. நகைப்புக் கிடனாக நண்ணும் பிறவித்**
**தகைப்புக்குத் தாயாகி நின்ற - பகைப்பற்**
**றறுமா றறிந்தந்தப் பற்றறவைப் பற்றி**
**வெறுமே யிருத்தலே வீடு.**

நகைப்புக்கு இடன் ஆக நண்ணும் பிறவித் தகைப்புக்குத் தாய் ஆகி நின்ற பகைப் பற்று அறும் ஆறு அறிந்து அந்தப் பற்று அறவைப் பற்றி வெறுமே இருத்தலே வீடு.

**அறவு-விடுதல்.**

**1226. உளதாதன் மாத்திரமா யோங்குறுசுத் தான்மத்**
**தெளிவாய வாழ்க்கைத் திறமே - ஒளியாம்**
**பரஞான முத்திப் பதமென்றல் வேதச்**
**சிரமாமெய் கண்டார் திடம்.**

உளது ஆதல் மாத்திரமாய் ஓங்கு உறு சுத்த ஆன்மத் தெளிவு ஆய வாழ்க்கைத் திறமே ஒளியாம் பரஞான முத்திப் பதம் என்றல் வேதச் சிரம் ஆம் மெய் கண்டார் திடம்.

## 58. பரமார்த்தத்திறன்

**1227. ஆதலிலை யல்லா வழிவுமிலை பெத்தரிலை**
**சாதனைகள் செய்வாருஞ் சற்றுமிலை - மேதகவை**
**வெஃகுவார் தாமில்லை வீடுற்றார் தாமுமிலை**
**இஃதே பரமார்த்த மெண்.**

ஆதல் இலை அல்லா அழிவும் இலை பெத்தர் இலை சாதனைகள் செய்வாரும் சற்றும் இலை மேதகவை வெஃகுவார் தாம் இல்லை வீடு உற்றார் தாமும் இலை இஃதே பரமார்த்தம் எண்.

**மேதகவு-மேன்மை; வெஃகுவார்-மிக விரும்புவார்.**

**(குறள் வெண்பா)**

**(28) *ஆதலழி வார்ப்பவிழ வாசைமுயல் வார்ந்தாரில்***
***ஈதுபர மார்த்தமென் றெண்.***

***-பகவான்***

ஆதல் அழிவு ஆர்ப்பு அவிழ ஆசை முயல்வு ஆர்ந்தார் இல் ஈது பரமார்த்தம் என்று எண்.

**ஆர்ப்பு-பந்தம்; ஆர்ந்தார்-அடைந்தவர்கள்.**

**(நேரிசை வெண்பா)**

**1228. உள்ளதையின் றாக்க வுளதாக்க வில்லதனைக்**
**கள்ளந் தனிலே கடவதலாற் - றெள்ளிதாம்**
**உண்மை தனிலே யொணாமையா லுண்மையாம்**
**திண்மை தனிலனைத்துஞ் சித்து.**

உள்ளதை இன்று ஆக்க உளது ஆக்க இல்லதனைக் கள்ளந் தனிலே கடவது அலால் தெள்ளிது ஆம் உண்மை தனிலே ஒணாமையால் உண்மை ஆம் திண்மை தனில் அனைத்தும் சித்து.

**கள்ளம்-பொய்க்கற்பனை; கடவது-இயல்வது.**

**1229. நெல்லுமியி னீங்கரிசி நேர்பாச பந்தமது**
**புல்லுமுயி ராய்ப்பந்தம் போய்ப்பரமாய்ச் - சொல்லும்**
**உயிர்பரமெல் லாமவ் வுணர்வுருவான் மாவிற்**
**செயிர்மனத்தின் கற்பனையாத் தேர்.**

நெல் உமியின் நீங்கு அரிசி நேர் பாச பந்தம் அது புல்லும் உயிராய்ப் பந்தம் போய்ப் பரமாய்ச் சொல்லும் உயிர் பரம் எல்லாம் அவ் உணர்வு உரு ஆன்மாவில் செயிர் மனத்தின் கற்பனையாத் தேர்.

**புல்லும்-அடையும்; செயிர்-குற்றமேயான.**

## 59. செம்பொருட்டிறன்

**1230. ஏதே துளதாக வெண்ணுதியோ சிந்தையினவ்**
**வேதேது முண்மையிலே யில்லதாம் - யாதொன்**
**றுளதாயோ வன்றி யிலதாயோ வுன்னுட்**
**கொளல்வாரா தஃதே யுளது.**

ஏதேது உளதாக எண்ணுதியோ சிந்தையின் அவ் ஏதேதும் உண்மையிலே இல்லதாம் யாதொன்று உளதாயோ அன்றி இலதாயோ உன்னுள் கொளல் வாராது அஃதே உளது.

**கொளல் வாராது-கொள்ள முடியாதது.**

எவ்வெப்பொருள் பொறிக்குப் புலனாதலால் உள்ளதாகக் கருத்தாற் கருதுகின்றாயோ அவ் வெவ் வெப் பொருளும் உண்மையுணருங்கா லின்றா யொழிவதாம்; அவ்வாறன்றி யாதொரு பொருள் உள்ளதாகவோ அன்றி யில்லதாகவோ உன்னாற் கருத லியையாதோ அஃதே பாரமார்த்திகத்தி லுள்ளதாம்.

**1231. சகலவித ஞான சமூகமுஞ்சார் பேத**
**விகலமறத் தன்பால் விழுங்கும் - அகலமா**
**மண்டிக் கடந்தபர மாட்சிமையைக் கற்பனையாற்**
**கண்டிக்க லாமோ கழறு.**

சகலவித ஞான சமூகமும் சார் பேத விகலம் அறத் தன்பால் விழுங்கும் அகலமா மண்டிக் கடந்த பர மாட்சிமையைக் கற்பனையால் கண்டிக்கலாமோ கழறு.

**விகலம்-குறைபாடு.**

**1232. இருப்பதா வில்லதா வெண்ணாது சும்மா**
**இருப்பதா லுள்ளத் தியானென் - றுருப்பெயர்போய்த்**
**தன்மயமா யேது தயங்குமோ சந்ததமச்**
**சின்மயமே செம்பொருளாந் தேர்.**

இருப்பதா இல்லதா எண்ணாது சும்மா இருப்பதால் உள்ளத்து யான் என்று உருப்பெயர் போய்த் தன்மயமாய் ஏது தயங்குமோ சந்ததம் அச் சின்மயமே செம் பொருளாம் தேர்.

**தயங்குமோ- பிரகாசிக்குமோ.**

உள்ளதாகவோ, அன்றியில்லதாகவோ யாதுஞ் சிந்தை செய்யாது, இருந்தபடியே தன்னிலையிற் சும்மா தரித்திருப்பதால் அவ்வாறிருக்கு மிதயத்தின் கண் உருப்பெய ரொழிந்து, தன்னினும் வேறாகாது 'யான்யா' னென்று யாதொன்று தான் றானாய் என்று மிடைவிடாது விளங்குமோ, நிருபாதிகமான அந்நிருவிசேட ஞானமே என்று மொரு படித்தாக மாறுதலற்று விளங்கும் மெய்ப் பொருளாம்.

**1233. ஆறு பொருள்க ளநாதியெனச் சொல்பவற்றுள்**
**ஈறிலதவ் வத்துவித வேகமே - வேறியலும்**
**ஐந்து பொருள்களுமோ வந்த முடையனவே**
**சிந்தை யுறநீ தெளி.**

ஆறு பொருள்கள் அநாதி எனச் சொல்பவற்றுள் ஈறு இலது அவ் அத்துவித ஏகமே வேறு இயலும் ஐந்து பொருள்களுமோ அந்தம் உடையனவே சிந்தை உற நீ தெளி.

**ஈறு-முடிவு, அந்தம்.**

**1234. உண்மை யெனப்படுவ தொன்றே யுணருங்காற்**
**றிண்மைசே ரந்தமுழுச் செம்பொருளே - நுண்மதியால்**
**மெல்லவுளம் புக்குணர்ந்த விப்பிரராற் பல்படியாச்**
**சொல்லப் படலாத் துணி.**

உண்மை எனப்படுவது ஒன்றே உணருங்கால் திண்மை சேர் அந்த முழுச் செம்பொருளே நுண்மதியால் மெல்ல உளம் புக்கு உணர்ந்த விப்பிரரால் பல் படியாச் சொல்லப் படலாத் துணி.

**விப்பிரர்-மெய்ஞ்ஞானி.**

**1235. எத்தனையோ சாலப் பலவா வியங்குமதம்**
**அத்தனைக்கு முத்தமமா மத்துவிதத் - தத்துவந்தான்**
**பேதமத பீஜப்பாழ்ம் பேயகந்தை போயொழிந்த**
**போதமய மோனப் பொருள்.**

எத்தனையோ சாலப் பலவா இயங்கும் மதம் அத்தனைக்கும் உத்தமம் ஆம் அத்துவிதத் தத்துவம் தான் பேதமத பீஜப் பாழ்ம் பேய் அகந்தை போய் ஒழிந்த போதமய மோனப் பொருள்.

**1236. ஆதியோ டந்தமளை யாதாய் விகாரத்தோ**
**டேதுவுப மந்தானு மின்றாகிச் - சூதுலாம்**
**ஜீவபோ தத்தாற் றிகழ்விலதாஞ் செம்பொருளைத்**
**தேர்வர்தாஞ் சேர்வர் சிறப்பு.**

ஆதியோடு அந்தம் அளையாதாய் விகாரத்தோடு ஏது உபமம்தானும் இன்று ஆகிச் சூது உலாம் ஜீவ போதத்தால் திகழ்வு இலதாம் செம்பொருளைத் தேர்வர் தாம் சேர்வர் சிறப்பு.

**அளையாதாய்-அடையாததாக; உலாம்-உலாவுகின்ற.**

## 60. பாவனாதீதத்திறன்

**1237. சற்பனையா முப்புடிபோய்த் தாக்கற்ற தன்மயமாய்**
**விற்பனர்தந் நெஞ்சில் விளங்கலலாற் - கற்பனையாம்**
**பொய்த்துவிதப் புன்புலம்போற் புந்தியா லெண்ணுறுவார்க்**
**கத்துவித மாட்சி யரிது.**

சற்பனையாம் முப்புடிபோய்த் தாக்கற்ற தன்மயமாய் விற்பனர்தம் நெஞ்சில் விளங்கல் அலால் கற்பனையாம் பொய்த்துவிதப் புன்புலம் போல் புந்தியால் எண் உறுவார்க்கு அத்துவித மாட்சி அரிது.

**சற்பனை-வஞ்சனை ; தாக்கற்ற-சுதந்திரமான; விற்பனர்-அறிஞர்.**

மாட்சிமைப்பட்ட அத்துவிதானுபவம், எவற்றொடும் கலந்து நின்றும் ஒன்றொடுங் கலப்பற்ற தம்மான்ம சொரூபத்தை , மாயத்தோற்றமா முப்புடியும் போய் ஆய்ந்தறிந்த அறிஞர் நெஞ்சில் அவிச்சின்னமா யொளிர்வதன்றி தமக்கயலான பொய்த்தோற்றமாம் புன்புலவிடயம் போலச் சுட்டுணர்வாலோர்வார்க்கு அடைய லாகாதாம்.

**வி-ரை :-** முப்புடி- காண்பான் காட்சி காணப்படு பொருள் என்றாற் போன்ற பேதங்கள். தாக்கற்ற தன்மயம்-அகந்தைப் பற்றற்ற ஆன்ம சொரூப மெனினுமாம். போய் என்பது போல ஆய் என்பதும் வினையெச்சமாகவே கொண்டு அவை யிரண்டையும் தனித்தனியே விளங்க லென்னும் வினையோடு கூட்டினுமாம்.

**1238. சிந்தையிறந் துள்ளுணர்வாற் சிந்தைமூ லஞ்செறிந்த**
**சிந்தையரா நிச்சிந்த தீரரலாற் - சிந்தைசேர்**
**புந்தியார் தேறார்மெய்ப் போத சொரூபமாம்**
**சிந்தை யிலாத சிவம்.**

சிந்தை இறந்து உள் உணர்வால் சிந்தை மூலம் செறிந்த சிந்தையராம் நிச்சிந்த தீரர் அலால் சிந்தைசேர் புந்தியார் தேறார் மெய்ப் போத சொரூபமாம் சிந்தை இலாத சிவம்.

**1239. அத்துவிதச் சீர்மைக் கதிமோக வேகத்தோய்**
**சித்தவுப சாந்தி செறிந்துண்மை - வத்துநிலை**
**நிற்போர்க்கே யத்துவித நேர்மெய் நிலைதலுறாப்**
**பிற்போக்கர்க் கென்னபயன் பேசு.**

அத்துவிதச் சீர்மைக்கு அதிமோக வேகத்தோய் சித்த உப சாந்தி செறிந்து உண்மை வத்து நிலை நிற்போர்க்கே அத்துவிதம் நேர் மெய் நிலைதல் உறாப் பிற்போக்கர்க்கு என்ன பயன் பேசு.

## 61. அநுபவமுரைத்ததிறன்

**1240. ஆசா னுரையி னனுபவத்தை யோதுங்காற்**
**பாசா டவியாகப் பார்த்தவெலாம் - பேசாத**
**மெய்ஞ்ஞான மோன வெளியன்றி வேறில்லை**
**கைஞ்ஞான மெல்லாங் கனா.**

ஆசான் உரையின் அனுபவத்தை ஓதுங்கால் பாச அடவியாகப் பார்த்த எலாம் பேசாத மெய்ஞ்ஞான மோன வெளியன்றி வேறு இல்லை கைஞ்ஞானம் எல்லாம் கனா.

**1241. அறிந்தே னறிந்தே னதீதசச் சித்தா**
**நிறைந்தபர மார்த்த நிலையை - உறழ்ந்தயலாக்**
**கட்டுவீ டாதியாக் கட்டுரைப்ப வுண்மையிலே**
**யெட்டுணையு மெய்தவிலை யென்று.**

அறிந்தேன் அறிந்தேன் அதீத சத் சித்தா நிறைந்த பரமார்த்த நிலையை உறழ்ந்து அயலாக் கட்டு வீடு ஆதியாக் கட்டுரைப்ப உண்மையிலே எள் துணையும் எய்தவிலை என்று.

**உறழ்ந்து-மயங்கி.**

''பந்த வீடற்ற பரசுக முற்றவாறிந்த நிலை நிற்றல்'' என்பது ஶ்ரீ பகவான் வாக்கு. ''சாதகத்திலே துவிதம் சாத்தியத்தி லத்துவித மோதுகின்ற வாதமது முண்மையல'' என்றும் கூறினார். பரமார்த்த நிலையை உள்ளபடி யுணர்ந்தால் அங்கு வீட்டுணர்வும் இல்லை யென்க; என்றும் பந்தமின்மையின் 'நான் முத்தன்' என்ற ஞானமும் அறவே நீங்கியது ஸ்வஸ்வரூபம்.

**1242. எச்சமய நோக்கினும்யா மெவ்வாதங் கேட்பினுமற்**
**றச்சமய வாத மனைத்துமே - நிச்சயமாய்**
**வேறுபா டற்று விளங்கு மொருமுடிபே**
**கூறுபவாக் கண்டேங் குறித்து.**

எச்சமயம் நோக்கினும் யாம் எவ்வாதம் கேட்பினும் மற்று அச்சமயவாதம் அனைத்துமே நிச்சயமாய் வேறுபாடு அற்று விளங்கும் ஒரு முடிபே கூறுபவாக் கண்டேம் குறித்து.

சமரஸமென்பது உண்மையில் மோனத்து அமைவதன்றி புத்தி நுட்பத்தினால் அமைவதில்லை. மோனத்தின் அநுபவ முற்ற பின்பு, எல்லாச் சமயங்களும் வாதங்களும் தம்முள் வேறுபாடின்றி சொரூபப் பிராப்தி முடிவொன்றே கொண்டனவாகத் திகழ்வது உள்ளங்கை நெல்லிக்கனியென நன்கறியப் படுவதாம்.

**1243. முப்போது மூவிடமு முப்புடியு மென்பவைகள்
அப்போது காண்ட லரிதாமாற் - றப்பாத
ஆரணத்து மெய்ப்பொருளா வாங்கொளிருஞ் சின்மயமாம்
பூரணத்திற் புக்கிருக்கும் போது.**

முப்போதும் மூஇடமும் முப்புடியும் என்பவைகள் அப்போது காண்டல் அரிதாம் ஆல் தப்பாத ஆரணத்து மெய்ப்பொருளா ஆங்கு ஒளிரும் சின்மயம் ஆம் பூரணத்தில் புக்கு இருக்கும் போது.

**1244. ஓதியவிந் நுட்ப முணருங்கா லுத்தமமெய்
வேதியனா வென்முன் வெளிவந்து - போதனைசெய்
ஞான ரமணகுரு நாத னுவந்தளித்த
மோன வியாக்கியான மாம்.**

ஓதிய இந் நுட்பம் உணருங்கால் உத்தம மெய் வேதியனா என் முன் வெளிவந்து போதனை செய் ஞான ரமண குருநாதன் உவந்து அளித்த மோன வியாக்கியானம் ஆம்.

**வேதியன்-ஞானி.**

முற் கூறிய செய்யுட்களின் நுட்பம் ஞானாநுபவத்திலேயே உணரப்படுவதால் எமக்கு ஞானோபதேசிகன் அளித்தது மௌனாநுபவ சாரமேயாம். ''என் முன் வெளி வந்து'' என்றதால் ஞானதேசிகன் என்றும் உள்ளிருப்பினும் மாயாவிலாசத்தால் நம்மைப் போன்ற பௌதிகவுடலுடன் தோன்றியாண் டமையைக் கூறுவதாம். விளக்கம் மவுனத்தாலேயே வலிவுறுதலாதலின் 'மோனவியாக்கியான' மெனப்பட்டது.

**(இன்னிசை வெண்பா)**

**1245. என்னுடைய திட்டியிலே யானன்றி நீயில்லை
நின்னுடைய திட்டியிலே நீயன்றி யானில்லை
தன்னுடைய திட்டியிலே தானன்றி மற்றில்லை
எண்ணுங்கா லவ்வனைத்தும் யான்.**

என்னுடைய திட்டியிலே யான் அன்றி நீ இல்லை நின்னுடைய திட்டியிலே நீ அன்றி யான் இல்லை தன்னுடைய திட்டியிலே தான் அன்றி மற்று இல்லை எண்ணுங்கால் அவ் அனைத்தும் யான்.

**(நேரிசை வெண்பா)**

**1246. உடைமையோ வல்லே னுடையானு மல்லேன்
அடிமையோ டாண்டானு மல்லேன் - கடமையாங்
கர்த்தவ் வியமில்லேன் போக்தவ் வியமுமிலேன்
கர்த்தனா னல்லனே காண்.**

உடைமையோ அல்லேன் உடையானும் அல்லேன் அடிமையோடு ஆண்டானும் அல்லேன் கடமை ஆம் கர்த்தவ்வியம் இல்லேன் போக்தவ்வியமும் இலேன் கர்த்தன் நான் அல்லனே காண்.

**1247. பூண்டதுபோன் மாயை புலம்பியவென் சுட்டறிவுக்**
**கீண்டுகுரு வாய்த்தா னெதிர்தோன்றி - ஆண்டதனாற்**
**போலச் சுடர்விடுமென் பூரணான் மாவுக்கே**
**சாலத் தகுவந் தனம்.**

பூண்டதுபோல் மாயை புலம்பிய என் சுட்டறிவுக்கு ஈண்டு குரு வாய்த்தான் எதிர் தோன்றி ஆண்டதனால் போல் அச் சுடர்விடும் என் பூரண ஆன்மாவுக்கே சாலத்தகு வந்தனம்.

**1248. சிவமாம் பர*ரமண* சிற்சத்திக் கன்றி**
**அவமாஞ் சகமாயா சத்திக் - கெவமாரும்**
**முட்டுப்பா டுற்ற முகாந்தரங்கொண் டென்றுந்தான்**
**கட்டுப் படான்*முருகன்* காண்.**

சிவம் ஆம் பர ரமண சித்சத்திக்கு அன்றி அவம் ஆம் சக மாயா சத்திக்கு எவம் ஆரும் முட்டுப்பாடு உற்ற முகாந்தரம் கொண்டு என்றும் தான் கட்டுப்படான் முருகன் காண்.

**எவம்-எவ்வம்,துன்பம்.**

## 62. சமநிலைத்திறன்

**1249. ஆதியற மாயஞா னான்மநிட் டாபரர்க்குச்**
**சாதி குலஞ்சமயஞ் சற்றுமிலை - ஏதில்**
**உடம்பாய பொய்க்கன்றி யுண்மையா மான்மா**
**விடம்பாகு பாடொன் றிலை.**

ஆதி அறம் ஆய ஞான ஆன்ம நிட்டாபரர்க்குச் சாதி குலம் சமயம் சற்றும் இலை ஏதில் உடம்பு ஆய பொய்க்கு அன்றி உண்மை ஆம் ஆன்மாவிடம் பாகுபாடு ஒன்று இலை.

அனைத்தினுஞ் சிறந்த ஆன்மநிட்டை வடிவான ஞானாசாரம் தலைப்பட்டார் கேவலம் பிறப்புப் பற்றிய சாதியாசாரம் எதுவும் கடைப்பிடிக்க வேண்டியதான அவசியமில்லை. ஏனெனில் தமக்கயலாய்க் கற்பனையாந் தேகநோக்கத்திலன்றிக் கடந்த வுண்மையாந்தம் சொரூபமாம் ஆன்ம நோக்கத்தில் எவ்வித பேதமும் எத்துணையுமின்றாம்.

**வி-ரை :-** ஆதியறம்-இயல்பாய சமயமுமாம். உடம் பான்மாக்கள், கண்ணலாற் காட்சியின்மையால் ஆகு பெயராயவ்வந் நோக்கத்தை யுணர்த்தி நின்றன.

**1250. ஒரு மனைத்துளுந்தா னொன்றே பொருளாகச்**
**சாருஞ் சமங்காண் டரிசனமே - கூரும்**
**சமரசமெய்ஞ் ஞானச் சதுரர்மீக் கூறும்**
**சமதர் சனமென் றறி.**

ஒரும் அனைத்து உளும் தான் ஒன்றே பொருளாகச் சாரும் சமம் காண் தரிசனமே கூரும் சமரச மெய்ஞ்ஞானச் சதுரர் மீக்கூறும் சமதர்சனம் என்று அறி.

**1251. அகந்தை யழிந்தவச லான்மானு பூதி**
**நிகழ்ந்தவுப சாந்த நிறைந்தோன் - உகந்து**
**புகழ்ச்சியா லின்புறாப் புந்தியான் மாழ்கல்**
**இகழ்ச்சியா லென்று மிலன்.**

அகந்தை அழிந்த அசல ஆன்மானுபூதி நிகழ்ந்த உபசாந்தம் நிறைந்தோன் உகந்து புகழ்ச்சியால் இன்பு உறாப் புந்தியான் மாழ்கல் இகழ்ச்சியால் என்றும் இலன்.

அகந்தை நசித்தலான், உபசாந்த வடிவாய் நிகழும் அசல நிலையா மான்மாநுபூதி பூரணமாகப் பெற்றோன், புகழ்ச்சியை விரும்பி அதனான் மகிழ்ச்சியடையா மனப்பான்மையால் மற்றை யிகழ்ச்சியா லழுங்கலும் ஆங்கே என்று மிலனாம்.

**வி-ரை :-** அன்னான் சலனமுறாமை சமநிலை சார்தலாலென்க.

**1252. கோழ்வெயிலிற் றெண்ணீர்க் குலாப்போ லவியத்தப்**
**பாழ்வயிற்றான் றோன்றிப் பசப்புலகத் - தூழ்வயத்தாம்**
**வாழ்வைப் பொருளா மயங்காமெய்ஞ் ஞானிக்குத்**
**தாழ்வும் பெருமிதமே தான்.**

கோழ் வெயிலில் தெண்ணீர்க் குலாப்போல் அவ்வியத்தப் பாழ்வயில் தான் தோன்றிப் பசப்பு உலகத்து ஊழ்வயத்து ஆம் வாழ்வைப் பொருளா மயங்கா மெய்ஞ்ஞானிக்குத் தாழ்வும் பெருமிதமே தான்.

**கோழ்-செழிப்பான,முற்றிய; பாழ்வயில்-பாழினிடத்தில்.**

**1253. காமியக்கோ ரிக்கை கழல்கடவுண் மாமுனிவர்**
**தாமியல்பா யாற்றுந் தவமனைத்தும் - காமர்**
**சுபயோகந் தான்விளைத்துத் தொல்லுலக மக்கட்**
**குபயோக மாகு முணர்.**

காமியக் கோரிக்கை கழல் கடவுள் மாமுனிவர் தாம் இயல்பாய் ஆற்றும் தவம் அனைத்தும் காமர் சுபயோகம் தான் விளைத்துத் தொல் உலக மக்கட்கு உபயோகம் ஆகும் உணர்.

**கழல்-கழன்ற.**

## வாழ்த்து

**1254. வாழி யருணகிரி வாழி ரமணகுரு**
**வாழி யொருமொழியின் வாழடியார் - வாழி**
**குருமூர்த்தி *வாசக*நற் *கோவை*யா மிந்தப்**
***பரமார்த்த தீபம்* பலித்து.**

வாழி அருணகிரி வாழி ரமணகுரு வாழி ஒரு மொழியின் வாழ் அடியார் வாழி குருமூர்த்தி வாசக நல் கோவையாம் இந்தப் பரமார்த்த தீபம் பலித்து.

## ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து

* * * * *

# குருவாசகக் கோவை

## திறன் முதற்குறிப் பகராதி

# குருவாசகக் கோவை

## செய்யுள் முதற்குறிப் பகராதி

★(ப-எண்):-பகவான் இயற்றியவைகளின் வரிசை எண்

ஏ